# சங்க இலக்கியத்திலும் வாய்மொழி மரபிலும் பழக்க வழக்கங்கள்- மரபுத் தொடர்ச்சி

தமிழ்ப் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.)

பட்டப்பேற்றிற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**நா. கமலராணி**

**(பதிவு எண் 1571)**






**நாட்டுப்புறவியல் துறை**

**தமிழ்ப் பல்கலைக்கழகம்**

**தஞ்சாவூர்- 613 010**


**ஏப்பிரல் 2012**

**முனைவர் சி. சுந்தரேசன்**
துறைத்தலைவர் / நெறியாளர்
நாட்டுப்புறவியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்-10

---

# நெறியாளர் சான்றிதழ்

**சங்க இலக்கியத்திலும் வாய்மொழி மரபிலும் பழக்க வழக்கங்கள்-மரபுத் தொடர்ச்சி** என்னும் தலைப்பில் ஆய்வாளர் திருமதி **நா. கமலராணி** என்பார் செய்துள்ள இவ்வாய்வு தமிழ்ப் பல்கலைக்கழக நாட்டுப்புறவியல் துறையில் முனைவர் பட்டப்பேற்றிற்காக (முழுநேரம்) அவரால் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இதற்கு முன்னர் இந்த ஆய்வேடு வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம்: தஞ்சாவூர் (சி. சுந்தரேசன்)
நாள் : நெறியாளர்

துறைத்தலைவர்
நாட்டுப்புறவியல் துறை

**நா. கமலராணி**
முனைவர் பட்ட ஆய்வாளர்
நாட்டுப்புறவியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்-10

---

# ஆய்வாளர் உறுதிமொழி

**சங்க இலக்கியத்திலும் வாய்மொழி மரபிலும் பழக்க வழக்கங்கள்- மரபுத் தொடர்ச்சி** என்னும் தலைப்பில் தமிழ்ப் பல்கலைக்கழக நாட்டுப்புறவியல் துறையில் முனைவர் பட்டப்பேற்றிற்காக (முழுநேரம்) செய்யப்பட்ட இவ்வாய்வு, நாட்டுப்புறவியல் துறைத்தலைவர் மற்றும் கூடுதல் தேர்வுக் கட்டுப்பாட்டு அலுவலர் **முனைவர் சி. சுந்தரேசன்** அவர்களின் நெறிகாட்டலில், என் சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்கு முன்னர் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

இடம்: தஞ்சாவூர் (நா. கமலராணி)
நாள் : ஆய்வாளர்

# நன்றியுரை

**சங்க இலக்கியத்திலும் வாய்மொழி மரபிலும் பழக்க வழக்கங்கள்-மரபுத் தொடர்ச்சி** என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள எனக்கு வாய்ப்பளித்த மதிப்பிற்குரிய தமிழ்ப் பல்கலைக்கழகத் ***துணைவேந்தர்*** அவர்களுக்கும், ***பதிவாளர்*** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்ட ஆய்வாளராக இடமளித்ததோடு மட்டுமின்றி என் ஆய்வு சிறந்த முறையில் அமைவதற்கு ஆக்கமும் உறுதுணையும் அளித்து ஆய்வு செம்மையாக அமையும் வண்ணம் நல்வழிகாட்டிய நெறியாளர் மற்றும் துறைத்தலைவர் ***முனைவர் சி. சுந்தரேசன்*** (கூடுதல் தேர்வுக் கட்டுப்பாட்டு அலுவலர்) அவர்களுக்கு என் என்றென்றும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வுக் காலத்தில் அன்போடு உதவிய நாட்டுப்புறவியல் துறை முன்னாள் துறைத்தலைவர்கள் ***முனைவர் ஆறு. இராமநாதன்*** அவர்களுக்கும், ***முனைவர் க. சாந்தி*** அவர்களுக்கும், உதவிப் பேராசிரியர் ***முனைவர் ஆ. சண்முகம்*** அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனக்கு ஒரு வளமான எதிர்காலத்தை அமைத்துத்தரப் பாடுபட்ட என் உயிரினும் மேலான பெற்றோர்களாகிய ***திரு. நா.நாகராசன், திருமதி நா. கல்யாணி*** அவர்களுக்கும், என் அன்புக் கணவர் திரு. ***வி. செந்தில்குமார்*** அவர்களுக்கும் என் பாசத்திற்குரிய அண்ணன் ***கோபு,*** அக்கா திருமதி ***அ. குபேரா அன்புச்செல்வம்,*** திருமதி ***ச. கோகிலா சங்கர்,*** என் பிள்ளைகளான ***அ. தரண்யா, அ. டியா, ச. எழிலன்*** அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான நூல்களை வழங்கிய தமிழ்ப் பல்கலைக்கழக நூலகத்தார் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

களப்பணியில் ஆய்வின் நோக்கம் புரிந்து செய்திகள் வழங்கிய தகவலாளர்களுக்கும், என் நண்பர்கள் அனைவருக்கும் நன்றிகள் பல.

நா. கமலராணி

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| ஆசா. | - | ஆசாரக்கோவை |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| ஐந்.எழு. | - | ஐந்திணை எழுபது |
| க.பா. | - | கண்ணதாசன் பாடல்கள் |
| கலி. | - | கலித்தொகை |
| குறிஞ். | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலப். | - | சிலப்பதிகாரம் |
| சிறு. | - | சிறுபஞ்சமூலம் |
| சிறுபா. | - | சிறுபாணாற்றுப்படை |
| சீவக. | - | சீவகசிந்தாமணி |
| திணை.நூற். | - | திணைமாலை நூற்றைம்பது |
| திருக். | - | திருக்குறள் |
| திருமு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொல்.எ. | - | தொல்காப்பியம் எழுத்ததிகாரம் |
| தொல்.சொ. | - | தொல்காப்பியம் சொல்லதிகாரம் |
| தொல்.பொ. | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| நற். | - | நற்றிணை |
| நால. | - | நாலடியார் |
| நான். | - | நான்மணிக்கடிகை |

| | | |
|---|---|---|
| நெடு. | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| ப. ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பட்டின. | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| பழ. | - | பழமொழி நானூறு |
| பா.க. | - | பாரதியின் கவிதைகள் |
| பா.தா.க. | - | பாரதிதாசன் கவிதைகள் |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| புறம். | - | புறநானூறு |
| மணி. | - | மணிமேகலை |
| மது. | - | மதுரைக்காஞ்சி |
| முல். | - | முல்லைப்பாட்டு |
| மலை. | - | மலைபடுகடாம் |
| இன்னா. | - | இன்னா நாற்பது |
| இனியவை | - | இனியவை நாற்பது |

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழ் இயல், இசை, நாடகம் என்ற முப்பகுப்புகளைக் கொண்டு விளங்கும் பெருமை வாய்ந்த மொழியாகும். நம் தமிழ்மொழி. காலத்தை வென்று நிற்கக்கூடிய இலக்கிய இலக்கணங்களையும் தன்னகத்தே பெற்ற சிறப்பினையும் இம்மொழி பெற்று விளங்குகிறது. இதனுள் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்து மறைந்த தமிழரின் வாழ்வியல் முறைகளைத் தெள்ளத் தெளிவாகச் சங்க இலக்கியங்கள் சுட்டிக் காட்டுகின்றன.

மனித இனம் தோன்றிய காலம் முதற்கொண்டே நாட்டுப்புற வழக்காறுகளாகிய பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும் தோன்றி மனித சமுதாயத்தினரால் காலங்கள்தோறும் போற்றிப் பாதுகாக்கப்பட்டு இன்றுவரை அதன் பழமைத் தன்மையை முற்றிலுமாக இழந்துவிடாமல் நிலையான இடத்தைப் பெற்று வாழ்ந்து வருவதுடன் கல்விப் புலத்தில் தனக்கென்று தனித்துறையினையும் அறிவியல் சார்ந்த மேலைநாட்டு ஆய்வு முறைகளையும் கொண்டு நாட்டுப்புறவியல் என்ற பெயருடன் திகழ்ந்து வருகின்றது.

மக்களின் பண்பாடு கலாச்சார மரபுகளை வாய்மொழி வழக்காறுகளின் துணைகொண்டு விளக்குவதில் நாட்டுப்புறவியல் தலைசிறந்து நிற்கிறது. வாழ்வில் அவ்வப்போது தோன்றி மறையும் மாற்றங்களையும், இடம் மற்றும் காலச்சூழலுக்கு ஏற்றவாறு மண்ணில் நிலவும் உண்மைகளின் அடிப்படையில் குறிப்பிடுவதில் இதற்கு முன்னோடி வேறேதுமில்லை என்று கூறலாம்.

**ஆய்வுத் தலைப்பு**

‘சங்க இலக்கியத்திலும் வாய்மொழி மரபிலும் பழக்க வழக்கங்கள்-மரபுத் தொடர்ச்சி’ என்பது இவ்வாய்வின் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

*சங்க காலத்தில் வாழ்ந்த புலவர்கள் தங்களது அறிவாற்றலினால் தாங்கள் கண்ட சமூக அரசியல் நிலைகளையும் அறக்கருத்துக்களையும் பாடல்களாகப் படைத்துள்ளனர். அவற்றுள் சங்கத் தமிழரின் வாழ்வியல் ஒழுகலாறுகள், காதல், வீரவாழ்க்கை, காலம் பதித்த வரலாறு, புராணம், அறிவியல் செய்திகள் போன்ற பலவற்றினையும் விளக்கமாகவும் ஆழமாகவும் பாடியுள்ளனர்.*

*மக்களினத்தின் மிகப் பழங்கால வாழ்க்கைக் கூறுகளின் எச்சங்கள் நாட்டுப்புறச் சமுதாய மக்களிடையே அதிகமாகப் பதிந்து கிடக்கின்றன. நாட்டுப்புற மக்களின் பழக்க வழக்கங்கள், பண்பாடு, நம்பிக்கைகள், சடங்குகள் போன்றவை காலத்திற்குக் காலம் ஏற்பட்டு வந்துள்ள மாற்றங்களையும் இன்றைய மக்களிடையே வழங்கி வருகின்ற பழக்க வழக்கப் பண்பாடுகளில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகளையும் அறிந்து கொள்வதற்கு இவ்வாய்வு மிகவும் அவசியமானதாகும்.*

*உலகில் பலவிதமான அறிவியல் முன்னேற்றங்கள் வந்தபோதிலும் கிராம மக்கள் கொண்டுள்ள நம்பிக்கைகளையும், பழக்க வழக்கங்களையும் எவ்வாறு பின்பற்றி வருகின்றனர் என்பதை அறியும் நோக்கில் ஆய்வாளரின் சொந்த ஊரான கருப்பமுதலியார் கோட்டையைச் சுற்றியுள்ள பகுதிகளை ஆய்வுக்களமாகக் கொண்டு இவ்வாய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது.*

**ஆய்வின் அணுகுமுறை**

*சங்க இலக்கியப் பாடல்களில் காணப்படக்கூடிய வாய்மொழி வழக்காறுகளான நாட்டுப்புறக் கூறுகள் பல நிலைகளில் பொதிந்துள்ளன. இதன் மூலம் தாங்களை முறையாக அறிந்துகொள்வதற்குப் பொருத்தமாக விளக்கமுறை ஆய்வையும் அக்காலச் சூழல் மற்றும் நடைமுறை வாழ்வில் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் காண ஒப்பாய்வு அணுகுமுறையையும் பயன்படுத்தி இவ்ஆய்வு மேற்கொள்ளப் பெற்றுள்ளது.*

**ஆய்வின் எல்லை**

*தஞ்சாவூர் மாவட்டம் புளியக்குடி வட்டம் கருப்பமுதலியார்கோட்டை என்னும் கிராமத்தை இவ்வாய்வின் எல்லையாக வரையறுக்கப்பட்டுள்ளது.*

**ஆய்வு மூலங்கள்**

*இவ்வாய்விற்கான தரவுகளைப் பெறுவதற்காக களப்பணியில் தேர்வு செய்யப்பட்ட தகவலாளர்களும், இலக்கியங்களும், இவ்வாய்வுக்குத் தொடர்புடைய நூல்களும், ஆய்வேடுகள், கட்டுரைகள், சான்று மூலங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.*

**முதன்மைத் தரவுகள்**

*தஞ்சாவூர் மாவட்டம் புளியக்குடி வட்டத்திலுள்ள கருப்பமுதலியார்கோட்டை என்ற பகுதியில் களப்பணியின் மூலம் நேரடியாகச் சென்று மக்களிடம் சேகரித்த தரவுகள் அனைத்தும் முதன்மைத்தரவுகளாகக் கொள்ளப்பட்டுள்ளன.*

**துணைமைத்தரவுகள்**

*சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்கள், நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள் தொடர்பாக வெளிவந்த நூல்கள், அறிஞர்களின் கருத்துக்கள்,வழிபாடு, சடங்கு, மருத்துவம், தொடர்பான ஆய்வேடுகள், கட்டுரைகள் போன்றவற்றிலிருந்து சேகரித்த தரவுகள் துணைமைத் தரவுகளாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.*

**ஆய்வுச் சிக்கல்**

*அகம், புறம் எனப் பிரித்துப் பண்டைத் தமிழரின் வாழ்க்கையை இலக்கியங்கள் எவ்வாறு எடுத்துக் காட்டுகின்றன? இலக்கண*

வரையறைகளுக்குட்பட்ட பாடல்களில் மக்களின் வாய்மொழி வழக்காற்று மரபுகளின் தாக்கம் எவ்வாறு உள்ளது? பண்டைத் தமிழரின் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் என்ன? வாய்மொழிவழக்காறுகளான நாட்டுப்புறக் கூறுகள் என்னென்ன இடம்பெற்றிருக்கின்றன? அக்கால மக்களின் ஒழுகலாறுகளை விளக்கும் முறைகள் யாவை? ஈராயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக வகுத்தமைக்கப்பட்டக் கூறுகள் பலவித சாதிய அமைப்பில் வாழும் இன்றைய மக்கள் சமுதாயத்திற்கு வித்திட்டுள்ள முறைகள் யாவை? அறிவியல், பொருளாதார வளர்ச்சியின் காரணமாக ஏதேனும் மாற்றங்களைப் பெற்றுள்ளனவா? அல்லது மக்களிடத்தில் மாற்றத்தினை ஏற்படுத்தியுள்ளனவா? இளந்தலைமுறையினர் மற்றும் முற்போக்குச் சிந்தனையாளர் போன்றோரிடம் இதன் தாக்கங்கள் எவ்வாறு உள்ளன? போன்ற சிக்கல் வினாக்களுக்கு விடை காணுவதனை இந்த ஆய்வு அடிப்படையாகக் கொண்டுள்ளது.

**கருதுகோள்**

எழுத்தாக்கம் தோன்றுவதற்கு முன்னர் மக்கள் சைகை, வாய்மொழி போன்றவை மூலம் தங்கள் கருத்துக்களை வெளிப்படையாக நிறைவு செய்திருக்க வேண்டும். அவ்வாறு இருக்கும் நிலையில் சான்றோர்களின் அறிவாற்றலினால் இலக்கியங்கள் தோற்றம் பெற்றன. இலக்கியங்ளை வரையறை செய்யும் நிலையில் இலக்கணங்களும் படைக்கப்பட்டன. இதன்பின்னர் மக்கள் வாழ்வு, கல்வி நிலைகளில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் பெற்றன. சங்க இலக்கியங்கள் தமிழரின் வாழ்வினை அகம், புறம் எனப் பாகுபடுத்திக் காதல், வீரம் ஆகியவைகளை எடுத்தியம்புவதை நோக்கமாகக் கொண்டு சான்றோர்களால் படைக்கப்பட்டிருந்தாலும் அவற்றின் ஊடே பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், தெய்வ வழிபாட்டு முறைகள், விழாக்கள், விளையாட்டுக்கள், தொழில்கள், உணவுப் பழக்க வழக்கங்கள் போன்ற மக்களின் வாழ்வியல் நெறிமுறைகளையும் பதிவு செய்துள்ளனர்.

இலக்கியத்தில் கையாளப்பட்டுள்ள கூறுகள் இன்றைய காலச்சூழல், பொருளாதார ஏற்றத்தாழ்வு, சாதி மதப் பாகுபாடு அறிவியலின் வியப்பூட்டும் வளர்ச்சி போன்ற பல்வேறு சூழலில் வாழ்ந்து வரும் மக்களின் வாழ்வோடு பின்னிப் பிணைந்துள்ளன என்பதையும், இப்பகுதி மக்களிடம் பலவிதமான மாற்றங்கள் நிகழ்ந்து வருகின்றன. பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் பற்றி எழுத்திலக்கியத்தில் தரவுகள் இருந்தாலும், அதற்கு வாய்மொழித் தரவுகளும் வேண்டும். வாய்மொழித் தரவுகளேதமிழர் பழக்க வழக்கங்கள் பற்றிய அதிகமானத் தரவுகளைத் தரும். அத்தரவுகள் அதிகமான மக்களைப் பற்றியதாகவும், உண்மையானதாகவும் இருக்கும் என்கிற முன்முடிவைக் கொண்டு இவ்ஆய்வேடு செல்கிறது. இதுவே இவ்வாய்வின் கருதுகோளாக அமைகிறது.

**தரவுகள் பெறப்பட்ட முறைகள்**

ஆய்வுக்களங்களுக்கு நேரடியாகச் சென்று முதலில் ஆய்வாளர் தன்னை அறிமுகம் செய்து கொண்டும் பின்னர் ஆய்விற்கானக் காரணம், நோக்கங்கள் ஆகியவகைளைத் தகவலாளர்களிடம் விளக்கமாகவும் விரிவாகவும் எடுத்துக் கூறியும் செய்திகள் பெறப்பட்டன.

தகவலாளர்களிடம் நேர்காணல் முறையிலும் தனித்தனியாகவும், குழுவாகவும் அமர்த்தித் தரவுகள் சேகரிக்கப்பட்டுள்ளன. சடங்கு முறைகள், கள்ளர், பள்ளர், பறையர் இன மக்களிடம் தொகுக்கப் பெற்றுள்ளன. இளஞ்சிறார்கள் விளையாடும் விளையாட்டுக்கள், இயற்கை மற்றும் தூண்டுதல் முறைகளில் திரட்டடப்ப்படடன. தாலாட்டு, திருமணம், ஒப்பாரி, தொழில்பாடல்கள், அனைத்தும் தகவலாளர் பாடும்பொழுது எழுதப்பெற்று முறையாகத் தொகுக்கப் பெற்றுள்ளன.

**ஆய்வேட்டின் அமைப்பு**

இவ்ஆய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டுள்ளது. அவை,

இயல் 1: பண்பாடு மற்றும் பழக்க வழக்கங்கள்-வரையறை

இயல் 2: பழந்தமிழரின் பழக்க வழக்கங்கள்

இயல் 3: வாய்மொழி மரபில் பழக்க வழக்கங்கள்

இயல் 4: நம்பிக்கை வயப்பட்ட பழக்க வழக்கங்கள்

இயல் 5: தமிழரின் பழக்க வழக்கங்கள்-மரபுத் தொடர்ச்சி

**இயல் 1**

'பண்பாடு மற்றும் பழக்க வழக்கங்கள்-வரையறை' என்னும் இயலில் தமிழ்மொழியின் தோற்றம், வளர்ச்சி, அதன் வரலாறு, தமிழ்மொழியின் தொன்மை, அதன் தனிச்சிறப்பு, தமிழ்மொழியின் தொன்மை பற்றிய அறிஞர்களின் கருத்துக்களையும், பண்பாடு என்கிற சொற்பொருண்மை சுட்டுகிற விளக்கங்கள், வரையறைகள் பல உள்ளன. அவை வெவ்வேறு தளங்களில் வெவ்வேறு வகையான விளக்கங்களையும், பொருளையும் தருகின்றன என்பதையும், பண்பாடு பற்றி அறிஞர்களின் கருத்துக்கள், பல்வேறு பண்பாட்டுக் கூறுகளை உடைய தமிழ் ஆய்வுலகம் பண்பாடு, நாகரிகம், கலாச்சாரம், அடையாளம் எனப் பல்வேறு சொற்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

பழக்க வழக்கங்கள் என்கிற சொற்பொருண்மை சுட்டுகிற விளக்கங்களும், வரையறைகளும், வாழ்க்கை மரபு செயல் வழக்காறு, அடிப்படை வரலாறு, அறிஞர்களின் கருத்து, ஆய்வாளர்கள் கருத்து, பழக்க வழக்கங்கள் எவ்வாறு தோன்றியது என்பதையும், ஒட்டுமொத்த நடத்தை முறையே பழக்க வழக்கமாகும் என்று சமூகக் கலைக்களஞ்சியம் கூறுகிறது. இவற்றை எல்லாம் ஆய்வு செய்து தமிழ்ச் சூழலுக்கு ஏற்ற பண்பாடு, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றைத் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

**இயல் 2**

*‘பழந்தமிழரின் பழக்க வழக்கங்கள்’ என்னும் இயலில் பிறப்பு தொடர்பான பழக்க வழக்கங்கள், தனியிடத்தில் வைத்தல், பூப்பு, காலமும் பொழுதும், மணமரபு, இறப்புத் தொடர்பான பழக்க வழக்கங்கள், விழாக்கள், விளையாட்டுகள், தொழில்கள், ஆடை அணிகலன்கள், உணவுப் பழக்க வழக்கங்கள், நிமித்தம் பார்த்தல், வழிபாடு, பலியிடுதல், நடுகல் போன்ற பழக்கங்களும் ஆராயப்பெற்றுள்ளன.*

*சடங்கின் தோற்ற வளர்ச்சியும் பெண்ணின் வயிற்றில் கரு உருவாகும் விதம், பெண்ணிற்கு ஓய்வு அளிக்கும் விதத்தில் தாய், சேயினைத் தனியிடத்தில் வைத்துக் காத்த நிலையும் கூறப்பட்டுள்ளன.*

*திருமணச் சடங்குகள் இருவகைகளில் பகுக்கப்பெற்று விளக்கப்பட்டுள்ளன. திருமணத்திற்குத் தொல்காப்பியர் தரும் கருத்தும் முல்லை நிலத்தவர் ஏறு தழுவி மணம் முடித்த சிறப்பும் கூறப்பட்டுள்ளன.*

*இறந்த பிணத்திற்குப் பலவிதமான சடங்கு முறைகள் மேற்கொண்டனர் என்பதனையும், கணவனை இழந்த பெண்ணின் அணிகலன்களை களைந்தனர் என்பதனையும், இறந்தவர்களுக்கு நடுகல் வைத்து விளக்கியுள்ள முறையும் விளக்கப்பட்டுள்ளன.*

*அக்கால மக்கள் வணங்கியுள்ள தெய்வங்கள் வெற்றித் தெய்வமாகக் கொற்றவை வணங்கப்பட்ட சிறப்பும், கார்த்திகை, பங்குனி, ஓணம் விழா உள்ளிட்டப் பல விழாக்களை மக்கள் சிறப்புறு நடத்தியிருப்பதும் விளக்கப்பட்டுள்ளன.*

*சிற்றில், வண்டல், பாவை போன்ற இளஞ்சிறார்கள் விளையாட்டும், பெண்கள் விளையாடக்கூடிய கழங்கு, பந்தாடுதல், போன்ற விளையாட்டுக்கள் தெளிவாக விவரிக்கப்பட்டுள்ளன.*

*ஐவகை நிலமக்கள் செய்த வேளாண்மை, மட்பாண்டம், அணிகலன் செய்தல், தச்சு முதலிய கைத்தொழில் முறைகளும் அன்றாட உணவுப் பழக்க வழக்கங்களும் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.*

**இயல் 3**

*'வாய்மொழி மரபில் பழக்க வழக்கங்கள்' என்னும் இவ்வியலில் மக்களின் வாய்மொழி வழக்காற்று உண்மைகள் அடிப்படையில் அமையும் என்றும், குழந்தைப்பேறு அமையப்பெற்ற பெண்ணின் மனம் மகிழும் வகையில் வளைகாப்பிடுதல், இனிப்பு வழங்குதல் முதலியனவும் குழந்தைச் செல்வத்திற்கு மக்கள் அளிக்கும் முக்கியத்துவம் தாலாட்டில் வெளிக்காட்டும் சிறப்பும் தெளிவுற ஆராயப் பெற்றுள்ளன.*

*திருமணத்திற்குச் சாதகம், பொருத்தம் பார்த்து வளர்பிறை நாளில் மணம் முடிக்கும் வழக்கமும் மணமகனுக்கு பெண்ணின் தங்கை மிஞ்சி அணிவிக்கும் முறையும் சீர்வரிசைகள் அளிக்கும் மாண்பும், சம்மந்தி கலத்தல் நிலையும் கூறப்பட்டுள்ளன.*

*தாய்க்குத் தலைப்பிள்ளையும் தந்தைக்கு இளப்பிள்ளையும் கொள்ளி வைத்து அடக்கம் செய்யும் வழக்கமும், பதினாறாம் நாள் கருமாதி நடத்துவதோடு இல்லாமல் பண்டிகை நாட்களில் படையலும் திவசம் அளிக்கும் முறையும் ஆராய்ந்து தெரிவிக்கப்பட்டுள்ளன.*

*சிறுவர்கள் ஆண்கள் பெண்கள் போன்றோர் விளையாடும் விளையாட்டுக்களும் தெளிவாக அறியப்பட்டுள்ளன. பழமொழிகள், விடுகதைகள் பற்றிய செய்திகளும் கூறப்பட்டுள்ளன.*

*இப்பகுதி மக்களிடம் முக்கிய தொழிலாக விவசாயம் காணப்படுகிறது. மூன்று பருவத்திலும் என்னென்ன பயிர்கள் பயிரிடப்படுகின்றன என்பதனையும், உணவுப் பழக்க வழக்கங்கள், மருத்தும், வழிபாடுகள், இயற்கை வழிபாடு, முன்னோர் வழிபாடு, நாட்டுப்புற தெய்வ வழிபாடு, விழாக்கள் போன்ற பழக்க வழக்கங்கள் தொகுக்கப் பெற்று ஆய்வுக்கு உட்படுத்தப் பெற்றுள்ளன.*

**இயல் 4**

*'நம்பிக்கை வயப்பட்ட பழக்க வழக்கங்கள்' என்கிற இவ்வியலில் நம்பிக்கைகள் பற்றிய விளக்கங்கள், அறிஞர்களின் கருத்துக்கள், தெய்வம்,*

நாள் நட்சத்திரம், இயற்கை, பறவை, விலங்குகள், மரம், உணவு, சகுனம், சாதகம், பிள்ளைப்பேறு குறித்த நம்பிக்கைகள்,

நம்பிக்கை, நிமித்தம் பற்றித் தொல்காப்பியர் உள்ளிட்டோர் தரும் விளக்கங்களும் தெளிவாகக்கூறப்பட்டுள்ளன. நம்பிக்கைகள் பற்றி அறிஞர்களின் கருத்துகள், மற்றும் நாட்டுப்புற அறிஞர்களின் கருத்துகள் கூறப்பட்டுள்ளன.

காகம் கரைந்தால் விருந்தினர் வருவர் என்பதும், இட, வலக் கண் துடிப்பதால் ஏற்படும் தீமைகளும் வெறியாட்டினால் காதல் நோயுற்றத் தலைவியின் மனநிலை சரியாகும் என்பதும் கனவு, பேய் குறித்த நம்பிக்கைகளும் விவரிக்கப்பட்டுள்ளன.

ஆந்தை அலறினால் சாவு வரும் எனப்தும் நரி ஊளையிட்டால் தீமை நேரிடும் என்பதும் குறி சொல்லுதல் மூலம் எதிர்கால வாழ்வை அறியலாம் என்ற நம்பிக்கையும் விவரிக்கப்பட்டுள்ளன.

இயற்கைச் சக்திகளாக விளங்கும் சூரியன், பிறைகளை வழிபடும் வழக்க முறையும், வேம்பு, பனைமரங்களை வணங்கும் நிலையும், மேலும் இறப்பு, பல்பொருள் குறித்த நம்பிக்கைகள் தொகுக்கப்பெற்று வகைப்படுத்தப் பெற்று விளக்கப்பட்டுள்ளன.

**இயல் 5**

தமிழரின் பழக்க வழக்கங்கள்-மரபுத் தொடர்ச்சி என்னும் இவ்வியலில் மரபு என்பது உள ஒருமைப்பாட்டால் இயல்பாக வந்தது என்றும், இம்மரபுகள் சமுதாய நலன் கருதி அமைந்தவை, ஒவ்வொரு சமுதாயமும் தனக்கெனச் சில தனித்த மரபுகளைக் கொண்டிருக்கிறது என்பதையும், ஒரு சமுதாயத்தின் சிறப்பினை அச்சமுதாயம் போற்றிப் பாதுகாத்து வரும் மரபுகளைக் கொண்டு அளவிட முறையும் என்பதனையும் தொகுக்கப் பெற்றுள்ளது. மேலும் கலப்பு மணம், இருதார மணம், உடன்போக்கு செல்லுதல் போன்றவை விளக்கப்பட்டுள்ளன.

ஏற்கனவே வழக்கில் இருந்த பழக்க வழக்கங்கள் இப்போது இருக்கின்றனவா, அவை மரபு மாறாமல் இருக்கிறதா, எவை மாற்றம்

அடைந்திருக்கின்றன எவை மாறாமல் இருக்கின்றன என்பதனையும், சங்க இலக்கியக் கூறுகள் மக்கள் வாய்மொழி வழக்காற்றுக் கூறுகளில் அன்று முதல் இன்று வரை காணலாகும் ஒற்றுமை, வேற்றுமைகள் அனைத்தும் தெளிவுற ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளன அட்டவணைகளாலும் விவரிக்கப்பட்டுள்ளன.

முடிவுரையில் ஆய்வாளரின் ஆய்வு முடிவுகளும், ஆய்வுக்குத் துணைசெய்த நூல்கள் துணைநூற்பட்டியலும் இடம்பெற்றுள்ளன. துணைநூற்பட்டியலை அடுத்து பின்னிணைப்பில் வினாப்பட்டியல், தகவலாளர் பட்டியல், நிழற்படங்கள் ஆகியவை இணைக்கப்பட்டுள்ளன.

மேலும் ஆய்வில் இடம்பெற்றுள்ள சான்றெண் விளக்கங்கள் உள்ள இலக்கண விளக்கங்களுக்கு நூற்பா எண்களும், இலக்கிய விளக்கங்களுக்குப் பாடல் எண்களும் அறிஞர்களின் கருத்துக்களுக்குப் பக்க எண்களும் ஆங்காங்கே முறையாகத் தரப்பட்டுள்ளன.

**ஆய்வுப் பயன்**

தஞ்சாவூர் மாவட்டம் புளியக்குடி வட்டம் கருப்பமுதலியார் கோட்டை என்னும் ஊர் ஆய்வு எல்லையாக எடுத்துக் கொண்டு, அங்கு வாழும் கள்ளர், பள்ளர், பறையர் இன மக்களின் பழக்க வழக்கங்களையும், நம்பிக்கைகளையும், இதுவரை யாரும் ஆய்வு செய்யவில்லை என்பதாலும் இவர்களின் வாழ்வியல் முறை, சமூகப் பொருளாதார நிலை ஆகியவற்றை வெளிக்கொணரவும், இந்த ஆய்வு எதிர்காலத்தில் இம்மக்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவும், ஆய்வு செய்பவருக்கு அடிப்படையாக அமையும். மேலும் இப்பகுதி மக்களின் நம்பிக்கைகளையும், பழக்கவழக்கங்களையும் பதிவு செய்வதோடு அவர்களின் பொருளாதாரம், கல்வி, விவசாயம் ஆகியவை எதிர்காலத்தில் மேம்பாடு அடைவதற்கும் அடுத்த தலைமுறையினருக்கு இவ்ஆய்வுப் பதிவுகள் ஆவணமாக அமையும் என்றும் நம்பிக்கைகளின்அடிப்படையில் இவ்வாய்வு மேற்கொள்ளப் பெற்றுள்ளது.

# இயல் 1

## பண்பாடு, பழக்க வழக்கங்கள் விளக்கம்-வரையறை

*மனிதன் தன் எண்ணங்களை மற்றவர்களோடு பகிர்ந்து கொள்ளப் பயன்படும் அரிய கருவி மொழியாகும். மனிதன் அறிவு விரிவாக விரிவாக மொழியும் வளர்ச்சிப் பெற்றுக் கொண்டே வருகிறது. மொழி இல்லையேல் மனிதனுக்கு இயக்கம் என்பது இருக்காது. ஆகவே மொழியே மனித வாழ்வினைத் திறம்படவும் செம்மையுறவும் வைக்கின்றது. அவ்வகையில் செம்மையான மொழி வளத்தைப் பெற்று மனித இனம் சிறப்பான முறையில் வாழ்ந்து வருகின்றது. அவ்வாறு சிறந்து விளங்கும் மொழிகளுள் தமிழ்மொழியும் ஒன்று. தொன்மைத் தன்மை பெற்ற தமிழ் மொழியை*

**"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு**
**முன்தோன்றிய மூத்த தமிழ்க்குடி"**

*எனப் புறப்பொருள் வெண்பாமாலை புலப்படுத்துகிறது. பாட்டுக்கொரு புலவன் பாரதி தமிழின் தொன்மையை*

**"தொன்று நிகழ்ந்த தனைத்தும்**
**அறிந்துள தொல்புவி வாணர்களும்**
**என்று பிறந்தவ ளென்றுணராத**
**இயல்பின ளாமெங்கள் தாய்"**

*(பாரதியார் கவிதைகள் ப. 9-135)*

*என்ற வரிகள் மூலம் உணர்த்துகின்றார்.*

*தமிழர்கள் தொன்மையுடையவர்கள் என்பதால் தமிழ்மொழியும் தொன்மையுடையதாகத்தான் இருக்க வேண்டும். மதுரையில் தமிழை வளர்க்கத் தமிழ்ச் சங்கம் நிறுவினான் பாண்டிய மன்னன். இதுவே முதல் சங்கம் (தலைச்சங்கம்). கபாடபுரத்தில் இரண்டாம் தமிழ்ச்சங்கம் தோன்றியது. மூன்றாம் தமிழ்ச் சங்கம் மதுரை மாநகரில் முகிழ்ந்தது.*

*நக்கீரன் முதலிய 49 மொழி வல்லுநர்கள் இச்சங்கத்தில் வீற்றிருந்து தமிழை வளர்த்தனர். தமிழ் மொழி வரலாற்றிற்கு எட்டாத ஆதி காலத்தே தோன்றிய மொழியாகும். இம்மொழியின் தோற்றம் தெரியாத காரணத்தால் இது சிவபெருமானால் அகத்திய முனிவருக்குக் கற்பிக்கப் பெற்றது என்றும் ஏறத்தாழ கி.மு. 3000 ஆண்டு காலத்திற்கு முன்பே இம்மொழி உயர்தனிச் செம்மொழியாகத் திகழ்ந்தது என்ற கருத்தும் உண்டு.*

## தமிழ்மொழி

**“ஓங்கல் இடைவத் துயர்ந்தோர் தொழவிளங்கி**
**ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும் ஆங்கவற்றுள்**
**மின்னேர் தனியாழி வெங்கதிரோன் றேனையது**
**தன்னோர் இலாத தமிழ்”**

*வென்று நின்றும் என்றும் வாழும் தமிழ்மொழி, தொன்மை, முன்மை, தன்மை, வன்மை, சொன்மை, பொன்மை, வண்மை, ஞண்மை, வெண்மை, எண்மை, இளமை, வளமை, தாய்மை, தூய்மை, செம்மை, மும்மை, நீர்மை, இனிமை, வேர்மை, அருமை, பெருமை, திருமை, தனிமை, பழமை, குழுமை, புதுமை, செதுமை என எண்ணறு பண்பகளால் இனிது உயர்ந்திலங்கும் உயர்தனிச் செம்மொழி ஆகும்.*

## தமிழ் எனும் சொல்

*இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும் என பிங்கல நிகண்டு கூறும். தமிழ் எனும் சொல் மிகுந்த இனிமை எனப் பொருள் தரும். அமிழ்து என்னும் சொல் ஆகியது காண்க. ‘திராவிடம்’ என்ற சொல் ‘தமிழ்’ என்று ஆகியதாகத் தலைகீழாய்க் கண்டார் கால்டுவெல். கிரீயர்சன் ‘தமிழ்’ என்னும் சொல் ‘திராவிடம்’ எனத் திரிந்தது என்பதை உணர்ந்து கூறினார்.*

*தமிழ் x தமிழும், தமிழகம்*

*தமிழும் x த்ரமிலம் x த்ரமிள x த்ரமிட*

*த்ரவிட த்ராவிட*

*கி.பி. 470இல் வச்சிரநந்தி ஏற்படத்திய சமண சங்கம் 'த்ரமிள சங்கம்' எனும் பெயரினது. திபெத்திய வரலாற்றாசிரியர் தாரநாதர் (கி.பி. 1573) 'த்ரமிலர்' என்கிறார். தமிழைக் குறிக்க வடவர் வழங்கிய திராவிடம் என்ற சொல் பிற்காலத்தே தமிழையும் அதன் இனமொழிகளையும் உள்ளடக்கிய பொதுச் சொல்லாய் வழங்கலாயிற்று. தமிழகம் எனும் சொல் பெரிப்புளூசு நூலில் (கி.மு. 80) தமிழராய்* (Tamirai) *என்றும், பியூத்திங்கர் அட்டவணையில் தமிரிக்கே (*Damirice*) என்றும் வழங்குகிறது.*

**தமிழின் தொன்மை**

*சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்தவர் தமிழர். கி.பி. 50இல் சங்கம்முடிவுற்ற காலம். அதற்கு முன் கடை, இடை, முதல் சங்கங்கள் மொத்தம் 9,950 ஆண்டுகள் இருந்ததாகக் களவியலுரை கூறுகிறது.*

*இடைச்சங்கத்து இலக்கணமாகிய தொல்காப்பியம் கி.மு. 4ஆம் நூற்றாண்டு என்று வரையறை செய்கிறார்கள். என்ப, என்மனார், புலவர், என்றிசினோரே என்று 230க்கு மேற்பட்ட இடங்களில் தமக்கு முற்பட்ட இலக்கண ஆசிரியர் கூற்றுகளைக் குறிப்பிடுகிறார் தொல்காப்பியர். இதனால் அவருக்கு முற்பட்டுப் பல இலக்கண ஆசிரியர்கள் இருந்தனர் என்றும், அவ்விலக்கண ஆசிரியர்களுக்கு முன்னரே பல இலக்கியங்கள் தோன்றி வளர்ந்திருந்தன என்றும் அறியமுடிகின்றது. பல்லாயிரம் ஆண்டுகால மொழி வளர்ச்சியே இலக்கியத் தோற்றம் நல்கும். கி.மு.10,000 அளவில் தலைச்சங்கம் இருந்திருக்க வேண்டும் எனக் களவியலுரை காட்டுகிறது. 20,000 ஆண்டு வளர்ச்சியுடையது தமிழ் மொழி என்பர்.*

**தமிழ் மொழிச் சிறப்பு**

*மொழி என்பது எல்லோருக்கும் தானே இதிலென்ன சிறப்பு தமிழுக்குள்ளது என்றால் தமிழ் மொழி காலத்தால் மூத்தது. இலக்கிய வளத்தால் முதிர்ந்தது. மொழிப் பயனால் இளமைபூண்ட எழில் குலுங்குவது என்று நாம் பெருமை பாராட்ட முடியும். இலக்கிய வளம் எல்லா மொழியிலும் தானே உள்ளது என்றால் 16, 17ஆம் நூற்றாண்டுக்குப் பின்னரே பெரும்பாலான உலக மொழிகள் இலக்கியத் தோற்றம் பெற்றிருக்க கிறித்து பிறப்பதற்கு முன்னரே சிறந்த வளம் இருந்தது பெருமைதானே. தமிழ் என்றாலே அகம் குறித்தது என்பதில் என்ன பெருமை, உலகம் முழுதும் காதல் இயற்கைதானே என்றால் புறவாழ்வைப் பகுத்த பழந்தமிழர் காதல் அகவாழ்வையும் பகுத்த பெருமையர் என உணர்தல் வேண்டும். அகம் புறமாய்ப் பாகுபட்டு விளங்கும் பழந்தமிழ் இலக்கியத்துள் காணப்படும் ஐந்திணை அமைதி உலக இலக்கியம் எதுவும்காணாத ஒரு பெரும்புதுமை பெருமை என்று கூறுவர்.*

**“சதுர்மறை ஆரியம் வருமுன் சகமுழுதும் நினதாயின்**
**முதுமொழிநீ அநாதியென மொழிகுவதும் வியப்பாமே”**

*(மனோன்மணீயம்)*

*வாய் திறந்தால் தோன்றும் அகரம் முதலாக எழுத்து உள்ளதும், வாய் (உதடு) மூடினால் பிறக்கும் ப, ம என்பன அப்பா அம்மா என வழங்குவதும் தமிழின் இயற்கைத் தோற்றம் காட்டும் உயிர், மெய், உயிர்மெய் என்ற எழுத்துப் பகுப்பின் தத்துவ விரிவும் வல்லினம், மெல்லினம், இடையினம் என்ற மெய்யமைதியும் முதல், சார்பு, எழுத்து என்ற பகுப்பின் மொழியியல் நுட்பமும் உணரத்தக்கது. திணைப்பாகுபாடு தமிழரின் நாகரிக முதிர்வைக் காட்டும் என்பர் கால்டுவெல். உயர்திணையில் நீங்கள், தாங்கள் என ஒருவரைச் சுட்டும் பன்மைக் கிளவியாகிய உயர்வுப் பன்மை மன்னரை அல்லது மதகுருமாரைப் போற்றும். காலத்தில் தோற்றம் கொண்டது என்பர் கில்பர்ட் சிலேட்டர்.*

*தொடக்கக் காலச் சித்திர எழுத்தை நிலையாகப் பெற்றதால் தனிநிலை மொழியாகவே சீனம் வளர்ச்சி பெற்றது. உட்பிணைப்பு மொழியாக உலகின் பல மொழிகள் சிதைந்துள்ளமைக்குக் காரணம் மிகப் பிற்காலத்தில் எழுத்துருவம் பெற்றதே. தமிழ் ஒட்டு நிலை மொழியாக வளர்ச்சி பெற்றதும் எழுத்துருவமும் இலக்கிய வளமும் பெற்றதால் தனி உயர்வைத் தனித்தன்மையைச் செம்மையைக் காத்து உயர்தனிச் செம்மாழியாகத் திகழ்கிறது எனலாம்.*

**உலக அரங்கில் தமிழ்**

*தமிழ்நாட்டில் மட்டுமின்றி இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், இந்தோனேசியா, மொரீசியஸ், பர்மா, தென்ஆப்பிரிக்கா, வியட்நாம் முதலிய நாடுகளிலும் தமிழ் பேசப்படுகிறது. இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் தாய்மொழியாகவும் கல்வி மொழியாகவும் துணைஆட்சிமொழியாகவும் செய்திப் பரவல் தொடர்பு மொழியாகவும் இலக்கிய மொழியாகவும் பயன்பட்டு வருகிறது. பலநாடுகள் பேசப்படுகிற நிலையில் உலக மொழிகளில் ஒன்றாகத் தமிழ்மொழி அமைந்துள்ளது என்று செக் நாட்டு மொழியியல் பேரறிஞர் கமில் சுவலபில் கூறியுள்ளார் (சிறப்பிதழ் 2010; 26) 'யுனெஸ்கோ' நிறுவனம் தமிழ் மொழியில் இதழ் வெளியிடுவது தமிழுக்குக் கிடைத்த மற்றொரு சிறப்பாகும்.*

*இந்திய மொழிகளுக்கிடையே நிலவும் ஒற்றுமை வேற்றுமைகளைக் கூர்ந்து நோக்கிய மொழிநூல் வல்லுநர்கள் நாட்டின் வடபாகத்தில் வழங்கப்படும் மொழிகள் ஆரியக் குடும்பத்தைச் சேர்ந்தவை என்றும், தென்பாகத்தில் வழங்கப்படுவது திராவிட குடும்பத்தைச் சேர்ந்தவை என்றும் பிரித்தனர். அதன் அடிப்படையில் தமிழ் திராவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த பிறமொழிகள், மலையாளம், தெலுங்க, கன்னடம், துளு, குடுகு, அல்லது கூர்க்கு, துதம், கோதம், கோண்டு, சந்தம், ஞராவோன், இராஜ்மகால் ஆகியனவாகும். இவற்றுள் முன்னைய ஐந்தும் திருந்திய மொழிகள், பின்னைய ஆறும் திருந்தா மொழிகள். இம்மொழிக்*

*குடும்பத்திற்குத் தலைமை நிலையிலிருக்கும் தகுதியைப் பெற்றது தமிழ் மொழி ஆகும் என்பதனை வாழ்வியற் களஞ்சியம் குறிப்பிடுகிறது (வாழ்வியற் களஞ்சியம், தொகுதி.10: 733).*

*தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு ஆகிய மொழிகள் தமிழ்த்தாயின் பிள்ளைகளெனப் போற்றும் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் இவ்வாறு கூறுகிறார்.*

**“பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்து துடைக்கினுமோர்**
**எல்லையறு பரம்பொருள் முன்னிருந்தபடி இருப்பதுபோல்**
**கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலை யாளமும் துளுவும்**
**உன் உதரத் துதித்தெழுந்தே ஒன்று பல வாயிடினும்”**

*(மனோன்மணீயம், 2:6)*

*என்ற பாடல் வரிகளின் மூலம் தமிழ் மொழியின் திராவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தது. ஆரிய மொழிக் குடும்பத்தின் உதவியின்றித் தனித்து இயங்கக் கூடிய வல்லமை பெற்றது. ஆனால் மற்ற மூன்று மொழிகளுக்கும் ஆரிய மொழியின் சார்பானது அவசியமாகக் கொள்ளப்பட்டது என்பதனையும் அறியமுடிகின்றது. (அந்தோணிசாமி, சே.ச., 2006; 1).*

*சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் ஆற்றலிலும் பொருளோடு பொருந்தி உள்ளத்தின் கருத்துக்களை வெளிப்படுத்துவதிலும் தமிழுக்கு இணையான மொழி உலகில் வேறொங்கும் இல்லை. தமிழ்மொழியில் பொருள்கள் கருத்து, செயல், அதன் விளைவுகள் ஆகியவற்றின் முறை எப்போதும் மீறப்படாமலேயே காக்கப்படுகின்றது.*

*தமிழர்கள் சங்க காலத்தைத் தமிழ் மொழியின் பொற்காலமாகவும், செவ்வியல் காலமாகவும் கருதினர்.இன்று உலக மொழிகள் வரிசையில் தனிச்சிறப்பைப் பெற்று; செவ்வியல் மொழிகள் வரிசையில் தனித்தன்மை பெற்றுத் திகழ்கிறது. உலகில் ஏறத்தாழ ஏழு கோடி பேர் தமிழ் மொழியைப் பேசுகின்றனர்.*

**செம்மொழி**

*செம்மொழி என்பது 'செம்மையான மொழி' எனப் பொருள் கொள்ளப்படுகிறது. அதாவது பண்பட்ட மொழி எனலாம். செம்மொழி வரையறைகளைப் பெற்ற மொழிகளாக இலத்தீன், பாரசீகம், சீனம், அரபு, சமஸ்கிருதம், தமிழ் ஆகிய ஆறு மொழிகளும் செம்மொழி ஆகும். கி.பி. 6ஆம் நூற்றாண்டுக்கு முந்தைய 41 நூல்கள் செம்மொழித் தகுதி பெற்றவை. அவை தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு நூல், இரட்டைக் காப்பியம் (சிலப்பதிகாரம், மணிமேகலை), முத்தொள்ளாயிரம், இறையனார் அகப்பொருள் உரை ஆகியவை அடங்கும். ஏறத்தாழ 3 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பண்பட்டு வாழ்ந்த தமிழர் பேசிய தமிழ் மொழி மட்டும் இன்னும் தன்னிலை குன்றாமல் வளர்ந்து வருகிறது என்பதனை,*

**"செந்தமிழ் நாடெனும் போதினிலே**
**இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே"**

*என்று பாரதியாரும்,*

***"தனித்தியங்கும் தன்மைத் தமிழுக்குண்டு***
***தமிழே ஞாலத்தின் தாய்மொழி பண்டு"***

*என்று பாவேந்தர் பாரதிதாசனும், குறைந்த பட்சம் 1500 ஆண்டு வரலாறு கொண்டதாக இருந்தால் அம்மொழி செம்மொழியாகும் தகுதி பெற்றிருப்பதாகக் கொள்ளலாம். ஆனால் தமிழ்மொழி சுமார் 2000 ஆண்டுகளுக்கும் முற்பட்ட பழமைமிக்கது என்பதற்கு இலக்கியம், கல்வெட்டு, செப்பேட்டுச் சான்றுகள் காணப்படுகின்றன.*

**தமிழ் மக்கள்**

*மொழி, நாடு, பிறப்பு (பரம்பரை) என்ற அடிப்படையில் குறிப்பிட்ட இன மக்கள் என்று வரையறை செய்கிறோம். 'யாரும் ஊரே யாவரும் கேளிர்' என்ற பொதுமை உடைய தமிழர் பல இனத்தார்க்கும் பல*

நாட்டார்க்கும், பல மொழியார்க்கும் இடம்கொடுத்தவர்கள். இடம் கொடுப்பவர்கள். வரலாற்று அடிப்படையல் இனம் என்பது பற்றிச் செய்யும் ஆய்வு தவறானதல்ல. தமிழர் நாகரிகம், ஆரியக் கலப்பு நாகரிகம் என்றும் தமிழர்க்குத் தனி நாகரிகமில்லை என்றும் கலிங்கத்துப்பரணி தெலுங்கனைப் பாடும் இலக்கியம் என்றும், தமிழர் தென்னிந்தியாவில் தோன்றியவரல்லர் என்றும், குறிப்பிட்ட சாதியார் தான் கைபர், போன் கணவாய் வழியாக வந்த ஆரியர்கள் என்பதும் இவைகள் இக்குமுகாயத்தைக் குழப்படி செய்கின்றன. தென் இந்தியாவில் கண்டுபிடிக்கப்பட்ட தொல் பழங்கால எலும்புக் கூடுகள், அகழ்வாய்வுகள் இப்போது உள்ள உருவ அமைப்புகள் ஆகிய அடிப்படைகளில் நீக்ரிட்டோ, ஆல்பைன், ஆஸ்திரேலியா, மங்கோலிய, சித்திய, ஈரானிய, மத்திய தரைக்கடல், நார்டிக் இன மக்களோடு திராவிடரை ஒப்புமைப்படுத்துகின்றனர். இதனால் மேற்கு ஆசியாவிலிருந்து வந்தனர் என்றும், மத்திய தரைக்கடல் பகுதியிலிருந்து வந்தனர் என்றும், இரு கோட்பாடுகள் உள்ளன.

ஆரிய வரவிற்குப் பிறகுதான் திராவிட நாகரிகம் தொடங்குகிறது என்பதாக கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி சொல்கிறார். தமிழின் இலக்கணமே அகத்தியர் என்னும் ஆரியரால் தொடங்கப் பெற்றதாக இடைக்காலத் தமிழரே ஏற்றுக் கொண்டனர். இப்படிப் பன்னெடுங்காலமாக ஊடுருவிய ஆரியக் கொள்கைகளிடையே தமிழ் இனத்தையும் நாகரிகத்தையும் தனியே நிறுவுவது கடினம் என்றாலும் உயர் தனிச் செம்மொழியாகிய தமிழின் தொன்மைச் சிறப்பும், வளமைச் செறிவும், இலக்கியத்திறனும் நாகரிகச் செம்மையும் ஆகியவைதான் காப்பாற்றித் தனித்துத் தாமே நிறுவி நிலைத்துள்ளன. ஆரியர் வரும் முன்னே, சிந்துவெளித் தமிழர் சிறந்திருந்தனர். தமிழ் நாகரிகம் சிறந்திருந்தது. குமரிக் கண்டமே தமிழர் பிறப்பிடம் என்ற கொள்கையை ஜான் மார்ஷல் பானர்ஜி, ஈராஸ் பாதிரியார் முதலிய சிந்துவெளி ஆய்வாளரும், ஸ்காட் எலியட், சர் வால்டர் ராலே, மக்ளீன், பி.டி. சீனிவாச ஐயங்கார், இராமச்சந்திர தீட்சிதர்,

கா. அப்பாத்துரையார், பாவாணர் முதலிய குமரிக் கண்டக் கொள்கையரும் உறுதி செய்தனர்.

இன்றிருக்கும் தமிழநாட்டில் இன்றிருப்போர் ஏறத்தாழ 480 இலக்கம் தமிழர்களும், வெளி மாநிலங்களில் ஏறத்தாழ 35 இலக்கம் தமிழர்களும் உள்ளனர். கடல்கடந்து வாழ்வோர் ஏறத்தாழ ஒரு கோடி தமிழர் ஆவர் (இலங்கை 38 இலக்கம், தென்ஆப்பிரிக்கா 2.5. இலக்கம், பர்மா 2 இலக்கம், ரியூனியன் 1.5. இலக்கம், மொரீஷியஸ் தீவு 44 ஆயிரம், சிங்கப்பூர் 38 ஆயிரம், இந்தோனேஷியா 35 ஆயிரம், ஓடிலோப் 25 ஆயிரம், மார்டினே 13 ஆயிரம், பிஜித் தீவு 5 ஆயிரம் (தமிழ்ப் பல்கலைக்கழகச் செய்திமலர்).

**தமிழ்நாடு**

ஒரு நாட்டின் எல்லைக்கோடும், சட்டமும் மட்டுமே வரையறை செய்ய முடியாது. எல்லையை வரையறை செய்யும் இரு வன்மை வாய்ந்த காரணிகள் இயற்கையும், அரசியலும். குமரிக்கண்டம் என்ற ஒரு கண்டம் முழுவதும் விளங்கிய தமிழகம் இன்று வேங்கடமும் சேரநாடும் இழந்து சுருங்கி உள்ளது. கிழக்கே பர்மா, மேற்கே ஆப்பிரிக்கா, வடக்கே விந்தியமலை, தெற்கே ஆஸ்திரேலியா என்ற நான்கெல்லை கொண்ட கண்டம் குமரிக்கண்டம். முப்புரம் கடல் கொள்ள வடபுறத்தே விந்திய மலைக்கு அப்பால் இருந்த கடல் பகுதிகள் நிலமாயின. இமயமலை தோன்றியது. கலித்தொகை, சிலப்பதிகாரம் இரண்டும் கடல்கோளால் தெற்கிலிருந்து வடக்கு நோக்கித் தமிழர் குடிபெயர்ந்தமை சுட்டும். தமிழ்ச் சங்கங்கள் கடல் கொண்ட மதுரையிலிருந்து கபாடபுரத்திற்கும், பின் மணலூருக்கும், பின் தற்போதுள்ள மதுரைக்கும் இடம்மாறியதை உரையாசிரியர்கள் காட்டுவர்.

**"வடவேங்கடத் தென்குமரி ஆயிடைத்**
**தமிழ்கூறு நல்லுலகம்"**

*எனத் தொல்காப்பியப் பாயிரம் பகரும். தென்குமரி என்பது குமரி ஆறு. நிலந்தரு திருவிற்பாண்டியன் காலத்தில் குமரிக்கோடு அழிந்தது என்று அடியார்க்கு நல்லார் காட்டுவார். தொல்காப்பியர் காலத்தில் குமரியாறு என்பது குமரிக்கடல் ஆகியது தெளிவாகிறது. சிலம்பின் அண்மைக் காலத்திலேயே மணிமேகலை காப்பியமாக்கப்படுகிறபொழுதே புகார் நகரின் ஒரு பகுதி கடல் வாய்ப்பட்டது.*

**"வடதிசை மருங்கின் வடுகு வரம்பாகத்**
**தென்திசை உள்ளிட்டெஞ்சிய மூன்றும்**
**வரைமருள் புணரியொடு கரைபொருதுகிடந்த"**

*(சிலம்பு. 4:35-37)*

*என்று சிறுகாக்கைப்பாடினியாரும்,*

**"நொடியோன் குன்றமும் தொடியோன் பௌவமும்**
**தமிழ்வரம் மறுத்த தண்புனல் நன்னாட்டு"**

*என இளங்கோ அடிகளும் தெற்கே குமரிக்டல் எல்லையாக உள்ளதைக் கூறுவர். பாடினியார் வடுகு நாட்டையும் அடிகள் வேங்கட மலையையும் வடவெல்லையாகக் குறித்தனர். வடுகை புறஎல்லையாகவும், வேங்கடத்தை உட்படு எல்லையாகவும் குறித்திருக்கலாம்.*

*விடுதலை காலத்தே மாநில எல்லை வகுக்கப்பட்ட பொழுது திருப்பதியும், திருத்தணியும் கேட்டு ம.பொ.சி. முதலியோர் போராடிக் கடைசியில் திருத்தணி மட்டும் வந்தது. நெருக்கடி காலத்தில் கச்சத்தீவு இலங்கைக்குத் தாரை வார்க்கப்பட்டது. இப்பொழுது கண்ணகி கோயில் தமிழர்க்கு இல்லை எனப்படுகிறது.*

*உலகில் பிற மொழிகளெல்லாம் வழங்கும் நாட்டார் பெயர் பெற, தமிழ் மட்டுமே மொழியால், நாட்டுக்கும் இடத்துக்கம் பெயர் தந்தது. தமிழ்நாடு என்ற பெயர் சென்னை மாநிலத்திற்கு வைக்க வேண்டுமென்று சங்கரலிங்க நாடார் தீக்குளித்தர். அறிஞர் அண்ணாவின் காலத்தில்தான் சென்னை மாநிலம் தமிழ்நாடு ஆயிற்று.*

தமிழ்மொழி எண்ணிறந்த இலக்கண, இலக்கியங்களைப் பெற்று எழிலுடன் விளங்குகிறது. காலத்தால் முற்பட்டவை. கருத்தால் சிறந்து விளங்குபவை. இன்றளவும் பீடுநடைபோடும் பெட்டகங்களாகத் திகழ்கின்து. பிற மொழிகளுக்கில்லாத சிறப்பும் தொன்மையும் தமிழ் மொழிக்கு உளதென்பதை உலகம் நன்கறியும்.

## தமிழ் இலக்கியங்கள்

தமிழ் இலக்கியங்கள் வாழ்வியலைப் படம்பிடித்துக் காட்டும் காலக்கண்ணாடிகளாக விளங்குகின்றன. அவை ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்ககாலத்து மக்களின் வாழ்க்கை, வாணிகம், பண்பாடு, பழக்க வழக்கம் முதலியவற்றை எடுத்துக்காட்டி நம் நினைவில் நிலைநிறுத்துகின்றன. வாழ்க்கையின் வழிகாட்டிகளாகத் திகழ்கின்றன. நாம் இலக்கியங்களில் நுழையுங்கால் நம் உணர்வுக்கு விருந்தும், உள்ளத்திற்கு அமைதியும் பெற இயலுகிறது. ஒவ்வொரு இலக்கியமும் தாம் தோன்றிய காலத்து நாட்டின் நிலையையும், மக்களின் வாழ்வியல் முறைகளையும், பழக்க வழக்கங்களையும் எடுத்துக்காட்டும் வகையில் அமைந்துள்ளது.

தமிழ்நாட்டு வரலாறு தொல்காப்பியர் காலம் வரை எட்டி நிற்கிறது. தொல்காப்பியத்திலும், சங்க நூல்களிலும் மனிதன் பண்பாட்டு நெறியோடு வாழ்ந்த வாழ்க்கையின் ஊடாட்டம் காணப்பெறுகிறது. ‘தன்னுயிரைப் போன்று மன்னுயிரைக் காத்து’, ‘உற்றார் மற்றார்’ என்னாது இன்னார் இனியார் என நோக்காது தமர் எனக் கோல் கோடாது பிறர் எனக் குணம் கொள்ளாது உயரிய பண்பாட்டில் வாழ்ந்தனர் எனச் சங்க இலக்கியங்களின் வாயிலாகக் காண்கிறோம்.

## தமிழர் பண்பு

தமிழர் பண்பு தனிச்சிறப்புடையது. அவர்தம் வரலாறு புகழுடையது, பெருமையுடையது, அடிப்படையானது, தனித்ததொரு

தன்மையுடையது, உலகறிய உணர்த்தும் பெற்றியுடையது. உலகப் பண்பாட்டின் உயிர்நாடி எனலாம். அது அகவாழ்வையும் புற வாழ்வையும் பகுத்துக் கொண்டது. மனித வரலாற்றின் மிகப் பழங்காலத்திலேயே முறையான சமூகவியல் நெறியினைப் பகுத்துக் கொண்ட பெருமையுடையது. அறம் ஒன்றே தலையாயதென உணர்த்துவது. மனித இனம் எத்துணை உயரிய அறிவு படைக்கப் பெற்றிருப்பினும், பட்டங்களையும் பல்வேறு சிறப்புகளையும் பெற்று உயர்ந்திருப்பினும், செல்வத்தால் செழித்திருப்பினம் பிறவகை உயர்வுகளால் கொழித்திருப்பினும் பண்பாடு என்ற ஒன்று அவ்வினத்திற்கு இல்லையெனின் அது ஓரறிவுடைய மரத்திற்கும் கீழ்ப்பட்டதாகக் கருதப்பெறும். பண்புகள் ஒருவருக்குப் பல்வேறு செல்வங்களின் நிலைக்களன்களாக விளங்க அடிப்படையாக அமைகிறது. பண்பாடு என்றும் செல்வம் மனிதனை உயர்த்திக்கொண்டே சென்று நின்று நிலைக்கச் செய்கிறது. பண்பாடு மனித இனத்துடன் இயைந்து காணப்பெறுவது. அது பிரிக்க இயலாதது. பிற உயிரினங்கள் நம் மனித இனத்தை வேறுபடுத்திக் காட்டி இனம் கண்டுகொள்ள உதவுவது.

**பண்பாடு– விளக்கம்**

அன்றுதொட்டு இன்றுவரை பண்பாடு என்பது இன்ன தன்மைத்து என்று காண இயலாவிடினும் பண்பாடு உள்ளமையால் தான் இந்த உலகம் நிலைத்து நிற்கிறது என்பதை உணர இயலுகிறது. தனிமனிதன் சமூகத்துடன் ஒட்டியிருப்பினும் சமூகம் தனிமனிதனுக்கு உணர்த்துவது பண்பாட்டின் அடிப்படையிலேயாகும். அத்தகைய பண்பாடு ஒன்று இல்லையெனில் உலகம் இல்லை. உயிர்கள் இல்லை, உற்றதொரு செயலில்லை, ஒன்றுமேயில்லை எனலாம். ‘பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகல்’ எனக் கலித்தொகை சங்க காலத்திலேயே பண்பின் தகைமையைக் குறிப்பிடுகின்றது. அது நன்னெறியின் பாற்பட்ட அனைத்து இயக்கங்களின் வெளிப்பாடு என்பதை அறிய இயலுகிறது. குறளுக்கு

உரையெழுதி பரிமேலழகர் 'பண்புடைமை யாவது பெருமை சான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்றே எல்லார் இயல்புகளையும் அறிந்து 'ஒத்து ஒழுகுதல்' என விளக்கியுள்ளார். பண்பிற்குப் பொருள் விளக்கம் கூறும் சென்னைப் பல்கலைக்கழக அகராதியும், பிறர் இயல்பை அறிந்து நடக்கும் நற்குணம் எனக் குறிப்பிடுகின்றது. எனவே மனிதனிடம் பண்பு பொருந்துதலே பண்பாடு எனலாம்.

பண்பாடு இன்னது என உணர்த்த எடுத்தியம்ப இயலாவிடினும் பண்பாட்டால் உலகம் சிறக்கிறது என்ற உண்மையை மறுக்க இயலாது.

**"பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்**
**மண்புக்கு மாய்வது மன்"** *(குறள் 996)*

என்ற வள்ளுவரின் வரையறையைச் சிந்திக்க வேண்டும். பண்பாடு நாம் கற்றனவும் கேட்டனவும் நிலைகெடா வகையில் உள்ளத்து நிலைத்து நிற்பது; குணமோ நம் செயலெலாம் கடமைவழி நம்மை வாழ வழிகாட்டுவது என்று டாக்டர் இராதாகிருட்டிணன் அவர்கள் கூறியுள்ளார். (1992, பக். 3)

பண்பாடு மனிதனின் கை வண்ணத்தைப் புலப்படுத்துகின்றது என்பார் மலினோசுகி. தன்னுடைய தேவையினை நிறைவு செய்துகொள்ள மனிதன் உருவாக்கிக் கொண்ட கருவிதான் பண்பாடு என்பார் சி.சி. நாத். பண்பாடு என்பது மனிதன் சமுதாயத்தில் ஓர் உறுப்பு என்ற நிலையில் அறிவு, நம்பிக்கை, கலை, ஒழுக்க நெறிகள், சட்டம், பழக்கம், ஆற்றல் முதலிய அடங்கப்பெற்ற ஒருவகை வாழ்க்கை முறையின் முழுமைத் தொகுதியாகும் என்ற மானிடவியலறிஞர் எட்வர்டு பர்னட் டைய்லர் (E.B. Taylor, Primitive Culture, 2 Vols) வரையறை இன்று பெருவழக்காக ஏற்றுக் கொள்ளப்பெறுகிறது. 'ஆன்ற குடிப்பிறத்தல் பண்புடைமை' என்பதன் அடிப்படையில் மனிதனுடைய பிறப்பு, வாழ்க்கை முறை, சுற்றுச்சூழல் பிறவற்றைப் பற்றிய பண்பாடு என்பதை ஓரளவு மனித இனம்

*உணர்ந்திருக்கிறது. எனவே பண்பாடு மனித வாழ்வின் வரலாற்றை ஒட்டியதாகக் கொள்ளலாம்.*

*உதட்டாலல்லாமல் ஒருவருக்கொருவர் உள்ளத்தாலும் உணர்வுகளாலும் ஒன்றி அந்த ஒன்றிய உணர்வுகளினால் நிகழும் செயல்களும் பிறவும் யாவும் தனிமனிதனுக்கும் தனிச் சமூகத்திற்கும் தனிநாட்டிற்கும், தனி இனத்திற்கும் உரியதாக அமையாமல் எல்லார்க்கும் ஒப்ப இருக்கும் வகையில் வழிகாட்டுவதே பண்பாடாகும். நம் தீந்தமிழ் இலக்கியங்கள் இந்நெறியில் சிறந்து விளங்குகின்றன. மனித இனத்தின் மரபுச் செல்வம் பண்பாடு; வளர்ந்த நிலைச் செல்வம் நாகரிகம்; நாகரிகம் பழமை பெற்று நிலைத்தால் அது பண்பாடாக மாறுகிறது. என்ன வைத்திருக்கிறோம் அது நாகரிகம்; என்னவாக இருக்கிறோமோ அது பண்பாடு.*

**பண்பாட்டின் நிலைக்களன்**

*தனிமனிதனின் சிறந்த செயல்களே பண்பாடுகளாக மாறுகின்றன. அச்செயலில் ஒருவரின் தனித்த பண்பு நலன்களும் அவர் கற்றறிந்து உணர்ந்த கூறுகளும் உட்பொதிந்திருக்கும் அப்பண்புகள் பல மனிதரின் ஏற்பினைப் பெற்றுப் பகிர்ந்து கொள்ளுத் தகைமையைப் பெற்றிருக்கும். அது சமுதாயத்தில் பரவலாக்கப் பெற்றுப் பலராலும் பின்பற்றப்பெறும். அப்போது அப்பண்பாடு ஒரு நிலைக்களனாக அமையும்.*

*உலகத்து மக்கள் இனத்தவர் பலர், அவர்களுடைய வடிவம் பண்பும் வாழ்வியல் நெறிகளும் பல. ஒரு நாட்டின் பண்பாட்டு நிலைக்களன் அந்நாட்டில் வாழும் ஆடவர் பெண்டிர் அவர்களைச் சூழ்ந்துள்ள வாழ்வியல் வளங்கள் முதலியவற்றைப் பொறுத்தே அமையும். ஒவ்வொரு நாடும் அதன் நிலைக்கேற்பத் தனிமைப் பண்பும் நிலவியல் அமைப்பும, வரலாற்றுச் சிறப்பும் அடிப்படையாகக் கொண்டு மிளிர்கின்றது.*

*பண்பாடு நிலப்பரப்பு அல்லது நாடு சார்ந்ததாகவும் (அமெரிக்கப் பண்பாடு, மேற்கத்தியப் பண்பாடு, இந்தியப் பண்பாடு) மொழி மற்றும்*

இனம் சார்ந்ததாகவும் (தமிழர் பண்பாடு, திராவிடர் பண்பாடு, ஆங்கிலேயர் பண்பாடு) இடம் சார்ந்ததாகவும் (நகரப் பண்பாடு, ஊரகப் பண்பாடு) மக்கள் சார்ந்ததாகவும் (பழங்குடியினர் பண்பாடு, வேளாண் குடியினர் பண்பாடு) பல பகுதிகளின் கூறுகளாகப் பிரித்துள்ளனர். அவை அனைத்தையும் நெறிப்படுத்தி நோக்கும்போது பண்பாடு என்பது அனைவராலும் பகிர்ந்து கொள்ளக் கூடிய தன்மையுடையது. பண்பாடு என்பது மக்களின் நடத்தை முறைகளைக் கட்டுக்கோப்பான நிலையில் செயல்படுத்தும் ஒரு மிகப்பெரிய அமைப்பாகும். அவ்வமைப்பில் ஆயிரமாயிரம் கூறுகள் இடம்பெற்றுள்ளன. அவை பல வடிவங்களில் அமைந்துள்ளன. இயந்திரங்களின் செயல்பாட்டை ஆயிரமாயிரம் உறுப்புகளை இணைத்துச் சிறப்பாக வடிவமைத்து இயக்குகின்றனர். அவ்வாறே ஒவ்வொரு பண்பாட்டிலும் ஆயிரமாயிரம் கூறுகள் உள்ளன. அக்கூறுகள் மக்களால் தெரிவு செய்யப்பெற்றவை. நெறிப்படுத்தப் பெற்றவை, வாழ்வியலுடன் இணைக்கப்பெற்றவை. அவை 'பண்பாடு' என்னும் அமைப்பிற்குள் பொருத்தப் பெற்றுள்ளன. இயந்திரத்தின் உறுப்புகளைக் கண்ணால் கண்டறிய இயலும். பண்பாடு மக்களின் உணர்வுகளில் பொதிந்து கிடப்பதால் அதனைச் செயல்களின் வெளிப்பாட்டின் வாயிலாக மட்டுமே உணர இயலும்.

**பண்பாட்டுக் கூறுகள்**

ஒவ்வொரு பண்பாட்டிலும் இடம்பெற்றுள்ள கூறுகள் பல்வேறு தன்மை வாய்ந்தவை. இருப்பினும் அவற்றின் பண்புகளைத் தொகுத்துக் காணும்போது அவற்றை மூன்று நிலைகளாக வரிசைப்படுத்தலாம். அவை,

1. பொருள்சார் கூறுகள் (Material Components)
2. அறிதல்சார் கூறுகள் (Cognitive Components)
3. நெறியியல் கூறுகள் (Normative Components)

**பொருள்சார் கூறுகள்**

மக்கள் அவர்களின் பயன்பாட்டிற்காக ஏற்படுத்திக் கொள்ளும் அனைத்துப் பொருள்களும் பொருள்சார் கூறுகள் எனப்படும். அணிமணிகள், வீட்டுப் பொருள்கள், இயந்திரங்கள், தொழிற்கருவிகள், கட்டடங்கள், போக்குவரத்துச் சாதனங்கள் போன்றவையாகும். இக்கூறுகள் மக்களின் சிந்தனை முறை உணர்வுகள், அறிவு, அறவுணர்வு போன்ற பல பொருள்சாராக் கூறுகளின் தன்மைகளைப் பெற்றுள்ளதால் இவை மக்களின் பொருள்சாராப் பண்பாட்டையும் வெளிப்படுத்துபவையாகத் திகழ்கின்றன. பொருள்சார் கூறுகள் மக்களின் தேவைகளுக்காக ஏற்படுத்தப்பட்டவையாதலால் அத்தேவைகள் நிலைபெற்றுள்ள வரை அக்கூறுகளும் அவர்களின் பண்பாட்டில் நிலைத்திருக்கும்.

**அறிதல்சார் கூறுகள்**

பண்பாட்டின் அறிதல்சார் கூறுகள் என்பவை அப்பண்பாட்டைச் சார்ந்தவர்களின் அறிதிறன் (Cognition) கூறுகளைக் குறிப்பதாகும். சுருங்கக் கூறின், உலகத்தைப் பற்றியும், உலகிலுள்ள ஒவ்வொரு பொருளைப் பற்றியும் வாழ்க்கையைப் பற்றியும் மக்கள் என்னென்னஅறிந்து கொண்டுள்ளனர். அவற்றை எவ்வாறு அறிந்து கொள்கின்றனர் என்பவையே அறிதல்சார் கூறுகளாகும். உலகிலுள்ள ஒவ்வொரு பொருளையும் எவ்வாறு வகைப்படுத்திக் காண்கின்றனர். நல்லது கெட்டது என எவ்வாறு தீர்மானிக்கின்றனர். சுற்றுச் சூழலிலுள்ள தாவர விலங்கினங்களை எவ்வாறு வகைப்படுத்திக் காண்கின்றனர். இவற்றுள் எவை பயனுள்ளவை, எவை பயனற்றவை என முடிவு செய்கின்றனர். இவை தவிர மக்கள் வழங்கும் நம்பிக்கைகள், கருத்துகள், வழக்காறுகள் போன்றவையும் அறிதல்சார் கூறுகளே இவ்வகைத் திறன்களை

மொத்தமாக 'அறிவு' எனக் குறிப்பிடலாம். இதில் இடம்பெறும் அனைத்துக் கூறுகளும் பண்பாட்டின் ஒரு பகுதியாக விளங்குகின்றன.

**நெறியியல் கூறுகள்**

பண்பாட்டில் நெறியியல் கூறுகள் எனப்படுபவை அம்மக்களின் வாழ்வை நெறிப்படுத்தும் கூறுகளைக் குறிக்கும். சமுதாயத்தில் எவ்வாறு வாழவேண்டும், எவற்றைச் செய்யக்கூடாது, ஏன் செய்யக்கூடாது, போன்ற விதிமுறைகளோடு தொடர்புடைய கூறுகளே நெறியியல் கூறுகளாகும்.

**விழுமியங்கள்**

ஒரு பண்பாட்டைச் சேர்ந்தோரின் வாழ்வியலுக்கும் செயல்களுக்கும் நடத்தை முறைக்கும் எவையெவை அவசியமென்று கருதப்படுகிறதோ அவையே அப்பண்பாட்டினரின் விழுமியங்கள் ஆகும். மக்கள் அனைவரும் கூட்டாகச் சேர்ந்து வாழ முற்படும்போது எவை எவை எல்லாம் முக்கியமானது எனக் கருதப்படுகிறதோ அவை 'பண்பாட்டு விழுமியங்கள்' எனப்படும். பண்பாட்டு விழுமியங்கள் தனிமனிதரைச் சாராமல் அவர் சார்ந்த குழுவிற்கும் சமுதாயத்திற்கும் பொருந்தக்கூடியவையாக இருக்கும். அவை சமுதாயத்தில் நிகழும் நடத்தை முறைகளை மதிப்பிட்டுக் கூறுவதாக இருக்கும். அல்லது அதற்கான அர்த்தத்தை வெளிப்படுத்துவதாக இருக்கும். அதாவது நீதிக்குக் கட்டுப்படுதல், அறம் செய்து வாழ்தல், வாய்மையே பேசுதல், வாய்மையே வெல்லும், பிறன்மனை நோக்காமை, நல்லது செய்யின் நல்லது விளையும், தினை விதைத்தவன் தினை அறுப்பான், உப்புத் தின்றவன் தண்ணீர் குடிப்பான் போன்ற எண்ணற்ற விழுமியங்கள் தமிழரின் வாழ்வில் இடம்பெற்றுள்ளன. இவை அனைத்தும் சமுதாய வாழ்விற்கு இன்றியமையாதவை என மதிக்கப்படுகிறது. ஒவ்வொரு நாட்டுப் பண்பாடும் குறிப்பிட்ட சில விழுமியங்களுக்குச் சிறப்பை அளிக்கின்றன. பண்பாடுகளில் எண்ணற்ற கூறுகள் இருப்பினும் சில பண்பாடுகள்

‘தூய்மைக்கு’ முதலிடம் தருகின்றன. சில பண்பாடுகள் நேர்மை, அமைதி, சமத்துவம், தற்சார்புடைமை, கடவுள் வழிபாடு போன்ற விழுமியங்கள் ஏதேனும் ஒன்றிற்கு முக்கியத்துவம் தருகின்றன. ஜப்பானியருக்கும் ‘அழகு’ ஓர் இன்றியமையாத விழுமியமாகும். ஸ்பெயின் நாட்டவருக்கு ஆண்களின் வீரத்தன்மையும், ஜாவாத் தீவினருக்கு அமைதித் தன்மையும், இந்தியர்களுக்கு ஆன்மீக உணர்வும், இன்றியமையா விழுமியங்களாக உள்ளன. ஒவ்வொரு பண்பாட்டிலும் முதன்மையான சில விழுமியங்கள் தவிர நூற்றுக்கணக்கான விழுமியங்கள் இடம்பெற்றுள்ளன.

**நெறிமுறைகள்**

மக்களின் நடத்தை முறைகளையும் செயற்பாடுகளையும் முறைப்படுத்தக்கூடிய விதிகளே நெறிமுறைகள் எனப்படும். இவை விழுமியங்களில் இருந்து மாறுபட்டவை. விழுமியங்கள் பெரும்பாலும் கருத்தியல், வடிவம் பெற்றவை. நெறிமுறைகளோ இவற்றைத்தான் செய்ய வேண்டும். இவற்றை செய்யக்கூடாது, இவை சரி இவை தவறு, இவை நல்லவை, இவை கெட்டவை என உறுதிபடக் கூறும் தன்மை பெற்றவை. எடுத்துக்காட்டாக தமிழர் வாழ்வியலில் பெரியோர், ஆசிரியர் வரும்போது இளையவர்கள் கால்மேல் கால் போட்டுக்கொண்டு இருக்கக் கூடாது. எழுந்து நிற்க வேண்டும். இறைவழிபாட்டிற்குக் குளித்து விட்டுத்தான் செல்லவேண்டும். விலக்குடைய பெண்கள் புனிதச் சடங்குகளில் கலந்து கொள்ளக்கூடாது. சாலையில் பச்சை விளக்கு எரிந்த பின்பே பயணத்தைத் தொடங்கவேண்டும். சாலையில் இடப்பக்கத்தில் மட்டுமே செல்ல வேண்டும் போன்ற எண்ணற்ற நெறிமுறைகள் உள்ளன. ஒரு சமுதாயம் இயல்பாக இணக்கமாகச் செயல்படவும் தனிமனிதர்கள் ஒழுங்காகச் செயல்படவும் நெறிமுறைகளே உத்தரவாதம் தருகின்றன. கணக்கியலில் எவ்வாறு வாய்பாடுகளும், சூத்திரங்களும் முக்கியமோ அதைப்போல் சமுதாய வாழ்விலும் மக்கள் நெறிமுறைகள் என்னும்

வாய்பாட்டைப் பற்றி நிற்க வேண்டும். அவை காலங்காலமாய் மக்களால் உறுதியாகப் பின்பற்றப்படுகின்றன.

நெறிமுறைகள் சமுதாய வாழ்விற்கு அரணாக விளங்குவதால் அவற்றை மீறுவோருக்கு அந்தந்தப் பண்பாட்டால் வரையறுக்கப்பட்ட ‘கட்டுப்பாடுகள்’ அல்லது தண்டனைகள் விதிக்கப்படும். கேலிக்குள்ளாதல், தகுதியிழத்தல், தண்டம் கட்டுதல், சிறைக்குச் செல்லல் ஆகிய எந்த ஒன்றும் இக்கட்டுப்பாட்டுக்குள் சேரும். இதுவும் பண்பாட்டிற்குப் பண்பாடு மாறுபடும்.

**உகந்த நிலைப் பண்பாடும், உண்மைப் பண்பாடும்**

உகந்தநிலைப் பண்பாடு என்பது சமுதாய வாழ்வில் இவற்றைத்தான் செய்ய வேண்டும் என்று மக்களிடமிருந்து எதிர்பார்ப்பதைக் குறிக்கும். எவற்றைச் செய்யக்கூடாது என்று வரையறுக்கப்பட்டுள்ளதோ அவற்றுள் பலவற்றை மக்கள் நடைமுறை வாழ்வில் செய்துவருகின்றனர். காலங்காலமாக இது நடந்து வருகிறது. ஆனல் உண்மைப் பண்பாடானது மக்கள், சமுதாயத்தில் சட்ட திட்டங்கள் எதிர்பார்ப்புகளைக் கவனத்தில் கொள்ளாமல் நடைமுறை வாழ்வில் எவ்வாறு நடந்து கொள்கிறார்கள் என்பதைக் குறிக்கிறது. காலந்தவறாமையை வலியுறுத்திப் பேசுவதும், அவரவர் கடமைகளைத் தவறாமல் செய்ய வேண்டுமென்று கூறுவதும் உகந்தநிலைப் பண்பாட்டைக் குறிக்கிறது. ஆனால் அவற்றைக் கடைப்பிடிக்க முடியாமல் வாழும் நிலை உண்மைப் பண்பாட்டைக் குறிக்கிறது. அது தொடர்பாகப் பின்வரும் எடுத்துக்காட்டுகளையும் கூறலாம்.

1. குடித்தல், சூதாடுதல் போன்ற பொது விலக்குகளை மீறி அவற்றைச் செய்தல்.
2. தன்னலமற்ற பொதுநல வாழ்வு என்ற இலக்கை மீறி பிறரைத் துன்புறுத்திச் சுயநலத்தையும் ஆதாயத்தையும் தேடி அலைதல்.

3. *குடும்ப அமைப்பிற்குள் கட்டுப்படாமல் பரத்தமை வாழ்வில் ஈடுபடுதல்.*
4. *தகுதி அடிப்படையில் பணி நியமனம் செய்யும் மரபை மீறி இன உணர்வு தனிச்சலுகைகள் மூலம் அதைச் செய்தல்.*
5. *சட்டத்திற்கு முன் அனைவரும் சமம் என்று கூறுவோர் அவர்களின் சுயநலனுக்காக அவற்றை மீறுதல்*

*இவற்றின் ஒவ்வொன்றிலும் முதற்பகுதியில் உள்ளவை உகந்தநிலைப் பண்பாட்டைக் குறிப்பவை. அவை மகக்ளின் நடத்தை முறை இந்த இந்த முறையில்தான் இருக்க வேண்டும் என்று அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட மரபுவழி விதிமுறைகளைக் குறிக்கின்றன. எடுத்துக்காட்டுகளின் பிற்பகுதியில் உள்ளவை உண்மை பண்பாட்டைக் குறிப்பவை. அவை மக்கள் ஏற்றுக்கொண்ட விதிமுறைகளையே மீறி நடக்கும் இயல்பான நிலையை (உண்மைப் பண்பாடு) உணர்த்துகிறது.*

**உள்ளார்ந்த பண்பாடும் வெளிப்படைப் பண்பாடும்**

*மக்கள் மனத்தளவில் பதிய வைத்துள்ள பண்பாட்டு விதிகளின் அடிப்படையில் நிகழும் நடத்தை முறைகளின் தொகுப்பே உள்ளார்ந்த பண்பாடு ஆகும். பண்பாட்டில் நிகழும் சில நிகழ்ச்சிகள் மூலம் இதனைப் புரிந்து கொள்ளலாம். தேசியக்கொடி ஏற்றியவுடன் நிமிர்ந்து நின்று வணக்கம் கூறுவதும், தேசிய கீதம் பாடப்பெறும் போது எழுந்து நின்று அசையாமல் நிற்பதும், பெரியோர்கள் வரும்போது எழுந்து வணக்கம் தெரிவிப்பதும், விருந்தில் வாழை இலையைப் போடும்போது நுனி இடப்பக்கம் இருக்க வேண்டுமென்பதும், இலையில் உணவு பரிமாறும்போது ஒவ்வொன்றையும் எங்கு வைக்க வேண்டும் என்பதும், சடங்கு நிகழ்ச்சிகளில் எந்தச் செயலிற் கருத்து எது நிகழ வேண்டும், எப்படி நிகழ வேண்டும் என்பதும் உள்ளார்ந்த பண்பாட்டில் அடங்கும்.*

*உள்ளார்ந்த பண்பாட்டிற்கு நேர் எதிரானது வெளிப்படைப் பண்பாடு. இதில் கருத்து வடிவில் புதைந்து கிடக்கும் செய்திகளோ*

மனதளவில் மட்டுமே புரிந்து கொள்ளக்கூடிய நடத்தை முறைகளோ இடம்பெறுவதில்லை. வெளிப்படையாகக் காணக்கூடியவை மட்டுமே இடம்பெறும். ஒரு சமுதாயத்தின் நடத்தை முறைகள் எக்கூறுகளால் வெளிப்படுகிறதோ அவையே அச்சமுதாயத்தின் வெளிப்படைப் பண்பாடாகும். பெரும்பாலும் பொருள்சார் பண்பாட்டுக் கூறுகளால் அறியப் பெறுபவை அனைத்தும் வெளிப்படைப் பண்பாடு எனக் கொள்ளலாம்.

**உட்பண்பாடும் எதிர்ப்பண்பாடும்**

இன்றைய புதிய சமுதாயங்கள் ஒவ்வொன்றிலும் பல்வகைப் பிரிவினர் அல்லது குழுவினர் உள்ளனர். இவ்வகைப் பிரிவைச் சேர்ந்தோர் அவர்கள் சமுதாயத்தின் அனைத்துப் பண்புகளையும் முழுமையாகக் கொண்டிராமல் பல தனிப்பட்ட பண்புகளை வளர்த்துக் கொண்டு மற்றவர்களிடமிருந்து பிரிந்து காணப்படுவர். இவ்வகைப் பிரிவனிரின் பண்பாடே உட்பண்பாடு எனப்படும்.

இவற்றின் தன்மையைச் சில எடுத்துக்காட்டுகள் மூலம் அறியலாம். ஒரு நாட்டில் குடியுரிமை பெற்று வாழும் வேற்று நாட்டவர்கள் அவர்கள் குடியேறிய நாட்டின் பண்பாட்டில் ஒரு பகுதியையும் அவர்களின் சொந்தப் பண்பாட்டின் பெரும்பகுதியையும் இணைத்துக் கொண்டவர்களாய் உள்ளனர். இவ்வாறான வாழ்க்கை முறை அவர்கள் வாழும் நாட்டு மக்களின் பண்பாட்டிலிருந்து வேறுபட்டதாக அமையும். அவர்களின் அவ்வகைப் பண்பாடு அந்நாட்டின் மொத்தப் பண்பாட்டில் ஓர் உட்பண்பாடாக அமையும். சமுதாயத்தில் அனைத்துப் பிரிவினரின் வாழ்க்கை முறை ஒரே மாதிரியாக இருப்பதில்லை. செல்வந்தர்களின் வாழ்க்கை முறை ஏழைகளின் வாழ்க்கை முறையிலிருந்து மாறுபடுகிறது. இருசாராரும் அவரவருக்கென்றே தனிப்பட்ட வாழ்க்கை முறையைக் கொண்டுள்ளனர். ஆகவே இவ்விரு பிரிவினரின் பண்பாடும் தனித்தனி உட்பண்பாடாக அமைகிறது.

**பண்பாட்டுப் பொதுமைகள்**

*பண்பாட்டுப் பொதுமைகள் என்பது உலகிலுள்ள அனைத்துப் பண்பாடுகளுக்கும் பொதுவான கூறுகளைக் குறிக்கும். எண்ணற்ற கூறுகள் அனைத்துப் பண்பாடுகளுக்கும் பொதுவாக உள்ளன. தேவைகள் பொதுவானதாக இருந்தாலும் அத்தேவைகளை நிறைவு செய்யும் முறைகள் பண்பாட்டிற்குப் பண்பாடு மாறுபடுகின்றன. இதைப் பற்றிப் பண்பாட்டியல் வல்லுநர் கிளைட் குளுக்கான் குறிப்பிடும்போது அனைத்துப் பண்பாட்டினரின் தேவைகள் அடிப்படையில் ஒன்றாக இருந்தாலும் அவற்றை ஈடுசெய்வதில் ஒவ்வொரு பண்பாடும் தனிப்பட்ட முறையினைக் கொண்டுள்ளது என்பார். எடுத்துக்காட்டாக திருமணம் என்பது ஒரு பண்பாட்டுப் பொதுமை. இது அனைத்துப் பண்பாட்டிலும் உள்ள ஒரு கூறு. இது பாலுணர்வுகளைத் தீர்த்துக் கொள்ளவும், இனத்தின் நிலைபேறுடைமைக்கு வழிசெய்யவும் ஏற்பட்டுள்ள ஒரு பண்பாட்டுக் கூறாகத் திகழ்கிறது. ஆனால் திருமண முறை பண்பாட்டிற்குப் பண்பாடு மாறுபடுகின்றது. இவற்றுள் குழுமணம், பல மனைவி மணம், பல கணவர் மணம், மதனி மணம், மைத்துனி மணம் ஒரு துணை மணம் போன்றவை குறிப்பிடத்தக்க வகைகளாகும்.*

**பண்பாட்டைக் காத்தல்**

*தமிழர் வாழ்வில் சங்க காலந்தொட்டு உண்மைப் பண்பாடும், வெளிப்படைப் பண்பாடும் எதிர்ப்பண்பாடும், இலைமறை காயாகத் தொடர்ந்துள்ளன. சங்ககாலம் முதல் நெடுங்காலம் வரை சான்றோரால் கட்டிக் காக்கப்பெற்ற பண்பாடு இன்று சிதைந்து சீரழிந்த நிலையல் உள்ளதை "தமிழரை இருபது நூற்றாண்டுகளாக வீழ்த்திக் கொண்டிருக்கும் பெரும் எதிரி அவர்களிடையே பின்பற்றாமைதான். எப்படி மக்களினம் உறுதி பெறவேண்டும் உயர்வு பெறவேண்டும் என்பன பற்றியெல்லாம் தமிழ் முன்னோர் காலந்தோறும் நன்கு சிந்தித்துள்ளனர், எழுதி வைத்துள்ளனர். ஆனால் அவர்தம் கருத்துக்கள் காலந்தோறும்*

மக்களால் புறக்கணிக்கப்பெற்றும், மறக்கடிக்கப் பெற்றும் வந்துள்ளன. தமிழ் முன்னோர்கள் கண்டு காட்டிய கருத்துக்கள், எல்லாம் பின்பற்றத் தெரியாத செயலாற்ற விரும்பாத, செயலாற்ற முடியாத மக்களிடமிருந்து பயனற்றுப் போய்க் கொண்டிருக்கின்றன. பயனற்றுப் போயின. எனவே "தமிழரிடமுள்ள தலையாய பகை நன்னெறிகளை அலசிப் பார்த்துப் பின்பற்றாமைதான்" என்று க.ப.அறவாணன் ('தமிழர்தம் மறுபக்கம்') என்னும் நூலில் குறிப்பிடுகிறார்.

பண்பாட்டை வளர்க்க நாம் செய்ய வேண்டுவது ஒன்றுமில்லை. வளர்ந்துள்ள பண்பாட்டைப் பேணிக் காத்தல் போதும் என்பதை, நாடு என்பது மனிதனின் பண்பாடுகளுக்கு உறைவிடமாக விளங்கவேண்டும். இப்படிப்பட்ட பண்பாடுகளை நம் நாட்டில் இனி உண்டாக்கி வளர்க்க வேண்டியதில்லை. வளர்ந்துள்ள பண்பாடுகளை மங்காமல் மறையாமல் ஒதுக்காமல் காத்தால் போதும் என்னும் மு.வ. அவர்களின் கூற்றைப் போற்றும் வகையில் வாழ்தல் நம் கடமையினும் மேலானதாகும் என்று (திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம் என்னும் நூலில்) குறிப்பிடுகின்றார்.

**நாகரிகமும் பண்பாடும்**

வரலாறு என்றால் அரசர்களின் பெயர், ஆட்சி ஆண்டு, அவர்களிடையே நடைபெற்ற போர்கள் முதலாகிய அரசியல் வரலாறு மட்டுமே என்றில்லாமல் மக்களின் வாழ்வியல் முறை, இலக்கியம், சமயம், கலை, நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள் முதலியவைகளைக் கூறும் வரலாறு (Social History) இக்காலத்தில் சிறப்பிடம் பெற்றுள்ளது. நாகரிகம் பண்பாடு என்னும் இரண்டு சொற்களும் ஏறத்தாழ நெருங்கிய அல்லது ஒரே பொருளைத்தரினும் பொருண்மையில் சிறு வேறுபாடு உண்டு.

**நாகரிகம்**

*நகர்+அகம் = நகரகம்*

*நகரகம்-நகரிகம்-நாகரிகம்*

*ஆங்கிலத்திலும் நாகரிகத்தைக் குறிக்கும் இலத்தீன் சொல் நகரப் பெயரினின்றும் தோன்றியதே.*

Latin Civitas: City or City State

Civis : Citizen

Civilis : Civilize

*நகர் என்ற சொல் தொடக்கத்தில் வளமனையைக் குறித்தது. பின் மனையில் வாழும் மனைவியையும், வளம்மிகு அரண்மனையையும், அரண்மனையை ஒத்த கோயிலையும், வளமனை மிகு ஊரையும் குறிக்கலாயிற்று. பேரூர் நகரம் என்றும், செல்வ மிக்க வணிகர் நகரத்தார் என்றும் அழைக்கப்படுகின்றனர்.*

*“முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின்*
*நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்” (நற்.)*
*“பெயக்கண்டும் நஞ்சுண்ட மைவர் நயத்தக்க*
*நாகரிகம் வேண்டு பவர்” (குறள். 580)*

*அகவளர்ச்சி, புறவளர்ச்சி இரண்டையும் பொதுவாக நாகரிகம் என்றே வழங்கினர் பழந்தமிழர். உள்ளத்தின் பக்குவத்தை அகநாகரிகமாகவும், புறவுலகின் பண்பட்ட நடைமுறையைப் புறவளர்ச்சியாகவும் கருதினர். இவற்றை ஒரே பொருளில் நாகரிகம், பண்பு என்ற சொற்களால் குறித்தனர்.*

**பண்பாடு**

*இச்சொல் இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் இரசிகமணி டி.கே.சி.யால் உருவாக்கப்பட்டது என்பர்.*

*பண் - செய்*

*செய் - திருந்தச் செய், அழகாய்ச் செய், இனிதாய்ச் செய்*

பண் - விரிதல், பெருத்தல், பருத்தல்

பண் - பண்ணல்-பண்ணை-பண்பு

பண் - பண்பு, பண்பு+பாடு= பண்பாடு

பாடு - ஒலி, இசை, முறை, உழைப்பு, துன்பம், இயல்பு, பண்பு

பண்பாடு- திருந்தியதான முறை அல்லது இயல்பு

பண் - பண்+படு=பண்படு-பண்பாடு

படு - அழிவு, பெருமை, செய்

பண்படு- பதப்படு, பக்குவம் செய்

பண்படுத்துதல் என்ற வழக்கு வயலைப்பதப்படுவதையும், உள்ளத்தைப் பதப்படுத்துவதையும் குறிப்பதாகும்.

Cultivate - பதப்படுத்து, பண்படுத்து

Agriculture
Horticulture - } உழவு
Cultivation

Cultural Pearl- செயற்கை முத்து பக்குவப்படுத்தி உருவாக்கப்பட்ட முத்து

Latin = Cultura- Culture = பண்பாடு

நிலத்திற்கும் உள்ளத்திற்கும் இடையே நெருங்கிய தொடர்புண்மையை அறிந்த தமிழர்கள் இரண்டையும் ‘புலன்’ என்ற சொல்லாற் குறித்தனர். ‘நிலபுலன்’ என்று இணைத்து வழங்குதலுண்டு. இவ்வியைவு நோக்கிய புலவர் பெருமக்கள் தம்மைப் ‘புலன் உழுதுண்பார்’ என்ற கூறிக்கொண்டனர். அறிஞர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள் பண்பாட்டுக்குத் தரும் விளக்கம் பெரும்பாலும் சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்ற உள்ளப் பாங்கின் வெளிப்பாட்டையே பண்பாடு என்கிறோம். அந்த வெளிப்பாடு சுவையுணர்வாகவும், நடையுடை பாவனைகளாகவும் தோன்றும். அப்பண்பாடில்லாதவனைக் காட்டுமிராண்டி என்கின்றோம். வாழ்வின் பல பல போக்குகள் அமைந்த

*பல்வேறு நிலைகளையும் இந்தப் பண்பாடென்பது குறிக்கும். உடலைப் பற்றிய நன்னிலை, மனத்தைப் பற்றிய தூய்மை நிலை, பேச்சின் இனிமை இவையெல்லாம் பண்பாட்டில் அடங்கும் என்கிறார்.*

*மக்களின் பழைய வரலாற்றில் அவர்கள் இயற்றிக் கொண்ட கருவிகள், சமூகப் பழக்கம், வழக்கம், நம்பிக்கை, சமயம் முதலியவற்றைப் பண்பாடு என்ற சொல்லால் குறிக்கின்றனர். மக்களின் அறிவு நலம், ஒழுக்க உயர்வு, கொள்கை நலம், பண்பு நலம், வாழ்க்கை நலம் ஆகியவை மென்மேலும் திருந்திய நிலையே பண்பாடு எனலாம். "ஒருவன் தன் குணநலன்களை நிரப்புவதிலும், தன்னைச் சூழ்ந்த சமுதாயத்தின் நலன்களைப் பேணுவதிலும் பேரவாக்கொண்டிருக்கும் நிலை பண்பாடாகும். பண்பாடு பற்றி அறிஞர் தெ.பொ.மீ. அவர்கள் மேலும் கூறுவது ஈண்டு நினையத்தக்கது. 'முன்னே கூறியதுபோல் இவை இக்கட் கூட்டத்தின் சிறப்பியல்பாகவும், தனி மக்களின் சிறப்பியல்பாகவும் விளங்கும் போதே பண்பாடு எனப் பேசுகிறோம் என்று கூறும் அவர் ஓவியம் முதலிய கலைப்பொருள்களாகவும் அது வடிவெடுக்கும் என்கின்றார். ஓவியங்களும், சிற்பங்களும் பழைய பண்பாட்டின் நுட்பத்தை நமக்கு விளக்குகின்றன என்றும், ஒவ்வொரு மக்கட் கூட்டமும் வாழ்க்கையில் உறுதிப்பொருள்களாகப் பலவற்றைக் கொண்டு வாழ்கின்றது என்றும், இவற்றின் வேறுபாட்டாலும் பண்பாட்டின் வேறுபாட்டை நாம் உணரலாம்என்று குறிப்பிட்டுள்ளார். பண்பாட்டையும் நாகரிகத்தையும் வெவ்வேறு நிலைகளாகப் பகுத்துக்காண நாம் முயன்றாலும்புறமெல்லாம் அகவளர்ச்சியின் வெளிப்பாடாகி நிற்கின்ற நிலையே எஞ்சுகின்றது.*

*நாகரிகம், பண்பு என்ற சொற்கள் சங்க காலத்தினின்று வழங்கிவர பண்பாடு என்ற சொல் இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் தொடர்கின்றது. ஆங்கிலத்தில் 18, 19ஆம் நூற்றாண்டுக்குப் பின்னை வழங்கலாகிய இவ்விரு சொற்களும் தங்கள் பொருண்மையில் பெரிதும் வேறுபாடின்றியே*

*செயற்பட்டன. இன்று நாகரிகம் என்பதைப் புறவளர்ச்சி என்றும் பண்பாடு என்பதை அகவளர்ச்சி என்றும் வரையறை செய்கின்றனர்.*

*"அரசு, அறநெறித் தொகுதி, கலை வளர்ச்சி ஓரளவு வளர்ந்த பொருளியல் ஆகிய நான்கும் நாகரிகக் குமுகாயத்தின் அடிப்படைகள் என்று அறிஞர் டாயின்பி கூறுவார்.*

*நாகரிகம் உணவிலும் உடையிலும் இதுபோன்ற பிற வாழ்க்கையின் ஆரவாரங்களிலும் தோன்றுவதாகும்.நகரத்தின் ஆரவாரந்தானே நாகரிகம் என்பர் தெ.பொ.மீ.*

*சிந்துவெளி நாகரிகம், எகிப்து நாகரிகம் என்று வரலாற்றில் வழங்குவன அப்பகுதி மக்களின் நகரமைப்பு, உடை, கலை முதலிய வளர்ச்சிகளை வைத்து வழங்கப்படுகின்றது.*

*"சீலம் திருந்திய உணர்ச்சி, ஆசாரம், கல்வி, கலை இவையெல்லாம் கூடிப் பண்பாடு என்பது உண்டாகும்" என்பர் இராசாசி. எனவே நாகரிகம் என்ற ஒரே சொல்லால் சங்க காலத்தே வழங்கியதை இன்று இரு சொல்லால் வழங்குவதால் அதாவது அகநாகரிகம், புறநாகரிகம் என்று வழங்குகின்றன.*

*"உள்ளத்தின் செம்மை பண்பாடும், உள்ளத்திற்குப் புறம்பான உணவு, உடை, உறைவிடம் முதலியவற்றின் செம்மை நாகரிகமும் ஆகும். ஆகவே இவற்றை முறையே அகநாகரிகம், புறநாகரிகம் எனக் கொள்ளினும் பொருந்தும்" என்பர் தேவநேயப் பாவாணர்.*

*உணவு, உடை, உறையுள், தொழில்கள், ஆட்சிமுறை, போர்முறை, கலை, இலக்கியம், சமயம் இவற்றின் வளர்ச்சி நாகரிகம் ஆகும். தனிமனிதப் பண்பு ஆகிய அன்பு, அருள், அறம், மறம், காதல், கற்பு, கலை நுணுக்கம், இலக்கியச் செம்மை ஆகியன பண்பாடு ஆகும்.*

**தமிழர் பண்பாடும் மெய்யியலும்**

*இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் இதைத் தொடர்ந்து தி.மு.க. வட்டாரத்திலும் தமிழர் வரலாற்றின் சில அம்சங்கள் பற்றி ஒரு*

கருத்துருவாக்கம் நடந்தது. தமிழருக்குச் சாதி இல்லை, மதம் இல்லை, காதல் தமிழர் நெறி, அன்பு தமிழர் நெறி என்பன போன்ற கருத்துக்களின் அடிப்படையில் தமிழர்களின் உயர்குணங்கள் எடுத்துரைக்கப்பட்டன.

தொடர்ந்து நடைபெற்ற வரலாற்றாய்வில் தமிழர்களுக்குச் சாதிகள் மதங்கள் சடங்குகள் உண்டு என்ற உண்மைகளெல்லாம் ஆதாரங்களோடு வெளிவந்தன. இந்த ஆதாரங்களை வைத்து தமிழர் மத்தியில் சாதி மதம் இல்லை என்று கூறியதற்கு அறவே ஆதாரம் இல்லையாவென்று பார்த்தால் சங்க இலக்கியம், திருக்குறள், பக்தி இலக்கியம், ஆகியவற்றிலிருு:நது சாதியை விரும்பாத மதங்களுக்கிடையில் பகமை வேண்டாத ஒரு சான்றோர் நெறியைத் தொகுத்துச் சொல்ல முடியும்.

சாதி மதம் தமிழர்க்கிடையில் இல்லை. இவற்றை தமிழர் வாழ்வில் புகுத்தியவர் ஆரியர் என்று உருவாக்கப்பட்ட சான்றோர் நெறியை ஒரு தொன்மக்கதை (Myth) என்று கூறலாம் இந்தத் தொன்மம் தமிழர்களுக்கிடையில் குறைந்தது அறுபது ஆண்டுகளாகவது செல்வாக்குப் பெற்றிருந்ததோடு சில அரும்செயல்களைச் சாதித்தும் இருக்கிறது.

காட்டுமிராண்டி காலம் தொட்டு இன்று வரையிலான மனித வாழ்வியலில் அந்தந்த காலகட்ட மொழி, அறிவு, பொருளாதாரம், போன்றவற்றின் வளர்ச்சிக்கேற்ப அவர்களின் படைப்பு வெளிப்பாடும் தோன்றி வருகின்றன. அவை கலைகள், இலக்கியங்கள் என்பதாக உள்ளன. இப்படைப்புகளின் கலைகள் காலவெள்ளத்தில் பல்வேறு மாற்றங்களை எளிதில் உட்கொண்டு மாற்றம் அடைந்தோ, அழிந்தோ போய்விடும். ஆனால் இலக்கியங்கள் அவ்வளவாக மாற்றம் அடைய வாய்ப்பு இல்லை.

பண்பாடு என்பது அகவளர்ச்சியை அடித்தளமாகக் கொண்டது. ஒரு சமுதாயத்திலுள்ள மக்களின் வாழ்க்கை முறையினையே பண்பாடு என்பர். ஆனால் நாகரிகம் புறவளர்ச்சியினைப் பெரிதெனக் கருதும் செயற்பாட்டினை அடித்தளமாகக் கொண்டு அமைவது, இவற்றைப்

புலப்படுத்தக்கூடிய பழக்க வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் இனங்காண்பது, சமுதாயங்களின் தனித்த நிலையினை அறிவதற்கு உதவும் என்ற எண்ணத்தின் அடிப்படையில் தமிழரின் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் ஆராயப்படுகின்றன.

**மரபுவழிவந்த நாடு அல்லது தமிழர்கள்**

**"செல்வம் எத்தனையுண்டு புவிமீதே- அவை**

**யாவும் படைத்த தமிழ்நாடு"** -பாரதி

தமிழர்கள் யார்? திராவிடர் இனவழிவந்த இந்த மக்கள் இந்தியாவில் எந்தப் பகுதியில் காணப்பட்டார்கள் இந்த வினாக்களைக் குறித்து எழுப்பியதுமே காரசாரமான விவாதம் ஏற்படுவது இயல்பு. ஆனால் இதன் முடிவாக கூறுவது லெமூரியா என்பதேயாகும். ஏனெனில் தொன்மை சான்ற தமிழர்களின் பூர்வீக நிலம் லெமூரியாக் கண்டம் என்பதும், தமிழர்கள் வாழ்ந்த அந்த நிலப்பகுதிகள் இந்தியப் பெருங்கடலுக்குள் அமிழ்ந்து போயின என்பதும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. இன்னும் சரியாகச் சொன்னால் தென்மேற்குப் பகுதியில் ஒரு நாடு இருந்ததையும், அங்கு வாழ்ந்த மக்கள் செல்வங்கொழிக்கின்ற நாடு நகரங்களை உருவாக்கினார்கள் என்பதையும் அது கடலின் கனத்த அலைகளால் விழுங்கப்பட்டு விட்டன என்பதையும் ஐயுறவுவாதிகள் முழுமையாக ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. விஞ்ஞானத்தின் பல்வேறு துறை சார்ந்த மிகப்பெரும் அறிஞர்களால் ஆழ்ந்த ஆராய்ச்சிக்குப் பிறகு கண்டுபிடிக்கப்பட்ட முக்கியமான சான்றாதாரங்களுக்குப் பிறகு இதனை யாரும் ஏற்றுக் கொள்ளாமல் இருக்க முடியாது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரோ அதற்கும் முன்னரோ படைக்கப்பட்ட தமிழ் இலக்கியங்கள் இன்று நமக்குக் கிடைத்திருக்கின்றன. அந்த இலக்கியங்களிலே இமயமலை, இலங்கை, பண்டை மதுரை நகர், காவிரி ஆறு ஆகிய நிலவியல் தொடர்பான

பெயர்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. பஃறுளி, குமரி என்னும் ஆறுகள் நிலப்பரப்பினின்றும் மறைந்து போய்விட்டன. இந்தியாவின் தென்கோடி முனை இன்னமும் குமரி என்றும் கன்னியாகுமரி என்றும் அழைக்கப்பட்டு வருகிறது. காலக்கணிப்பு முறைத் தொடக்கத்தில் இயற்றப்பட்ட 'கலித்தொகை'யும், 'சிலப்பதிகார'மும் இந்தியப் பெருங்கடலுக்குள் மதுரை அமிழ்ந்து போனதைக் குறிப்பிடுகின்றன. தமிழகத்தின் தலைநகரம் வடபகுதிக்கு மாற்றப்பட்டதாகக் கலித்தொகை கூறுகிறது. அவ்வாறு இடம் மாற்றம் பெற்ற நகரமே இன்றளவும் சிறந்து விளங்குகின்ற மதுரை நகரமாகும்.

பல இந்தியப் புராணங்கள் வெள்ளத்தைப் பற்றிப் பேசுகின்றன. பெருங்கடலுக்குள் அமிழ்ந்து போன பண்டைய புராணங்கள் உண்டு. பண்டைய தமிழ் இலக்கண நூலாகிய 'தொல்காப்பியம்' காட்டுகின்ற ஐந்து நில வாழ்க்கையை மக்கள் மேற்கொண்டிருந்தனர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற நிலங்களைப் பற்றியும் அந்நில மக்கள் தொழில்களைப் பற்றியும் அது விவரித்துக் கூறுகிறது. இலங்கை புத்த சமய வரலாற்றினின்றும் பல தகவல்களைச் சேகரிக்க முடிகிறது. இலங்கைக் கடற்கரையை ஒட்டிய பகுதிகளில் ஏற்பட்ட வெள்ளச் சேதத்தால் நகரங்கள், நதிகள் மட்டுமின்றி பெருமலைகளும் அழிவுக்கு ஆட்பட்டதை அறிகிறோம். பத்தொன்பதாம் இருபதாம் நூற்றாண்டுகளின் மிகப்பெரிய விஞ்ஞானிகள் திராவிடர்களின் பூர்வீகம் குறித்து எத்தனையோ கருதுகோள்களைக் கொண்டிருந்தனர் எனினும் அவர்களது தனித்தன்மை, கலாச்சாரம் இவற்றிற்கு மாறாக அவர்களால் இந்தப் புதிரை விடுவிக்க முடியாமலேயே இருக்கிறது.

கடந்த நூற்றாண்டில் வாழ்ந்த மேனாட்டு அறிஞரான கால்டுவெல் இந்த ஆய்வுக்கான முயற்சியைத் தொடங்கி வைத்தார். தமிழ் மொழியோடு ஏனைய திராவிடமொழிகளை ஒப்பிட்டுப் பார்த்த அவரது ஆய்வு மொழிகளோடு மட்டுமல்லாது பண்பாடு, பழக்க வழக்கங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும்படி செய்தது. அத்தோடும் நின்றுவிடவில்லை.

இன்னும் மேலே போய் பூர்வீகம் பற்றிய ஆராய்ச்சியில் கொண்டுபோய் நிறுத்தியது.

பண்டைத் தமிழ் மன்னர்கள் நன்கு அரண் செய்யப்பட்ட கட்டடங்களில் வாழ்ந்ததோடு, ஓரளவு நிலப்பரப்புகளையும் ஆண்டார்கள். மன்னர்களைப் பாடுவதற்கென்றே புலவர்கள் இருந்தார்கள். இன்னும் சில புலவர்கள் குறிப்பிட்ட மன்னர்களின் அரண்மனைகளில் அரசவைப் புலவர் என்ற விருதோடு வாழ்ந்து வந்தனர். பனை ஓலைகளில் எழுத்தாணி கொண்டு எழுதினர். தனித்தனி ஓலைகள், பக்கங்கள் போல கட்டுக்கட்டாக கட்டப்பட்டன. தங்களுக்கென்று தனித்த சட்டங்களையும் பழக்க வழக்கங்களையும் தமிழர்கள் கொண்டிருநத்னர். உலோகங்களைத் தயாரிக்கும் கலையைக் கற்றிருந்தனர். உயரிய மருத்து முறையைப் பின்பற்றி வந்தனர். கிராமங்களிலும் நகரங்களிலும் வாழ்ந்தனர். படகுகளையும், கப்பல் போன் ற அமைப்புடைய பெரிய படகுகளையும் கட்டக் கற்றிருந்தனர்.

இன்று நாம் காண்கின்ற தமிழர்களோ உயர்ந்த பண்பாடுகளையும், மரபுகளையும், மொழியினையும் கொண்டு திகழ்கின்றனர். இந்தியாவில் இப்போது ஏறத்தாழ ஐம்பது மில்லியனும், ஸ்ரீலங்காவில் 2.5. மில்லியனும் மலேசியாவில் 0.6 மில்லியனும், சிங்கப்பூரில் லட்சமும், ஆஸ்திரேலியா, ஆப்பிரிக்கா, போன்ற நாடுகள் ஒவ்வொன்றிலும் பத்தாயிரம் பேரும் வாழ்ந்து வருகின்றனர். பொதுவாக இன்று தமிழர்கள் வாழ்ந்து வராத நாடுகளே இல்லை என்று கூறலாம்.

ஆரியர்கள் இந்துஸ்தானம் என்று அழைக்கப்படும் க;கைச் சமவெளிக்குள் நுழைவதற்கு முன்னதாகவே இங்கே திராவிடர்களும் வேறு பல இனத்தினரும் செப்பமுடைய வாழ்க்கையை நடத்தி வந்தனர் என்பதைப் பல ஆய்வாளர்கள் ஏற்றுக் கொள்வது போலச் சோவியத் ஆய்வாளர்களும் ஏற்றுக் கொள்கின்றனர். அவர்களில் திராவிடர்களே மிக உயரிய நாகரிகத்தைப் பேணி வந்திருக்கின்றனர். ஏனெனில் தமிழர்களது

*இலக்கியப் படைப்பு ஆயிரமாண்டு காலங்களுக்கு முந்தியது என்பது தெளிவு. தொல்காப்பியம் இதற்கோர் சான்றாகத் திகழ்கிறது.*

*தமிழ்மொழி இலக்கிய இலக்கணங்கண்டது எனவே தான் பல மொழிகளையும் அறிந்திருந்த பாரதி,*

**“யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல்**
**இனிதாவது எங்கும் காணோம்”**

*என்று பெருமையாகப் பாடினார்.*

*தமிழ் இளமை குன்றா மொழி என்பதில் யாருக்கும் கருத்து வேறுபாடு இருக்க முடியாது. பனை ஓலைகளில் இலக்கியங்களைப் படைத்துப் பாதுகாத்து வந்ததன் மூலம் பிற மக்கள் இலக்கியங்களைப் பாதுகாக்கத் தொடங்குவதற்கு முன்னரே அந்தக் கலையில் அவர்கள் தேர்ச்சி பெற்றிருந்தனர் என்பது பெருமையோடு நினைவு கூரத்தக்கது. வட இந்தியா முழுவதிலும் வடமொழி எனக் கூறப்படும் சமஸ்கிருதம் வழக்கில் இருந்து வந்த அதே காலகட்டத்தில் தெற்கே தமிழ்மொழி மக்கள் மொழியாக வழங்கி வந்ததையும் நாம் மறந்து விடுவதற்கில்லை.*

*தமிழ் தனது இளமையையும், வனப்பையும் பாதுகாத்து வந்திருக்கிறது. இன்றும் உலகின் தலைசறிந்த கலாச்சார மொழிகளில் தமிழும் ஒன்றாகத் திகழ்கிறது என்று மு. வரதராசன் கூறுகின்றார். தமிழ் ஆங்கில அகராதிக்கு முன்னுரை எழுதுகின்ற போது டாக்டர் வின்ஸ்லோ இவ்வாறு குறிப்பிட்டார். கிரேக்க மொழியினை விடத் தமிழ்மொழியின் கவிதைப் பாங்கு மிகச் சிறப்பாக இருக்கிறது என்று கூறுவது மிகைபடக் கூறுவதாகாது பேச்சு வழக்கிலும் லத்தீனை விடச் செழுமையுடையதாகத் திகழ்கிறது.*

*செவிக்கு இனிமை தரும் மொழி தமிழ் என்று அறிஞர்கள் கூறுவர். இவ்வாறு பெருமைப்பட அவர்களுக்கு உரிமை உண்டு. திராவிட மொழிகளிலேயே தமிழ்தான் உயர் தனி மொழி என்று கால்டுவெல் முதல் அனைத்து அறிஞர்களும் ஒருசேரக் கருத்து தெரிவித்து உள்ளனர்.*

*பண்டைய் காலத்தில் நெகிழ்ந்து கொடுத்து நின்றது போலவே இன்றளவும் நின்று வருகிறது. தமிழ்மொழியில் பேச்க்கூடியவர்களது வேகமானது உலகத்திலேயே உயர்வானது. ஒரு நிமிடத்திற்குச் சராசரியாக ஏழு அசைகள் வீதம் தமிழர்கள் உச்சரிக்கிறார்கள் .கண் சிமிட்டுகின்ற நேரத்தை மாத்திரையாகக் கணக்கிட்டு எழுத்துக்களை உச்சரிக்கக்கூடிய இலக்கணத்தை வகுத்தவர்களும் தமிழர்களே. புத்தகங்கள், செய்தித்தாள்கள், ஆய்வுக்கட்டுரைகள், கடிதங்கள் ஆகியவற்றில் எழுதப்படுகின்ற தமிழும், பேசப்படுகின்ற தமிழும் வேறுபடுவதைக் காண்பவர்க்கு வியப்படையக் கூடும் அதே வேளை பள்ளிகளிலும் மேற்கல்வி நிலையங்களிலும் பல்கலைக்கழகங்களிலும் உயரிய தமிழ் கற்பிக்கப்பட்டு வருகிறது. ஆனாலும் பேச்சுத் தமிழே கோடிக்கணக்கான தமிழ் மக்களின் வளர்ப்புப் பிள்ளையாகத் திகழ்கிறது. இவ்வாறு இலக்கிய வடிவத்திற்கும் பேச்சு வழக்கிற்றும் இடையே வேறுபாடு இருக்கின்ற படியால் சில நேரங்களில் முரண்பாடான நிலைமைகளையும் ஏற்படுவதுண்டு.*

**தமிழர் பண்பாடும் வாய்மொழி வழக்காறுகளும்**

*தமிழ் மக்களின் வாழ்வியல் தளத்தில் புழங்குகின்ற பல்வேறு சொற்பொருண்மைகளில் பண்பாடு என்பதும் ஒன்று. இது சுட்டுகின்ற பொருண்மையையும் தாண்டி பல்வேறு இடங்களில் பயன்பாட்டில் உள்ளது. பண்பாடு என்பது அடையாளமாக தகுதியாக, மரபாக, விழுமியமாக எனப் பயன்படுகிற தளத்திற்கு ஏற்பத் தன்னை மக்ளோடு இணைத்துக் கொள்கிறது. மக்களின் வாழ்க்கைச் செயல்பாடுகளின் வழியான வெளிப்பாட்டுக் கூறுகள் சிலவற்றையோ அல்லது முழுமையையோ பண்பாடு என்று கூறமுடியும். இக்கூறுகள் இன்றைய மக்களின் வாழ்வியலிலும் அக்காலகட்டப் படைப்புகளின் வழியாகவும் காலங்களைத் தாண்டிப் பரவிநிற்கிறது. படைப்புகளின் வாயிலாக அறியப்படும் கூறுகளைக் கொண்டு பண்டைத் தமிழரின்*

*ஒட்டுமொத்தமான பண்பாட்டு வரலாற்றை முடிவு செய்யும் நிலையில் எத்தகைய படைப்புகள் முழுமையானத் தமிழர் பண்பாட்டைத் தரும் என்பதில் சிக்கல்கள் உள்ளன. இந்நிலையில் தமிழர்கள் முழுமையான பண்பாட்டு வரலாற்றைத் தர எழுத்திலக்கியத் தரவுகளால் மட்டுமே முடியாது. வாய்மொழி வழக்காறுகள் மூலமும் பண்பாட்டு தரவுகளைச் சேகரிக்க முடியும்.*

**பண்பாடு**

*மக்களின் வாழ்வியல் சார்ந்த பண்பாடு என்பது பற்றியான பல்வேறு விளக்கங்கள் தமிழர் சூழலில் உலவுகின்றன. அவை தமிழ்ச் சூழலுக்குச் சரியானதுதானா என்பது பற்றிய ஆய்வுகள் வரவேண்டியுள்ளன. உதாரணமான பல்வேறுவிதமான வாழ்நிலைகளைக் கொண்ட மக்கள் வாழ்கிற சூழலில் மக்களின் பண்பாடு என்பதில் உயர்பண்பாடு, தாழ்நிலைப் பண்பாடு, பண்பாடற்றது என்கிற கருத்துக்கள் நிலவுகின்றன.*

*மானிடவியல் ஆய்வாளர் பக்தவத்சலபாரதி (1999: 149) அவர்கள் தமது பண்பாட்டு மானிடவில் என்கிற நூலில் “பண்பாடுஎன்பது மக்கள் அனைவரும் கூட்டாகச் சேர்ந்து செயல்படும்போது உண்டாகும் நடத்தை முறைகன் சேர்மமாகும். அது அந்தந்தச் சமூகத்திற்கு மட்டுமே உரியது இது உயிரிபயல் நிலையில் மரபுரிமையாக வராதது என்றும், மக்கள் தலைமுறை தலைமுறையாக குழுவாகச் சேர்ந்து கற்ற நடத்தை முறைகளும், பழக்க வழக்கங்களும் மரபுகளும் சேர்ந்த ஒரு தொகுதியே பண்பாடு ஆகும் என்றும் சில வரையறைகளை முன்வைக்கின்றார்.*

*மேலும் பண்பாடு என்பது அனைவராலும் பகிர்ந்து கொள்ளப்பட்ட கருத்துகளும், சமுதாய மரபுநலையாகப் பெறப்பட்ட நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும் அடங்கிய தொகுப்பேயாகும். பின்னர் ஒரு வரையறையைச் சிறந்தது என்கிறார். அது டைலரின் வரையறையாகும். பண்பாடு என்பது அறிவு, நம்பிக்கை, கலை, ஒழுக்க நெறிகள், சட்டம், வழக்கு முதலானவையும் மனிதன் சமுதாயத்தில்*

உறுப்பினராக இருந்து கற்கும் பிற திறமைகளும் பழக்க வழக்கங்களும் அடங்கிய முழுமைத் தொகுதி ஆகும்.

பண்பாடு என்பது பற்றி மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள் ‘நாகரிகம் என்பது திருந்திய வாழ்க்கை அது எல்லா பொருட்களையும் தமக்கே பயன்படுத்துவது. பண்பாடு என்பது திருந்திய ஒழுக்கம் அது எல்லாப் பொருட்களையும் தமக்கும் பிறருக்கும் பயன்படுத்துவது என்று விளக்குகிறார். இவையும் இவை போன்ற பிற வரையறைகளும் வெவ்வேறு தளங்களில் வெவ்வேறு பொருளைத் தருவதாக உள்ளன. பல்வேறு விதமான பொருண்மைகளை உடைய ஒரு சொல்லிற்குப் பொதுவான ஒரு வரையறையைக் கூறமுடியாது.

மக்களின் சிந்தனைகளையும் பழக்க வழக்கங்களையும் உள்ளபடி உணர்ந்து கொள்ளப் பெரிதும் பயன்படுவன நாட்டுப்புறப் பாடல்களாகும். எல்லா நாடுகளிலும் வாய்மொழியாக வழங்கும் பாடல்கள் உள்ளன. மக்களின் உண்மயான பண்பாட்டு நிலைகளை விளக்குவனகாவ உள்ளன. செய்யுளுக்குரிய எதுகை, மோனை, உவமை, கற்பனை என்னும் கூறுகளும் இவற்றில் உண்டு. எனினும் நாட்டுப்புறப் பாடல்கள் குழந்தை போல் உண்மைகளை வெளியிடுவது இவற்றின் பண்பாகும். நாட்டுப்பாடல், கிராமிய நாடகம் ஆகியவற்றைக் கொண்டு பல இடங்களில் திருவிழாக்கள் நடைபெறுகின்றன. இவற்றை வைத்து எந்த எந்த நாட்டு மக்கள் என்றும் எந்த பகுதியைச் சார்ந்த மக்கள் என்றும் அறிந்து கொள்ள முடியும் என்கிறார் தாகூர். மக்கள் வாழ்க்கைத் தோட்டத்தில் மலர்ந்து இயற்கை மணம்வீசும் இப்பாடல்கள் மக்களின் சமூக, பொருளாதார சமய வரலாற்றை அறியவும், உயர்ந்த நோக்கங்களையும், பழக்க வழக்கங்களையும், இன்ப துன்ப உணர்ச்சிகளையும் ஆசைக் கனவுகளையும் வெற்றி தோல்விகளையும் உணர்ந்து போற்றவும் பயன்படுகின்றன. வாழ்வின் தொடக்கமாம் குழந்தையின் பிறப்பு முதல் இறப்பு வரையுள்ள அனைத்து நிலைகளையும் சுட்டிக் காட்டுகின்றன.

*ஏற்றமிறைப்பார், நாற்று நடுவார், களை பறிப்பார் போன்ற தொழிலாளர்கள் பாடும்பாடல்கள், தாலாட்டு, ஒப்பாரி, காதல் பாடல்கள், பூசாரிப் பாடல்கள், கடவுள் வணக்கப் பாடல்கள், விளையாட்டுப் பாடல்கள், பஞ்சம் கொள்ளை போன்ற பாடல்களில் பண்பாடு பற்றிய செய்திகளை வைத்துப் பாடப்படுகின்றன. வாய்மொழி இலக்கியங்கள் மூலமும் தமிழ்ப் பண்பாட்டை அறியமுடியும்.*

**பழக்கம்**

*பழக்கம் என்பது ஒரு கற்கும் செயலாகும். இது தனிமனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையைக் குறிப்பதாகும். வழக்கம் வளர்ச்சிக்கு இன்றியமையாத கூறாகக் கருதப்படுகிறது. நனவுடன் தொடங்கிய செயல் நாளடைவில் நனவின்றியே நிகழக் கூடியதாக ஆகிவிடும் செயலையே பழக்கம் என்பர் என்று (கலைக்களஞ்சியம் தொகுதி 7) கூறுகின்றது. பழக்கம் செயல்ளை எளிய முறையில் பிழையின்றி நடைபெறச் செய்வதுடன் முயற்சி, காலம் ஆகியவற்றை மிச்சப்படுத்தித் தருகின்றது. நல்ல பழக்கங்களை இளமையில் குழந்தைகளுக்குக் கற்றுக்கொடுக்க வேண்டுமென்ற நோக்கில் பெற்றோர், ஆசிரியரின் கடமை என்று கல்வி ஆராய்ச்சியாளர்ளால் வலியுறுத்தப்படுகின்றது. மேலும் நல்ல பழக்கங்களை அமைத்துக் கொள்ளக் குழந்தைப் பருவமே ஏற்றது என்று எஸ்.பி. ஆதிநாராயண் கூறுகின்றார். பொதுவாக பழக்கம் என்பது தனிமனிதனைச் சார்ந்தது எனலாம்.*

*நமது பேச்சில் பொதுவாகப் பழக்க வழக்கங்கள் என்ற சொற்றொடர் வழங்குகின்றது. பழக்கம் என்ற தொழிற்பெயர் பழகுதல் என்ற வினையின் அடியாகப் பிறந்தது. வழக்கம் என்ற தொழிற்பெயர் வழஞ்குதல் என்ற வினையின் அடியாகப் பிறந்தது. பழகுதலும் வழங்குதலும் ஒன்றா என்பதை ஆராய்ந்தால் பழகுதல் என்றால் பிறர் எவரோ செய்துவரும் ஒரு செயலை நாம் எடுத்துக் கையாண்டு வந்து அதில் ஈடுபடுதல் ஆகும்.ஆகவே ஒன்று நாம் கடன் வாங்கிக் கொண்டது.*

மற்றொன்று நம்முடைய பழைய உரிமையைக் கொண்டது. பழக்கம் இடையில் வந்து நம்மை அடிமைப்படுத்தினது, வழக்கம் முதலிலிருந்தே நம்மிடம் இருந்து நம்மை ஆட்கொள்ளுவது. இந்தப் பொருளை ஆராயாமல் இரண்டையும் ஒன்றாகக் கருதுகிறோம். ஒரு எடுத்துக்காட்டு சொல்லலாம். பெண்கள் மூக்கைக் குத்தி மூக்கணி அணிதல் முன்னே தமிழ்நாட்டில் இருக்கவில்லை. வடநாட்டார் செயலைக் கண்டு நமது நாட்டுப் பெண்கள் அதனை அழகு என்று புலியைப் பார்த்துப் பூனை சூடு இட்டுக் கொண்டது போல அழகிய மூக்கைத் துளைத்து அழகுக்கு அழகு செய்தாற்போல மூக்கணி அணியத் தொடங்கினர். அது நாளாவட்டத்தில் ஊன்றிவிட்ட ஒரு பழக்கம் ஆகிவிட்டது.

மூக்கணி அணிதல் ஒரு பக்கம், மற்றொன்று மக்கள் இறந்து போனால் பிணத்தைச் சிலர் சுடுவர், சிலர் புதைப்பர். சுடவதும்புதைப்பதும் எந்த நாளிலும் இருந்தது. 'சுடுவோர் இடுவோர்' என்று மணிமேகலையும் கூறுகிறது. அவை புதியதாய் வந்ததல்ல. இப்போதும் உண்டு. ஆகவே அது நம்நாட்டு வழக்கமாக இருக்கிறது. இந்த வகையில் பழக்கத்தையும் வழக்கத்தையும் வேறுபடுத்திக் கூறலாம்.

**பழக்கங்களின் வகைகள்**

நமது நாட்டுப்புறங்களில் ஆண்டுவரும் பழக்கங்கள் பல வகைப்படும். பொதுவாகக் கூறுமிடத்து எப்பொருளை முன்னிட்டு அப்பழக்கங்கள் காணப்படுகின்றனவோ அப்பொருள்களின் தன்மையைப் பற்றி அவ்வகைகள் தோன்றும். அவைகள் நாள்தோறுமாகவோ, கெடுவாரியாககோ அனுசரிக்கப்படுகின்றன. இந்த முறைகளை முன்னிட்டு அவைகளை ஆராய்ந்தால் அவைகளின் பாகுபாடுகள் தெளிவாக விளங்கும். அப்பொருள் வகைகள் பின்வருமாறு:.

1. மனிதனுடைய உடல், உறவினர், குலம் முதலியவை
2. மனிதனைச் சுற்றியுள்ள சூழ்நிலைப் பொருள்கள்
3. மனிதன் வாழும் சமூகம் நாடு முதலியன

4. சமூகத்தில் கொண்டிருக்கும் கொள்கைகள் எண்ணங்கள், கருத்துக்கள்
5. அறிவுக்கு உகந்தோ உகவாமலோ நடைபெறும் செயல்கள் முதலிய வகைகள் உள்ளன.

கோழி, மயில், சிங்கம் இவைகளின் பெண் இனம் எளிமையாக இருக்கும். ஆனால் ஆண் இனமோ அழகுபடுத்திக் கொள்ளும். பெண்கள் கண்களைக் கவரும் பொருட்டு ஆண் இனங்கள் அழகுபடுத்திக் கொள்கின்றன என உயிர்நூலார் கூறுகின்றனர். சேவல் பலவித வண்ணங்களோடு இறகு, கொண்டை முதலியவைகளை வளர்க்கின்றது. கூரைமேல் ஏறித் தலைநிமிர்ந்து கூவுகின்றது. மயிலோ தன் தோகையை வெகு அழகாய் விரித்து ஆடுகின்றது. சிங்கமோ தன் பிடரி மயிரைச் சிலிர்த்துக் கொண்டு கம்பீரமாகக் கர்ச்சிக்கிறது. ஆனால் மனிதனில் அம்முறை மாறியிருக்கின்றது. ஆடவன் வெள்ளை உடைகளை உடுத்திச் சாதாரணமாக இருக்கிறான். ஆனால் பெண் மகளிரோ பலவித வண்ணங்களை ஆடைகளில் ஏற்றி அழகிய அணிகளைப் பூட்டி அழகுபடுத்திக் கொள்கிறார்கள். கரியமேனி உடையவரும், வெண்மையாகத் தோன்றுவதற்கு வெண்மாவும், பசுமையாகத் தோன்றுவதற்கு மஞ்சளும் பூசிக் கொள்கிறாள். இவ்விதம் செய்வதைக் கோலம் கொள்ளுதல் எனலாம்.

கோலம் கொள்ளுதல் நான்கு வகை என்பர். முடித்தல், உடுத்தல், பூணுதல், பூசுதல் என்பன இவைகள் முன் காலத்தில் இருந்தவைகளைப் பண்டைநூல்களிலும், கற்சிற்பங்களிலும் குகை ஓவியங்களிலும் காணலாம். அவைகள் பெரும்பாலும் மாறிவிட்டன.

கல்வியின் பெருமையைக் கூறவந்த சமணப்புலவர் அதன் அழகிற்குப் 'குஞ்சியழகும் கொடுந்தானைக் கோட்டழகும் மஞ்சளழகும் அழகல்ல' என்றார். சமணர் உலகிய அழகுகளை வெறுப்பார்கள் ஆனால் நமது நாட்டுப்புறத்தார் இம்மூன்று அழகுகளோடு பூவழகும் ஒன்று சேர்த்தி நான்காகக் கொண்டார்கள். குஞ்சியழகில் கூந்தல் உட்படும்.

பண்டைக்காலத்தில் கொண்டையாக முடித்தார்கள். இக்காலத்திலும் நாட்டுப்புறங்களில் அவ்வடிவைக் காணலாம். தேங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல் இப்போது நகரங்களிலும் நாட்டில் படித்தவர்களிடமும் இல்லை. ஐம்பால் பின்னற்சடை வேறு நாடுகளில்தான் காணலாம். நம் நாட்டில் ஒற்றைப் பின்னலே நடைப்பழக்கமாகி விட்டது. இனிச் சில குழந்தைகள் மேல்நாட்டைப் பார்த்து இரு சடைகளாய்ப் பின்னத் தொடங்கிவிட்டார்கள். பெரியவர்களானவுடன் சடையைச் சுருட்டிப் பின்னால் இணைத்துக் கொள்வார்கள். இது முடிப்பு ஆகும். இது ஒரு பழக்கம்.

உடுத்தல் என்பது ஆடை அணிதல் பண்டைக்காலத்தில் தமிழர் கத்தரித்துத் தைத்த ஆடை அணிந்ததில்லை. ஆடவர்கள் கீழும் மேலும் வெண் துணியைக் கட்டினார்கள். பெண்கள் பல வண்ணப்புடவைகளைக் கட்டினார்கள். மார்பில் கச்சு இறுக்கிக் கொள்ளுவார்கள். இக்காலத்தில் உடை மாறிவிட்டது. ஆங்கிலரிடத்திலிருந்து தைத்த சொக்காய்களை அணியத் தொடங்கினார்கள். ஆனால் கொங்கு நாட்டில் பல பகுதிகளில் முன்னாளைய உடையைக் காணலாம்.

பூசுதல் என்பது முன்னாளில் மக்கள் பூச்சாயிருந்தது. அதனால் பூச்சி புழு அணுகாது என்பர். பல தோல் நோய்களும் அணுகாது. நறுமணப் பூச்சுகளும்உண்டு. புனுகு, சவ்வாதுமுதலியவைகளை அணிந்தார்கள். இக்காலத்தில் அவை மாறி வெண் மாவு பூசுவது வழக்கமாகிவிட்டது. பூச்சிலே பலவித நறுமணங்களும், பொடிகளும், மைகளும், எண்ணெய்களும் வந்துவிட்டன. பூணுதல் என்றால் நகையணிதல், பண்டை நாளில் காது ஒன்றுதான் துளை செய்து அணிவது. அந்நாளில் மூக்கணிகள் இல்லை. அது தமிழ்நாட்டிலே 17ஆம் நூற்றாண்டில் தோன்றியது. அவ்வணிகளின் பெயர்களே வடசொற்கள் ஆனால் நாட்டில் வழக்கம் எது. ஆனால் முன்னாளில் காலணி (சிலம்பு), தலையணி (சிந்தாமணி), இடையணி (மேகலை), கையணி (வளையாபதி), காதணி (குண்டலம்) என்ற காவிய அணிகளே தமிழ் மாது அணிந்திருந்தாள்.

இக்காலத்திலோ கணக்கற்ற அணிகள் வந்துவிட்டன. எல்லாம் பிற நாட்டு இறக்குமதிகள். இப்போது புதுப்பழக்கங்கள் ஆகிவிட்டன. உடலின் தோலின் நிரந்தரமாகச் செய்து கொள்ளும் பழக்கம் ஒன்று உள்ளது. இதனைப் பச்சை குத்திக் கொள்ளுதல் என்பர். இது மிகுதியாக நாட்டுப்புறங்களில் வழங்கிவரும் பழக்கம். இது பண்டைத் தமிழர்களில் இருக்கவில்லை. ஏனெனில் பண்டைத் தமிழர் நூல்கள் எவற்றிலும் இது குறிக்கப்படவில்லை. நடுக்காலத்து நூல்களாகிய கம்பர், சேக்கிழார் முதலியோரும் கூறவில்லை.

ஆகவே இவ்வழக்கம் வடநாட்டிலிருந்து இங்கே சமீப காலத்தில் வந்ததென ஊகிக்கலாம். கொங்கு நாட்டு வேளாளர், அகமுடையார், மற்றத் தொழிலாளிகள் முதலிய நாட்டுப்புறத்து மக்கள் இதனை மிகுதியாக ஆதரிக்கின்றனர். முலைப்பாலில் பச்சைச் சாயத்தைக் கலக்கி அதனை ஒன்றுமுதல் ஐந்து ஊசிகள் வரை இணைத்து அதனால் தோலில் குத்துவார்கள். அச்சாயம் உள் தோலில் ஒட்டிக் கொள்ளும்.சிலநாள்களில் ஆறிப்போனாலல் அப்பச்சை நிரந்தரம் ஆகிவிடும். இதனைப் பெண்பாலர்களே ஆதரிக்கின்றனர். நெற்றியில் கைம்பெண்களுக்குப் பொட்டு கூடாது என்பர். ஆனால் பச்சை குத்திக் கொண்டால் அதை அழிக்க வகையில்லை. கைம்பெண்ணும் பொட்டுடன்தான் விளங்குவார்கள். இது நாட்டு வழக்கத்திற்கு எதிரானது. உடலில் தெரியக்கூடிய பாகங்களுக்குத்தான் பச்சை குத்துவது வழக்கம். அதாவது நெற்றி, கன்னம், கைகள், கால்கள் முதலியன. பலவித கோலங்கள், பூக்கள், தேன், கிளி, மயில் முதலிய உருவங்கள் குத்தப்பெறும். இப்பழக்கம் நகரங்களைக் காட்டிலும் நாட்டுப்புறங்களில் மிகுதி. இப்போது எல்லாம் படித்தவர்களிடம் இப்பழக்கம் காணப்படுவதில்லை. வயதானவர்கள் கைகளில் இதுபோன்ற உருவங்கள் இன்றளவும் காணப்படுகின்றன.

சில சில்லறைக் கோலங்களும் பழக்கத்தில் வந்துவிட்டன. அவை நெற்றியில் நாமம், சந்தனம், குங்குமம், சாந்துப்பொட்டு, முதலியவை அணிதல் என்பன. பெண்கள் எல்லா நாடுகளிலும் அணிவார்கள்.

விதவையானால் அணியமாட்டார்கள். பிற நாட்டார் இதனைச் சாதிக்குறி என்பார்கள். அதுதப்பு. இவை வெறும்அ ழகுக்கு றிகள்தான். திருமண திருநீறு என்பவை சமயக் குறிகள். அவைகளின் பொருளை வெளிநாட்டார் அறியமாட்டார்கள். கண்ணுக்கு மையிடுதல், தலைக்கூந்தலுக்கு எண்ணை தேய்த்தல், பூச்சூட்டுதல் இவைகள் மங்கல; குறிகள்.

**சூழ்நிலைப்பொருள்**

மனிதனைச் சூழ்ந்திருப்பது உணவும் இருப்பிடமும் உறவில் நெருங்கிய உறவும், தொலை உறவும் பிற மக்களும் சேருவர். உறவினர்களின் இறப்பு, பிறப்புத் தீண்டல், பூப்புத் தீண்டல் முதலியன வரும். இவைகளேயன்றிப் பிற மக்களில் இழிய நடத்தையை முன்னிட்டு தொடுதல் கூடாது என்ற தீண்டல்கள் எக்காலத்தில் தோன்றினவோ கூற இயலாது. பண்டைத் தமிழ் நூல்களில் தீண்டாமை பற்றி இல்லை. ஆனால் வடமொழியில் உண்டு. வடக்கே இருந்து பல பழக்கங்களைக் கொண்டுவந்துவிட்டவர்கள் சமணர்கள். அவர்கள் கண்டு, கேட்டு என்று இருவகைத் தீண்டல்களைக் கொண்டிருந்தனர். அவர்களுடைய இயக்கம் தெற்கே நுழைய வடநாடடுப் பழக்கங்கள் பலவும் தெற்கே வந்தன. அவைகளோடு தீண்டலும் வந்திருக்கலாம். இந்த வகையில் தீண்டல் ஒரு வழக்கமாகிவிட்டது. தீண்டலினால் நாட்டுப்புறங்களில் தீண்டாதிருக்க தனி இடம், தனிக்கிணறு, தனி விழாக்கள் ஏற்பட்டுவிட்டன. இப்போது அவைகள் குறைந்து வருகின்றன. பிறப்பு இறப்பு தீண்டல்களிலே பிறரைத் தொடாது சில நாள் தனித்து இருத்தலும், பிறகு அத்தீண்டலைப் போக்கத் தனிக்கழுவாய் ஏற்படுத்தலும் உண்டு. இவ்வித பழக்கங்கள் தெற்குத் தீவுகளில் வசிக்கும் ஆட்களில் நிரம்ப உண்டு. அங்கிருந்து நமது நாட்டில் புகுந்திருக்கும் என்று சொல்ல முடியாது. சமையல், சாப்பாடு முதலியவைகள் நாட்டுப்புறங்களில் மிகவுண்டு. இப்போது நெகிழ்ந்து வருகின்றன.

**இருப்பிடம்**

*மக்கள் தனித்தனி வகுப்புகளாகப் பிரிந்து வாழ்க்கை நடத்தத் தொடங்கிய பின்னர் அவர்கள் இருப்பிடங்களும் தனித்தனியாக ஏற்படத் தொடங்கின. சில சமயங்களில் ஆராய்ந்தால் இவ்வித ஒழுங்கினால் ஒருவருக்கொருவர் ஒத்தாசையாகவும் இருப்பார்கள். பெரிய ஊர்களிலும் அன்றிச் சிறு கிராமங்களிலும் ஒத்த தொழிலாளிகள் ஒரே இடத்தில் மனைகளைக் கட்டி வாழ்தல் இயற்கையாகிவிட்டது. அந்த வகையில் அந்தணர் சேரிகள் வேறே குடியானவர்கள் தெருக்கள் வேறே, தீண்டாதார் குடிசைத் தொகுதிகள் வேறே, இருப்பதை காண்கிறோம். இவர்கள் இன்ன வகையாகத்தான் வீடுகளைக் கட்ட வேண்டும் என்ற வற்புறுத்தலும் இருந்தது எனக் கூறலாம். வீடுகளின் அமைப்பும் இன்ன வகை இருக்க வேண்டும் என்ற கருத்து இருந்தது. வீடுகளில் வசிக்கும் இடம், சமையல் இடம் முதலியவைகளுக்கும் விதிகள் தோன்றிவிட்டன. அளவு, நீளம், உயரம் இவைளுக்கும் விதிகள் உண்டாயின. ஒற்றைக்கால் ஒற்றைவிட்டம் கூடாது. இவை போன் றநியமம் ஏற்பட்டது. வீடுகளுக்குச் சுண்ணாம் பூசுதல் இரண்டு அடுக்கு மாடி கட்டுதல், முதலிய செய்கைகளும் உரிமையாக்கப்பட்டன. சில குறிப்பிட்டவர்களே வீட்டில் சாந்து இடலாம், மாடி கட்டலாம் என்ற உரிமை பெற்றார்கள். இந்த வில்லங்களாலே நாட்டுப்புறங்களில் பெிராய வீடுகள் இல்லாமற் போயின. இந்தப் பழக்கங்களுக்குக் கல்வெட்டு ஆதாரமும் உண்டு. மேலும் ஒருவர் பகுதிக்குள் மற்றொரு வகுப்பார் குடியிருக்கப்படாதாம். அந்தக் குடியிருப்புகளில் வேறு மக்கள் குடியிருக்கலாகாாம். அல்லாது யாராவது குடிபோனால் அவர்கள் பாழாய்ப் போவார்களும் இந்தவிதமான எண்ணப்போக்கு மக்களிடையே புகுந்து கொண்டது. இதனால் வகுப்புவாதப் பிரிவினை நாட்டில் மிகுதியாகிவிட்டது. வகுப்பு பேதம் இன்றி மக்கள் குடியிருப்பு கலந்திருந்தால் நாளடைவில் ஏற்றத்தாழ்ச்சி நீங்கி ஒரே வளர்ச்சியும் அன்புக் கொள்கையும் நாட்டில் ஏற்பட்டிருக்கும்.*

**தீ மிதித்தல், பலியிடல்**

நாட்டுப்புறங்களிலே கிராம தேவதைக் கோயில்களில் தீ மிதப்பது என்ற சடங்கு திருவிழாக்களில் நடைபெறுகின்றது. இது பல ஊர்களில் இருந்தாலும் மாரியம்மன், காளியம்மன், திரௌபதியம்மன் கோவில்களில் மிகுதி. பூசாரி முதலில் செல்லுவான் பிறகு ஆண், பெண் சிறுவர் சிறுமகள் எல்லோரும் மிதிப்பார்கள். பாரியூர் குண்டத்துக் காளியம்மன், பெருமாநல்லூர் காளியம்மன், பன்னாரி மாரியம்மன் அஇவைகள் மிக முக்கியமானவை. அவைகளில் அங்கே பெரிய குண்டங்களை வர்த்து திருவிழாக்களை வெகுவிமரிசையாக நடத்துகிறார்கள். மாசி மாதம் சிவராத்திரியின் போது தீ மிதித்தலை மிகுதியாகக் கொண்டாடுகிறார்கள். இதன் பொருள் வடநாட்டில் திரௌபதி, சீதை முதலிய மாதர்கள் தங்கள் கற்பை நிரூபிப்பதற்காகத் தீப்புகுந்து வெளிவந்ததாகக் கதைகள் உண்டு. அக்கதைகள் தென்னாட்டில் நடைபெறவில்லை. பண்டைய நூல்களில் இல்லை. கைம்பெண் கணவனுடைய ஈமத்தீயில் புகுந்து உயிர்விட்டதுண்டு. அது தீ மிதித்தல் ஆகாது. கண்ணகி மதுரையை எரித்த காலத்தில் அறவோர் முதலியோரை விட்டுவிட்டதாகக் கூறப்படுகிறது. இதுதான் தீ மிதித்தலுக்கு ஒரு காரணம் என்று கூறுவாரும் உண்டு. ஆனால் அது ஒரு சான்று என்று சொல்லலாகாது. ஆகவே தீ மிதித்தல் பிற நாட்டிலிருந்து வந்ததொரு பழக்கம் ஆகும்.

இனி பலியிடலும் அவ்வாறு கொள்ள வேண்டும். பலியிடலைச் சில சங்க நூல்கள் கூறுகின்றன. ஆனால் அது வடநாட்டு இறக்குமதி என்று அயிவேண்டும். பலி என்பதும் அவி என்பதும் வடமொழிகள். இவைகளுக்கு ஏற்ற தமிழ்மொழிகள் இல்லை. ஆகவே பலியிடலும் தமிழ்நாட்டில் பிற்காலத்தில் வந்ததொரு பழக்கம் என்று கூறவேண்டும். திருவள்ளுவர் பலியை எப்போது கண்டித்தாரோ அப்போதே அது தமிழ்நாட்டு வழக்கம் அல்ல என்றும் வடநாட்டிலிருந்து தெற்கே புகுந்த பழக்கம் ஆகும்.

**நோன்பும் பேயும்**

வேண்டுதல் கோரிக்கை, நோன்பு, தவம் என்ற பெயர்களாலேயும் சில பழக்கங்கள் நமது நாட்டில் புகுந்து விட்டன. அவைகளில் நாட்டுப்புறத்து மக்களுக்கு மிகுந்த நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. அது படிப்பின்மையாலும் அறிவின்மையாலும் ஏற்பட்டது. அவ்விதப் பழக்கங்களாலோ நமது உயிருக்கு மேன்மையும், நமது குணத்திற்குக் கண்ணியமும், நமது வாழ்க்கைக்குக் கௌரவமும் வந்ததாகத் தெரியவில்லை. அவைகள் இல்லாமையினாலே யாதொரு தீங்கும் நமக்கு ஏற்படாது. யாதோ ஒரு தொத்து நோய் ஒரு காரணத்தினால் ஏற்பட்டுவிட்டால் அது சௌக்கியமானால் அலகு கு:ததிக் கொள்ளுதல், செடில் குத்த்ப் பூந்தேர் இழுத்தல் தெருவில் உருளுதல் முதுலிய கொடிய செயல்களைச் செய்வதாக வேண்டிக் கொள்ளுதல் அத்தனை சிறப்பு என்று தோன்றவில்லை. இவற்றை வேண்டுதலை அல்லது கோரிக்கை என்பார்கள். இரவெல்லாம் பேய்போல் குதித்தல் பிரம்பினால் அடித்துக் கொள்ளுதல் இவைகளை நோன்பு என்கிறார்கள். இவைகள் பகுத்தறிவுக்கு அழகு அல்ல. இவைகளைப் பற்றித் தமிழ் நூல்களில் இல்லை. இல்லாதிருந்தும் ஏனோ இவைகளில் ஈடுபட்டு உடலைத் துன்புறுத்த வேண்டுமோ தெரியவில்லை. இத்துன்பங்கள் தவம்ஆகா என்று வள்ளுவ நாயனாரும் மறைமுகாகக் கூறியுள்ளார். தவத்தைப் பற்றிக் கூறும்பாழுது உற்ற நோய் நோற்றல் உயிருக் குறுகண் செய்யாமை அற்றே தவத்திற்குரு" என்றார். தானே ஏற்பட்ட நோயைச் சகித்தலும் ஒரு உயிருக்குத் துன்பம் செய்யாமையுமே தவம் என்றார். பேயாடுதலும் அதனால் சிலபேர் பிழைப்பிற்கு வழிதேடுதலும் அநாகரிகம். உடலில் நோய் உண்டானால் அதனை மருந்து கொடுத்துத் தீர்க்க வேண்டுமே ஒழிய பேய் என்ற பெயரால் மந்திரவாதியைக் கொண்டு பிரம்பினால் அடித்துத் துன்புறுத்தல் மிகக் கொடுமை. இக்கொடுமை படிப்பினால்தான் நீங்குமென்று அறியவேண்டும். பேயும் பிசாசும் அறிவு இல்லாதவர்களுக்கு மட்டுமே

அறிவுள்ளவர்களுக்கு இல்லை. பேய் ஓட்டுதலும் பிற்காத்திலே தான் இந்நாட்டில் புகுந்தது.

**செய்வினை**

மந்திரம் போடுதல் என்ற செயலினால் நாட்டில் ஏற்பட்டிருக்கும் துன்பத்திற்கு அளவில்லை. மந்திரத்தினால் மாங்காய் விழாது என்பது பழமொழி. அப்படியிருந்தும் நாட்டில் மந்திரவாதத்தில் மக்களுக்கு நம்பிக்கை போகவில்லை. இதில் பலவிதம் உண்டு. பயத்திற்கு மந்திரம் போட்டு மந்திரம் கட்டுதல் ஒன்று ஒருவருக்குத் தீங்கு செய்ய மந்திரவாதியைக் கொண்டு செய்வினை செய்தல், பில்லி சூனியம் வைத்தல், விரோதிகள் வீட்டில் நெருப்பு , அசுத்தம், மலம் இவைகளை விழச் செய்தல் விரோதிகள் குடும்பம் சீரழிந்து கெட்டுவிடும் என்று நம்புகின்றனர்.

மனைவி கணவனுக்கு மருந்து வைத்து வசியம் செய்தல் மற்ற உறவினர்களுக்கு மந்திரம் ஏவுதல், முதலிய எல்லாம் பணம் பிடுங்கச் செய்யும் மோசடிகள் ஆகும். இவைகள் தமிழ்நாட்டில் முன்னாளில் இல்லை. எந்த நூலிலும் சொல்லப்படவில்லை. அவை வடநாட்டிலிருந்து தெற்கே வந்த பழக்கங்கள். சங்கத்து நூலில் தமிழர் கொள்கை அடியிற்கண்டபடி தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. தீதும் நன்றும் பிறர்தர வாரா' என்பதே ஒருவன் மற்றொருவனுக்கு நன்மையும் தீயும் செய்ய முடியாது. அவன் செயலுக்கு அவனே பொறுப்பாளி. ஆகவே பெறும் மந்திரங்களினால் எவ்வாறு ஒருவன் பிறருக்குச் செய்வினை செய்ய முடியும். ஆனாலும் நாட்டில் இந்த நம்பிக்கை இன்னமும் இருக்கிறது. அனதால் நாட்டில் மிகவும் தீங்கு விளைகிறது. இந்த அநாகரிக அறிவில்லாத நம்பிக்கைகள அறவே ஒழித்தல் நன்று. ஆரூடம் சோதிடம் என்று சொல்லிப் பலபேர் மோசடிகள் செய்து அவற்றையே பிழைப்பாகக் கொள்ளுகிறார்கள். மனிதனுக்குப் பிற்காலம் தெரியாமல் இருப்பதே இன்பம் ஆகும். தன் தன் கடமை செய்யின் விளைவு தானே கிடைக்கிறது. ஆகவே கடமைகளைச் செய்வதே நன்று ஆகும்.

**வழக்கம்**

*பழக்கத்தின் தொடர்ந்த நிலையே வழக்கமாகும். வழக்கம் சமூகம் சார்ந்த ஒன்றாகும். ஒரு இனத்தின் ரு சிறு பகுதியைச் சார்ந்தோரோ சிற்சில நாட்டினர் மட்டிலுமோ அல்லது அவருள்ளும் ஒரு சிறு வகுப்பினரோ அல்லது தனித்தனியான ஆட்கள் மட்டிலுமோ செயல்களைச் ஒழுங்காகச் செய்து வருவதையே வழக்ம் என்று கூறுகிறோம். அது ஒழுக்கத்தாலும் செயல்களாலும் உருவானது. இயற்கையும், செயற்கையும் இணையும் கூட்டுறவால் நிலைபெறுவது. ஒரு இனக்குழுவிலுள்ள பலருடைய மனவெழுச்சி, உணர்ச்சி, விருப்பு வெறுப்பு ஆகியவற்றுடன் இணைந்து நிற்பது வழக்கம் எனக் கருதப்படுகிறது. ஒரு வழக்கம் செல்லக்கூடியதாக இருக்க வேண்டுமாயின் அது பண்டைக்காலம் முதல் இடையீடின்றித் தொடர்ந்து வழக்கில் வந்ததாக இருப்பதுடன் அறிவுக்கு ஒத்ததாயும் தென்படவேண்டும்.*

*சமூகத்தில் அதிகமாகப் பின்பற்றப்படும் பழக்கமான நடவடிக்கையே வழக்கமாகும். வழக்கத்தின் முக்கியப் பண்புகளாக ஒரு நிலையான நடவடிக்கை வழிமுறை, சமூகப் பண்பு, சரி தவறு என்ற மதிப்புத் தீர்ப்பு ஆகிய மூன்று காரணிகளைப் பாஸ்கல் கில்பர்ட் சமூகவியலார் கூறுகின்றார்.*

*பேக் ஹாட் என்பவர் வழக்கம்தான் மனித சமூக வாழ்க்கையின் முதற்கட்டுப்பாடு ஆகும். மக்கள் எல்லோரும் ஒன்றுபடவும் அவர்களுடைய நடவடிக்கைகளை ஒத்த தன்மை பெறச் செய்யவும் சுயநல எண்ணங்களைக் கட்டுப்படுத்தவும் அத்தகைய கட்டுப்பாட்டிற்கு ஆட்படாதவர்களை ஒதுக்கித் தள்ளவும் தேவையான திறமையும் உறுதியும் வாய்ந்த வழக்கங்களை உருவாக்கிக் கொண்ட சமூகங்கள் தாம் நிலைத்து நிற்கும் போட்டியில் வெற்றி பெற்று பிழைத்து நிற்கின்றன என்கிறார் பாஸ்கல் கில்பர்ட், மேலும் வழக்கங்கள் ஒரு குழுவினுடைய விருப்பங்கள், இலட்சியங்கள், வாழ்க்கைக் கண்ணோட்டங்களைப் பிரதிபலிப்பதாகவும் அமைகின்றன.*

வழக்கம் என்ற சொல் பழக்கத்தை அடியொற்றிய சமூகம் சார்ந்த செயல்பாடுகளின் தொகுப்பென்று கூறலாம். தமிழ் சொற்பொருள் அகராதி வழக்கம் என்ற சொல்லினைப் பற்றிப் பின்வரும் விளக்கம் அளிக்கின்றது.

வழக்கம் வழங்கு (Usage, practice, habit, custom)

பழக்கம் பொதுவானது (That which is ordinary or common)

வழக்கமாய் முன் வழக்கப்படி (Usually, Habitually)

பெரும்பாலும் (Generally)

வழக்கியல் வழக்காறு (Usage

(Colloquial style)

உலக வழக்கமான நடை என்ற வரையறையினை நோக்கும்போது இவையனைத்தும் பெரும்பாலும் முன்வழக்கப்படி மக்கள் தாங்கள் பழக்கப்படுத்திக் கொண்ட உலக வழக்கியல் ஒழுகலாறுகளே பழக்க வழக்கங்கள் என்ற பெயரைப் பெற்றன என்பது தெளிவாகிறது.

வழக்கங்கள் என்பது ஒரு தனிமனிதனோ ஒருசிலரோ பலரோ, இனமோ, குழுவோ, நாடோ ஒரு பழக்கத்தை நிலையாகத் தொடங்குவது வழக்கம் ஆகும். வழக்கம் என்ற சொல் வழிவழியாகப் பின்பற்றுதல் என்ற பொருளைக் கொண்டுள்ளது. இவை பண்டைய தமிழ் இலக்கண இலக்கியங்களில் கையாளப்பட்டுள்ளன. இனக்குழு வாழ்க்கையினரின் மனவெழுச்சி உணர்ச்சி ஆகியவற்றுடன் இணைந்து நிற்பது வழக்கம் என்று கூறுகின்றனர்.

**திருமணம்**

வடமொழி அறநூல்களிலே எட்டுவித திருமணங்கள் கூறப்பட்டுள்ளன. அவைகள் வெவ்வேறு நாடுகளில் வெவ்வேறு காலங்களில் நடைபெற்றிருக்கலாம். தமிழ்நாட்டில் நடைபெறும்திருமண நடவடிக்கைகளுக்கும் வடமொழிப் பாகுபாட்டிற்கும் சம்பந்தமே இல்லை.

*காதல் திருமணங்கள்முன் காலத்தில் நடைபெற்றிருக்கலாம். ஆனால் தற்காலத்தில் அவை குறைந்து காணப்படுகின்றன. நாட்டிலே நடைபெறும் முறை என்னவெனில் ஒத்த குலத்திலோ, பெற்றோர்கள் பொருத்தும் விசாரித்துப் பெண் பார்ப்பது வழக்கம். பிறகு ஜாதகக் குறிப்பு பார்த்துப் பத்துப் பொருத்தங்கள் பார்த்துத் திருமணம் செய்கின்றனர். ஜாதகங்கள் இல்லாத இடத்தில் குறிபார்த்து நிச்சயிக்கிறதுண்டு. அல்லது கோயிலில் பூ கேட்பதுண்டு. அந்த வகையில் ஒப்பு ஏற்பட்டால் மணம் நிச்சயிக்கப்படும். பிறகு எல்லாவிதமான சடங்குகள் நடத்துவார்கள். பெரியபுராணத்தில் காரைக்கால் அம்மையார் சரித்திரத்தில் கூறப்பட்ட வரலாறு பொதுவாக நமது நாட்டில் நடைபெறுவதே ஆகும்.*

**இறுதிச் சடங்குகள்**

*மனிதன் பிறந்தது முதல் இறக்கும் வரை சடங்குகள் உண்டு. வாழும் நாட்களிலோ, வாழ்க்கை மறைந்த பிறகும் இறந்த உடலுக்கும் சடங்குகள் உண்டு. பல நாடுகளில் பல சமயங்களில் பல்வேறு சடங்கு முறைகள் இருக்கும். பலவித ஈம முறையினைக் கூறவந்த மணிமேகலை ஆசிரியர்,*

**"சுடுவோர் இடுவோர் தொடுகுழி படுப்போர்**
**தாழ்வயின் அடைப்போர் தாழியில் கவிப்போர்"**

*என்று கூறினார். இவைகள் சில பண்டைக் கொங்கு நாட்டிலும் இருந்தன. பேரூருக்கு அடுத்த சில நிலங்களில் முதுமக்கட் தாழிகள் கிடைத்தன. வெள்ளலூருக்கு அடுத்த நிலங்களில் மாண்டவர் குழிகளும், மண்டபக் குழிகளும் கிடைத்தன. தற்போது இடுவதும் சுடுவதுமே செயலில் இருக்கின்றன. ஒருவனோ, ஒருத்தியோ இறந்தபிறகு இறந்த உடலை நீராட்டிக் கழுவி அலங்கரித்துச் சுடுகாடு அல்லது இடுகாட்டுக்கு எடுத்துச் செல்வார்கள். இறந்தவனுடைய வாரிசு கொள்ளி வைப்பதற்காகக் கொள்ளி எடுத்துச் செல்லுவார். சுடுகாடு பெரும்பாலும் ஆற்றோரம் இருக்கும். அதில் ஒரு மேடைமேல் விறகும் எருமுட்டையும் அடுக்கித்*

தீப்பற்ற வைப்பார்கள். அது எரிந்து சாம்பலான பிறகு எலும்புகளை ஒரு புனிதத் தீர்த்தத்தில் இடுவார்கள். இறந்தபிறகு இதுபோனற் சடங்குகளைச் செய்வார்கள். பின்னால் பதினொரு நாளோ அல்லது பதினாறு நாளோ ஆனால் இறுதிச் சடங்கு நடைபெறும்.

சில இனத்தைச் சேர்ந்தவர்கள் அந்த இனத்தைச் சேர்ந்த பெரியவர்களும், சிலரிர் அந்தணர்களும் சடங்குகளைச் செய்வார்கள். தான தருமங்களில் இருந்து இவைகளோடு கடமை நிறைவேறும். நிலத்தில் ஆழக்குழி தோண்டி அதில் உடலை வைத்து மண்ணால் மூடிவிடுவார்கள். அந்த இடத்தில் சமாதி கட்டுவது உண்டு. அதில் பெயர் முதலியவை எழுதுவதும் உண்டு. மூன்றாம் நாள் பால் ஊற்றுகிற சடங்கு நடக்கும். பதினோறாம்நாள் மோட்ச தீபம் என்ற மற்றொரு சடங்கும் உண்டு. இச்சடங்குகளுக்கெல்லாம் உறவினர்கள் வந்து கலந்து கொள்வார்கள். திருமணத்திற்கு வராவிட்டாலும் இறுதிச் சடங்குகளுக்கு எவரும் வராமல் இருக்க மாட்டார்கள். பண்டைக்காலத்தில் இறந்த வீரர்களுக்குக் கல்நடுதல் என்ற வழக்கம் இருந்தது.

**பழக்க வழக்கங்கள்**

காடுகளில் விலங்குகளோடு விலங்குகளாக வாழ்ந்த மனிதனின் சிந்தனைத் தூண்டுதலின் தாக்கத்தினாலும், தனித்து வாழும் நிலையினை விடுத்து மனிதனோடு மனிதனாகக் குழுக்களாகச் சேர்ந்து வாழும் சமூக அமைப்பினாலும் கட்டுண்ட மனிதன், அச்சமூகத்திற்கென்று பண்பாட்டு நிலையில் சில நியதிகளையும், செயல்முறைகளையும் ஒழுங்குபடுத்தி வரையறுத்துக் கொண்ட காலத்தில்தான் பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும், சடங்குகள் தோன்றி மனிதசமுதாயத்தை இன்றுவரை வழிநடத்திக் கொண்டிருக்கின்றன. மனித இனத்தின் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்து பழக்க வழக்கங்கள் மனிதனின் அன்றாட வாழ்வில் இரண்டறக் கலந்து மனிதன் எச்செயலைச் செய்தாலும் அச்செயல்கள் அனைத்தும் அவன் சார்ந்துள்ள இனக்குழுக்களின் பழக்க

வழக்கங்களை வெளிப்படுத்தும் வல்லமை பெற்றதாக அமைந்து விடுகின்றன.

பழக்க வழக்கம் என்ற சொற்றொடர் பழக்கம்+ வழக்கம் என்ற இரு சொற்களின் கூட்டுறவினால் ஏற்பட்ட சொல்லாக்கமாகும். பழக்கம் என்ற சொல் பழகுதல் (அ) பயிற்சியாதல் என்ற பொருளில் பண்டைய தமிழிலக்கியங்களில் பயின்று வந்துள்ளது. பழக்கம் என்ற இச்சொல் பொருள் நிலையில் தனிமனிதனின் நடத்தைச் செயல்முறையினை உணர்த்துவதாக அமைகின்றது.

'வழக்கம்' என்ற சொல் வழிவழியாகப் பின்பற்றுதல் அல்லது வழங்கி வருதல் என்ற விளக்கத்தின் அடிப்படையில் பண்டைய தமிழ் இலக்கண இலக்கியங்களில் கையாளப்பட்டுள்ளன. வழக்கம் என்ற சொல் பழக்கத்திலுள்ள செயல்கள் மனித சமுதாயத்தில் அங்கீகாரத்தினைப் பெற்றுத் தலைமுறை இடையிடின்றி (Generation Gap) வழிவழியாகத் தொடர்ந்து பின்பற்றி வரும் நிலையினை வெளிப்படையாக உணர்த்துவதாக உள்ளது. ஒரு குறிப்பிட்ட செயலைப் பல மனிதர்கள் ஒன்றாகச் சேர்ந்து செய்கின்ற போது அது வழக்கம் எனப் போற்றப்படுகின்றது என்றார் க.த. திருநாவுக்கரசு (1970: 60) பழக்கம் என்பது கற்கும் செயலாகும். தனிமனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையைக் குறிப்பதாகும். பழக்கம் வளர்ச்சிக்கு இன்றியமையாத கூறாகக் கருதப்படுகிறது. நனவுடன் தொடங்கிய செயல் நாளடைவில் நனவின்றியே நிகழக்கூடியதாக ஆகிவிடும் செயலைப் 'பழக்கம்' என்பார். நல்ல பண்புகளையும், நற்பழக்கங்களையும் குழந்தைப் பருவத்தில் பிஞ்சு உள்ளங்களில் பதியும் வண்ணம் பெற்றோர்களும், ஆசிரியர்களும் போதிக்கின்ற அறிவுரையும் கல்வியும்தான் எதிர்காலத்தில் ஒரு சிறந்த நன்னடத்தை உள்ளவனை உருவாக்கிக் காட்டும் என்ற கருத்தை உள்ளடக்கி,

**"தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்"**

என்று நம் முன்னோர்கள் பழமொழியாக எடுத்துரைத்தனர்.

*வழக்கம் என்ற சொல் பழக்கத்தை அடியொற்றிய சமூகம் சார்ந்த செயல்பாடுகளின் தொகுப்பாகும். ஒரு இனத்தின் ஒரு சிறுபகுதியைச் சார்ந்தவர்களோ, சிற்சில நாட்டினர் மட்டிலுமோ அவருள்ளும் ஒருசிறு வகுப்பினரோ அல்லது தனித்தனியான ஆட்கள் மட்டிலுமோ செயல்களை ஒழுங்காகச் செய்து வருவதையே வழக்கம் என்கிறார் காந்தி.*

**பழக்க வழக்கங்கள்– அறிஞர்களின் கருத்து**

*ஆங்கில அகராதியில் பழக்க வழக்கம் (Custom) என்ற சொல் பின்வரும் பொருள்களை உணர்த்துவதாகக் குறிக்கப்பட்டுள்ளது. Custom வழக்கம் சட்ட மதிப்புடைய வழக்கம், வாழ்க்கை, மரபு, செயல் வழக்காறு, அடிப்படை வரலாறு என்ற பொருளில் வந்துள்ளது. பழக்க வழக்கங்கள் எவ்வாறு தோன்றியது என்பதை ஒருவன் தன் வாழ்க்கைக்கு நன்மையானது எது என்று கண்டு தொடர்ந்து ஒரு பழக்கத்தைத் தன் வாழ்வில் கடைப்பிடித்து வருகின்றான். அவன் அதன் சாதக பாகதங்களை அறிந்தே அதனைத் தன் பழக்கமாக்கிக் கொண்டான். அவனைப் பார்த்து மற்றவர்களும் அதே பழக்கத்தைத் தாமும் தன் வாழ்விலும் ஏற்று மேற்கொள்கின்றனர். இப்படி வந்த பழக்கம்தான் நாளடைவில் சமுதாயத்தின் பொது வழக்கமாகப் பழக்க வழக்கமாக உருப்பெறுகிறது. ஒட்டு மொத்த நடத்தை முறையே பழக்க வழக்கமாகும் என்று சமூகக் கலைக்களஞ்சியம் விளக்கமளிக்கிறது. மேலும் அது இப்பழக்க வழக்கங்கள் தற்காலச் சமுதாயத்தினரிடம் நிலவி வருவதைக் காட்டிலும் பழங்குடி மக்களிடம் ஆணித்தரமாக வேரூன்றிக் கிடக்கின்றன என்றும் கூறுவதால் நாகரிகம் பெற்ற மக்களால் கருதி ஒதுக்கப்பட்டுள்ள சில பழக்க வழக்கங்கள் அனைத்தும் நாட்டுப்புற மக்களிடையே இன்றும் நின்று நிலவித் தனது பாரம்பரியத்தைக் காப்பாற்றித் தக்கவைத்துக் கொண்டு வருகின்றன எனலாம்.*

பழக்க வழக்கங்கள் எல்லாம் மக்களால் ஏற்படுத்தப்பட்டன. பழக்க வழக்கங்களை வைத்து அந்தந்தச் சமூகத்தைச் சேர்ந்த மக்களின் செயல்களைத் தெரிந்து கொள்ள முடிகிறது. எனினும் மக்களால் தோற்றுவிக்கப்பட்ட பழக்க வழக்கங்கள் எளிதில் மாற்றப்படக்கூடியன அல்ல என்பது உண்மை. மனித குலம் தோன்றிய நாள் முதலாகத் தாங்களாகவே ஏற்படுத்திக் கொண்டு பின்பற்றிவரும் நம்பிக்கையின் அடிப்படையில் நிகழும் செயல்கள் பழக்கங்களாகி வழக்கங்களாகின்றன. எனவே நம்பிக்கைகளைத் தொடர்ந்து பழக்க வழக்கங்கள் ஏற்பட்டன என்ற கருத்தும் பழக்க வழக்கம் என்ற சொற்றொடருக்கு முழுவிலாக்கம் தருகின்றது.

நாடு, இனம், மதம் இவைகளின் தோற்றத்திற்கு முன்னதாகவே பழக்க வழக்கங்கள் தோன்றி வளர்ச்சி பெற்றதை வாழ்ந்து வந்த மக்கள் வகை வகையாக வகுத்த வழக்கங்களும் நம்பிக்கைகளும் ஒவ்வொரு நாட்டிலும் வேரூன்றிக் கிடப்பனவாகும் என்ற சண்முகசுந்தரத்தின் கூற்று பழக்க வழக்கங்களின் தொன்மைக்குப் பெருமை சேர்க்கின்றது. வளர்ச்சி அடைந்த ஒரு மனிதனிடம் பல்லாயிரக்கணக்கான நம்பிக்கைகளும், நூற்றுக்கணக்கான வழக்கங்களும் எண்ணிக்கை அளவிலான குறிக்கோள்களும் இருப்பதாகச் சமூகவியல் கலைக்களஞ்சியம் கூறுகிறது.

ஒரு வழக்கம் தொடர்ந்து நாட்டார் வழக்கத்தில் செல்லக்கூடியதாக இருக்க வேண்டுமானால் அது பழங்காலம் தொடங்கிய வழக்கில் இருந்துகொண்டே வந்திருக்க வேண்டும். இந்த வகைக்குச் சான்றாக நாட்டுப்புறங்களில் காணப்படும் சிறு தெய்வ வழிபாட்டினைக் குறிப்பிடலாம் என்கிறார் நாட்டுப்புற ஆய்வாளர் கமலா. இதனால் நாட்டுப்புறப் பழக்க வழக்கங்கள் தொன்மையானவை என்றும், திரும்பத் திரும்பச் செயல்பட்டு வாழையடி வாழையெனப் பின்பற்றப்படுகின்றன.

பழக்கம், வழக்கம், மரபு என்ற மூன்று நிலைகளும் சங்கிலித் தொடராக ஒன்றையொன்று பின்னிப்பிணைந்து சமுதாயத்தை ஒழுங்குபடுத்தி வழிநடத்திச் செல்கிறது. நம்பிக்கையின் அடிப்படையிலான

பழக்க வழக்கங்களும், பழக்க வழக்கங்களோடு தொடர்பு கொண்டுள்ள சடங்கு முறைகளும், சடங்குகளுடன் தொடர்பு கொண்டுள்ள சடங்கு முறைகளும், சடங்குகளுடன் தொடர்பு கொண்டுள்ள வழிபாடுகளும் எக்காலத்திலும் அவ்வின மக்களை விட்டு முற்றிலுமாக அகற்ற முடியாத அளவிற்கு நாட்டுப்புறங்களில் வாழுகின்ற மக்களின் செயல்முறைகளில் ஆழமாக வேரூன்றி நிலைத்திருக்கும் சக்தியினைப் பெற்றிருப்பதால் அறிவியல் முன்னேற்றமும், நாகரிக முதிர்ச்சியும் கண்டுள்ள இக்காலச் சூழலிலும் நாட்டுப்புறப் பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும், சடங்குகளும் வழிபாடுகளும் நாட்டுப்புற மருத்துவமும் தனக்கென்று ஓரிடத்தைத் தக்க வைத்துக் கொண்டுதான் இருக்கின்றன எனலாம்.

பழக்க வழக்கம் குறித்து மேற்கண்ட அறிஞர்களின் கருத்துக்களை ஆதாரமாக வைத்துச் சிந்திக்கின்ற போது பழக்க வழக்க மரபுகள் மகத் தொன்மையானவை என்பதும் எளிதில் மாற்றிக் கொள்ளத் தக்கதில்லை என்பதும், கால-இட-சூழல்களுக்கு ஏற்ற வண்ணம் சில நியதிகளையும், கட்டுப்பாடுகளையும் தனக்குள் வகுத்துக் கொண்டு நாட்டுப்புற மக்களிடையே என்றென்றும் நின்று நிலவுகிறது. பழக்கம் தனிமனிதனைச் சார்ந்தும், வழக்கம் அவன் கூட்டத்தாரால் உருவாகிய சமுதாயத்தைச் சார்ந்தும் செயல்படுகின்றன. பழக்கம் என்பது தொடக்க நிலையாகவும், வழக்கம் என்பது தொடர்நிலையாகவும், மரபு என்பது முதிர்நிலையாகவும் மூன்று நிலைகளில் வகைப்படுத்தலாம். பழக்கங்கள் காலப்போக்கில் சமுதாய வழக்கங்களாக உருப்பெற்றுத் தலைமுறை தலைமுறையாக இடையறாது நிலைத்த வாழ்வு பெறும் நிலையில் மரபுகளாக வாழ்வு பெறுகின்றன என்று சாந்தி விளக்கமளிக்கிறார்.

பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குகள், வழிபாடுகள் முதலான நாட்டுப்புற வழக்காறுகள் முன்னைப் பழமைக்கும் பழமையும் பெற்றுக் காலங்கள் தோறும் ஒருவரிடமிருந்து மற்றொருவருக்குப் பரவி வருகின்றன. மனிதனின் பிறப்பிலிருந்து இறப்பு வரையிலும் பலவகையான பழக்க வழக்கங்களும், அதற்குக் காரணமான நம்பிக்கைகளும்,

இரண்டையும் முறைப்படுத்துகின்ற சடங்குகளும், அதன்வழி வெளிப்படுகின்ற வழிபாடுகளும், மற்ற மற்ற வழக்காறுகளும் இன்றும் நம்முடைய கிராமங்களிலுள்ள மக்களால் முறையாகப் பின்பற்றப்படுவதைக் காண்பதுடன் பழக்க வழக்கங்கள் அந்தந்த இனத்திற்கேற்ப மாறுபடுவதும், இவர்கள் இந்த இனத்தைச் சார்ந்தவர்கள் என்று அடையாளம் காண்பதற்கும் பெருந்துணை புரிகின்றன.

பழக்க வழக்கங்களைத் தனிமனிதனும் சமுதாயம் என்ற அமைப்பும் இணைந்து உருவாக்குகின்றன. மக்களின் தேவைகளின் அடிப்படையிலேயே பழக்கங்கள் தோன்றுகின்றன. அவை சமுதாயத்தால் ஏற்றுக்கொள்ளப்படுகின்ற நிலையில் வழக்கங்களாக உருப்பெறுகின்றன. இக்கூற்றிற்குச் சான்றாகத் தனிமனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையைப் பழக்கம் எனவும் இனக்குழுவிலுள்ள பலருடைய மனவெழுச்சி, உணர்ச்சி ஆகியவற்றுடன் இயைந்து நிற்பது வழக்கம் எனக் கூறும் சமூகவியலாரின் கூற்று ஏற்புடைத்தாகத் தோன்றுகின்றது. மேலும் இக்கருத்திற்கு வலிமையூட்டும் வகையில் தனிமனிதன் ஒருவன் பழகிப்போன முறையில் திரும்பத் திரும்பச் செய்துவரும் ஒரு குறிப்பிட்ட செயலைப் பல மனிதர் ஒன்றாகச் சேர்ந்து செய்கின்றபொழுது அது வழக்கம் எனப் போற்றப்படுகிறது. அதாவது பழக்கம் என்பது தனிமனிதனைச் சார்ந்த தொடக்க நிலை எனவும், வழக்கம் என்பது சமுதாயம் சார்ந்த தொடர்நிலை எனவும் கூறலாம்.

தனிமனிதன் ஒன்றை நாள்தோறும் அல்லதுஅடிக்கடிச் சிந்தனையால் செயலால் கற்பது அல்லது தொடங்குவது அல்லது தொடக்காலத் தொடர்ச்சி வழக்கமாகும். தனிமனிதனோ ஒரு சிலரோ, பலரோ, இனமோ, குழுவோ நாடோ ஒரு பழக்கத்தை நிலையாகத் தொடங்குவது வழக்கம். ஓர் இனமோ, குழுவோ, நாடோ சிந்தனை அறிவு சார்ந்த சில கோட்பாட்டு அடிப்படையிலான கருத்தையோ செயலையோ எழுதாச் சட்டமாக ஏற்பதுமரபு. தமிழ் இலக்கணத் துறையில் வழக்கு, மரபு, ஆகியன ஏற்கப்பட்டுள்ளன. வழக்கம், மரபு ஆகியவற்றில் மனித

குலம் தழைப்பதற்கான தூய்மையும் உயர்வும் கொண்டவை ஒழுக்கம் எனச் சான்றோரால் ஏற்கப்படும் சில பழக்க வழக்கங்களை மீறினால் கூட மன்னித்து விடுகிற சமுதாயம மரபு ஒழுக்கம் ஆகியவற்றை மீறுபவரைத் தன் வலிமைக்கேற்ப ஒடுக்குகிறது. பழக்க வழக்கங்கள் ஒரு சமுதாயத்தின் தனிமனிதப் பண்பாட்டையும், மரபு ஒழுக்கம் ஆகியன சமுதாயப் பண்பாட்டையும் காட்டும்.

**சங்க காலம்**

சங்க காலத்தில் பெண்கள் பூ அணிதலும், அணிகலன்கள் அணிதலும், கூந்தலை அழகுபடுத்திக் கொள்வதும், கண்ணுக்கு மைதீட்டிக் கொள்வதும், விழாக்காலங்களில் தழையாடை அணிவதும் பெண்கள் வழக்கமாகும். மாத விலக்கான பெண்கள் வீட்டுப் பண்டங்களைத் தொடாமல் ஒதுங்கி இருப்பர். இவர்கள் ‘கலந்தொடா மகளிர்’ எனப்படுவர். குழந்தை ஈன்ற பெண்கள் புனிற்று மகளிர் எனப்படுவர். பெண்கள் தம் கணவனுடன் சென்று போர்ப்பாசறையில் தங்குவதில்லை. கணவன் பிரிந்து செல்லும் போது பெண்கள் உடனே செல்வதில்லை. பிரிவுக்காலங்களில் தம்மை அழகு செய்து கொள்ளாமல் வீட்டில் இருப்பர்.

கணவன் இறந்தபின் வாழும் மகளிர் கைம்பெண்கள், கைம்மை மகளிர், பருத்திப் பெண்டிர் எனப்பெறுவர். கைம்மையுற்ற பெண்களின் கூந்தல் அணிகலன் ஆகியவற்றைக் களைவர். காண்பவர்கள் தன் அழகைப் பார்க்கக் கூடாது என்று கருதி குறைசெய்து கொள்வது வழக்கம். இவர்கள் உண்ணும் உணவில் நெய் சேர்ப்பது இல்லை. பாயில் படுப்பது இல்லை. தரையில்தான் படுப்பார்கள். இதனால்தான் தம்மை வருத்திக் கொள்கின்றனர் நூல் நூற்று வாழ்வதால் பருத்திப் பெண்டிர் எனப்படுவர்.

தான் காதலித்த பெண்ணை மணப்பதில் ஏதாவது தடை வந்தால் தலைவன் மடலேறுவதுண்டு. மடலேறுவது பெருந்திணையில் அமையும் என்று தொல்காப்பியம் (பொருள்.54) கூறியிருப்பினும் சங்க இலக்கியத்தில்

*குறிஞ்சி, நெய்தல், முதலிய திணைகளில் வந்துள்ளது. தலைவன் தன் ஆண்மை, நாணம் இவற்றை உதறிய பின் அல்லா மடலேற வேண்டும்.*

**“நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன்**
**காமுற்றார் ஏறும் மடல்”** *(குறள். 1133)*

*உயிரினும் சிறந்த நாணம் துறந்து பெண்கள் மடலேறுதல் இயலாதாகவே பெண்கள் மடலேறும் வழக்கம் இல்லை. பெண்கள் மடலேறத் துணிவதாகக் காட்டித் திருமங்கையாழ்வார் பிற்காலத்தே பாடியது ஓர் இலக்கிய உத்தியாகும்.*

**பல்லவர் காலம்**

*களப்பிரரின் இருண்ட காலத் தாழ்ச்சியும், பல்லவரின் சமய எழுச்சிக் காலத் தாக்கமும் சங்ககாலப் பழக்க வழக்கங்களில் சில மாற்றங்களையும் புதியவற்றையும் ஏற்படுத்தின. பல்லவர் காலத்தில் சமண பௌத்தம் இரண்டும் தோன்றிச் சைவ வைணவம் பெருகின. ஒரு சமயத்தார் மறுசமயத்தாரைக் கொடுமை செய்தனர் என்பதைத் திருநாவுக்கரசர் புராணத்தில் கூறுகின்றார். சமணரின் பாழிகளையும் பள்ளிகளையும் இடித்து திருவதிகைக் கோயிலை மன்னன் கட்டினான் என்று பெரியபுராணம் கூறுகிறது.*

*சமணர்கள் சூரியன் மறைவதற்கு முன் சாயுங்கால வேளை உணவு உண்ணுவதும் ஆகிய பழக்கம் கொண்டு வாழ்ந்தனர் கபாலிக சைவர் தம் கழுத்தைத்தாமே வெட்டிக்கொண்டு பலியிடும் வழக்கம் சிறுபான்மை வழக்கமாக இருந்தது.*

*பெண்கள் அழகிய தலைக்கோலம் செய்து கொண்டனர் என்பதும் பல்வகை அணிகலன்கள் அணிந்தாலும் மூக்கணி எதுவும் அணியவில்லை என்பதும் வீட்டுக்கு ஒருவர் போருக்கோ அல்லது வெள்ளம் தடுத்தல் முதலிய நாட்டுப்பணிக்கோ அனுப்பப்பட்டனர். வெள்ளம் வருவதை முரசறைந்து மக்களுக்குத் தெரிவித்தனர். களவுத் திருமனம் குறைந்து*

ஆரியச் செல்வாக்கு மிகுந்த பெற்றோர் முடித்து வைக்கும் திருமணங்கள் நடந்தன. குழந்தையற்றோர் தத்து எடுக்கும் வழக்கம் இருந்தது. தைந்நீராடல் எனும் சங்ககால வழக்கம் மார்கழி நீராடல் எனும் பாவை நோன்பாக மாறியது.

சமய எழுச்சியால் அரசன், அரசி, அரச குடும்பத்தைச் சார்ந்தோர் அதிகாரிகள், அதிகாரிகளின் மனைவிகள், செல்வர் முதலியோர் கோயிலுக்கு நிலம், அணிகள், விளக்கு முதலியபல நன்கொடைகளைச் செய்தனர். அன்னமிடல், தண்ணீர் பந்தல் அமைத்து தண்ணீர் வழங்குதல் முதலிய அறங்களைச் செய்தனர். சாதிக் கொடுமையும் தீண்டாமையும் இருந்தன. தீண்டாதாருள் நந்தனார் சைவத்திலும் திருப்பாணாழ்வார் வைணவத்திலும் தொண்டராக விளங்கினர். வேதச் செல்வாக்கு, வடமொழிக் கல்வி, மொழிகலப்பு, ஆரியரைக் கொண்டு வந்து குடியேற்றல் ஆரியருக்கும் பார்ப்பனருக்கும் பிரமதேயம் முதலிய பல கொடைகளைச் செய்து அவரைப் பொருளியலாலும் அரசியலாலும் மேன்மையுறச் செய்தல், ஊர்களும், கோயில்களும் அரசன் பெயரால் அமைதல், காசும் படியும் முததலானவை அரசன் அரசிப் பட்டப்பெயரால் வழங்குதல், மடங்கள் அமைத்து சமயம் வளர்த்தல் ஆகியவை பல்லவர் காலத்தில் பெருகிச் சோழர் காலத்தில் மேலும் வளர்ந்தன.

**சோழர் காலம்**

கல்வெட்டுகளில் அரசனது வெற்றிச் செய்திகளை உள்ளடக்கிய மெய்க்கீர்த்தி எழுதும் வழக்கம் உருவாகியது. வடமொழியும் வேதமும் கற்றோர் அரச குருக்களாக இருந்தனர். அரசன் பெயரால் அல்லது சிறப்புப் பெயரால் கோயில்கள் வழங்கின. சாதி அடிப்படையில் பழக்க வழக்கங்கள், உரிமைகள், கடமைகள் அமைந்தன. தீண்டாமை கொடுமையும் இருந்தன. வறுமையுற்ற மக்கள் கோயிலுக்குத் தம்மோடு தம் பெண்களையோ அடிமையாக விற்கும் வழக்கம் இருந்தது.

*சங்ககாலம் போலவே வரை பாய்தல், தீப்புகுதல் முதலிய முறைகளில் உயிர் துறத்தல் உண்டு. சிலம்பு காலத்தில் நடைபெற்றது போலவே தீ வலம் வருதலுடன் திருமணச் சடங்குகள் நடந்தன. தாலி கட்டும் வழக்கத்தை முதன்முதலில் தெரிவிக்கும் கல்வெட்டு கி.பி. 958ஆம் ஆண்டுக்குரியதாகும் என்று கே.கே. பிளளை தெரிவிக்கிறார். மணமகள் வீட்டார் பெண் கேட்டு வருவதும், பெண் வீட்டாருக்குப் பரிசம் போடுவதும், பெண் வீட்டார் மணமகனுக்கு வரதட்சனை கொடுப்பது தமிழர் மரபு. ஆயின் மணமகள் தன் வீட்டிலிருந்து சீதனமாக நிலம் பெற்று வரும் வழக்கம் இருந்தது. குழந்தை பிறந்து பன்னிரண்டாம் நாள் குழந்தைக்குப் பெயர் சூட்டு விழா நடைபெறும். குழந்தையின் ஐந்தாம் வயதில் பள்ளிக்கு அனுப்பத் தொடங்குவதை ஒரு விழா போல் செய்வர். மேலும் வெற்றிலை பாக்கு போடுதல், மது அருந்துதல் ஆகிய பழக்கங்கள் இருந்தன. பிற்காலப் பாண்டியர் கோயில் பணியையும், தமிழ் பேணுவதையும் தம் கடமையாகக் கருதிச் செயல்பட்டனர். இவைகள் அனைத்தையும் சோழர் காலத்தில் பெருகி நாயக்கர் காலத்தில் மேலும் வளர்ந்தன.*

**நாயக்கர் காலம்**

*நாயக்கர் காலத்தில் பலநாட்டவரும், பல சமயத்தவரும் குடியேறி தமிழகத்தில் பல்வகைப் பழக்க வழக்கங்களுடன் திகழ்ந்தனர். கல்வி, பொருள் நிலம் ஆகியவற்றுடன் மக்கள் உதவியும், அரசுச் செல்வாக்கும் பெற்று வளமானஆற்றங்கரைப் பகுதிகளில் பார்ப்பனர் வாழ்ந்தனர். சிறுதெய்வங்கட்கு உயிர்ப்பலி கொடுக்கும் வழக்கம் இருந்தது.*

*உடன்கட்டை ஏறுதல் பல மனைவியரை மணத்தல், பரத்தமை கோயில்களுக்கு அடிமையாக வைத்து இருந்தனர். மதம் மாறுதல், கொடுமையான தண்டனைகள் பில்லிசூனியம ஏவுதல் முதலியன இருந்தன. குளத்தில் நீருக்குள் ஈட்டிகளை நட்டுத் தலைகீழாக அதன்மேல் குதித்து உயிர்விடுதல்(கருமாறிப் பாய்தல்) காஞ்சிபுரத்தில் வழக்கமாக இருந்ததைக் கந்தபுராணம் கூறுகிறது. பட்டம் விடுதல் புனல் விளையாட்டு, பந்தாடுதல்*

ஊஞ்சலாடுதல், கோழி, எருது ஆகியவற்றைச் சண்டைவிட்டு வேடிக்கை பார்ப்பது, கள் குடித்தல் முதலிய வழக்கங்களும் இருந்தன. இறப்பு நிகழ்ந்த வீட்டில் பெண்கள் இல்லாத வீட்டில் வலைச்சியர் சென்று கடமைக்கு அழும் வழக்கம் இருந்தது. பின்னர் கொலை செய்து வைக்கோல் அடைத்து அந்த உடலை மறைத்து வைக்கும் வழக்கம் இருந்தது. உடன்கட்டை ஏறுதல் கட்டாயமில்லை. கி.பி. 1710இல் கிழவன் சேதுபதி இறந்தபோது அவன் மனைவியர் 47 பேர் தீக்குளித்தனர். விசயநகரப் பேரரசின் இரண்டாம் புக்கன் இறந்தபோது அனது 12,000 மனைவியரில் 2,000 பேர் தீக்குளித்ததாகக் கூறுவர்.

சாலைகளின் இருபக்கங்களிலும் மரம் வளர்த்தல், வழித்தடங்களில் தங்கு மனைகளை நிறுவுதல், குளம் வெட்டுதல் முதலிய அறங்களை மன்னரும் மக்களும் செய்தனர். பாரத இராமாயணக் கதைகளைக் கூறுதல், தெருக்கூத்துக்களின் மூலம் புராணக் கதைகளை நடித்தல் முதலிய பொழுதுபோக்குகளாய் இருந்தன.

**ஆங்கிலேயர் காலம்**

வடநாட்டில் இதே காலகட்டத்தில் மதத்தின் பெயரால் தீண்டாமைக் கொடுமை, குழந்தை மணம், குழந்தைக் கொலை, உடன்கட்டையேறுதல், உயிர்ப்பலி ஆகிய வழக்கங்கள் மிகுந்து இருந்தன. பின்னர் சாதி பிரச்சனை, மூடநம்பிக்கை அடிப்படையிலான சில பழக்க வழக்கங்களும் குறையத் தொடங்கின. செல்வ வளம் பெற்றோர் இரு மனைவியரை மணப்பதும், காதற் கிழத்தி வைத்துக் கொள்வதும் வழக்கமாய் இருந்தன. சாட்டையால் அடித்தல், காலில் குண்டுகட்டுதல், தலைகீழாய்க் கட்டி மிளகாய்ப் புகையிடுதல், கண்ணில் மிளகாய்ப் பொடியிடுதல் முதலான கடும் தண்டனைகள் வரியளிக்க முடியாதவர்களுக்கும், படியாத மாணவர்களுக்கும், பண்ணை வேலையாட்களுக்கும் அளிக்கப்பட்டன. சமய விழாக்களில் தீ மிதித்தல், அலகு குத்திக் கொள்ளுதல், எருமைக்கிடாய் வெட்டுதல் முதலிய

கொடுமையான முறைகள் இருந்தன. அமாவாசை அன்று அரிசனத் தொழிலாள எல்லா வீடுகளுக்கும் எருமுட்டை, விறகு, இலை முதலியன கொண்டுபோய்த் தருவான். பின்னர் ஐரோப்பியர் வருகையாலும், கிறித்துவர் தொண்டாலும் விடுதலை உணர்வாலும் கல்வியும் பகுத்தறிவும் பெருகின.

திண்ணைப் பள்ளிகளில் மேட்டுக்குடியினர் படிக்கத் தொடங்கினர். ஆசிரியர்க்கு அரிசி, புளி, மிளகாய், விறகு ஆகியன கொடுத்துப் படித்தனர். குருகுலக் கல்வியும் வழக்கத்தில் இருந்தது. பஞ்சம் வந்த காலகட்டங்களில் கஞ்சித்தொட்டி வைத்தல், கோயிலுக்கும், கல்விக்கும் நன்கொடை தருதல் முதலிய அறக்கொடைகளைச் செல்வரும் அரச பரம்பரையினரும் செய்தனர். இளமையிலேயே திருமணம் செய்துவைத்துவிடுவதும், விதவைகளை மொட்டையடித்து முக்காடிட்டு மூலையிலே உட்கார வைத்து துன்புறுத்துவதும் பெரிதும் பார்ப்பனர்களிடமும் சில மேட்டுக் குடிச்சாதியினரிடமும் இருந்தது. படிப்படியே நீங்கலாயிற்று. வயதுக்கு வந்த பெண்கள் திருமணமாகும் வரை ஆண்களுடன் பேசுவதோ வீட்டை விட்டுப் படி தாண்டி வெளியில் செல்வதோ கூடாது என்ற கட்டுப்பாடும் பெண்கள் கல்வி கற்கக் கூடாது என்ற கட்டுப்பாடும் குறைந்து இருந்தது. ஆடை அணிகலன்களிலும், கல்வி முறையிலும் உணவு முறைகளிலும், மேலைநாட்டாரைப் பின்பற்றினர். மது, வெண்சுருட்டு (சிகரெட்) முதலியவற்றைப் பயன்படுத்தவும் குடுமி களைந்து தலை முடியை வெட்டிக் கொள்ளவும் தொடங்கினர்.

**தற்காலம்**

சங்ககாலந்தொட்டு வருகின்ற பல பழக்க வழக்கங்கள் இன்றும் தமிழகத்தில் வழங்குகின்றன. விருந்தினரை மதித்தல், விருந்தினரை வரவேற்றல், விருந்துக்குத் தலைவாழை இடுதல், வாழை இலையின் நுனி இடப்புறம் வரும்படி வைத்தல், சிறப்பு நாட்களில் யாரேனும் ஒரு துறவிக்கு அல்லது ஏழைக்கு அல்லது காக்கைக்கு மட்டுமாவது உணவிட்டுப்

பின்னரே உணவு உண்ணுதல் ஆகியன தமிழரின் விருந்தோம்பும் மரபுகளாகும். பார்ப்பனரை வைத்துச் சடங்குகளுடன் வடமொழி ஓதித் திருமணம்செய்தல் குறைந்து வருகிறது. தமிழில் சடங்குகள் செய்தும், பதிவாளர் அலுவலகத்தில் தனது திருமணத்தைப் பதிவு செய்கின்றனர். காதல் திருமணம், கலப்புத் திருமணம், சீர்திருத்தத் திருமணம் முதலியன வழக்கில் பெருகியுள்ளன. சமய விழாக்கள் மட்டுமின்றித் தம் பிறந்த நாள் விழா, புதுமனை புகுவிழா, தமது திருமண நாள் விழா, தமக்கு பிடித்த அரசியல் தலைவர் அல்லது நடிகர் பிறந்த நாள் விழா, அரசியல் விழாக்கள், தமிழ் மன்ற விழாக்கள், அரசு விழாக்கள் ஆகியனஇன்றைய வழக்கங்களாய் உள்ளன.

திருவிழாக்களில் இன்றும் ஆடு, கோழி வெட்டுதல், தீ மிதித்தல், அலகு குத்திக் கொள்ளுதல் ஆகியன நடைபெறுகின்றன. சில ஊர்களில் இன்றும் தீண்டத்தகாதவர் எனப் பிரித்து வெளியில் நிறுத்தி உணவு வழங்கும் கொடுமை உள்ளது. கல்லூரிகளில் புது மாணவர்களைப் பழைய மாணவர்கள் கேலி (ராகிங்) என்னும்பெயரில் கொடுமை செய்யும் வழக்கம் குறைந்து இன்று வரவேற்பு விழா, வழியனுப்பு விழா என நடைபெறுவது பண்பாட்டு வளர்ச்சியைக் காட்டுகிறது.

பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும் சமுதாயத்தின் குறிக்கோள்கள், தேவைகள் அடிப்படையில் தோன்றியவைகளாகும். பழக்க வழக்கங்கள் மனித சமுதாயத்தின் தேவை கருதிப் படைத்துக் கொண்டவைகளாகவே கருதப்படுகின்றன. தனிமனிதப் பழக்கங்களே காலப்போக்கில் கூட்டமைப்புடைய மக்கள் குழுக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு வழக்கங்களாகவும், மரபுகளாகவும் நிலைபெறுகின்றன. அவை நிலைபெறுவதற்கு மரபும் ஒரு காரணமாக அமைகின்றது. தனிமனிதப் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் காலப்போக்கில் உணர்ச்சிப் போக்காக மாறும் தன்மை உடையது.

# இயல் 2

## பழந்தமிழர்களின் பழக்க வழக்கங்கள்

*உயிரினங்களின் வளர்ச்சி நிலையில் குரங்கினத்திலிருந்து மனிதன் தோன்றினான் என டார்வின் உடலமைப்பு நிலையில் விளக்கினார். அவ்வாறு மாற்றமடைந்த நிலை கடல்கொண்ட லெமூரியாக் கண்டத்தில் நிகழ்ந்திருக்க வேண்டுமென தாமஸ் ஹக்ஸ்லி, எர்னஸ்ட் ஹெகல் போன்றோர் கருதுகின்றனர். பழந்தமிழ்ப் புலவர் தமிழ்க்குடியை மூத்தகுடியாகச் சுட்டியமைக்கு லெமூரியாக் கண்டத்தில் மனித இனம் தோன்றியது என்ற வரலாற்று உண்மையாகும். மேலும் பழந்தமிழர் வாழ்ந்த நாவலந்தீவைக் கடல்கொள்ளைக் கொள்ள மக்கள் வடக்கு நோக்கி இடம்பெயர்ந்த நிலையினை மொழியியல் விவரங்கள் கூறுகின்றன.*

*இயற்கையின் சீற்றங்களால் நிலப்பகுதி நீர்ப்பகுதியாகவோ நீர்ப்பகுதி நிலப்பகுதியாகவோ மாறுவது தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கிறது. இதனைத் திராவிட மரபினரில் தொன்மையான மரபுப் பின்னணியை உடையோர் தமிழரே. இலக்கியங்கள் அவ்வக்காலச் சமுதாயப் பண்பாட்டு நிலைகளை வெளிப்படுத்துவன. சமுதாயத்தின் இயல்புப் போக்கிற்குத்தக்க உருப்பெறுவதும் காலப்போக்கிற்குத் தக்க மாறுபடுவதும் இலக்கியத்தின் இயற்கைப் பண்பாகும். தமிழ்மொழியின் தமிழ் மக்களின் வாழ்க்கை மரபுகளும் இலக்கிய மரபுகளும் ஆழவேரூன்றி வளர்ந்துள்ளதனைப் பல்வேறு காலகட்டங்களில் தோன்றிய இலக்கியங்கள் புலப்படுத்தி நிற்கின்றன. பழக்கம் என்ற சொல் பழகுதல், பயிற்சியாதல் என்று புறநானூறு பாடல் விளக்குகிறது.*

***“கேட்டன் மாத்திரை யல்ல தியாவதும்***
***காண்ட லில்லா தியாண்டுபல கழிய***

**வாழுவின்று பழகிய கிழமைய ராகினும்**

**அரிதே தோன்றல்''** *(புறம்.216: 1-4)*

*இச்சொல் தமிழிலக்கியத்தில் பண்டுதொட்டே ஆட்சிபெற்று வந்துள்ளது. அது செயல்முறையினை அடியொற்றிய தொடக்க நிலையை உணர்த்துவதாகும். பழகிப்போன செயல் சமூக இசைவினைப் பெற்று வழங்கி வருவதனையே வழக்கம் என்கிறோம். இச்சொல்லும் பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களில் சமூகச் செயல்களைக் குறிப்பதற்காகப் பயன்பட்டுள்ளது.*

**''முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை''**

*(தொல். பொருள். 37)*

*பழந்தமிழ் இலக்கியங்களிலும் வழக்கம் என்ற சொல் சமூகச் செயல்களைக் குறிப்பதாயுள்ளது.*

**''தோளணி தோடு சுடகிழை நித்திலம்**
**பாடுவார் பாடல் பரவல் பழிச்சுதல்**
**ஆடுவா ராட லமர்ந்த சீர்ப் பாணி**
**நல்ல கமழ்தே னளவிழக்க மெல்லாமும்**
**பண்தொடர் வண்டு கரியவெதிர் வந்தூத''**

*(பரிபாடல் 10: 115-119)*

*இன்று இவ்விரு சொற்களையும் ஒரு வரையறையின்றிப் பயன்படுத்தி வருவதனை வாழ்வியல் சான்றுகள் தெரிவிக்கின்றன.*

*சங்க இலக்கியத்தில் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு இவற்றில் உள்ள பழக்க வழக்கங்கள் காலம் பற்றிய பல்வேறு கருத்துக்களைக் கருத்தில் கொள்ளவில்லை என்றாலும், பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் சமுதாயத்தில் குறிக்கோள்கள், தேவைகள் அடிப்படையில் தோன்றியவையாகும்.*

**சங்ககாலப் போர்முறை**

*சங்க இலக்கியங்களில் தமிழ் நிலம் மூன்று பேரரசார்களாலும் பல குறுநில மன்னர்களாலும் ஆளப்பட்டது. அவர்களுக்குள் ஓயாது போர்கள் நிகழ்ந்தவண்ணமிருந்தன. போர்கள் அடிக்கடி ஏற்பட்டதற்குப் பல காரணங்கள் இருந்தன. மண்ணாசையும் புகழ்பெற வேண்டுமென்ற ஆர்வமும் போரில் இறந்தவர்கட்கு வீர சுவர்க்கமுண்டு என்ற நம்பிக்கையும், பெரிய நாட்டை ஆளவேண்டும் என்ற பேராசையும் போருக்குக் காரணமாயின. போர் என்பது தவிர்க்க முடியாத ஒரு நிகழ்ச்சியென்றும் ஒருவனை ஒருவன் அடித்து துன்புறுத்துவதும் உலகத்து இயற்கை. ஒருவரை ஒருவர் சுடுதலும், ஒருவர்க்கொருவர் தொலைதலும் இவ்வுலகத்தே தொன்றுதொட்டு வருவனவாகும்.*

**“ஒருவனை யொருவ னடுதுடந் தொலைதலும்**
**புதுவ தன்றிவ் வுலகத் தியற்கை**
**இன்றி னூங்கோ கேளலந் திரளரை**
**மன்ற வேம்பின் மாச்சினை யொண்டனிர்”**

*(புறம். 76: 1-5)*

*மன்னனுக்குரிய இன்றியமையாச் சின்னங்களில் படையும், வாளும், யானையும், குதிரையும், போர்க்குரியனவாகவுள்ளன. மன்னர்கள் போரில் ஈடுபட்டதை அறிஞர் பெருமக்கள் வெறுக்கவில்லை. மாறாகப் பிறன் ஆளும் நாடுகோள் மன்னர்தொழில் (நான்மணிக்கடிகை 84) என்று கருதிப் பாராட்டினர்.*

*மூவேந்தர்கள் எப்போதும் போட்டியிட்டுக் கொண்டிருந்தனர். தாம் ஆளும் நாடு சிறியது என்று கருதி அதனை விரிவாக்க வேண்டும் என்ற எண்ணத்தில் இருந்தனர். சேர, பாண்டியரின் குடைகள் சோழன் குடையினும் தாழப் பறந்ததைக் கண்டு கோவூர்கிழார் மகிழ்ந்து பாடுகிறார்.*

**“சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்**
**அறத்துவழிப் படூஉம் தோற்றம் போல**

**இருகுடை பின்பட வோங்கிய ஒருகுடை**
**உருகெழு மரபின் றிவந்துசேண் விளங்க"**

*(புறம். 31: 1-4)*

*உலகம் முழுவதையும் ஒரு குடைக்கீழ்க் கொண்டுவர மூவரும் விரும்பினர். "தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன் போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாது" (புறம். 8) என்னும் தொடர்கள் இதற்குச் சான்றாகும். தமிழகத்தில் மறவர், எயினர், மழவர், மல்லர் என்னும் மறக்குடியினர் இருந்தனர். இவர்கள் பழங்காலத்திலிருந்து குடியானவர்கள். இக்குடியினரின் வீரத்தைப் பாராட்டுவதே குடிநிலை, மூதின்முல்லை போன்ற துறைகளின் நோக்கமாகும். இக்குடியில் உள்ள பெண்கள் எல்லோரும் வீரமிக்கவர். அதாவது மகன் போரில் புறங்கொடுத்தான் எனக் கேள்வியுற்ற தாய் அவன் உண்ட மார்பை அறுத்தெறிவேன் என்று சூளுரைத்தாள்.*

**"முலையறுத் திருவெண் யானெனச் சினைஇக்**
**கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்**
**சங்களந் துழவுவோன் சிதைந்ததுவே றாகிய**
**பருமகன் திடக்கை கானூஉ"**

*(புறம். 278: 5-10)*

*ஒருதாய் தன் மகனைப் போருக்கு அனுப்புகிறாள். மகன் இல்லாத தாயொருத்தி அடுத்துவரும் போர்களில் கணவனையும் அண்ணனையும் இழந்து மனம் கலங்காது இளைய வயது மகனைப் போருக்கனுப்பினாள் (புறம். 279) என்ற செய்தியைக் கூறுகின்றது. மன்னர்கள் இக்குடியினருக்குப் பெருமதிப்பளித்தனர். தம் கையாலேயே கள்ளையெடுத்து அவர்கட்குக் கொடுப்பது மரபாகும். (புறம். 289) வீரர்கட்கு நட்ட கல்லை வணங்குவது அன்றைய மரபாக இருந்தது.*

*போரின் தொடக்கத்தில் பகைவர் நாட்டிற் புகுந்து அவர்க்குரிய ஆக்களைக் கவர்ந்து வருவது அக்கால மரபு என்கின்றனர். அதாவது மாடு*

*என்றாலே செல்வம், பொன் என்ற பொருள்படுதல் ஆகும். மேலும் சமயச் சின்னமாகவும் அவை விளங்கின. இதனால் அவற்றுக்கு ஊறு விளைத்தலாகாது என்று கருதி அவற்றைக் கவர்ந்து வந்ததாகக் கூறிவருகின்றனர். கடுஞ்சினஞ் கொண்டு மதுரையைச் சீரழித்த கண்ணகியும், தீக்கடவுளை ஏவும்போது பசு, பத்தினிப் பெண்டிர், மூத்தோர், குழந்தைகள் இவர்களைக் கைவிட்டுத் தீயோரை மட்டும் அழிக்குமாறு கூறுவதாக அடிகள் கூறுவர். எனவே போரில் நல்லவர்கள் பாதிக்கப்பட மாட்டார்கள் என்பது உண்மை.*

*புறத்திணையியலில் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், காஞ்சி என்னும் ஏழு நிலைகளைத் தொல்காப்பியர் குறிப்பிடுவார். இவற்றில் முதல் நான்கும் போருக்கே உரியனவாகும். வாகை, பாடாண், காஞ்சி என்பவை போரோடு மட்டும் தொடர்புடைய திணைகளல்ல. பிற செயல்கட்கும் உரியனவாகும். திணைகள் அந்தந்தப் போரின்போது படையினர் சூடிக்கொண்ட பூவிற்கு ஏற்பப் பெயர் பெற்றன.*

*அன்று வழக்கிலிருந்த கருவிகளாக வேலும், வாளும், வில்லும் இருந்தன. கணை, கோல், பகழி என்னும் சொற்கள் அம்பு என்னும் பொருள் கொண்டன. பல்வேறு வடிவுடைய வாளும் வேலும் பயன்பட்டன. அவைகள் எய்யப்பட்டன, சுழற்றப்பட்டன, துளைக்கப் பயன்பட்டன. வாளும் வேலும் 'எஃகம்' எனப்பட்டன. இவற்றை உறைக்குள் வைத்துக் காத்தனர்என்று 'உறைகழிப்பறியா வேலோனூரே' (புறம். 323) கூறுகின்றது. வீரர்கள் தமது வாளையும் வேலையும் அம்பையும் தாமே தீட்டுவர் என்று,*

**"உலைக்கல் அன்ன பாறை ஏறிக்**
**கொடுவில் எயினர் பகழி மாய்க்கும்**
**கவலைத் தெள்பவவர் சென்ற ஆறே"**

*(குறுந். 12: 2-4)*

*தற்காப்புக் கருவியாக கேடயம் இருந்தது. அது கிடுகு, பலகை, தோல் எனப் பலவாறு அழைக்கப்பட்டது. தோலாலும் இரும்பாலும் செய்யப்பட்டது. அதில் ஆணியும் பட்டமும் அடிக்கப்பட்டன. வீரர்களின் உடல் முழுவதும் மறைக்கும் கவசமும் இருந்தது. அது 'மெய்ம்மறை' எனப்படும். பொறி என்ற இரும்புத் துண்டுகளால் அது ஆக்கப்பட்டது.*

**"புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய**
**எய்கணை கழித்த பகட்டெழில் மார்பின்"**

*(புறம்.13: 2-3)*

*போரின்போது சங்கு முழங்குவதுண்டு. போர்முரசு இடியென முழங்கும். வென்றவன் பகைவனுடைய முரசைக் கைப்பற்றுவது பெருமையாகும். நான்குவகை படைகள் அன்று இருந்தன என்பதற்கு,*

**"கடுஞ்சினத்த கொல்களிறும்**
**கதழ்பரிய கலிமாவும்**
**நெடுங்கொடிய நிமிர்தேரும்**
**நெஞ்சுடைய புகல்மறவரும்"**

*(புறம். 55: 7-8)*

*போரிடும்போது பகைவர் நாட்டை அழித்தல் வழக்கம். ஊரைத் தீயிட்டுக் கொளுத்தினர். அது 'ஊர்சுடு விளக்கம்' எனப்பட்டது. யானை, குதிரைகளைக் கொண்டு நீர்நிலைகளை அழித்துச் சிதைப்பதுண்டு. (புறம்.15)*

**படைவீடு**

*மன்னர்கள் பாசறையில் தங்கியிருப்பர். அது கூதிர்ப்பாசறை, வேனிற்பாசறை என்று இருவகைப்படும். நல்ல காவல் சூழ்ந்த உயர்ந்த இடத்தில் பாசறை அமைக்கப்பட்டது. அங்கே இரந்த காவல் இருக்கைக்குப் 'பார்வல் இருக்கை' என்று பெயர். பாசறை 'கடல்போலக் காட்சியளிக்கக் கூடியது எனலாம். பாசறையின் சுற்றுமதில் சுட்ட*

*செங்கல்லால் ஆனது. பெண்கள் பாசறைக்குச் செல்லும் வழக்கம் பண்டைக்காலத்தில் இருந்தது. அரசர் போருக்குப் புறப்படும்போது அவர்களையும் உடனழைத்துச் சென்றனர். அப்பெண்கள் இரவு நேரங்களில் அரசனுடைய பள்ளியறையைப் பாதுகாக்கும் காவர்க்குத் துணையாக இருந்தனர். சிறிய வளையல்களை முன் கையில் அணிந்திருந்தனர். அவர்களின் தலைமயிர் அவிழ்ந்து முதுகில் கிடந்தது. இரவைப் பகலாக்கும் அளவுக்கு ஒளிபொருந்திய வாளை இடையில் கட்டித் தொங்கவிட்டிருந்தனர். அந்த வீரப்பெண்கள் பந்தங்களைக் கொளுத்தித் தன் கைகளில் வைத்து இருந்தனர். எரிந்த பாவை விளக்கு அணைந்த போதெல்லாம் அவைகளைக் கொளுத்தி ஒளிபெறச் செய்தனர்.*

**“குறுந்தொடி முன்கைக் கூந்தல் அம்சிறுபுறத்து**
**இரவுபகல் செய்யுத் திண்பிடி ஒள்வான்**
**விரவுவரிக் கச்சின் பூண்ட மங்கையர்**
**நெய்யுமிழ் கரையர் நெடுந்திரிக் கொளிஇக்**
**கையமை விளக்கம் நந்துதொறும் மாட்ட”**

*(முல்லை. 45-49)*

*பண்டைத் தமிழ் மன்னர் போர்க்களத்தில் பங்குகொண்டனர். பாசறையில் அடிபட்ட வீரர்களுக்கு ஆறுதல் வழங்கினர் போர் வீரர்களுடன் நட்புடையோராகப் பழகினர். மன்னன் வலிமை வாய்ந்த வீர இளைஞன் ஒருவனுடைய தோள்மீது கைபோட்டுக் கொண்டான். மற்றொரு வீரன் மகிழ்வுடன் வானினின்று வீழும் மழைத்துளி மன்னன் மீது படாதவாறு வெண்கொற்றக்குடையை வீறுடன் பிடித்து நின்றான். மன்னன் நள்ளிரவிலும் பள்ளி கொள்ளாமல் பாசறையில் திரிந்து நின்ற கடமைச் செயலை,*

**“வேம்புதலை யாத்த நோன்காழ் எஃகமொடு**
**முன்னோன் முறைமுறை காட்டப் பின்னர்**
**மணிபுறத் திட்ட மாத்தாட் பிடியொடு**

**பருமம் களையாப் பாப்பரிக் கலிமா**

**இருஞ்சேற்றுத் தெருவின் எறிதுளி விதிர்ப்பப்**

**புடைவீழ் அம்துகில் இடவயின் தழீஇ**

**வாள்தோட் கோத்த வன்கட் காளை**

**சுவல்மிசை அமைத்த கையன் முகனமர்ந்து**

**நூல்கால் யாத்த மாலை வெண்குடை**

**தவ்வென்று அசைஇத் தாதுளி மறைப்ப**

**நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்**

**சிலரொடும் திரிதரும்''** *(நெடுநல். 176-187)*

*போர்க்கலையை அறிந்த மன்னன் போர்வீரர்களுடன் பாசறையில் பங்கு கொண்டு பணிபுரிந்த பண்பை எண்ணிப் பாராட்டி மகிழலாம்.*

*அக்காலத்தில் அரசர்கள் தமது அந்தப்புரத்தில் அந்நிய நாட்டவரையே காவலராக வைத்திருந்தனர். அவர்கள் உமையராக இருந்தனர். அரசின் குறிப்புகளை அறிந்தாலும் அதனை அடுத்தவர்க்கு வெளிப்படுத்தாமல் இருக்க இவ்வாறு ஊமையரை அமைத்தனர் அத்தகையோர் 'மிலேச்சர்' எனப் பெற்றனர். உடல் உறுப்புக்களின் இயக்கங்களாம் மெய்ப்பாட்டின் வழியே தங்கள் கருத்தை உரைத்தனர். வாயாற்பேசும் வல்லமையற்றவராக இருந்தனர். சட்டை உடுத்திய அயல்நாட்டார் அரசனின் மெய்க்காவலுக்காக நின்றனர். இதனை,*

**''உடம்பின் உரைக்கும் உரையா நாவின்**

**படம்புகும் மிலேச்சர் உழைய ராக''** *(முல்லை. 65: 1-2)*

*என்று முல்லைப்பாடல் சான்று பகர்கின்றன.*

## தொழில்கள்

*சங்ககாலச் சமூக அமைப்பினை அக்கால இலக்கியம் கொண்டு உணரமுடிகின்றது. பல பிரிவுகளைச் சார்ந்தவர்கள் வாழ்ந்தனர். அதாவது வணிகத்தின் பொருட்டு இங்கே வந்து கடலோரப் பகுதிகளில் குடியேறிய*

*யவனரும் இருந்தனர். இவர்கள் சிறுபான்மையினரே. சமணரும் பௌத்தரும் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் அங்கு வந்ததாக அறிஞர்கள் கூறுகின்றனர். பெரும்பான்மையான மக்கள் சிற்றூர்களில் அவரவர்க்குரிய தொழில்களைச் செய்துகொண்டு வாழ்ந்தனர். புகார், வஞ்சி, மதுரை, போன்ற பெரிய நகரங்களில் ஒரு சிலர் இருந்துள்ளனர். பெரிய நகரங்கள் பல்வேறு தொழில்கள் மேற்கொள்வதற்கு வழிவகுத்தன. அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்னும் நாற்பெரும் பிரிவினர் சமூகத்தின் மேல்தளத்தில் இருந்துள்ளனர். குறிஞ்சி நிலத்தவர் குறவர் என்றும், முல்லை நிலத்தவர் ஆயர்என்றும், மருத நிலத்தவர் உழவர் என்றும், நெய்தல் நிலத்தவர் பரதவர் என்றும் பெயர் பெற்றனர். பாலை நிலத்தில் எயினர் என்னும் வகுப்பினர் வாழ்ந்துள்ளனர். மேலும் தச்சர், கொல்லர், குயவர், வண்ணார், நெசவாளர், உமணர், பறையர், பாணர், துடியர், கடம்பர், வேட்டுவர், கணியர், பரத்தையர் போன்ற வகுப்பினர் வாழ்ந்துள்ளனர். மேலும் தமிழ்நாட்டில் விளங்கிய பல்வேறு தொழில்கள் பற்றிய இலக்கியச் சான்றுகளைக் கண்டு தமிழ்ச் சமுதாய அமைப்பினைக் காணமுடியும்.*

**தச்சுத்தொழில்**

*தமிழ்நாட்டுத் தச்சர்கள் மக்கட்கு வேண்டிய தட்டுமுட்டுச் சாமான்களையும், வண்டிகளையும் தேர்களையும் செய்து கொடுத்தனர். நால்வகைப் படைகளில் தேர்ப்படையும் ஒன்றாக இருந்ததனால் தேர் செய்வது அன்றையத் தச்சர்களின் தலைமையான கடமையாக இருந்தது. அதியமானின் வலிமையைக் கூறவந்த ஔவையார்,*

**“களம்புக லோம்புமின் றெவ்விர் போரெதிர்ந்**
**தம்முளு முளனொரு பொருநன் வைகல்**
**எண்டேர் செய்யுந் தச்சன்**
**திங்கள் வலித்த காலன் னோனே”** *(புறம். 87: 1-4)*

*என்று பாராட்டினர்.*

*பொருள்களை ஏற்றிச் செல்லத்தக்க சிறுகால்களையுடைய வண்டிகள் அக்காலத்திற் செய்யப்பட்டன. பெரிய வண்டிகள் மட்டுமின்றிச் சிறார்கள் ஓட்டி விளையாடும் நடைவண்டிகளும் அக்காலத்திற் செய்யப்பட்டன. தச்சன் செய்த சிறுமாவையம் முக்காற் சிறுதேர் என்று அது வழங்கப்பட்டது. தச்சச் சிறார்களும் இவ்வண்டியைச் செய்யும் திறன் பெற்றிருந்தனர்.*

**“தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த**
**ஊரா நற்றே ருருட்டிய புதல்வர்”** *(பெரும். 245: 4-5)*

*வீடுகட்குரிய அழகிய தூண்களையும், வேலைப்பாடு மிக்க நிலைகளையும் திண்ணிய கதவுகளையும் செய்தனர். நிலைகளின் மேலுள்ள உத்திரப் பலகைகளில் இருபுறமும் செங்கழுநீர்ப் பூக்களை ஏந்திய பிடிகளையும் இடையே திருமகள் உருவத்தையும் அழகுறச் செதுக்கியமைத்தனர்.*

**“பருவிரும்பு பிணித்துச் செல்வரக் குரீஇத்**
**துணைமாண் கதவம் பொருந்தி இணைமாண்டு**
**நாளொரு பெயரிய கோளமை விடுபரத்துவ**
**போதவிழ் குவளைப் புதுப்பிடி காலமைத்துத்**
**தாளொடு குயின்ற போதாமை புணர்ப்பிற்**
**கைவல் கம்மியன் முடுக்கலிற் புரைதீர்ந்து**
**ஐயவி யப்பிய நெய்யணி நெடுநிலை”** *(நெடுநல். 80-86)*

*அரசர்கள் பயன்படுத்துதற்குரிய அழகிய கட்டில்களைச் செய்து கொடுத்தனர். கட்டில்களின் கால்களில் பலவிதமான ஓவியங்கள் வரையப்பட்டிருந்தன. யானைக் கொம்புகளை இருபுறமும் ஒப்பச் சீவி இடையிடையே இலைவடிவைச் செதுக்கியமைத்தனர். அதில் முத்துக்குஞ்சரங்கள் தொங்கவிடப்பட்டன. உமணர்கள் வளர்த்த குரங்குக் குட்டிக்கு உளியால் குடைந்து செய்த மரத்தாலான மணிமாலையை அணிவித்திருந்தனர்.*

**"வருபுனல் வாயில் வஞ்சியும் வறிதே அதாஅன்று**
**நறவுவாய் உறைக்கும் நாகுமுதிர் நுணவத்து**
**அறைவாய்க் குறுந்துணி அயில் உளி பொருத**
**கைபுனை செப்பங் கடைத்த மார்பிற்**
**செய்யுங் கண்ணி செவிமுதல் திருத்தி**
**நோன்பகட் டுமணர் ஒழுகையொடு வந்த**
**மகாஅர் அன்ன மந்தி படவோர்"**

*(சிறுபாண். 51-56)*

**கொல்லுத்தொழில்**

*தமிழர் உலோகத் தொழிலில் மிகவும் மேம்பட்டிருந்தனர். இரும்புசெய் கொல்லரும், பொன்செய் கொல்லரும் தனித்தனியே பிரிக்கப்பட்டிருந்தனர். போர்கள் நிறைந்த அக்காலத்தில் வாளும் வேலும் பிற போர்க்கருவிகளும் செய்ய எண்ணற்ற கொல்லர்கள் தேவைப்பட்டிருந்தனர். கொல்லர்கள் தோல் துருத்தியைக் காலால் மிதித்துத் தீயுண்டாக்கினர். கொல்லர்கள் இரும்பைக் காய்ச்சிச் சம்மட்டியால் அடித்தனர்.*

**"கருங்கைக் கொல்லன் இரும்பு விசைத்து எறிந்த**
**கூடத் திண்ணிசை"** *(பெரும்பாண். 437-439)*

*மழைக்காலத்தில் இரவில் மின்மினிப் பூச்சிகளின் புற்றினைக் கரடியொன்று அடித்து உடைக்கின்றது. அப்போது மின்மினிப் பூச்சிகள் சிதறியோடுவது கொல்லன் உலைக்களத்தில் சம்மட்டியாலடிக்கும் பொழுது தீப்பொறி சிதறுவது போல் உள்ளதாக அகப்பாடலொன்று பேசுகின்றது.*

**"பொன்னெறி பிதிரிற் சுடர வாங்கிக்**
**குறும்பி கொண்டும் பெருங்கை ஏற்றை**
**இரும்புசெய் கொல்லெனத் தோன்றும்"**

*(அகம். 72: 4-6)*

**பொற்கொல்லர்**

*தமிழர்கள் பலவிதமான அணிகலன்களை அணிந்து இருந்தனர். கண்ணுக்கு அழகாகவும், பாதிப்புள்ளதாகவும் பலவிதமான அணிகலன்களைச் செய்தனர். கண்ணகியின் காற்சிலம்பின் வேலைப்பாடு ஒன்றே அக்காலக் கொல்லரின் கைத்திறனுக்கு ஏற்ற சான்றாய் அமையும். அவர்கள் பொன்னை உரைத்துத் தரம் அறியப் பயன்படுத்திய கட்டளைக்கல் பல இடங்களில் சுட்டப்படுகிறது. திருவள்ளுவரும் 'கருமமே கட்டளைக்கல்' என்றார். உழவர் சிறார் கண்பின் பசுங்காயை உடம்பில் அடித்து விளையாடவும் மகரந்த தூள் படிந்த கரியமேனி உடையவர் அதாவது,*

**"பொன்காண் கட்டளை கடுப்பக் கண்பின்**
**புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்**
**இரும்புவடித் தன்ன மடியா மென்றோற்"***(பெரும்பா. 220-222)*

*என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது.*

**மட்பாண்டத் தொழில்**

*பண்டை நாளில் பெரும்பான்மையான மாந்தர் மட்பாண்டங்களையே பயன்படுத்தினர். சமைத்தலுக்கு மட்டுமின்றி உடல்களைப் புதைப்பதற்கும் தாழிகள் தேவைப்பட்டன. வேட்கோவர்கள் 'கலஞ்செய்கோ' எனப்பட்டனர். மண்பாண்டம் செய்யப் பயன்பட்ட கருவியும் அறியப்பட்டன. பெரிய சூளைகள் செய்து பானைகளும் பிற கலன்களும் சுடப்பட்டன.*

**"இருள் திணிந் தன்ன குருஉத்திரன் பருஉப்புகை**
**அகலிரு விசும்பின் ஊன்றும் சூளை"** *(புறம். 228: 2-3)*

**"கவிலுந் தாழிக் குவிபுறத் திருந்த**
**செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா"**

*(புறம். 238: 1-2)*

**நெய்தற் தொழில்**

*நெசவுத் தொழிலில் பண்பட்ட பழம்பேரினங்களில் தமிழினம் தலையாயது. தமிழ்நாட்டு ஆடைகளுக்கு வெளிநாடுகளில் நல்ல மதிப்பிருக்கிறது. பருத்தி, பட்டு, உரோமம் முதலியவற்றால் ஆடைகள் நெய்யப்பட்டன. ஆடைகள் பாலாவி, மூங்கில், தோல், பாம்புரி, எண்ணெய்துரை ஆகியவைபோல் இருந்தன. புலப்படாத நுண்ணிய இழைகளால் நெய்யப்பட்ட ஆடைகட்கு வண்ண மூட்டப்பட்டது. பல பூ வேலைப்பாடுகளும் அந்த ஆடைகளில் வரையப்பட்டன. பின்னர் வண்ணம் கொடுத்தனர். ஆடைகளின் ஓரங்களில் குஞ்சங்கட்டும் கலைஞர் இருந்தனர். ஆடைகளை வெளுத்துக் கஞ்சி தோய்த்து மடித்தனர்.*

**"நோக்கு நுழைகல்லா நுண்மைய பூங்களித்து**
**அரவுரி யன்ன அறுவை"**

*(பொருநரா. 82-83)*

*தமிழர் அழகி பட்டாடையை நெய்தனர். பணம் படைத்தவர்கள் பட்டாடை உடுத்தி மகிழ்ந்தனர். பெரிய கரை போட்டு பட்டாடைகளைத் தரித்துக் கொண்டனர்.*

**"பருத்திப் பெண்டிர் பனுவல் அன்ன"**
*(புறம்.125: 1)*

**"ஆளில் பெண்டிர் தானிற் செய்த**
**நுணங்கு நுண் பனுவல்"**

*(நற். 358)*

**"அவிர்துகில் புரையும் அவ்வெள்ளருவி"**

*(குறிஞ்சி.)*

**"உடையும் ஒலியலும் செய்யை"**
*(பரி.19)*

**வண்ணார்**

*ஆடைகளை வெளுக்கும் வண்ணார்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. வண்ணாருக்குக் 'காழியர்' என்னும்பெ பயர் வழங்கிற்று.*

**“சிள்வீடு கறங்கும் சிறியிலை வேலத்**

**தூமுறு விளைநெற் றுதிரக் காழியர்”**

*(அகம். 89: 6-7)*

*வண்ணாரப் பெண் ‘புலைத்தி’ எனச் சுட்டப்படுகிறாள். இதனால் அன்று இவர்கள் புலையர்களோடு ஒத்தவர்களாகக் கருதப்பட்டமை தெளிவாகும்.*

**“பசைவிரல் புலைத்தி நெடிது பிசைந் தூட்டிய**

**பூந்துகில் இமைக்கும் பொலன்காழ் அல்குல்”**

*(அகம். 387: 6-8)*

*என்னும் குறிப்பால் ஆடையை ஒருவகைப் பசையிட்டுக் காயவைத்தனர். வண்ணார்கள் வறுமையாளராக இருந்தனர்.*

**“வறனில் புலைத்தி எல்லித் தோய்த்த**

**புகார்ப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு”**

*(நற். 90)*

*களர் நிலத்தி ஊற்றுக் கிணறுகளைத் தோண்டி அவர்கள் அதில் துணிகளை வெளுத்தனர்.*

**“களர்ப்படு கூவல் தோண்டி நாளும்**

**புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை”**

*(புறம். 311: 1-2)*

**உமணர்**

*உமணர் என்னும் சொல் உவர் மண்ணர் என்பதன் திரிந்து காணப்பட்டது. இவர்கள் உப்பினை வண்டிகளில் ஏற்றிக் கொண்டு ஊர் ஊராகச் சென்று வணிகம்புரிந்த இனத்தவர் ஆவார். இவர்களின் வாழ்வு பற்றிப் பெரும்பாணாற்றுப்படையும், சிறுபாணாற்றுப்படையும் விரிவாகக் கூறுகின்றன. வீட்டுச் சாமான்கள் அனைத்தையும் வண்டிகளில் ஏற்றிக் கொண்டு ஊர் ஊராக உப்பினை விலை கூறி விற்று வாழ்ந்தனர். உமணப் பெண் வண்டியை ஓட்டிச் சென்றாள். ஆடவர்கள் மாடுகளை*

ஓட்டிக்கொண்டு நடந்து செல்வர். மாடுகள் பயனற்றுப் போகும்போது நடுக்காட்டிலேயே அவற்றை விட்டுச் செல்வார்கள். செல்லும் வழியில் கல்லடுப்பில் உணவு சமைத்து உண்பார்கள். எப்போதும் சேம அர்ச்சினை ஆயத்தமாக வைத்திருப்பர். உமணப் பெண்கள் தலையில் உப்பினைச் சுமந்து செல்வர்.

**"நெல்லும் உப்பு நேரே ஊரீர்**
**கொள்ளீ ரோவெனச் சேந்தொறு நுவலும்"**

(அகம். 390: 8-9)

பாண்டிய நாட்டின் பெருமையைப் பற்றிக் கூறும்போது கொற்கை பாண்டிய நாட்டின் துறைமுகப்பட்டினம் என்றும் மதுரை பாண்டிய நாட்டின் தலைநகரம் ஆகும். கொற்கையின் செல்வம் உப்பாகும். உப்பு விற்பதற்காக வண்டியில் செல்லும்போது அதனைத் தொடர்ந்தே குரங்குகள் செல்லும். வாணிகத்தின் பொருட்டுத் தங்குமிடத்தில் வணிகரின் குழந்தைகளுடன் குரங்குகள் கிலுகிலுத்து விளையாடிக் கொண்டிருந்தன.

**"நோன் பகட்டு உமணர் ஒழுகையொடு வந்த**
**மகாஅர் அன்ன மந்தி மடவோர்**
**நகாஅர் அன்ன நளிநீர் முத்தம்**
**வாள்வாய் எருத்தின் வயிற்றகத் தடக்கித்**
**தோள்புறம் மறைக்கும் நல்கூர் நுசுப்பின்**
**உளவியல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற**
**கிளர்பூண் புதல்வரொடு கிலுசிலி யாடும்"**

(சிறுபாண். 56-61)

என்று இப்பாடல் விளக்கம் தருகின்றது.

**பாணர், பறையர், துடியர், கடம்பர்**

பாணர், பறையர், துடியர், கடம்பர் என்பவர்கள் ஒரு சேர புலையெரன்று வழங்கப்பட்டனர். "பாணன், பறையன், துடியன் கடம்பன்

*இந்நான் கல்லது குடியும் இல்லை" (புறம். 335) இவர்கள் தொன்மையான குடிகளாகக் கருதப்பட்டனர். பறையை முழக்கியவன் பறையன் என்றும், துடிகொட்டுபவன் துடியன் என்றும் அறியப்பட்டனர். கடம்பன் என்பதன் பொருள் விளங்கவில்லை. பாணர் என்பார் யாழ் மீட்டி இசைபாடும் இயல்பினராவர்.*

*இவர்கள் நாடோடிகளாய் மன்னர்களையும் வள்ளல்களையும் நாடிச் சென்றனர். இவர்கள் வறுமையில் வாடினர். வள்ளல்கள் 'பாண்பசிப் பகைஞர்' என்று பாராட்டப்பட்டனர். வள்ளல்கள் இறந்தபோது இவர்கள் பெரிதும் துன்பத்திற்கு ஆளாயினர்.*

*இடுகாட்டில் செய்யும் காரியங்களைப் புலையர்கள் செய்தனர். அதாவது இன்றுபோல் அன்றும் புலையர் பிணம் சுடும் கடமையை மேற்கொண்டிருந்தனர்.*

**"கள்ளி போகிய களரி மருங்கின்**
**வெள்ளி னிறுத்த பின்றைக் கள்ளோடு**
**புல்லகத் திட்ட சில்லவிழ் வல்சி**
**புலைய னேவப் புல்மேல் அமர்ந்துண்டு"**

*(புறம். 360: 16-19)*

*பிணத்தைச் சுடும் பழக்கம் அன்றிலிருந்து இருந்தது என்பதற்கு இப்பாடல் சான்றாகும்.*

**உழவர்**

*மருதநில மக்கள் ஏனையோரினும் நாகரிகத்தில் மேம்பட்டவர் ஆவார். உழவர், உழத்தியர், கடையர், கடைசியர் எனப்பட்டனர். கடையர் என்பார் கழனிகளில் வேலை செய்யும் தொழிலாளர் ஆவார். இவர்கள் நிலவுடைமையற்ற எளிய மக்கள் போல் காணப்பட்டனர். பெரும்பாணாற்றுப்படை (206-246) மதுரைக்காஞ்சி (246-270)*

*மலைபடுகடாம் (100-105) முதலிய பாடல்களில் மருதநில மக்கள் வாழ்க்கையைக் கூறியுள்ளனர்.*

**“அகலிரு விசும்பினா அல்போல**
**வாலிதின் விரிந்த புன்கொடி முசுண்டை**
**நீலத் தன்ன விதைப்புன மருங்கின்**
**மகுளி பாயாது மலிதுளி தழாலின்**
**அகளத் தன்ன நிறைசுவைப் புறவிற்”**

*(மலைபடு. 100-15)*

*சங்ககாலத்தில் உழவே தலைமையான தொழிலாக விளங்கியது. மன்னரின; வெற்றி உழவரின் கலப்பையையே நம்பியிருந்தது.*

**“பொருபடை தரூஉங் கொற்றமு முழுபடை**
**ஊன்றுசான் மருங்கி னீன்றதன் பயனே”**

*(புறம். 35: 25-26)*

*என்று வெள்ளைக்குடி நாகனார் புகழ்வார். திருவள்ளுவர் உழவுக்கு எனத் தனியதிகாரம் அமைத்தார். அதில் உழவர்களைப் பற்றிய அரிய செய்திகளைக் கூறியுள்ளார்.*

**“உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்**
**தொழுதுண் பின்செல் பவர்”**

*(குறள். 1033)*

*யாவரும் உண்ணும் வகை உழுதலைச் செய்து அதனால் தாமும் உண்டு வாழ்கின்றாரே தமக்குரியராய் வாழ்கின்றவர். மற்றவரெல்லாம் பிறரைத் தொழுது அதனால் தாம் உண்டு அதன்மூலம் அவரைப் பின் செல்கின்றவர் ஆவர் என்று கூறியுள்ளார்.*

**“உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்**
**விட்டேமென் பார்க்கும் நிலை”** *(குறள். 1036)*

*வேளாண்மைத் தொழிற் பண்பு உடையோர் அக்காலத்தில் ‘களமர்’ எனவும் ‘உழவர்’ எனவும் குறிக்கப் பெற்றனர். களமர் என்போர் உழுது*

*உண்பவராவர். உழவர் என்போர் உழுவித்துண்போராவர். வேளாண்தொழிலைக் கொண்டிருந்த களமர் எருதினைக் கொண்டு அத்தொழிலைச் செய்தமையும் நெல்வரிகளைச் சுமைக்கட்டுக்களாகக் கட்டிக் களத்தில் போராக அடுக்கி வைத்து நெல் அடித்து முறைமையையும் பரிபாடல் குறிப்பிட்டுள்ளது.*

**“எருது தொழில் செய்யா தோட**
**விடுங்கிடன் வேளார்க் கின்று”**

*(பரி. 20: 62)*

**“அகவயல் இளநெல் அரிகால் சூடு”**

*(பரி. 7:27)*

*என்னும் பாடல் வரிகள் விளக்குகின்றன.*

*தொண்டை நாட்டில் நெல் விளைதல் குறைவு. புன்செய் பயர்கள் மிகுதியாக விளைந்தன. உழவர்கள் பெரும்பாலும் புன்செய் பயிர் செய்தனர். அவர்களுடைய உணவு வரகரிசிச் சோற்றை அவரைப் பருப்புடன் கலந்து உழவர்கள் உண்டு வந்தனர். இதனையே விருந்தினர்க்கும் கொடுத்து மகிழ்ந்தனர்.*

**“நெடுங்குரல் பூளைப் பூவின் அன்ன**
**குறுந்தாள் வரகின் குறளவிழ்ச் சொன்றி**
**புகார் இணர் வேங்கை வீகண் டன்ன**
**அவரை வான்புழுக் கட்டிப் பயில்வுற்று**
**இன்சுவை முரல் பெறுகுவீர்”**

*(பெரும்பா. 192-1960*

*ஏழை உழவர்களின் இயற்கையான உணவு இதுதான் என்பதை இவ்வரிகள் விளக்குகின்றன.*

*உழவுத்தொழிலின் மேன்மை உணர்ந்த புலவர்கள் அதிகம் இருந்தனர். அவர்களைப் புலவர் உழுதுண்மார் என்று கூறிக்கொண்டனர். உழவர்கள் பயன்படுத்திய கலப்பை நாஞ்சில் எனப்பட்டது.*

**“பிடிவாய் அன்ன மடிவாய் நாஞ்சி”**

*(பெரும்பா. 199)*

*அதன் முகம் உடும்பின் முகம்போல் இருந்ததாகக் குறிப்பிடுகிறது.*

**“உடுப்புமுக முழுக்கொழு மூழ்க ஊன்றி”**

*உழுததாகக் கூறுகின்றது. நிலத்தை உழுதபின்னும் விதைத்தபின்னும் அதனை மட்டம் செய்தலைப் பல்லியாடுதல் என்று குறித்தவர். நாற்றங்காலில் விதையை விதைத்துப் பின் பறித்து நட்டனர் என்பதனை,*

**“முடிநா றழுத்திய நெடுநீர்ச் செறுவின்”**

*(பெரும்பா. 212)*

*களையெடுப்பதற்கு ஒருவகைக் கருவியைப் பயன்படுத்தினர். அது மரத்தாற் செய்யப்பட்டிருந்தது.*

**“கோடுடைக் கையர் துளரெறி வினைஞர்”**

*(அகம் 184: 13-14)*

*மன்னர்கள் நீர்ப்பாசனத்திற்காக அணைகளைக் கட்டினர். கரிகாலன் கல்லணையைக் கட்டினான். இங்ஙனமே சேரமன்னனும் அணை கட்டினான்.*

**“பொய்கை வாயில் புனல் பொரு புதவின்”** *(பதிற். 27:9)*

*காவிரி, பெண்ணை முதலிய ஆறுகள் நீர்ப்பாசனத்திற்கு உதவின. சிலபோது வாளிகளாலும் நீர் இறைக்கப்பட்டது.*

**“நீர்த் தெவ்வும் நீரைத் தொழுவர்**
**பாடு சிலம்பு மிசையேற்றத்**
**தோடு வழங்கும் அகலாம்பியிற்**
**கயனகைய வயல் நிறைக்கும்”**

*(மதுரைக். 89-92)*

*வெள்ளத்தினைத் தடுக்க மணல் மூட்டைகளைப் பயன்படுத்தியுள்ளனர்.*

**“தரிகா லவித்துப் பலபூ விழவிற்**
**றேம்பாய் மருத முதல்படக் கொன்று**

**வெண்டலைச் செம்புனல் பரந்துவாய் மிகுக்கும்**

**பலசூழ் பழப்பர் பரிய வெள்ளத்துச்**

**சிறைகொள் பூசலிற் புகன்ற வாயம்''**

*(பதிற்று. 30: 15-19)*

*நீர்நிலைகளை இரவும் பகலும் காத்து நீரை ஒழுங்குபடுத்தும் காவலர்கள் இருந்துள்ளனர்.*

**''துய்யவிழ் பனிமலர் உதிர வீசித்**

**தொழில்மழை பொழிந்த பானாட் கங்குல்**

**எறிதிரைத் திவலை தூஉம் சிறுகோட்டுப்**

**பெருங்குளம் காவலன் போல**

**அருங்கடி அன்னையும் துயில்மறந் தனளே''**

*(அகம். 252: 10-15)*

*அறுவடை செய்வதற்கு நெல்லரி தொழுவர் கூரிய வாளைப் பயன்படுத்தினர்.*

**''கல்லென் புள்ளின் கானலந் தொண்டி**

**நெல்லரி தொழுவர் கூர்வாள்''**

*(நற். 195: 5-6)*

*காலத்தில் நெல்லையடித்து மணிகளை எடுத்தபின் வைக்கோலை மாடுகளை வரிசையாகப் பூட்டி வைக்கோலை ஒரு இடத்தில் பரப்பி அதன்மேல் மாடுகளைச் சுற்றிவர விடுவர். பின்னர் அதனை உழக்கி எஞ்சிய நெல்லை எடுத்தனர்.*

**''பருஉப்பக டுதிர்த்த மென்செந் நெல்லின்''**

*(பதிற்று. 71:4)*

*களையெடுத்தலும், நாற்று நடுதலும் பெண்களாலேயே செய்யப்பட்டன. விளைநிலங்களைக் காவல் செய்யும் பணியையும் பெண்கள் செய்தனர். தினைப்புனங்களில் பரண்கட்டி, தட்டையென்னும் கருவியால் ஒலியுண்டாக்கிக் கிளியை விரட்டினர்.*

**“கலிகெழு மரமிசைச் சேணோன் இழைத்த**
**புலியஞ் சிதணம் ஏறி அவண**
**சாரற் சூரல் தகைபெற வலந்த**
**தழலுந் தட்டையுங் குளிரும் பிறவம்**
**கிளிகடி மரபின ஊழூழ் வாங்கி”**

*(குறிஞ்சிப். 40-44)*

*உழவர்களை ஏரின் வாழ்நர், களமர் எனவும் அழைத்தனர். உழவர்கள் என்பவர் உழுதுண்பவர். நிலக்கிழார்கள் உழுதுவித்து உண்பாராவர். இவர்களே வேளிர் என அழைக்கப்பட்டனர். அம்பணம் என்னும் கருவி நெல்லை அளக்கப் பயன்பட்டது. நாழி என்னும் அளவை வழங்கிற்று.*

**“உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே**
**பிறவு மெல்லா மோரொக் கும்மே”** *(புறம்.189: 5-6)*

*தொல்காப்பியத்தில் பதக்கு என்னும் சொல் ஆளப்படுகிறது. நில அளவையில் மா என்பதும் வேலி என்பதும் வழங்கின.*

**“காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே**
**மாநிறை வில்லதும் பன்னாட் காகும்”** *(புறம்.184: 1-2)*

*பதற்கு என்பதனை உழவர்கள் பயன்படுத்தினர் என்பதற்கு இப்பாடல் சான்றாகும்.*

**அந்தணர்**

*கடைச்சங்க காலத்தில் பன்னூறு ஆண்டுகளுக்கு முன்னரே தமிழ்நாட்டில் அந்தணர் பலர் வாழ்ந்தனர். அவர்கள் வேதங்கற்றனர். வேள்விகள் செய்தனர். வடமொழிக் கொள்கையில் ஊடாட்டம் தமிழர் வாழ்வியலில் கலந்தது. முருகனின் திருமுகங்களில் ஒருமுகம் மந்திரத்தை உடைய வேதத்தில் விளம்பும் முறை தவறா அந்தணர் செய்யும் வேள்வியை நினைந்து கொண்டிருக்கும் என்பதை,*

**“ஒருமுகம்**

**மந்தி விதியின் மரபுளி வழாஅ**

**அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே”**

*(திருமுருகா. 94-96)*

*இதனால் தமிழ்நாட்டில் அந்தணர்கள் வேத முறைப்படி வேள்விகளைச் செய்து வந்த பண்பாட்டு மரபைக் காணமுடிகிறது.*

*அந்தணர்கள் அதிகாலைப் பொழுதில் வேதம் ஓதிக் கொண்டிருந்தனர் என்பதை,*

**“ஓதன் அந்தணர் வேதம் பாட”**

*(மதுரைக்காஞ்சி 656)*

*சங்ககாலத்தில் அந்தணர் அறிவிற் சிறந்தோராகக் கருதப்பெற்றனர். வடமொழியையும் பல புலவர் அறிந்திருந்தனர். தாமரை மலரிலே பிறந்த நான்முகனும் அவனுடையதந்தையும் நீதான் என்று கூறியது அந்தணர்களின் அரிய வேதம்.*

**“தாமரைப் பூவினுள் பிறந்தோனும் தாதையும்**

**நீயென மொழியுமால் அந்தணர் அருமறை”**

*(பரிபாடல் 3:13)*

*அந்தணர்கள் என்போர் வேதங்களைப் பயின்று வைதிக வாழ்வினை மேற்கொண்ட மாண்பினராவர். இவர்கள் விண்ணின் தேவர்கள் போல மண்ணின் தேவர்களாவர். மறைகளை ஓதிய அந்தணர்களும், வேள்வியாத்த அந்தணர்களும் வாழ்ந்தனர். எவ்வுயிரும் இன்புற்று வாழ்தற்கென நற்செயல்களில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டனர்.*

**“கேள்வி அந்தணர் கடவும்**

**வேள்வி ஆவியின் உயிர்க்கும் என்நெஞ்சே”**

*(கலித்தொகை 36)*

*அந்தணர்கள் அக்காலத்தே அறுசுவை உணவை உண்டனர். புலாலைப் புசிக்கவில்லை. காய்கறி உணவையே களிப்புடன் உண்டனர்.*

அவ்அந்தணர்கள் தமிழ்க் குடியில் தோன்றியவர்களாதல் வேண்டும். அத்தகைய அந்தணர்கள் வாழ்விடத்தில் அருந்ததியைப் போன்ற கற்புடைய நெற்பெண்டிரால் சமைக்கப்பெற்ற பாற்சோறும் பருப்புச் சோறும் கிடைத்தன. இராசன்னம் என்று பெயர் பெற்ற உயர்ந்த நெற்சோறு கிடைத்தது. மாதுளம்பிஞ்சைப் பிளந்து மிளகுப்பொடியும் கறிவேப்பிலையும் கலந்து பசும் வெண்ணெயில் வேகவைத்து எடுத்த பொரியலை உண்டனர். நல்ல வரமாங்காய் கிடைத்தது. மேலும் தயிர்ச்சோறு, மாங்காய்ச்சோறு, புளிச்சோறு போன்ற பல்வகை உணவு வகைகள் அவர்களால் சமைக்கப்பெற்றன.

**“மறை காப்பாளர் உறைபதிச் சேப்பின்**
**பெருநல் வானத்து வடவயின் விளங்கும்**
**சிறுமீன் புரையும் கற்பின் நறுநுதல்**
**வளைக்கை மகடூஉ வயினறுந்து அட்ட**
**சுடர்க்கடைப் பறவைப் பெயர்ப்படு வத்தம்**
**சேதா நறுமோர் வெண்ணெயின் மாதுளத்து**
**உருப்புறு பசுங்காய்ப் போழொடு கறிகலந்து**
**கஞ்சக நறுமுறி அளைஇப் பைந்துணர்**
**நெடுமரக் கொக்கின் நறுவடி விதிர்த்த**
**தகைமாண் காடியின் வகைபடப் பெறுகுவீர்”**

(பெரும்பா. 301-310)

இவ்வடிகளால் அந்தணர் உணவைக் காணலாம். அக்கால அந்தணர் அனைவருடனும் இனிது கூடிப் பழகினர். தம் இல்லறத்திற்கு வருவோரை இன்முகத்துடன் விருந்து படைத்த பண்பினராக விளங்கினர்.

**கண்மாறு ஆடவர்**

பாண்டிய நாடு பலவகைச் செல்வங்களைக் கொழிக்கும் நாடாகத் திகழ்ந்தது. எல்லாச் செல்வங்களும் நிறைந்த எழில் நகரமாக மதுரை

*திகழ்ந்தது. எனினும் வறுமை காரணமாக வாடியோர் பலர் இருந்தனர். அவர்கள் திருடிப் பிழைத்தனர். அவர்களைப் பிடிக்கக் காவலர்களும் வாழ்ந்தனர். திருடர்கள் களவுத் தொழிலை ஒரு கலையாகக் கற்றிருந்தனர் காவலர்களும் அக்கள்வர்களின் சூழ்ச்சிகளைக் கூறும் களவு நூல்களைக் கற்றுத் தேர்ந்திருந்தனர். கள்வர்கள் இருளில் தம்முடைய உருவத்தைக் காட்டாமல் மறைத்தனர்.*

*யானைத் தோலைப் போன்ற கருஞ்சட்டை அணிந்திருந்தனர். கல்லானாலும், மரமானாலும் அவற்றைத் துண்டு செய்யும் கூர்மையான வாளைப் பெற்றிருந்தனர். காலிலே தோற்செருப்பை அணிந்தனர். மிகச்சிறிய கைப்பிடியுடன் கூடிய கத்தியைத் தொடையில் மறைத்துப் பாதுகாத்தனர். பூ வேலைப்பாடுகள் நிறைந்த நீலநிறக் கச்சையை இடையில் அணிந்திருந்தனர். மெல்லிய நூலை ஏணியாகப் பயன்படுத்தினர். அதனைப் பல சுற்றுகளாக இடையில் சுற்றியிருந்தனர். நிலத்தை அகழ்ந்து கவ்விப் பிடித்துக் கொள்ளும் தன்மை வாய்ந்த வளைவு உளிகளை அந்த நூலேணியுடன் இணைத்து இருந்தனர். கள்வர்களைப் பற்றிய செய்திகளை மதுரைக்காஞ்சி*

**“இரும்பிடி மேந்தோல் அன்ன இருள்சேர்ப்பு**
**கல்லும் மரனும் துணிக்கும் கூர்மைத்**
**தொடலை வாளர் தொடுதோல் அடியர்**
**குறங்கிடைப் பதித்த கூர்நுனைக் குறும்பிடிச்**
**சிறந்த கருமை நுண்வினை துணங்கறல்**
**நிறம்கவர்பு புனைந்த நீலக் கச்சினார்**
**மென்னூல் ஏணிப் பன்மாண் கற்றினர்**
**நிலன் அகழ் உளியர் கலன்நசைஇக் கொட்டும்**
**கண்மாறு ஆடவர்”**

*(மதுரைக்காஞ்சி 634-642)*

*என்னும் அடிகள் கள்வர்தம் தோற்றத்தைக் காட்டுகின்றன.*

*ஊரைக் காக்கும் காவலர்தம் இயல்பும் கூறப்பெறுகிறது. கள்வர்கள் பதுங்கியிருக்கும் இடங்களிக் கண்டுபிடித்தற் பொருட்டுக் காவலர்கள் இரவு முழுதும் விழித்துக் கொண்டே திரிந்தனர். களிற்றைப் பிடிக்க மறைந்து திரியும் புலியைப் போல அவர்கள் தூங்காமல் பதுங்கியிருந்தனர். அவர்கள் அச்சமற்று அலைந்தனர். களவுநூல் கற்றோரால் புகழப்பெற்ற அறிவும் திறனும் அமையப் பெற்றிருந்தனர். ஊர் காக்கும் நூலை முறையுடன் கற்று அதனைப் பின்பற்றும் தேர்ந்த அறிவுடையவராக விளங்கினர். இதனை,*

**“ஒடுக்கம் ஒற்றி**
**வயக்களிறு பார்க்கும் வயப்புலி போலத்**
**துஞ்சாக் கண்ணர் அஞ்சாக் கொள்கையர்**
**அறிந்தோர் புகழ்ந்த ஆண்மையர் செறிந்த**
**நூல்வழிப் பிழையா நுணங்கு நுண்தேர்ச்சி**
**ஊர்காப்பாளர்”** *(மதுரைக்காஞ்சி 642-647)*

*என்னும் அடிகள் எடுத்தியம்புகின்றன.*

**தமிழர் ஆடை அணிகள்**

*ஒரு நாட்டின் நாகரிகத்தையும் பண்பாட்டையும் அந்நாட்டு மக்களின் வாழ்வியலை அறிவதன் மூலம் மதிப்பிடலாம். இலக்கியங்கள் மக்களின் பண்பாட்டு நாகரிகப் போக்குகளின் பல்வேறு படிநிலைகளை எடுத்துரைக்க வல்லன. அனுபவம், அறிவு, நற்குணம் என்ற தன்மைகளே நாகரிகம் என்று சொல்லப்படும். உறைவிடம், பயன்படுத்தப்படும் மனைப்பொருட்கள், உணவு முறைகள், வாகனங்கள் ஆடை அணிகலன்கள், ஆகியன நாகரிகக் கூறுகளாகப் பேசப்படுகின்றன. பண்டைத் தமிழர் ஆடை அணிகள் அந்நாளைய நாகரிகத்தையும் அறிவில் தொழில்நுட்பத்தையும் பாரம்பரியச் சிறப்பையும் புலப்படுத்துவதாக உள்ளன.*

**ஆடை வகைகள்**

*பழந்தமிழர் சிறந்த ஆடையணிகளை அணிந்த சீரும் சிறப்பும் பெற்று விளங்கினர். அவ்வாடைகள் பெரும்பாலும் பருத்தி நூலால் ஆனவை. அவை இழை தெரியாதவாறு மிகவும் நெருக்கமாகவும், மென்மையாகவும் நெய்யப்பட்டன. அவற்றிற்கு உவமையாகப் பாலாவி, புகை, பாம்பின் சட்டை, மூங்கிலின் மெல்லிய தோல் முதலியவற்றைப் புலவர்கள் எடுத்தாண்டுள்ளனர். தமிழ்நாட்டில் ஒரு காலத்தில் நெசவுத்தொழில் உச்சநிலையில் இருந்திருக்க வேண்டும் என்பது புலனாகிறது.*

*ஆடை நெய்தற்கு வேண்டிய நூலைப்பெரும்பாலும் கைம்மை நோன்பை மேற்கொண்டிருந்த பெண்கள் நூற்றனர். ஆகவே அவர்கள் 'பருத்திப் பெண்டிர்' என்று அழைக்கப்பட்டனர். ஆடைகள் தறியினின்றும் அறுக்கப்பட்டதால் 'அறுவை' என்னும் பெயர் பெற்றன. உடலைச் சுற்றியிருப்பது என்ற பொருள் கொண்ட புடவை என்ற பெயரும் ஆடைக்கு உண்டு. இச்சொல்லானது ஆடவர், மகளிர் ஆகிய இருதிறத்தாரது ஆடையையும் குறிக்கும். இதனைச் சமணச் சமயத்தைத் தழுவியிருந்த மருள்நீக்கியார் சூலை நோயால் பீடிக்கப்பட்டிருந்தபோது தாம் முன்பு அணிந்திருந்த பாயுடைகளைக் களைத்துவிட்டு வெண்புடவை மெய்சூழ்ந்த தன் தமக்கையாரைக் காண வந்தார் என்று பெரியபுராணம் குறிப்பிடும்.*

*கலிங்கம் என்ற சொல்லும் ஆடையைக் குறிப்பதாகும். கடையெழு வள்ளல்களில் ஒருவனான பேகன் கார்காலத்தில் மயில் ஆடுதல் கண்டு அது குளிரால் வருந்துகிறது எனக் கருதித் தனது போர்வையை எடுத்து அதற்குப் போர்த்தினான் என்பதை,*

**"கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய பேகன்"**

*என்ற அடியிலிருந்து அறியலாம். கொட்டைகரை போடப்பட்ட உயர்ந்த பட்டாடைகள், பரிசில் பெறச் சென்ற பாணர்களுக்கும், கூத்தர்களுக்கும்,*

*அரசால் வழங்கப்பட்டன. ஆற்றுப்படை நூல்கள் பட்டாடை பரிசளித்த செய்திகளை எடுத்துரைக்கும். பூவேலையுடன் கூடிய நிறமூட்டப்பட்ட ஆடைகளும் அக்காலத்தில் நெய்யப்பட்டன என்பதை,*

**"நீலக் கச்சை பூவாராடை"**

*என்னும் அடி விளக்குகிறது.*

**சிற்றாடை**

*சிறுமியர் அணியும் ஆடைகள் சிற்றாடை எனப்படும். மழையில் நனைந்து வந்த ஔவையாருக்குப் பாரி மகளிர் நீலச்சிற்றாடை கொடுத்து உதவினர். காலத்தால் செய்த அவ்வுதவிக்கு ஔவையார்,*

**"பாரிபறித்த கலனும் பழையனூர்க்**
**கரியன்றிந்த தளைக்கோலும் சேரமான்**
**வாராயோ வென்றழைத்த வார்த்தையும் இன்மூன்றும்**
**நீலச் சிற்றாடைக்கு நேர்"**

*என்ற பாட்டில் கைம்மாறு செய்தார்.*

**வண்ணப் புடவைகள்**

*ரோசாப்பூ, மல்லிகைப்பூ, செவ்வந்திப்பூ போன்ற மலர்களை ஒத்த அழகும், மென்மையான வண்ணமும் உடைய சேலைகளும் பூப்போட்ட சேலைகளும், நீலம், பச்சை, வெள்ளை போன்ற பல வண்ணச் சேலைகளும், பொரி பொரித்தாற் போன்றும் மான்புள்ளி போன்றும், புள்ளி போட்ட சேலைகளும், பல ஓவியங்கள் வரைந்த சேலைகளும், செடி, கொடி, மரம் வரைந்த சேலைகளும், சிமிக்கி, சிகுனா, வைத்த புடவைகளும் நாட்டுப்புறப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.*

**கூறைப்புடவை**

*திருமணத்தின்போது மட்டும் கட்டிக்கொள்ளக் கூடிய புடவை கூறைச்சேலை எனப்படும். இதனை கூறப்பட்டு என்பர். சிறுசிறு கட்டம்*

போடப்பட்ட எளிய புடவை கூறைப்புடவை எனப்படும். கூறை, நல்லாடை, பட்டாடை என்று திவாகரம் குறிப்பிடும். மூன்று தரங்களில் கூறை சாதாரண ஆடையாய் இருத்தல் வேண்டும் என்று எஸ். வையாபுரிப் பிள்ளை கூறியுள்ளார்.

**இரவிக்கை**

பெண்கள் இரவிக்கை அணியும் வழக்கம் பிற்காலத்தில் தோன்றியது. இன்றும் கிராமங்களில் இரவிக்கை அணியும் வழக்கத்தை சில வயதான பெண்கள் கடைப்பிடிப்பதில்லை.

**தழையுடை**

தழையுடை என்னும் விசேட உடையும் பழந்தமிழ் நாட்டில் இருந்தது. அவ்வுடை இளந்தளிர்களினாலும், மலர்களினாலும் ஆனது. அதைப் பெண்கள் அழகுக்காக ஆடையின் மீது அணிந்து கொள்வர். தழையுடையானது தலைமகனால் தலை மகளுக்குத் தோழியின் மூலம் காணிக்கையாகக் கொடுக்கப்பட்டது என்பதற்குச் சங்க இலக்கியம் சான்றாகும்.

**பொன்னாடை**

பண்டைக்காலத்தில் சரிகை கலந்து நெய்யப்பட்ட மஞ்சள் நிறப் பட்டாடை, பீதாம்பரம் என்றும் பொன்னாடை என்றும் அழைக்கப்பட்டன. ஆட்டு உரோமத்தால் நேர்த்தியான கம்பளங்கள் நெய்யப்பட்டன என்றறியலாம்.

**கனுடை**

முழந்தாள் வரை அணிந்து கொள்ளும் 'வட்டுடை' என்னும் உடையும் அக்காலத்தில் இருந்தது. காமன் ஒரு காலத்தில் ஆடிய பேடியாடலை ஆடிய ஒருவன் வட்டுடை தரித்திருந்ததாக

*மணிமேகலையில் மலர் வனம்புக்கு காதையில் கூறப்பட்டுள்ளது. உடை தைக்கும் தையற்காரர் 'துன்னகாரர்' என்னும் பெயருடன் வழங்கப்பட்டிருக்கின்றனர். நூற்றுவர் பின்தொடர வந்த பாண்டி நாட்டுப் பொற்கொல்லர் சட்டை அணிந்திருந்ததாகத் தெரிகிறது. யவனர்கள் சட்டை அணிந்திருந்து நாட்டைக் காவல் காத்தனர் என்ற செய்தி சங்க இலக்கியம் வாயிலாகத் தெரியவருகிறது.*

*சங்ககாலத் தமிழர்கள் அவரவரின் தகுதிக்கு ஏற்ப உடையணிந்தனர். ஆடவர் இடையில் ஓர் ஆடையும் மேலே ஒரு துண்டும் அணிந்தனர். இதனை,*

**"உண்பது நாழி உடுப்பவை இரண்டே"**

*(புறம்.189)*

*என்னும்நக்கீரர் வாக்கால் இதனை உணரலாம். மேலாடையும் கச்சும் அணிவது பற்றி மதுரைக்காஞ்சியும் கூறுகின்றது.*

**"திண்டேர்ப் பிரம்பிற் புரளும் தானை**
**கச்சம் தின்ற கழல்தயங்கு திருந்தடி"**

*(மதுரை. 435-436)*

*விளிம்புகளில் குஞ்சம் போல் கட்டிய பட்டாடைகள் விளங்கின.*

**"கொட்டைக் கறைய பட்டுடை"**

*(பொருநர்.155)*

*பாண்டியன் அரண்மனையில் பணிபுரிந்த அயல்நாட்டவரான யவனரும் சட்டையணிந்திருந்தனர்.*

**"உடம்பின் உரைக்கும் உரையா நாவின்**
**படம்புகு மிலேச்சர்"**

*(முல்லை. 66-67)*

*இடையர் போன்றோர் மிக எளிய ஆடையையே அணிந்தனர்.*

**"ஒன்றமர் உடுக்கைக் கூழார் இடையன்"**

*(பெரும்பாண்.175)*

*அக்காலத்து ஆடைகளின் நேர்த்தியும் அழகும் பற்றிய பல குறிப்புகள் கிடைக்கின்றன. கண்ணுக்குப் புலப்படாத மெல்லிய இவைகளால் ஆடை நெய்யப்பட்டது. அழகிய பூத்தொழில் செய்யப்பட்டிருந்தது. பாம்பின் சட்டையைப் போல அவ்வளவு மென்மையாக ஆடை விளங்கிற்று.*

**"நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து**
**அரவுரி யன்ன அறுவை நல்கி"**

*(பொருந. 82-83)*

*பாம்பின் சட்டை போன்றும் மூங்கிலின் உட்புறத்து வெண்போல் போலவும் அமைந்த பூங்கலிங்கம் பற்றி புறநானூறு கூறுகிறது.*

**"பாம்புரி யன்ன வடிவின் காம்பின்**
**கழைபடு சொலியின் இழையணி வாரா**
**ஒண்பூங் கலிங்கம்"**

*(புறம். 383)*

*புகையைப் போலவும் பாலாவியைப் போலவும் ஆடைகள் விளங்கிற்று.*

**"புகைவிரிந் தன்ன பொங்கு துகிர் உடிக**
**ஆவி யன்ன அவிர்நூற் கலிங்கம்"**

*(பெரும்பாண். 469)*

**அணிகலன்கள் வழிபுலனாகும் தமிழர்தம் நுண்ணறிவு**

*உலக மக்கள் அனைவர் வாழ்விலும் அணிகலன்கள் தனியிடத்தைப் பெற்றுள்ளன. உணவு, உடையைப் போலவே ஒரு கட்டாயமாகத் தொன்றுதொட்டுப் புழங்கி வருகிறது. அணிகலன்கள் அணிவதற்குப் பல காரணங்கள் உள்ளன. அழகுக்காக அணியப்படுவது உண்டு. செல்வந்தர்கள் தம் செல்வப் பெருக்கின் வெளிக்காட்டல்களாக அணிகலன்களைப் பயன்படுத்துவதும் உண்டு. பண்டைய அரசர்கள் மற்றும் செல்வந்தர்களிடம் குவிந்திருந்த அணிகலன்களே இதற்குச் சான்றாகும். தமிழர்கள்அணிகலன்களை அதிகமாக விரும்பி அணிந்தனர்.*

அரச பெருமாட்டிகளும் செல்வச் சீமாட்டிகளும் வணிகத் திருவாட்டிகளும், ஒரு ஆள் சுமக்கத்தக்க மணிகள் இழைத்த பொன் அணிகளைத் தாங்கி வந்தனர். இவ்வுண்மைகள் நம்முடைய இலக்கியங்களிலும் செப்பேடுகளிலும், கல்வெட்டுகளிலும் இன்றும் காணக்கிடைக்கின்றன. இவ் அணிகலன்கள் மேலே கூறப்பட்ட காரணங்களுக்காக மட்டும் அணியப்படவில்லை. ஒவ்வொரு அணிகளையும் அணிவதற்கு மருத்துவ ரீதியாகப் பல காரணங்கள் இருந்தன. அணிந்தவர்கள் அத்தனை பேரும் இக்காரணங்களை அறிந்து அணியவில்லை. எந்த ஒரு செயலும் நாளடைவில் தொடங்கப்பட்டதற்காக காரணத்தை மறந்து நாகரிகம் என்ற போர்வைக்குள் புதைந்துவிடுவது போல அணிகளின் நிலையும் ஆகிவிட்டது. பல அணிகலன்கள் நம்பிக்கையின் அடிப்படையில் அணியப்பட்டன. எப்படியாயினும், தமிழர்தம் அணிகலன்கள் அவர்களின் அறிவியல் தொழில்நுட்ப அறிவினையும் அவர்களைப் பற்றிய பல அரிய உண்மைகளையும் சுமந்து நிற்கின்றன.

**தமிழர்தம் அணிகலன்களின் தொன்மை**

அணிகலன்கள் பண்பாட்டுச் சின்னங்களாகவும் விளங்குகின்றன. தமிழர்தம் நாகரிகமும் பண்பாடும் மிகவும் பழமையானவை. தமிழர்கள் வேட்டுவச் சமுதாய நிலையிலேயே அணிகலன்கள் பல அணிந்திருந்தனர் எனக் கருத இடமுள்ளது. இந்தியாவின் தென்பகுதியில் கிழக்குக் கடலுக்கும் மேற்குக் கடலுக்கும் இடைப்பட்ட பகுதியில் வளர்ந்து சிறந்தது பண்டைத் தமிழர் நாகரிகமாகும். இதனை உருவாக்கிப் போற்றி வளர்த்த மக்கள் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே எண்ணத்தில் எழுச்சியும், இதயத்தில் மலர்ச்சியும் வாழ்க்கையில் வளமும் பெற்று வாழ்வாங்கு வாழ்ந்தவராவர். பழமைவாய்ந்த சிந்துவெளி நாகரிகத்தோடு தமிழர் நாகரிகத்திற்கும் தொடர்புண்டு என்பதே அறிஞர்தம் முடிவு. தமிழர்களின் அணிகலக்கலை அரப்பாவின் திராவிட நாகரிகத்தின் மூலம்

*5000 ஆண்டு பழமையுடையதாக மதிக்கப்படுகிறது. ஆதிச்சநல்லூர் தமிழர் நாகரிகத்தின் மூலம் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய பழமை வாய்ந்ததாய் மதிக்கப்படுகிறது. இத்தகைய பழமையான காலத்திலேயே பலவகை அணிகலன்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன.*

*கழுத்து, தலை, தோள்பட்டை, கைவிரல், ஆகியவற்றில் ஆண், பெண் இருபாலரும் பட்டை, அட்டிகை, வங்கி, மோதிரம், முதலியவற்றை அணிந்திருந்தனர். வங்கி, மோதிரம், காற்சிலம்பு, காப்பு, கடயம் முதலியவற்றையும் அணிந்தனர். அணிகலன்கள் தங்கம், வெள்ளி, செம்பு, சலவைக்கல், பளபளப்பான ஒருவகைக் கருங்கல், சங்கு, எலும்பு, பளிங்கு முதலியவற்றால் ஆனவை.*

*இப்போது பெண்கள் அதிகமாக அணிகளை அணிகின்றனர். ஆடவரும், குழந்தைகளும், ஒருசில அணிகளையே அணிகின்றனர். பண்டைத் தமிழகத்தில் ஆடவர், பெண்டிர், குழந்தைகள் அனைவரும் அணிகள் அணிந்தனர். கோவலனும், கண்ணகியும் அணிகலன்கள் அணிந்திருப்பதான புகைப்படம் ஒன்றை பூம்புகார் கலைக்கூடம் வெளியிட்டுள்ளது. அணிகலன்கள் பற்றிய செய்திகளைத்தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, காப்பியங்கள் மற்றும் பிற இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகிறது. கல்வெட்டுகள், செப்பேடுகள், தொல்லியல் அகழாய்வுகள் போன்றனவும் இதனை உறுதி செய்கின்றன. தமிழர்களில் நூற்றுக்கு அறுபது பேர் ஒரு காலத்தில் நாற்பதுக்கு மேற்பட்ட பலவகையான அணிகலன்களைத் தலை, காது, மூக்கு, கழுத்து, புயம், முன்கை, கைவிரல்கள், இடுப்பு, தொடை, பாதம், கால்விரல் போன்ற உறுப்புகள் ஒவ்வொன்றிலும் ஒன்றோ இரண்டோ அதற்கு மேற்பட்ட பலவகையான அணிகலன்களை அணிந்து வந்துள்ளனர். அணிகலன்கள் பற்றி விரிவான செய்திகளைச் சிலப்பதிகாரம் தருகிறது.*

**“நலந்தரு மெல்விரல் நல்லணி செறீஇப்**

**பரியக நூபுரம் பாடகம் சதங்கை**

**அரியகம் காலுக் கமைவுற அணிந்து**

**. . . . . . . . .**

**தொய்யகம் புல்லகம் தொடர்ந்த தலைக்கு அணி**

**மையீர் ஓதிக்கு மாண்புற அணிந்து"**

*(சிலம்பு. 6: 83-108)*

*பல வண்ணக் கற்களாலும், மணிவகைகளாலும் ஆன அணிகலன்கள் இங்குக் கண்டெடுக்கப் பெற்றுள்ளன. பொன்மணியும், பச்சைக்கல்லும் மாறி மாறிக் கோர்க்கப்பெற்று நடுவில் கடுத்தக்கல் என்னும் ஒருவகை வைடூரியமும், சூரியகாந்தம் எனும் இரவைக்கல்லும் பதித்த பதக்கங்களுடன் கூடிய நீண்ட கழுத்து மாலை ஒன்றும் கிடைத்துள்ளது. இவற்றில் அரப்பாவில் கிடைத்துள்ள கழுத்தில் இறுக்கிக் கட்டும் அட்டிகையும் மொகஞ்சதாரோவில் கிடைத்துள்ள ஆறு தங்கச் சரங்களையுடைய கையணியும் சிறப்பானவை. சிந்து சமவெளியில் கண்டெடுக்கப்பட்ட நடனமாதின் சிலைக்கும்பல அணிகலன்கள் அணியப்பட்டுள்ளன. இவை தமிழரின் அணிகலன்களின் பழமையைப் புலப்படுத்துகின்றன.*

**தமிழரும் அணிகளும்**

*ஆதிகாலத்தில் தமிழர்கள் பல்வேறு இயற்கைப் பொருட்களையே அணிகளாக அணிந்தனர். ஆரம்பத்தில் மலர்கள், இலை, தழை, தளிர், காய், பழம், கொட்டை, மற்றும் புல் இவற்றை அணிகளாக அணிந்தனர். உலோக காலம் தோன்றிய பின்னரே பல்வேறு அணிகளை உலோகங்களில் செய்தனர். அணிகலன் என்பதற்குத் தமிழில் வழங்கப்படும் ஆபரணம், நகை, தடையம், பணி, அலங்காரம் எனும் சொற்களே அவர்தம் அணிகலன் பற்றிய அறிவைப் புலப்படுத்தும். "ஆதியில் அணிகலன்கள் மலராகத் தோன்றி அப்பால் நூல்வடிவில் காயாகவும், தடையாகவும், தாலியாகவும், ஐம்படைத் தாலியாகவும் பின்னர் வெண்மையான*

சங்குகளும், சோழிகளும், கல் உருண்டைகளும் பல்வேறு வண்ண மண் உருண்டைகளும், அணிகலன்களாக உருப்பெற்றன. வெண்மையான சங்கு வளையல்களும் சங்குத் தோடுகளும், சங்கு மோதிரங்களும் முத்து மாலைகளும் பவள மாலைகளும் அணிகலன்களாக உருப்பெற்றன.

அணிகலன்கள் அணிந்த மாதவியை ஓவியமாகவும் சிற்பமாகவும் தீட்டும் அளவிற்கு ஓர் அழகிய காட்சியைக் கண்முன் காட்டுகிறார் இளங்கோ.

**தமிழர் அணிகலன்கள்**

தமிழ்நாட்டு அணிகலன்களுக்கு வரலாற்றில் சிறப்பிடம் உண்டு. காலந்தோறும் அணிகலன்களின் வடிவத்திலும் அணியும் முறைகளிலும் மாறுதல்கள் பல நிகழ்ந்துள்ளன. பழைய அணிகள் மறைந்து புதிய அணிகள் பல தோன்றியுள்ளன. இப்போது குறைவான அணிகள் அணிவதே நாகரிகமாக உள்ளது. எனினும் திருமணம் திருவிழாக்கள் போன்ற சிறப்பு நாட்களில் குறிப்பாகப் பெண்கள் அதிகமான அணிகளை அணிகின்றனர். பண்டைத் தமிழகத்தில் ஆடவரும், கழுத்தில் மாலைகளும், காதில் குண்டலங்களும், கை, இடுப்பு, கால், விரல், முதலிய உறுப்புகளில் பல அணிகலன்களை அணிந்து வருகிறார்கள்.

**தலையணிகள்**

கிரீட மகுடம், கரண்ட மகுடம், மணிமகுடம், சடா மகுடம், எனும் மகுடங்கள் ஆடவரால் அணியப்பட்டன. தெய்வங்கள், மன்னர்கள் போன்றோர் மகுடங்கள் அணிந்தனர். சடாமகுடம் என்பது சிவபெருமானுக்குரியது. இவை தவிர அரசியலை, இராக்குடி, இலம்பகம், குச்சம், குஞ்சம், கொண்டைத் திருகு, சடாங்கம், சுட்டி, சூடாமணி, நாகர் சடைத்திருகு, சந்திரப்பிரபை, சொருகுப்பூ, தலைப்பாளை, தாளம்பூ, பட்டம், பொற்பூ, பொற்றாமரைப்பூ, பொன்வாகை, மாராட்டம், முகசரம், வலம்புரி போன்றவை பெண்களால் அணியப்பட்டன.

**"தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்து"**

*(திருமுருகு. 23)*

**"ஒள்ளழல் புரிந்த தாமரை**
**வெள்ளி நாரால் பூப்பெற் றிசினே"**

*(புறம். 11: 17-18)*

*என்னும் இலக்கிய வரிகள் தலையணிகள் பற்றிக் கூறுகின்றன.*

**நுதல் அணிகள்**

*திருஉறுப்பு, திலகம், நெற்றிச்சுட்டி, நெற்றிப்பட்டம், பத்திக்கச்சு, பத்திரச்சுரிசை, மகரப்பகுவாய், மகரவலயம், என்பன நுதல் அணிகலன்கள் ஆகும். இவை காது, மூக்கு, கழுத்து, கைகளில் அணியப்படும் அணிகள் போன்று தனித்த அணிகளல்ல. பெரும்பாலும் இவை தலையணிகளுடன் இணைந்து நெற்றியில் தொங்குவனவாகவே இருக்கும். இவை பன்னிற மணிகள் பதிக்கப்பெற்று அழகுடன் விளங்கும்.*

**"ஒண்ணுதல் யாத்த திலக அவிரோடை"**

*(கலித்தொகை 97:11)*

**"எறிமகர வலயம் அணிதிகழ் நுதலியார்"**

*(பரிபாடல் 10:77)*

**காதணிகள்**

*காதணிகள் ஆரம்பக்காலத்தில் குழையாகவும் இலையாகவும் ஓலையாகவும் பூந்தோடாகவும் இருந்து பின்னர் பல்வேறு விதமாக வடிவம் பெற்றன. இடைக்காலத்தில் தமிழகப் பெண்கள் காதுகளை நீளமான துவாரத்தை வடித்து பாம்படம், தண்டட்டி, முடிச்சு, இட்டடிக்கை போன்ற பெரிய நகைகளை அணியும் வழக்கம் இருந்தது. குழந்தைகளுக்கு முதன்முதலாகக் காதில் துவாரமிட்டு அணிகள் அணிவது விழாவாகக் கொண்டாடப்பட்டது.*

அட்டிகை, இட்டடிக்கை, பொன்ஓலை, மாணிக்கஓலை, கடிப்பிணை, மணிக்கடுக்கன், குவளை கைக்கடுக்கன், சிவந்திப்பூக் கடுக்கன், கம்பி, கன்னப்பூ, இரத்தினக் குண்டலம், சர்ப்பக் குண்டலம், சிம்மக்குண்டலம், குறடு, ஒண்குழை, கனங்குழை, பொற்குழை, பூங்குழை, பொற்குவளை, மணிக்குவளை, வட்டக்குவளை, கொப்பு, சின்னப்பூ, செவிப்பூ, தடுப்பு, தாளுருவி, பூந்தோடு, மணித்தோடு, நவசரி, நவகண்டிகை, நாகபடம், பாம்பணி, மஞ்சிகை, மாத்திரை, முடிச்சு, பொன்முருகு, விசிறிமுருகு, மணிமுருகு, வல்லிகை, வாளி முதலிய அணிகள் காதில் அணியப்பட்டன.

**“சாய்குழை பிண்டித் தளிர்காதிற் றையினாள்**
**பாய்குழை நீலம் பகலாகத் தையினாள்**
**குவளை குழைக்காதின் கோலச் செவியின்”**

*(பரிபாடல் 11: 95-97)*

எனக் காதணிகள் பற்றி இலக்கியங்கள் கூறுகின்றன.

**தோள் அணிகள்**

முழங்கைக்கு மேல் அணியப்படும் அணி ஆகும். மற்ற அணிகளைப் போல் தோளில் அதிகமாக அணிகள் அணியப்படவில்லை. இரத்தினவங்கி, பாசிப்பந்து, அங்கதம், கடத்திரயம், கொந்திக்காய், சுத்தி, தோள்பதக்கம், கழல்தொடி, கோல்தொடி, தோள்வலயம், வாகுவலயம் என்பன தோள் அணிகள்.

**“மேகலை காஞ்சி வாகு வலயம்**
**எல்லாம் கவரும் இயல்பிற்றாய்”** *(பரிபாடல் 7: 47-48)*

எனப் பரிபாடல் வாகுவலயம் எனும் தோளணி பற்றிப் பேசுகிறது.

**மார்பணிகள்**

மார்பணிகள் அணியும் வழக்கம் தற்காலத்தில் இல்லை. ஆனால் பண்டைத் தமிழகத்தில் இவ்வழக்கம் இருந்தது. இலக்கியச் சான்றுகள்

*மட்டுமின்றிச் சிற்பங்களிலும் மார்பணிகள் காணப்படுகின்றன. இதயவாசனை, நாமரவளி, நித்திலமதாணி, பூங்கொடி, பொற்கலம், பூண், பொற்கச்சு போன்றவை மார்பணிகள்.*

**"பூணணி கவைஇய வாரணி நித்தில்**
**நித்தில் மதாணி அத்தகு மதிமறுச்"**

*(பரிபாடல் 2: 29-30)*

*எனும் வரிகள் நித்திலமதாணி எனும் மார்பணி குறித்துக் கூறுகின்றன.*

**கை அணிகள்**

*கைகளில் பலவகையான வளைகள் அணியப்பட்டன. ஆதிச்சநல்லூர் அகழாய்வுகள் மூலம் தமிழர்கள் சங்கு மற்றும் கண்ணாடி வளையல்கள் அணிந்த செய்தி தெரியவருகிறது. பிற்காலத்தில் நவமணிகள் பதித்த பல வளைகளும் காப்புகளும் எழுந்தன. ஆடகம், ஆனிக்காப்பு, இடைச்சரி, கங்கணம், காப்பு, கைக்கட்டு, கைச்சரி, கைவளை, சங்குவளை, சூடகம், நவரத்தின வளை, பரியகம், பவளவளை, பாசிந்தாமணி, பைந்தொடி, பொன்வளை, மகரவாய்ப் புரிவளை, முத்துக்கொலுசு, வால்வளை, வண்டு, வலம்புரிவளை போன்ற கையணிகள் அக்காலத்தில் அணியப்பட்டன.*

**"பொலந்தொடி நின்ற மயிர்வார் முன்கை**
**வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து"**

*(நெடுநல்வாடை 141-142)*

**"ஒருகை பள்ளி யொற்றி யொருகை**
**முடியொடு கடம் சேர்த்தி நெடிதுநினைந்து"**

*(முல்லைப்பாட்டு 75-76)*

*எனும் பாடல் வரிகள் சில கையணிகள் பற்றிக் கூறுகின்றன.*

**கைவிரல் அணிகள்**

*மிகப் பழங்காலத்திலிருந்தே தமிழர்கள் விரல்களில் பலவித அணிகளை அணிந்து வந்தனர். இன்றும் மோதிரங்கள் மங்கல அணியாக உள்ளன. ஏனாதி மோதிரம், சங்கு மோதிரம், சிவந்திப்பூ மோதிரம், சிறுதாள், செங்கேள், கிளர்மணி, மணிமோதிரம், மோசை, மாணிக்கத்தாள் செறி, முடக்கும் மோதிரம், முத்திரை மோதிரம், பொன் மோதிரம் போன்றவை பழங்காலத்தில் இருந்த மோதிர வகைகள் ஆகும்.*

**"மெல்விரல் மோசை போல, காந்தள்**

**வள்ளிதழ் தோயும்"** *(நற்றிணை 188: 2-3)*

**இடையணிகள்**

*முற்காலத்தில் பலவிதமான அணிகள் இடுப்பிலும் அணியப்பட்டன. ஆண்களும், பெண்களும் அரையில் அரைநாண் அணிந்து வந்தனர். சிறுமிகள் அரையில் அரைமூடி என்னும் அணிகலனும், சிறுவர்கள் அரைச்சதங்கை மற்றும் அரைவடம் என்னும் அணிகலன்களையும் அணிந்து வந்தனர். அரசிலைப்பொன் அடர், அரைநாண், அரைமூடி, அரைச்சதங்கை, எணிப்படுகால், கோவை, கடி, சூத்திரம், கொடி, சதங்கை, பாண்டில், பொற்றோரை, பொற்பட்டி, தாமம், பருமம், பவளமேகலை, மாணிக்கமேகலை, காஞ்சி, கலாபம், விரிசிகை, மணியணி போன்றவை இடையணிகள்.*

**"தாளித நொய்ந்நூல் சரணத்தர் மேகலை**

**ஏணிப் படுகா லிறுகிறுகத் தாளிடிஇ"**

*(பரிபாடல் 10: 10-11*

*எனும் பரிபாடல் வரிகள் இடையணிகள் பற்றிக் கூறுகின்றன.*

**காலணிகலன்கள்**

*பாதத்தின்மீது பொருந்துமாறு அணியப்படுவவை கால் அணிகலன்கள் எனப்படும். இவ்வணி குடிமக்கள் காப்பியமாகிய சிலம்பின் மூலம் மேலும் பெருமை பெற்றது. சிலம்பு வெள்ளியால் செய்யப்பட்டு*

*அதனுள் மாணிக்கம் முத்து ஆகியன பரல்களாகப் போடப்பட்டன. ஆடவர்கள் கால்களில் வீரத்தின் அடையாளமாகக் கழல் அணிந்தனர். அரியகம், அரவம், வீரக்கழல், கண்டை, காற்சரிகை, காற்கொலுசு, கால்வளை, கிண்கிணி, சாலகம், சிலம்பு, நூபுரம், சிறுமணி, நெகிழம், பரியகம், பரிவடிம்பு, பாடகம், புனையாரம், தண்டை, வெள்ளித்தளை போன்ற காலணிகலன்கள் தமிழர்களால் அணியப்பட்டன.*

**"இணைக்காலில் வெள்ளித் தளைநின் றிலங்கும்"**

*(நாலாயிரத் திவ்ய பிரபந்தம், 25-3)*

**"பரியகம் நூபுரம் பாடகம் சதங்கை**
**அரியகம் காலுக்கு அமைவுற அணிந்து"**

*(சிலம்பு. 6: 84-85)*

*என்பவை காலணிகள் பற்றிக் கூறும் இலக்கிய வரிகள்.*

**கால்விரல் அணிகள்**

*கால்விரல்களில் அணியப்படும் மோதிரமும் கால்விரல் அணி எனப்படும். இது பொன்னாலோ அல்லது மணிகள் பதித்தோ செய்யப்படுவதில்லை. இவ்வணி பெண்களால் மட்டுமே அணியப்பட்டு வந்துள்ளது. கால் மோதிரம், காலாழி, தாள்செறி, நல்லணி, பாம்பாழி, பில்லணை, பீலி, முஞ்சி (மிஞ்சி) மெட்டி போன்றவை கால்விரல் அணிகள் ஆகும்.*

**மரகதத் தாள்செறி** *(சிலம்பு. 6: 97)*

**"நலந்தரு மெல்விரல் நல்லணி செறிஇப்"** *(சிலம்பு. 6.83)*

**அணிகளும் மருத்துவமும்**

*தமிழர்கள் உலோகங்கள் மற்றும் அரிய மணிகளால் ஆன அணிகலன்களை அணிந்து வந்தனர். இவற்றிற்குப் பல்வேறு மருத்துவக் குணங்கள் உள்ளன. உலோகக் கனிமங்களைப் பற்பங்களாகவும்,*

செந்தூரங்களாகவும்செய்திடும் திறமையைச் சித்தர்கள் பெற்றிருந்தனர். முத்து, மரகதம், மாணிக்கம், நீலம், புட்பராகம், வைடூரியம், கோமேதகம், பவளம் போன்ற மணிகளும் பற்பங்கள் செய்யப் பயன்படுகின்றன. மணிகளுக்கு மருத்துவக்குணம் இருக்கிறது என்று அ ன்றும் நம்பினார்கள். இன்றும் நம்புகிறார்கள். ஏனென்றால் மணிகள் தாதுப்பொருட்களினால் ஆனவை. அந்தத் தாதுப்பொருட்கள் நமது உடல்நலத்துக்கு உறுதுணையாக உள்ளன. சப்பானில் சுண்ணாம்புச்சத்து (கால்சியம்) மாத்திரைகள் செய்ய முத்துக்கள் பயன்படுத்துகின்றனர். ஒவ்வொரு உலோகங்களாலும், மணிகளாலும் செய்யப்படும் பற்பங்கள் சில குறிப்பிட்ட நோய்களுக்கு மருந்துகளாகப் பயன்படுகின்றன.

மருத்துவ நூல்களில் மணிகளால் செய்யப்பட்ட பஸ்மங்கள் பிணிகளை நீக்கும் விவரங்கள் விளக்கப்பட்டுள்ளன. பொன் அணிகலன்கள் அணிவது பொற்கலங்களில் மூலம் என்னென்ன நோய்களை அகற்றும் என்று கூறப்படுகின்றன. மணிகள் இழைத்த பொன் அணிகலன்களை அணிவதால் பல நோய்கள் அகல்வதேபாடு பொன்னும் மணிகளும் கூட்டி இரட்டிப்பான நலன்களைச் செய்கின்றன. நோய் அகல்கிறது, உடல் பலம் பெறுகிறது என்பது விளக்கப்படுகின்றன.

வெள்ளி நகைகளுக்கு உடலின் வெப்பத்தைக் குறைக்கும் தன்மை உள்ளது. கால்கள், இடுப்பு, கால் விரல்களில் வெள்ளி நகைகள் அணியப்படுவது வழக்கம். வெப்பத்தை ஈர்க்கும் தன்மை வெள்ளிக்கு உண்டு. ஜுரம் கண்டவர்களின் வெள்ளிநகைக்ள கருப்பாக மாறுவதிலிருந்து இதனை உணரமுடியும். ராஜஸ்தான் போன்ற வெப்பப்பகுதியில் வாழும் மக்கள் அதிகமாக வெள்ளி நகைகளை அணிவது இதனால்தான்.

கால அடிப்படையில் நோக்கினால் காதில் அணியும் தோடு, கழுத்தில் அணியும் சங்கிலி, முத்துச்சரம், முத்துமணி, கையிலணியும் வளையல், கைவிரலில் அணியும் மோதிரம் முதலிய அணிகள் மிகப் பழங்காலத்தில் இருந்து இன்றுவரை செல்வாக்குடன் திகழ்கின்றன.

*பாரம்பரியமிக்க பழங்கால அணிகள் இன்றும்மீண்டும் நாகரிக அணிகளாக உருவெடுத்துள்ளன. இடைக்காலத்தில் தோன்றிய அணிகளுள் மூக்குத்தி, தாலி, மெட்டி முதலியன இன்று மிகுதியான செல்வாக்குடன் திகழ்கின்றன. பழந்தமிழ்நாட்டில் 'பீலாழி' என்று குறிப்பிடப்படும் அணி மெட்டி போன்றதாகும் காதின் மேற்புறத்தில் அணியப்படும் கொப்பு, முருகு, காதின் அடிப்புறத்தில் அணியப்படும் குருடு, நாவடம், கடுக்கண், மூக்கின் நடுத்தண்டில் அணியப்படும் முத்துப்பல்லாக்கு முதலியன இடைக்காலத்தில் பெருவழக்கில் இருந்தன.*

*சிமிக்கி தொங்கட்டான், அட்டியல், பதக்கம், ஒட்டியாணம், கொலுசு, போன்றவை பிற்காலத்தில் தோன்றியவை. இவற்றுள் ஒட்டியாணம், திருமணம், பரதநாட்டியல் போன்ற நிகழ்ச்சிகளில் மட்டும் பயன்படுத்தப்படுகிறது. கணவனை இழந்த பெண்கள் தாலி, சங்கிலி, வளையல் போன்ற அணிகளை அணிவதில்லை. இவர்கள் இக்காலத்தில் தாலி தவிரப் பிற அணிகள் அணிவது வழக்கில் இருக்கிறது. ஒருகாலத்தில் தமிழ்நாட்டு ஆடைகள் அணிகலன்கள், தொழில் நேர்த்தியாகவும், பாரம்பரியச் சிறப்புக்காகவும் பாராட்டப்பட்டன.*

**திருவிழாக்கள்**

*விழாக்கள் மக்களால் விரும்பப்படும் சிறப்பினை உடையன. வீழ்: விரும்பப்படு, வீழ்-விழவு-விழா திரு எனும் அடைமொழி அவற்றின் சமயத்தொடர்பு சுட்டும். திருவிழாக்கள் அடிப்படையில் சமய நிலையைக் கொண்டிருந்தாலும் அது சமூகத் தொடர்பு உள்ளன. கோயிலைச் சார்ந்து நடைபெறும் தேர்த்திருவிழா, சித்திரை விழா, பூப்பல்லக்கு முதலியன திருவிழாக்கள் எனஅடைமொழியுடன் வழங்கப்படும்.*

**விழாத் தோற்றம்**

*ஆதிகால மனிதர்கள் ஓய்வாக இருக்க நேர்ந்த போதும், நல்ல வேட்டையால் மிகுதியான உணவுப் பொருள்கள் கிடைத்த போதும்*

பொது இடத்தில் கூடி ஆடிப்பாடி கூட்டுணவுண்டு மகிழ்ந்தனர். இயற்கைப் பொருள்களை அஞ்சி வழிபடத் தொடங்கியும், வேட்டையில் நல்வாய்ப்பு கொடுத்த தெய்வத்திற;கு நன்றி தெரிவித்தும், வேட்டையிலும், வாழ்விலும் எந்தவித ஆபத்தும் இல்லாத நிலை வேண்டியும் கடவுள் வழிபாட்டை ஏற்றனர். இதனுடன் வேட்டை விழாவும் சேர்ந்தது. நாகரிகம் வளர்ந்த நிலையில் அறுவடை விழாவும் கொண்டாடினர். உழவுத் தொழிலின் இடையில் கிடைத்த மிகுதியான ஓய்வுக் காலங்களிலும் இன்னும் வளர்ந்த நிலையில் அந்தந்த பருவத்திற்கு ஏற்றவாறும்மாதம் ஒரு விழா வருமாறு அமைத்துக் கொண்டனர். மேலும் அவர்கள் கிழமைக்கு ஒருநாள் விடுமுறை என உள்ளது போல மாதத்திற்கு ஒரு முறை திருவிழாக்கள் கொண்டாடினர். மேலும் இது புத்துணர்ச்சி பெறவும் இன்பம் துய்க்கவும் பயன்படுகிறது.

**பண்டைய விழாக்கள்**

சங்க காலத்தில் விழாக்கள் இடையறாது நடைபெறுவது ஊர்களுக்குப் பெருமையாகக் கருதப்பட்டது. தைநீராடல், கார்த்திகை விழா, ஓணவிழா, இந்திரவிழா, உள்ளிவிழா, பூந்தொடை விழா முதலிய விழாக்களைச் சங்க இலக்கியங்கள் குறிக்கின்றன. விழாக் கொண்டாடும் முறை பெரும்பாலும் அன்றிலிருந்து இன்றுவரை மரபுவழியாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன. விழா நடைபெறுவதற்கு முன்னரே ஊர் முழுவதும் முரசறைவர். தூய்மை செய்து பொது இடங்களில் புதுமணர் பரப்பித் தெருக்களில் தோரணம் கட்டியும், வீடுகளில் வெள்ளை அடித்தும் அழகு செய்வர். விழாத் தொடங்கும்நாட்களில் கொடி ஏற்றுவர். புத்தாடையும் பல்வகை அணிகலன்களும் அணிவர். பல்வகை இசைக்கருவிகள் முழங்க பல கலை நிகழ்ச்சிகள் நடக்கும். பொது இடத்தில் கூடி ஆடிப்பாடி மகிழ்வர். அதிகாலையில் நீராடுவதும் இரவில் நிறைய விளக்கேற்றி வைப்பதும் விழாநாள் மரபுகள் ஆகும்.

விழா நாட்களில் வேலைக்குச் செல்ல மாட்டார்கள். விழாவைக் காண வெளியூரிலிருந்தும் வெளிநாட்டிலிருந்தும் வருவோர், ஊரையும் ஊர்க் கட்டிடங்களின் சிறப்பையும் கடைத்தெருக்களையும், கலை நிகழ்ச்சிகளையும் கடவுள் வழிபாட்டையும் கண்டு களிப்பர். விழா ஊரளவில் நடைபெறுவதோடு வீட்டிலும் தனிப்பட்ட முறையில் கொண்டாடப்படும். வீட்டில் சுற்றத்தாரோடும் விருந்தினரோடும் சுவையான உணவு வகைகளை உண்பதும் வேண்டுவோருக்கு வேண்டுவன தருவதும் வழக்கம் ஆகும். ஆறு, குளம், அருவி, கடல் ஆகியவற்றில் புனலாடியும் சோலை, குன்றம் ஆகியவற்றில் உலவியும் மகிழ்வர்.

விழா நடைபெறும் ஊர்களுக்குச் சென்று விறலியர் நடனம் புரிவர். பாணரும் கூத்தரும் பொருநரும் தம்தம் கலைத்திறனைக் காட்டுவர். ஊனும், தேனும் பாலும் அணியும் மணியும் அன்பளிப்பாய்ப் பெறுவர்.

**“அறாஅ யாணர் அகன்றலைப் பேரூர்**
**சாறுகழி வழிநாள் சோறு நசையுறாது**
**வேறுபுல முன்னிய விரகறி பொருந”**

(பொருந. 1-3)

என்ற அடிகளால் விழாக் காலங்களில் கலைஞர்கள் சோறு பெற்ற செய்தியை அறியலாம். சிறப்புமிக்க விழா நாட்களில் சிறைப்பட்டோரை விடுதலை செய்வர். உணவு, உடை, ஏட்டுச்சுவடி ஆகியன நன்கொடையாகத் தருவர். மேலும் விழாவிற்கு ஏற்ற காலமாகப் பெரிதும் இளவேனிற் காலத்தைக் கருதினர். பிற பருவங்களிலும் விழாக்கள் நடைபெறும். இரவிலும் விழாக்கள் நடைபெறுவதுண்டு. சில விழாக்கள் ஏழு நாட்கள் தொடர்ந்து நடந்தன. பெரிதும் வளர்பிறை அல்லது நிறைமதி நாட்களில் விழாத் தொடக்கம் அல்லது விழா அமைந்தது.

இந்திரவிழா சித்திரை மாதத்துச் சித்திரை விண்மீன் கூடிய நாளில் தொடங்கி 28 நாட்கள் நடைபெற்றது. இதனை வானவன் விழா, இந்திரகோடனை விழா, தவக சாந்தி, ஆயிரங் கண்ணோன் விழா என்றும்

*குறிப்பர் .இவ்விழா பற்றி விரிவாகச் சிலம்பும் மேகலையும் கூறுகின்றன. இந்திரவிழாவில் பயன்படுத்தப்பட்ட பூ என உவமையாக ஐங்குறுநூறு குறிப்பிடும். அதாவது இலவ மரத்தில் நெருக்கமாக மலர்ந்துள்ள பூக்கள் பெருவிழாவில் ஏற்றப்பட்ட விளக்குபோல் தோன்றியதாக அகநானூறு கூறுகின்றது.*

**"அருவி யான்ற உயர்சினை மருங்கில்**
**பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்**
**இலையில மலர்ந்த இலவமொடு**
**நலையுயர் பிறங்கல் மலையிறந் தோரே"**

*(அகம்.185)*

**திருவோணம்**

*திருமாலோடு தொடர்புடைய விண்மீன் திருவோணமாகும். இந்நாளில் கொண்டாடிய விழா ஓணவிழாவாகும். இதனை,*

**"கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்**
**மாயோன் மேய ஓண நன்னாள்"**

*(மதுரை. 590-591)*

*இந்த நாளில் வீரர்கள் நீலக்கச்சையணிந்து விருந்துண்டு களித்தனர். இவ்விழா ஆவணித் திங்களில் கொண்டாடப்பட்டது. கி.பி. 7ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆழ்வார்கள் இதுபற்றிக் குறிப்பிடுகின்றனர். கி.பி. 9ஆம் நூற்றாண்டில் ஆண்ட தானுரவியின் கல்வெட்டியல் இதுபற்றிய குறிப்புள்ளது.*

**பொங்கல்**

*பொங்கல் தைத்திங்களில் கொண்டாடப்படும் விழாவாகும். முதற்கண் அறுவடை விழாவாகத்தொடங்கிப் பின்னர் வளத்தைக் குறித்த விழாவாக மாறியது. ஆனால் பொங்கல் விழாவினைப் பற்றிய செய்திகள் எதுவும் கிடைக்கவில்லை. தை திங்களில் நோன்பு நோற்பதுண்டு என்று*

*அறிகின்றோம். தைத்திங்களில் நோன்பு இயற்றுவார் அமர்ந்திருப்பது போல் குரங்குகள் மழையில் நனைந்து அமர்ந்திருப்பதாக நற்றிணைச் செய்யுள் குறிப்பிடுகிறது.*

**"வான்பெயர் நனைந்த புறித்த நோன்பியர்**
**தையூண் இருக்கையில் தோன்றும் நாடன்"**

*(நற்றிணை 22)*

**தைநீராட்டு**

*தைத்திங்களில் மகளிர் ஆறு குளங்களில் நீராடுவது சில செய்யுட்களில் கூறப்படுகின்றது. பின்னர் இதனையே மார்கழி நீராட்டுள என்கின்றனர்.*

**"தையில் நீராடிய தவந்தலைப் பாடுவாளோ"**

*(கலித்.13)*

*மகளிர் அனைவரும் ஒன்றாகச் சேர்ந்து நீராடுவதை,*

**"நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும்**
**தைஇத் தன்கயம் போலப்**
**பலர்படிந் துண்ணும்நின் பரத்தை மார்பே"**

*(ஐங். 84)*

**"தைஇத் திங்கள் தண்கயம் படியும்**
**பெருந்தோட் குறுமகள்"**

*(நற். 80)*

*தனக்கு வாய்க்கும் கணவன்மார் நல்ல பண்புடையவராதல் வேண்டும் என வேண்டிப் பெண்கள் எடுத்த இந்நோன்பு பிற்காலத்தில் சமயத் தொடர்பு பெற்றதை ஆண்டாள் பாடல்களிலும், மாணிக்கவாசகர் பாடல்கள் மூலம் அறிகின்றோம்.*

**இந்திர விழா**

*இந்திரனைப் பற்றிய குறிப்புகள் சங்கச் செய்யுட்களில் காணப்படுகின்றன. இந்திரவிழவிற் பூவின் அன்ன என்று உவமையாகப் பயன்படும் அளவுக்கு இந்திரவிழா சிறப்புற்றிருந்தது. அதாவது,*

**"இந்திர விழவிற் பூவினன்ன**
**புன்றலைப் பேடை வரிநிழ லகவு**
**மிவ்வூர் மங்கையர்த் தொகுத்தினி**
**யெவ்வூர் நின்றன்று மகிழ்நநின் றேரே"**

*(ஐங். 62)*

*சிலம்பு, மணிமேகலைக் காலத்தில் இந்திரவிழா அசராங்க விழாவாகவே கொண்டாடப்பட்டது. கற்பகக் கோட்டத்தில் வெள்ளானைக் கொடியேற்றப்பட்டது. பல தெய்வங்கட்கும் பூசையிடப்பட்டது. இசையும் கூத்தும் கலந்து மக்கட்கு இன்பமூட்டின. நகரம் முழுவதும் அலங்கரிங்கப்பட்டது. மேலும் பல்வேறு சமயத்தவரும் செற்றமும் கலாமும் செய்யாது ஒற்றுமையாகஇருக்குமாறு கேட்டுக் கொள்ளப்பட்டனர். இவ்விழா புகாரோடு தொடர்புடையதாக இருந்தாலும், மதுரையிலும் கொண்டாடப்பட்டதாகச் சின்னமனூர்ச் செப்பேட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.*

**வெறியாட்டு விழா**

*பண்டைய நாளில் பெருவழக்காக இருந்தது வெறியாட்டு விழாவாகும். முருகனுக்காக எடுக்கப்பட்ட இவ்விழாவில் வேலன் கையில் வேலேற்றி ஆடுவான், இன்னிசை கருவிகள் முழங்கப்படும். தினை அரிசிகளையும், மலர்களையும் தூவுவர். ஆட்டுக்கிடாயை அறுத்துக் குருதியைச் சிந்துவர். இவ்விழாவைப் பற்றிச் செய்திகள் அனைத்தும் திருமுருகாற்றுப்படையில் இடம்பெறுகின்றது. ஊர்கள்தோறும் இவ்விழாவினைக் கொண்டாடினர் என்பதனைச்*

**"சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து**
**வாரணக் கொடியொடு வயிற்பட நிதீஇ**
**ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்"**

*(திருமுரு. 218-220)*

*விழா நடத்தும்பொழுது அதற்கெனக் கொடிகள் பல ஏற்றப்பட்டதுண்டு.*

**"சாறு அயர்ந்தெடுத்த உருவப் பல்கொடி"**

*(மதுரைக். 366)*

*வெறியாட்டின் போதும் பிற விழாக்களின் போதும் இன்னிசைக்கருவிகள் முழங்க ஆடலும் பாடலும் நிகழ்வது வழக்கமாக இருந்தது.*

**"வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்க்**
**குழலகவ யாழ்முரல**
**முழவதிர் முரசியம்ப**
**விழவயரு வியலா வணத்து"** *(பட்டினப். 155-158)*

*என்பது சான்றாகும்.*

**மருத்துவம்**

**"நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்"**

*என்பது தமிழரிடம் உருவான பழமொழியாகும். நோய்களைப் பற்றியும், நோய் தீர்க்கும் முறைகள் பற்றியும் தமிழர் பன்னெடுங் காலத்திற்கு முன்பே நன்குணர்ந்திருந்தனர் என்பதற்கு இலக்கியங்களும் கல்வெட்டுக்களும் சான்றளிக்கின்றன.*

*பழங்காலத்தில் மருத்துவ அறிஞர் பலர் வாழ்ந்தனர் எனவும் அவர்களுள் சிலர் சிறந்த இலக்கியச் செல்வராகவும் திகழ்ந்தனர் என்பதற்கு மருத்துவன் 'தாமோதரனார்' என்னும் புலவரே சான்றாவார். புலவராய்த் திகழ்ந்தமையால் இன்று அவர் பெயர் மட்டும் எல்லோராலும் அறியப்படுகின்றது. கிறிதிது நூற்றாண்டுகட்கு முன்பே தென்னகத்தில் அசோகரால் நிறுவப்பட்ட மருத்துவமனைகள் இங்கு இருந்தன என்பதற்கு*

அவருடைய கல்வெட்டுக்களே சான்றளிக்கின்றன. மனிதர்களுக்கு மட்டுமின்றி விலங்குகட்கும் மருத்துவமனைகள் அவரால் நிறுவப்பட்டன. துன்பம் தரும் அனைத்தையும் தமிழர் நோய் என்றனர். மனிதனை நொய்மைப்படுத்துவதால் அப்பெயர் ஏற்பட்டது எனலாம். பசியையும், நீர்வேட்கையையும் கூடத் தமிழர் நோய் என்றனர். கோவூர்கிழார் நீரையும் உணவையும் இருமருந்து எனக் கூறுவார்.

**“மற்று மற்றும் வினவுதுந் தெற்றெனப்**
**பசிப்பிணி மருத்துவ னில்லம்**
**அணித்தோ சேய்த்தோ கூறுமி னமைக்கே”**

*(புறம். 173: 10-12)*

என்று சோழன் நலங்கிள்ளி என்னும் மாமன்னன் தன்னாட்டு வள்ளல் பெருமகன் பண்ணனைப் பாராட்டும் வகையில் அமைந்துள்ளது.

காதலும் ஒரு நோயாவதுண்டு. காதலியின் பார்வையே காதலனுக்கு நோய் தரவல்லது. பிணிக்கு மருந்து பிறவென்றாலும் காதல் நோய்க்கு மருந்து காதலியின் அன்புப் பார்வையேயாகும். நோய்த் துன்பத்தையும், அது தீர்க்கும் மருந்தையும் ஒருசேரப் பெற்ற காதலியை விளக்கும் தலைவன்,

**“இருநோக்கு இவளுண்கண் உளது ஒருநோக்கு**
**நோய் நோக்கொன்றந் நோய் மருந்து”**

என்றும்,

**“பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை**
**தன்னோய்க்குத் தானே மருந்து”**

என்றும் பாராட்டுகின்றனர். இதன்மூலம் வள்ளுவர் காலத்தில் நோய்கள் பற்றியும் மருந்துகள் பற்றியும் தெளிவான அறிவு இருந்ததை உணரமுடிகின்றது.

**“மரஞ்சாம் மருந்துங் கொள்ளார் மாந்தர்**
**உரஞ்சாச் செய்யா உயர்தவம் வளங்கெடப்”**

*(நற். 226: 1-2)*

*மருத்துவன் ஒரு வாணிகனல்லன் அவன் மனித குலத்தொண்டனாவான். எனவேதான் அவன் தன்பாலுள்ள கலையை மறைத்தலாகாது. அப்படி மறைத்தல் அது ஒரு கொடிய பாவம் என்பது பண்டைத் தமிழரின் கோட்பாடாகும்.*

**“வருந்திய செல்லல் தீர்த்த திறனறி யொருவன்**
**மருத்தறை கோடலின் கொடிதே”**

*(கலித்.129: 23-24)*

*இதற்குச் சான்றாகும். நோயாளி தன் நாவினைக் கட்டுப்படுத்த வேண்டும். மருத்துவன் நோயாளியின் விருப்பத்தை அறிந்து எது நல்லது என ஆய்ந்து மருந்தளிக்க வேண்டும். சங்க காலத்தில் போர்கள் அடிக்கடி நடந்தன. புண்பட்ட வீரர்கட்கு அக்காலத்துமருத்துவர்கள் மருந்துகள் பலவற்றைப் பயன்படுத்தினர். மேலும் புண்களை ஊசிக் கொண்டு தைத்தல் வழக்கில் இருந்துள்ளது. சிரல் பெயர்ந்தாற் போல நெடுவள்ளூசி கொண்டு மார்பிலேற்பட்ட புண்ணைத் தைத்தமை பற்றிப் பதிற்றுப்பத்துப் பாடலொன்று குறிப்பதால் அறுவை மருத்துவமும் ஓரளவு வளர்ச்சியுற்றிருந்தது.*

*தமிழ்நாட்டு மருத்துவம் பச்சிலைகளையும், வேர்களையும் பெரிதும் அடிப்படையாகக் கொண்டது. சித்தர்கள் மருத்துவ நெறிகளை வகுத்தனர். பதினெட்டுச் சித்தர்களைத் தமிழகம் அறியும் இவர்களின் பெயரால் பல மருத்துவ நூல்கள் வழங்குகின்றன. இச்சான்றோர்கள் கண்டறிந்த மூலிகைகளை அவ்வவற்றிற்குரிய மருத்துவப் பண்புகள் அடிப்படையில் பெயரிட்டழைத்தனர். வாதமடக்கி, வண்டுகொல்லி, கிரந்தி நாயகன், பொன்னாங்கண்ணி என்பவை இதற்குச் சான்றாகும். மஞ்சட்காமாலைக்குத் தமிழ்நாட்டுக் கீழ்க்காய், நெல்லியே கைகண்ட மருந்தாக இன்றும் கருதப்படுகின்றது. சித்த மருத்துவம் தமிழர்க்கே உரிய பெருஞ்செல்வம் ஆகும். சித்தர் மருத்துவத்தில் கழாயம், சூளிகை, சூரணம், இலேகியம், செந்தூரம் என்னும் பல மருந்துகள் காணப்பட்டன. இம்மருந்துகள் எளிமையானவை பழமையானவை. தமிழ்நாட்டுத்*

*தட்பவெப்ப நிலைக்கு ஏற்றவை. இதன் முக்கிய காரணம் தடுப்பு, தீர்வு, ஆற்றல் மீட்பு, ஆயுள் நீட்சி போன்றவைகள் ஆகும்.*

**பண்டைத் தமிழரின் வாழ்வியலும் சோதிடமும்**

*சங்க இலக்கியங்களிலும் காப்பியங்களிலும் வானவியல், சோதிடவியல் பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. தமிழர்தம் நம்பிக்கைகள் பழக்க வழக்கங்கள் முதலான வாழ்வியல் நெறிமுறைகளை அறிவதற்குப் பெரிதும் துணைபுரிவது இலக்கியமே. இது வாழ்க்கையின் கண்ணாடியாகவும், காலத்தின் கண்ணாடியாகவும் வாழ்ந்த சமுதாயத்தின் வரலாறாகவும் விளங்குகிறது. மனிதன் தனது தேவையைச் செம்மைப்படுத்த, நெறிப்படுத்த, தேவையான எதிர்பார்ப்புகளை நிறைவு செய்யப் பல பொருட்களைப் பயன்படுத்துவதோடு இல்லாமல் கோள்களின் இயல்புகளைத் தனது வாழ்க்கையோடு இணைத்துப்பார்த்து அதன் அடிப்படையில் சோதிடத்துறை என்ற தனித்துறையை மக்கள் வாழ்வியலில் கலந்து நிற்கின்ற வகையில் படைத்துள்ளான். சோதிடம் என்பது மக்கள் அறிவியல் பயனால் பெற்ற ஒன்று ஆகும்.*

**இலக்கியங்களில் சோதிடம்**

*எந்த ஒரு நிகழ்வின் தோற்றத்தினையும், வளர்ச்சி நிலையினையும் இலக்கியத்தின் கால வளர்ச்சியோடு நோக்கும்போது தெளிவாக அறிந்து கொள்ள இயலும். அவ்வகையில் சோதிடத்தின் தோற்றம், வளர்ச்சியினை அறியத் தமிழ் இலக்கியங்கள் துணைபுரிகின்றன.*

*பழந்தமிழர் வாழ்வுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட சோதிடக்கலை வாய்மொழியாகவே பல காலம் பேணிக் காக்கப்பட்டு வந்தது. ஏட்டுருவம் கொண்ட எழுத்திலக்கியமாகத் திகழ்ந்ததோடு ஏட்டிலக்கியங்களில் இன்றியமையாத இடத்தினைப் பெற்றுள்ளது. சங்க இலக்கியங்களில் கோள்கள், நட்சத்திரங்கள், திதிகள் முதலான வானியல் செய்திகள் பரவலாகக் காணப்படுகின்றன. குறிப்புகளாக மட்டுமின்றிப்*

*பூகம்பம், மழையின்மை, வறட்சி, பஞ்சம், மன்னனின் இறப்பு, முதலானவை நிகழுமென்று முன்கூட்டியே பலன்களை அறிந்து கொள்ளும் நிலையினையும் அக்காலத்தில் காணமுடிகிறது.*

*ஆழ்வார்கள், நாயன்மார்கள், பிறந்த நட்சத்திரம், திதி, மாதம், ஆண்டு முதலியன சுட்டப்பெறுதலைப் பக்தி இலக்கியங்களில் விரிவாகக் காணமுடிகிறது. சிற்றிலக்கியங்களில் வானியல் குறிப்புகள், காலக்குறிப்புகள், பலனறிதல் முதலான சோதிடச் செய்திகள் காணப்படுகின்றன.*

**பண்டைக்கால பழக்க வழக்கங்களின் சோதிடம்**

*சோதிடம் பண்டைய தமிழர்களிடையே இருந்த எல்லாப் பழக்க வழக்கங்களிலும் நம்பிக்கைகளிலும் பழமொழிகளிலும் பின்னிப் பிணந்து காணப்படுகிறது. தமிழ்நாட்டில் தமிழக மக்களிடையே பல்வேறுபட்ட சடங்கு முறைகள் இருந்த போதிலும் இவையனைத்தும் சோதிடத்தின் துணையுடனே செயல்படுத்தப்படுகின்றன.*

*திருமணம், மாங்கல்யம், சீமந்தம், உபநயனம், குழந்தைக்குப் பெயர் வைத்தல், முடியெடுத்தல், கல்வி, தொழில் தொடங்க குருசாந்தி செய்ய, பூச்சூட்ட, ஆடை, ஆபரணம் நிலம் வாங்க, வாகனமேற, தேவபிரதிஷ்டை என்று மனிதன் தான் செய்த, செய்யும் எல்லாக் காரியங்களிலும் நாள்பார்த்துச் செய்தல் என்று சோதிடத்தைச் சார்ந்து வாழ்கின்றார்கள்.*

**பிறப்பு**

*பண்டைத் தமிழ் மக்கள் பேற்றை உயர்ந்ததாகவும் சிறப்புடையதாகவும் கருதினர். குழந்தை பிறப்பதற்கு முன்னும் குழந்தை பிறந்த பின்னும் பழக்க வழக்கங்களின் அடிப்படையிலான பல்வேறு சடங்குகளை மேற்கொண்டுள்ளனர். குழந்தை பெற்ற வீட்டில் 'ஐயவி என்ற வெண்சிறு கடுகைப் பூசியதையும், பிள்ளைப்பேறு வாய்த்த தாய் நெய் பூசி நீராடிச் சடங்குகள் மேற்கொண்டதனையும் நற்றிணை,*

**“கடும்புடைக் கடுஞ்சூல் நம்குடிக் குதவி**
**நெய்யோ டிமைக்கும் ஐயவித திரள்காழ்**
**விளங்குநகர் விளங்குக் கிடந்தோட் குறுகி**
**புதல்வனை யீன்றெனப் பெயர் பெயர்த்து”**

*(நற்றிணை 370: 2-5)*

*எனக் கூறுகிறது.*

*பழந்தமிழ் மக்கள் தங்களின் குழந்தைகளுக்குப் பிறந்தநாள் விழாவும் கொண்டாடி மகிழ்ந்ததைத் தொல்காப்பியம்,*

**“சிறந்த நாளினிற் செற்றம் நீங்கிப்**
**பிறந்த நாள்வயின் பெருமங்க லமும்”**

*(தொல். பொருள். 88: 7-8)*

*எனப் பிறந்தநாளைப் பெருமங்கலம் என்ற சொல்லால் குறிப்பிடுகின்றார்.*

*நன்னனின் பிறந்தநாளை அவனது மக்கள் கொண்டாடிய செய்தியினை மதுரைக்காஞ்சி,*

**“மன்றுதொறும் நின்ற குரவை சேரிதொறும்**
**உரையும் பாட்டும் ஆட்டும் விரைஇ**
**வேறுவேறு கம்பலை வெறிகொள்பு மயங்கிப்**
**பேரிசை நன்னன் பெறும்பெயர் நன்னாள்**
**சேரி விழவின் ஆர்ப்பெழுந் தாங்கு”**

*(மதுரை. 615-619)*

*என்று தெரிவிக்கின்றது. மாங்குடி மருதனால் இதனைப் ‘பெறும்பெயர் நன்னாள்’ எனச் சுட்டுகிறார். சேரன் செங்குட்டுவன் தன் பிறந்தநாளைப் கொண்டாடியமை சிலம்பில் காட்டப்படுவது கொண்டு,*

**“வடதிசை மன்னர் மன்னெயின் முருக்கிக்**
**கவடி வித்திய கழுதையே ருழவன்**
**குடவர் கோமான் வந்தா னாளைப்**
**படுநுகம் பூணாப் பகடே மன்னர்**

**அடித்தளை நீக்கும் வெள்ளணி யாமெனும்**

**தொடுப்பே ருழவ ரோதைப் பாணியும்''**

*(சிலப். 27: 225-230)*

*பிறந்தநாளை மன்னன் கொண்டாடும் வழக்கம் புலனாகின்றது. இவற்றிலிருந்து மன்னனின் பிறந்தநாளை அவனும் அவனது குடிமக்களும் கொண்டாடியமை தெரியவருகின்றது.*

*பிறந்தநாளை வெள்ளணி நாள் எனக் குறிக்கும் வழக்கம் சிலப்பதிகாரத்தில் தான் முதன்முதலில் பயின்று வருகின்றது. பிறந்தநாளை வெள்ளணி நாளெனக் குறிப்பதற்குரிய காரணத்தை நச்சினார்க்கினியர்,*

**''மங்கல வண்ணமாகிய வெள்ளணியும் அணிந்து**

**எவ்வுயிர்க்கண்ணும் அருளே நிகழ்தலின்**

**அதனை வெள்ளணி என்க''**

*(தொல். பொருள். 285)*

*எனக் குறித்துள்ளார். பிறந்தநாள் விழாவன்று வெண்ணிற ஆடை உடுத்தி வெண்கோலம் கொள்வர். இக்காரணத்தினால் தான் பிறந்தநாள் விழா, வெள்ளணி நாள், வெள்ளணி விழா எனப்பட்டது.*

*மணிமேகலையில் சாத்தனார் மன்னனின் பிறந்தநாளைப் புண்ணிய நன்னாள் என்று கூறினர்.*

**''புவிகா வலன்றன் புண்ணிய நன்னாட்**

**சிவிறியுங் கொம்புஞ் சிதறுவிரை நீரும்**

**மேலை மாதவர் பாதம் விளக்கும்''**

*(மணி. 28: 9-11)*

*இந்நிலை அக்காலச் சமுதாயத்தில் மன்னன் பெற்றிருந்த சிறப்பையும், தங்களது பிறந்தநாளினைக் கொண்டாடும் வழக்கத்தினைக் கொண்டிருந்தனர் என்று அறியமுடிகின்றது.*

**பருவமடைதல்**

*பெண்களின் உடல் தாய்மைக்குரிய பக்குவநிலையினை முதல் பூப்பில் அடைகின்றது. அந்நிலையில் அவர்கள் தீண்டத்தகாதவர்களாகக் கருதப்படுகின்றனர். இவ்வழக்கத்தைப் பழங்குடி மக்கள் பெரும்பாலோரிடையேயும் காணமுடிகின்றது. அவர்கள் பெண் பருவம் அடைந்துவிட்டால் அவளை வீட்டைவிட்டு அகற்றித் தனியிடத்தில் குடிலமைத்துத் தங்கச் செய்து துணையாவ வயது முதிர்ந்த மகளிரை இருத்தி அவளுக்குத் தேவையானவற்றை அந்தந்த நேரங்களில் கொடுக்கச் செய்து நீராடித் தீட்டுக் கழித்துப்பின்னர் தங்களோடு வாழ அனுமதிக்கின்றனர்.*

**“முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின**
**தலைமுடி சான்ற தண்டழை யுடையை**
**யலமர லாயமொ டியாங்கணும் படாஅன்**
**முப்புடை முதுபதி தாக்கணங் குடைய**
**காப்பும் பூண்டிசிற் கடையும் போகலை**
**பேதை யல்லை மேதையங் குறுமகள்**
**பொதும்பைப் பருவத் தொதுங்கிணை புறத்து”**

*(அகம். 287: 1-7)*

*பெண்கள் பூப்புற்றிருக்கும் காலங்களில் வீட்டுப் பண்டங்களைத் தொடாமல் ஒதுங்கி வாழ்ந்தமையால் அவர்கள் ‘கலந்தொடா மகளிர்’ எனப்பட்டனர். காலந்தொடாமகளிர் பற்றிப் புறநானூற்றுப் பாடல் ஒன்றில் மட்டுமே தெளிவான குறிப்புக் காணப்படுகிறது. இதனை,*

**“தண்ணடை மன்னர் தாருடைப் புரவி**
**அணங்குடை முருகன் தாருடைப் புரவி**
**கலந்தொடா மகளிரி னிகழ்ந்துநின் றவ்வே”**

*(புறம். 299: 5-7)*

*இந்நாட்களில் சங்ககாலப் பெண்கள் வெளியில் செல்லாதிருந்ததை அகநானூற்றுப் பாடல் விளக்குகின்றது.*

**“காப்பும் பூண்டிசின் கடையும் போகலை**
**பேதை அல்லை, மேதை அம்குறமகள்**
**பொதும்பைப் பருவத்து ஒதுங்கிணை புறத்து”**

*அகம். 7: 6-7)*

*ஏற்றியிறக்கல் அல்லது கொடி சுற்றுதல் என்னும் சடங்கு பெண்டிர் இருவர் பெண்ணுக்கு முன்னும் பின்னுமாக நின்று நிகழ்த்துவதை,*

**“ஒன்பல் மலர கவட்டு இலை அரும்பின்**
**செங்கேழ் மென்கொடி ஆழி அறுப்ப**
**இனி மணிப் புரவி நெடுந்தேர் கடைஇ”**

*(அகம். 80: 8-10)*

*என்ற வரிகள் வெளிப்படுத்துகின்றன.*

**திருமண முறை**

*சங்ககாலச் சான்றோர் வாழ்க்கையை அகமென்றும், புறமென்றும் இரண்டாக வகுத்தனர். ஒருவனுக்கு ஒருத்தியும் தமக்குள் காதல் கொண்டு இன்புறும் ஒழுக்கத்தினை அகம் என்றனர். இதற்கு மாறான பிற வாழ்வியல் கூறுகளையெல்லாம் புறம் என்றனர். இவ்விரண்டின் அடிப்படையிலேயே இலக்கியமும் மலர்ந்தது. சங்கப் பாடல்களில் பெரும்பான்மையானவை அகப்பாடலாக அமைகின்றன. அவை முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை , நெய்தல் என்னும் ஐந்து திணைகளடிப்படையில் பிரிக்கப்பட்டுள்ளன. இவை ஐந்தும் அன்பிணைந்திணை எனப் போற்றப்படுகின்றன. பிறப்பு, குடிமை முதலானவற்றால் ஒத்த தன்மையுடைய காதலர்பால் நிகழும் காதல் மட்டுமே அகத்திணை எனப்பட்டது. ஒருதலைக்காமம் கைக்கிளையென்றும் வரையறைக்குட்படாத பெருந்திணை என்றும் பெயர் பெற்றன. முல்லை முதலான திணைகளின் பெயர் ஐவகை நிலத்தின்*

அடிப்படையில் அமைந்தன. முல்லை இருத்தலையும், குறிஞ்சி புணர்தலையும், மருதம் ஊடலையும், நெய்தல் இரங்குதலையும், பாலை பிரிதலையும் குறித்த குறியீடுகளாகும். இவையே உரிப்பொருள் எனப்பட்டன. அவை நிலமும் காலமும் ஆகிய முதற்பொருளும் தெய்வம், உணவு, பறவை, விலங்கு முதலான கருப்பொருள்களாகும்.

**களவும் கற்பும்**

அகத்திணை காதல் வாழ்க்கையைக் களவு, கற்பு என இருவகையாகப் பிரித்துள்ளனர். ஊர் அறியாத வகையில் வயதுவந்த ஆணும் பெண்ணும் புணர்ந்து இன்புறும் பகுதி களவு எனப்பட்டது. நாம் அறிய ஊரார் அறிய திருமணம் செய்துகொண்டு வாழும் வாழ்வு கற்பு வாழ்வாகும்.

**“கற்பெனப் படுவது கரணமொடு புணரக்**
**கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்**
**கொடைக்குரி மரபினோர் கெடுப்பக் கொள்வதுவே”**

(தொல்.)

எனவே களவு கற்பாக முடியவேண்டும்என்பதே நோக்கமாகும்.

களவுக் காலத்தும் கற்புக் காலத்தும் தலைவன் ஓதல், பகை, தூது, பொருள் முதலிய காரணங்களாக பிரிந்து செல்கின்றான். பெற்றோர்கள் முயன்று முடித்து வைக்கும் திருமணம் அன்று பெருவழக்காக காணப்பட்டது. காதல் திருமணங்களும் ஓரளவு நடந்துள்ளன.

**அலர்**

காதல் சமூகத்தால் ஏற்பட்ட திருமண முறையென்றால் அலர் வருவதற்கும், தலைமக்கள் பெற்றோரை அஞ்சுதற்கும் உடன்போக்கில் ஈடுபடுதற்கும் இடமில்லை. அதாவது வயதுவந்த ஆணும் பெண்ணும் தாமே உறவு கொண்டுள்ளதைச் சமூகம் எதிர்த்துப் பழி தூற்றியதற்கான சான்றுகள் அதிகம் உள்ளன. ஒரு தலைவி தன்னுடைய காதலைத் தன்

*தாய்க்குத் தெரிந்துவிட்டது என்றால் ஊரில் அவள் வாழ்வது அரியதாகும் என்று வருந்துகிறாள்.*

**"தண்பெரும் பரப்பின் ஒண்ப நோக்கி**
**அங்கண் அரில்வலை யுணக்கும் துறைவனோடு**
**அலரே, அன்னை அறியின் இவனுறை வாழ்க்கை**
**அரிய வாகும் நமக்கெனக் கூறிற்**
**கொண்டும் செல்வர்கொல் தோழி"**

*(நற்றிணை 4)*

**தாய்மேல் சீற்றம்**

*மகள் காதலில் ஈடுபட்டதை அறிந்த தாய் அவளைத் துன்புறுத்துகிறாள் தன் காதலனைக் காணத் தடை விதிக்கும் தாயைத் தலைவி நொந்துகொண்டு சாபம் விடுகிறாள்.*

**"பெண்கொலை புரிந்த நன்னன் போல**
**வரையா நிரையத்துச் செலீஇயர் அன்னை**
**ஒருநாள் நகைமுக விருந்தினன் வந்தெனப்**
**பகைமுக ஊரின் துஞ்சலோ இலளே"**

*(குறுந். 292)*

**உடன்போக்கு**

*பெற்றோருக்குத் தெரிந்தபின் தன் காதலுக்குத் தடை வந்துவிடும் என்பதற்காக காதலர்கள் உடன்போக்கில் ஈடுபடுகின்றனர். அப்போது பெற்றோர் அவர்களைத் தேடிச் சென்றதாகப் பல பாடல்கள் கூறுகின்றன. ஒருதாய் தன் மகள் உடன்போக்கில் சென்ற பிறகு பின்வருமாறு வருந்துகின்றாள்.*

**"தற்புரந் தெடுத்த எற்றுறந் துள்ளாள்**
**ஊரும் சேரியும் ஒரங்கு அலரெழக்**

**காடும் கானமும் அவனொடு துணிந்து**
**நாடும் தேயமும் நனிபல இறந்த**
**சிறுவெண் கண்ணி''**

*(அகம். 383)*

**அறத்தொடு நிற்றல்**

*தலைவி காதலில் ஈடுபட்டதால் மேனியில் வாட்டமும் போக்கில் மாற்றமும் தோன்றும்போது அது யாதால் உற்றதென அறியாத தாய் வேலனைக் கூறி வெறியாடுகிறாள். அவன் முருகனால் வந்த தீங்கெனக் கூறுகிறான். அப்போது தலைவியின் காதலை வெளிப்படுத்த வேண்டிய கடமை தோழிக்கு உடையது. அதனை 'அறத்தொடு நிற்றல்' என்பர். மணமகன் வீட்டார் தமக்கு ஒத்த குலத்தவர்பால் பெண் வேண்டும் என்ற பண்பாட்டைக் கொண்டிருந்தனர்.*

**மடலேறுதல்**

*தன் மகள் காதலில் ஈடுபட்டது கண்டு அவளை மணம் செய்து கொடுக்கப் பெற்றோர் மறுத்தனர். அப்போது தலைவன் தலைவியின் படத்தை கையில் கொண்டு பனை மட்டையால் செய்த மாவின் மீது ஏறி ஊரறியத் தோன்றினான். இது பற்றிய பல குறிப்புகள் இலக்கியத்தில் காணப்படுகின்றன.*

**''மாவென மடலும் ஊர்ப் பூவெனக்**
**குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப**
**மறுகில் ஆர்க்கவும்படுப**
**பிறிதும் ஆகுப காமம் காழ்க கொளினே''**

*(குறுந். 17)*

*இச்சான்றுகளால் அன்று காதலுக்குத் தடையிருந்ததையும், சமுதாயத்தில் எதிர்ப்புகள் இருந்ததையும்காணமுடிகிறது. எனவே ஒரே*

*குலத்தாரைத் தகுதிநோக்கி உரிய இடத்தில் மணம்பேசி முடிப்பதே அன்றைய நடைமுறை வழக்கம் என்றும், காதல் சிறு வழக்கு என்பதனை உணரமுடிகின்றது. அதாவது குலவேறுபாடோ பொருளாதார ஏற்றத்தாழ்வே பெற்றோர் ஏற்றுக் கொள்ளாமைக்குக் காரணமாக இருந்திருக்கக் கூடும். எனவே சங்க காலத்திற்கு மிக முற்பட்ட நிலையில் காதல் வாழ்வே சிறப்புற்றிருந்தது என்று கூறலாம்.*

**செம்புலப்பெயல்நீர்**

*குழுக்களாக வாழ்ந்த மக்கட் கூட்டத்தில் திருமணங்கள் அவ்வக் கூட்டத்தாரிடையே நடந்தனவாகவே கருதப்படுகிறது. அவர்கள் ஒருவரையொருவர் நன்கு அறிந்தவராகவும், தம்முள் உறவுடையவராகவும் விளங்கியிருப்பர். உறவு இருவகையில் அமையும். அது தாய்வழி உறவும் தந்தைவழி உறவுமாகும். தாய் மாமன் மகளையும், அத்தை மகளையும் மணமுடிக்கும் வழக்கம் நெடுங்காலமாகத் தமிழ்நாட்டில் உள்ளது. மாமன், மாமி என்னும் சொற்கள் பல்லவர் காலத்து ஆண்டாளாலும், சிலம்பாசிரியராலும் ஆளப்பட்டது. தாய்வழியிலும் உறவுடையாரே கணவன் மனைவியாகும் மரபு சங்ககால நடைமுறை என்பதற்குக் குறுந்தொகையிலுள்ள செம்புலப்பெயர் நிரார் பாடலொன்றே சான்றாக உள்ளது. இருவகையிலும் உறவு அல்லாத ஆணும் பெண்ணும் தம்முட் காதல் கொண்டபோது தம் காதலின் சிறப்பினைக் காதலிக்கும் கூறும் தலைவன்,*

**“யாயும் ஞாயும் யாரா கியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி யறிதும்**
**செம்புலப் பெயனீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே”**

*(குறுந். 40)*

**பொருத்தம் பார்த்தல்**

*தம் பெண்ணுக்கும் பிள்ளைக்கும் திருமணம் செய்ய விரும்புவார் பொருத்தம் பார்த்தல் இன்றும் நடைமுறையில் உள்ளது. இதே நிலைமை பழந்தமிழரிடமும் இருந்தது. குடிக்கு ஏற்ற ஒழுகலாறும் வயதும், தோற்றமும், இரு குடும்பப் பொருளியல் நிலையும் நோக்கப்பட்டன. இவை அனைத்தும் பொருந்தியிருப்பது உலகில் அருமை எனலாம். எது இல்லாவிட்டாலும் பிறப்பு ஒத்திருக்க வேண்டும் என்பது அடிப்படையாக இருந்தது. எல்லாப் பொருத்தங்களும் உடையவர் எதிர்ப்பட்டுக் காதல் கொண்டனர் என்பது இலக்கிய மரபாகும்.*

**பரிசமளித்தல்**

*பெண்ணுக்கு மணமகன் பரிசளிக்கும் வழக்கம் தொன்றுதொட்ட மரபாகும். அன்று அது 'முலைவிலை', 'சிறுவளைவிலை பரியம்' என்று அழைக்கப் பெற்றது. பாசிழை விலையென்றும் அழைத்தனர். இதனை,*

**"இரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்**
**கருங்கட் கோசர் நியம மாயினும்**
**உறுமெனக் கொள்குநர் அல்லர்**
**நறுநுத லரிவை பாசிழை விலையே"**

*(அகம். 90)*

*என்னும் அடிகளால் அறியலாகும்.*

**"சிறுவளை விலையெனப் பெருந்தேர் மண்ணிஎம்**
**முன்கடை நிறீஇச் சென்றிசி னோனே"**

*(நற்றிணை. 300)*

*என்னும் அடிகளால் உணரலாம்.*

*பெண் கேட்பதற்கு மணமகன் வீட்டார் முதியவர்களையும், அறிவரையும் அழைத்து வந்த நிலையினைச் சில பாடல்கள் தெரிவிக்கின்றன.*

"அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பிரிந்தோர்ப் புணர்ப்போ ரிருந்தனர் கொல்லோ
தண்டு டைக் கையர் வெண்டலைச் சிதவலர்
டின்னுபெரி தென்னு மாங்கண தவையே"

*(குறுந்.146)*

"நெறியறி செறிகுறி புரிதிரி பறியா அறிவளை முந்துரீ இத்
தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக
வேய்புரை மென்றோட் பசையிலம் அம்பலும்
மாயாப் புணர்ச்சியு மெல்லா முடனீங்கச்
சேயுயர் வெற்பனும் வந்தனன்
பூ வெழி ஒண்கனும் பொலிகமா வினியே"

*(கலி. 39: 46-51)*

*என்ற பாடல்கள் தெரிவிக்கின்றன.*

*'என் ஐ முன் நில்லம்மின் தெவ்விர்' என்று வள்ளுவர் கூறுமிடத்தில் தலைவன் என்று பொருள்படல்.*

"கொடுக சிந்தை கடிதிவன் துணிவே
மூதின் மகளிர் ஆதல் தகுமே
மேனாள் உற்ற செருவிற் கிவள்தன்ஐ
யானை யெறிந்து களந்தொழிந் தனனே"

*(புறம். 297)*

*என்னும் பாட்டில் இச்சொல் அமைந்துள்ளது.*

**மலரணிதல்**

*தமிழரின் பண்பாடு மலரோடு நெருங்கிய தொடர்புடைய மலர்ப்பண்பாடாகும். அவர்களின் வாழ்வில் மரங்களும் பூக்களும் பிறப்பு முதல் இறப்பு வரை சிறப்பாகப் பயன்பட்டதனை இலக்கியங்களும் வாழ்வியலும் உணர்த்தி நிற்கின்றன. இதனை அகம், புறம் ஆகிய இருவகை*

*மரபிலும் காவன்மரம், போர்ப்பூ, அடையாள மாலைகள், கண்ணி, தார் ஆகியவை பெற்ற வாழ்வியலில் பங்கு கொண்டிருந்தனர். திருமண வினையில் மலர் பெற்ற சிறப்பினை விளக்கு ஏற்றி மாலை தொங்க விட்டனர். நெல்லுடன் மலர் தூவி மணமக்களை வாழ்த்தினர்.*

**"மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்**
**கனையிருள் அகன்ற கவின்பெறு காலை"**

*(அகம். 86: 4-5)*

**"பெற்றோர் பெட்கும் பிணையை யாகென**
**நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி**
**பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க**
**வதுமை நன் மணம் கழிந்த பின்றை"**

*(அகம். 86: 14-17)*

*இல்லற வாழ்வில் உரிமை பெற்றதற்கு அறிகுறியகாக வதுவை முடிந்ததற்குப் பின்னரே தலைவன் தலைவியின் கூந்தலின் பூ முடிக்கும் உரிமை பெற்றதாக ஐங்குறுநூற்றுப் பாடல் தெரிவிக்கின்றது.*

**"எரிமருள் வேங்கையிருந்த தோகை**
**இழையணி மடந்தையிற் றோன்று நாட**
**இனிதுசெய் தனையால் நுந்தை வாழியர்**
**நன்மனை வதுவை யயரவிவள்**
**பின்னிருங் கூந்தல் மலரணிந் தோயே"**

*(ஐங். 294)*

*என்று ஐங்குறுநூறு பாடல் தெரிவிக்கின்றன.*

**மங்கலவணி**

*திருமணத்தின் அறிகுறியாகத் தமிழர் அணி ஏதும் அணிந்ததற்கான குறிப்பேதும் சங்கப் பாடல்களில் தென்படவில்லை. பழந்தமிழர் மங்கல அணியாக அதாவது தாலியாக ஈகையரிய இழையணி எனச் சுட்டப்பட்ட*

*ஒன்றைக் கருதியிருந்தனர் எனவும், அதனைப் பலர் ஏற்றுக் கொண்டதாகவும் நாவலர், பாரதியார், இலக்குவனார், சேதுப்பிள்ளை, தெ.பொ.மீ., மு. வ. இவர்கள் அனைவரும் ஏற்றுக் கொண்டனர். மற்றொருவர் தொடியே மணவணி என வாதிட்டதும் உண்டு. திருமணக் காலத்தில் தாலிக்கு இன்றைய மக்கள் தரும் சிறப்பைச் சங்ககால மக்கள் தொடிக்குத் தந்தார்கள் என்பது அறிஞர் இராசமாணிக்கனாரின் கூற்று ஆகும். தொடியே மணவணி என்றும் திருமணக் காலத்தில் மணமகனால் மணமகளுக்கு அணிவிக்கப்படுவதாகும். உடலோடு கணவன் உள்ளவரைக் கிடந்து அவன் செத்த பிறகு கழற்றப்படுவதாகவும், அத்தொடி அமையும் எனக் குறிப்பிடுகிறார்கள். எனவே அன்று நிலவிய திருமண முறையில் பெண்ணின் தந்தை மகளின் கையைப் பற்றித் தலைவனிடம் ஒப்படைத்த வினையே திருமணத்தின் சிறப்பு நிகழ்ச்சியாகக் கருதப்பட்தனைக் குறிஞ்சிப்பாட்டு கூறுகின்றது.*

**“நேரிறை முன்கை பற்றி நுமர்தர**
**நாடறி நன்மண மயர்கஞ் சின்னாள்**
**கலங்க லோம்புமி னிலங்கிழை யீரென”**

*(குறிஞ்சி. 231-233)*

*தாலி பற்றிக் குறிப்பிடும் முதற் கல்வெட்டு கி.பி. 958ஆம் ஆண்டுக்கு உரியது என்று டாக்டர் கேகே பிள்ளை குறிப்பிட்டுள்ளார். (தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் 1975, பக்.131-132)*

*சங்ககாலத்தில் சேவை மணம் எனப்படும் பெண்வீட்டில் உழைத்துத் திருமணம் செய்யும் வழக்கம் இருந்ததாகத் தெரிகிறது.*

**“அசையின ளிருந்த ஆய்தொடிக் குறமகள்**
**நலஞ்சால் விழுப்பொருள் கலநிரை கொடுப்பினும்**
**பெறலருங் குரைய ளாயின் அறத்தெரிந்து**
**நாமுறை தேஎம் மரூஉப் பெயர்ந்த தவனொடு**
**இருநீர்ச் சேர்ப்பின் உப்புடன் உழந்தும்**

**பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்**
**படுத்தனம் பணிந்தமை அடுத்தனம் இருப்பில்**
**தருகுவன் கொல்லே தானே''**

*(அகம். 280: 4-11)*

*என விவரித்துக் கூறுகின்றார்.*

*அகநானூற்றில் சங்ககாலத் தமிழரின் திருமணம் எவ்வாறு நிகழ்ந்தது என்பது ஓர் ஓவியமாக புனையப்பெற்றுள்ளது. அதில் தமிழரின் சங்ககாலப் பண்பாடு விளக்கம் பெறுகிறது. 'காமுது பார்ப்பான் மறைவழி காட்டாத மணவினை நிகழ்ந்துள்ளது'. நல்ல நாள் பார்த்தனர். மங்கல நீராடினர், புத்தாடை உடுத்தினர், பெருஞ்சோறு அளித்தனர், மங்கல மகளிர் சிலர் வாழ்த்தினர் தமர் அளித்தனர், இத்தகைய நிகழ்வுகளை அன்றை திருமணத்தில் காணப்பெறுகின்றன. உழுந்தினைக் கூட்டிச் சமைத்த பொங்கலின் பெரிய உருண்டைகளைக் கூடி இருந்தோர் உண்டனர். இத்தொழில் இடையறாது நிகழ்ந்தது. வரிசையாகக் கால்களிட்டு அமைக்கப்பெற்ற பந்தல் இடம்பெற்றது. அப்பந்தலின்கீழ் மணலைக் கொண்டு வந்து பரப்பினர். மனைவிளக்கு ஒருபுறம் ஏற்றி வைக்கப்பெற்றது. எங்கும் மாலைகள் கட்டித் தொங்கவிடப்பெற்றன. நிலாவை உரோகிணி விண்மீன் கூடிய நன்னாளில் அந்நாளில் புலர் காலைப்பொழுதில் மணவினை நிகழ்ந்தது. உச்சியில் நிரைநீர்க் குடத்தினையும், கைகளில் புதிய மண்கலயங்களையும் கொண்டு மணத்தினை முடிக்கும் மங்கல மகளிர் கூடினர். அவர்களுள் மகனைப் பெற்றெடுத்த மகளிர் நால்வர் 'கற்பினின்றும் வழுவாது வாழ்க நன்றாகிய பல வகைகளிலும் உதவியாக நிற்க. நின்னை மனைவியால் பெற்ற நின் மணவாளனைப் பேணும் துணைவியாக இலங்குக என்று வாழ்த்தினர். நீரொடு கலந்த மலர் இதழ்களையும், நெல்லினையும் கலந்து அவள் தலைமேல் தூவினர். அங்ஙனம் மங்கல நீராட்டிய பின் அவளை மணமகனிடம் ஒப்படைத்தனர். அதன் பின்னர் அவர்களிருவரும்*

*தனியறைக்கு அனுப்பப் பெற்றனர். தலைவியின் நாணம் அவளைப் பேசவிடாமல் தடுத்தது. அதனால் தலைகுனிந்து நின்றாள். இத்திருமண நிகழ்வு விரிவாக விளக்கப் பெற்றுள்ளது.*

**“உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை**
**பெருஞ்சோற்று அமலை நிற்ப நிரைகால்**
**தண்பெரும் பந்தர்த் திருமணல் ஞெமிரி**
**மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்**
**கனைஇருள் அகன்ற கவின்பெறு காலைக்**
**கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கள்**
**கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென**
**உச்சிக் குடத்தர் புத்தகன் மண்டையர்**
**பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்**
**முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்**
**புதல்வற் பயந்த திதலை அவ் வயிற்று**
**வால்இழை மகளிர் நால்வர் கூடிக்**
**கற்பினின் வழாஅ நற்பல உதவிப்**
**பெற்றோற் பெட்கும் பிணையை ஆகஎன**
**நீரொடு சொரிந்த ஈர்இதழ் அலரி**
**பல்இருங் கதுப்பின் நெல்லொடு தயங்க**
**வதுவை நன்மணங் கழிந்த பின்றைக்**
**கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து**
**பேர்இற் கிழத்தி ஆகஎனத் தமர்தர”**

*(அகம். 86)*

*அக்கால முல்லை நிலத்து மக்களிடம் மணம் புரிந்து கொள்ளும் முறையில் வீரப்பண்பின் வெளிப்பாடாமன ‘ஏறுதழுவல்’ என்னும் வழக்கம் இருந்தது. இது எண்வகை மணங்களுள் ஆசுரத்தின் பாற்படும். ஆசுரமென்பது கொல்லேறு கொண்டான் இவளை எய்துவன்,*

*வில்லேந்தினான் இவனை எய்துவன், மாலை சூட்டப்பெற்றான் இவளை எய்துவன், இன்னதொரு பொருளைத் தந்தான் இவளை எய்துவன் எனச் சொல்லிக் கொடுப்பதாகும். முல்லைக்கலியின் முதல் ஆறு பாடல்கள் இச்செய்தியினை விளக்குகின்றன.*

**"மணிபுரை யுருளின காயாவும் பிறவும்**
**அணிகொள மலைந்த கண்ணியர் தொகுபுடன்**
**மாறெதிர் கொண்தம் மைந்துடன் நிறுமார்**
**சீறரு முன்பினோன் கணிச்சியோர் கொடுசீஇ**
**யேறுதொழூஉப் புகுத்தனர் இயைபுட னொருங்கு"**

*(கலித். 101: 5-9)*

*பழந்தமிழரின் ஏறுதழுவுதலை இன்றைய தமிழகத்தின் தெற்கத்திய மாவட்டங்களில் கோடைக்காலத்தில் நிகழ்த்தப்பெறும் ஜல்லிக்கட்டு என்றழைக்கப்படும் மஞ்சுவிரட்டு என்பனோடு ஒப்பிடலாம். ஆயர்கள் தங்கள் பெண்களை மணக்கப்போகும் ஆடவரின் திறனை வீரத்தின் அடிப்படையில் கொண்டதாக அமைந்துள்ளது. இவ்வீர விளையாட்டின் பறையறைதலும் நிகழ்த்தப்படுகிறது.*

**"பகலிடக் கண்ணியின் பைதற் குழலன்**
**சுவன்மிசைக் கோலசைத்த கையன் அயலது**
**கொல்லேறு சாட இருந்தார்க்கெம் பல்லிருங்**

**கூந்த லணைகொடுப்போம் யாம்"**

*(கலித். 101: 39-42)*

*என்ற கலித்தொகைப் பாடலடிகள் விளக்கி நிற்கின்றன.*

**கைம்மை மகளிர்**

*கணவனை இழந்த பெண்டிர் கைம்மை மகளிர் எனப்படுவர். இத்தகையோரை இன்று கைம்பெண், விதவை என்றழைக்கிறோம்.*

*பண்டைத் தமிழிலக்கியங்களில் இவர்களின் நிலை தொழில், தோற்றம் ஆகியவற்றின் அடிப்படையில் ஆளில் பெண்டிர் பருத்திப் பெண்டிர் எனவும், அதாவது*

**“ஆளில் பெண்டிர் தாளிற் செய்த**
**நுணங்கு நுண் பனுவல் போல”** *(நற். 3: 1-2)*

**“பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன”** *(புறம். 251: 1)*

*நிலையாமையினை வலியுறுத்தும் காஞ்சித்திணையின் துறைகளுள் காதலியை இழந்துநின்ற கணவனின் நிலையினைத் ‘தபுதார நிலை’ எனவும், கணவனை இழந்துநின்ற காதலியின் நிலையினைத் ‘தாபத நிலை’ எனவும் தொல்காப்பியர் கூறுகின்றார்.*

*கைம்மை நோன்பின் அறிகுறியாக பெண்டிர் மங்கலப் பொருள்களை நீக்கியிருந்தனர் எப்தற்குச் சான்றாகத் தொடி, வளை, ஆகியவற்றை நீக்கிய நிலையினைப் புலவர்கள் குறித்துள்ளனர்.*

**“கண்ணீர்த் தடுத்த தண்ணறும் பந்தர்க்**
**கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி”**

*(புறம். 250: 3-4)*

**“அறனில் கூற்றந் திறனின்று துணிய**
**ஊழி னுருப்ப எருக்கிய மகளிர்**
**வாழைப் பூவின் வளைமுறி சிதற**
**முதுவா யொக்கற் பரிசில ரிரங்கக்**
**கள்ளி போகிம் களரியம் பறந்தலை**
**வெள்வேல் விடலை சென்றுமாய்ந் தனனே”**

*(புறம். 237: 9-14)*

*கணவனை இழந்த பெண்டிர் கைம்மைக் கோலம் பூண்டு நோன்பு இயற்றினர். அவர்தம் கூந்தலைக் கொய்தனர். அணிகலன்களை ஒழித்தனர். அல்லியரிசியினை உண்டனர்.*

*உடன்மாய்தல் என்பது கணவன் உயிர்துறந்தமை அறிந்து துக்கம் தாங்காமல் உயிர் துறத்தலுக்காக எவ்வித முயற்சியையும் கைக்கொள்ளாமல் உயிர்விடுதலாகும். அருகிய நிலையில் பெண்டிர் உடன்கட்டை ஏறி உயிர்மாய்த்துக் கொண்டனர். பூதப்பாண்டியன் மாய்ந்தபோது அவன் மனைவி தீப்பாய்ந்தாள். அவள் தீப்பாய்வதைச் சான்றோர் தடுத்தனர். அவர்களைப் பார்த்து அவர் பேசுவதாக அமைந்த பாடல் நெஞ்சை நெகிழச் செய்யும் தன்மையுடையதாகச் சிறந்து விளங்குகிறது.*

**“பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டிமம்**
**நுமக்கரி தாகுக தில்லை மெக்கெம்**
**பெருந்தோட் கணவன் மாய்த்தென அரும்பற**
**வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை**
**நள்ளிரும் பொய்கையும் தீயுமோ ரற்றே”**

*(புறம். 246: 11-15)*

*என்றாள். தன் கணவன் சிறிது நேரம் பிரிந்திருப்பினும் இன்னுயிர் நடுங்கிய பண்பினை உடையளாகிய அவள், நீர் ஒழுகுங் கூந்தல் தன் பின்புறம் தாழப் பெருங்காடு நோக்கித் தெருமந்தோடியது கண்டு வருந்திப் பாடியுள்ளார்.*

*‘வரைபாய்தல்’ என்பது மலையினின்று வீழ்ந்து உயிர் துறத்தலாகும். இது தாங்கமுடியாத துக்கத்தால் ஏற்படும் செயலாகவே இலக்கியச் சான்றுகள் தெரிவிக்கின்றன. இதனை,*

**“மயங்குதுளி பொழிந்த பானாட் கல்குல்**
**ஆராக் காமம் அடூஉநின் றலைப்ப**
**இறுவரை வீழ்நரின் நடுங்கித் தெறுதர”**

*(அகம். 322: 2-4)*

*எனப் பாடல் தெளிவாகச் சுட்டிச் செல்கின்றது.*

**பரத்தையர்**

*பழந்தமிழ் நாட்டில் பரத்தைமைத்தொழிலும் நிகழ்வுற்றது மதுரை மாநகரில் ‘பொருட்பெண்டிர்’ பலர் வாழ்ந்தனர். செல்வக்குடியில்*

*பிறந்தோர் பலர் அத்தொழிலுக்குக் காரணமாக இருந்தனர் அறிஞர்கள் இச்செயலைக் கண்டித்தனர். பொருட்பெண்டிர் மழைக்காலத்தில் மலர்ந்திருந்த கொத்து கொத்தான மலர்ப் புதரைப் போலத் தலைநிறைய மலர் சூடி மகிழ்ந்திருந்தனர். தம்மைத் தேடிவந்த ஆடவரை அகங்களில் அழுந்தத் தழுவிக் கொண்டனர். வஞ்சுகம் கலந்த வாய்மொழிகளைப் பேசினர். வந்தவர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டனர். தங்கள் உண்மை உள்ளத்தை ஒளித்து வைத்தனர். வெளியூர், உள்ளூர் என எவர் வரினும் தம்முடைய அழகைக் காட்டினர். விழைந்துவந்த இளைஞர்களின் இனி செல்வங்களைப் பறித்துக் கொண்டனர்.*

*வண்டுகள் ஒரு மலரிலுள்ள தேனை உண்டபின் அம் மலரைவிட்டு மதுவுள்ள பிற மலர்களை நாடிச் செல்வதைப் போலத் தன்மைப் புணர்ந்தவரின் மனம் புண்ணாகும்படி உறக்க நிலையில் விட்டுப் பிரிந்தனர் வேறு ஆடவரை நாடிச் சென்றனர். இது பொருட்பெண்டிரின் பொய்மை முயக்கமாகும். இதனை,*

**“கொண்டல் மலிர்ப்புதன் மானப் பூவேய்ந்து**
**நுண்பூண் அகம் வடுக்கொள முயங்கி**
**மாயப்பொய் பலகூட்டிக் கவவுக் கரந்து**
**சேயரும் நணியரும் நலன்நயந்து வந்த**
**இளம்பல் செல்வர் வளம்தப வாங்கி**
**நுண்தாது ண்டு வறும்பூத் துறக்கும்**
**மென்சிறை வண்டினம் மானப் புணர்ந்தோர்**
**நெஞ்சு ஏமாப்ப இன்னுயில் துறந்து”**

*(மதுரை. 568-575)*

*நிலைக்கண்ணாடி முன் நின்று நாம் கை தூக்கினால் ஆடிப்பாவையும் கைதூக்கும். காலைத் தூக்கினால் அதுவும் செய்யும் அதற்கெனத் தனி இயக்கம் கிடையாது. நாம் ஏவுதற்போலச் செய்வது இயற்கை. ஒரு தலைவன் ஆடிப்பாவைக்கு உவமையாக்கப் பெற்றான். தன்*

*கட்டளைக்குத் தலைவன் கட்டுப்பட்டவன் என்பதனைப் பரத்தை கூறினாள். எனினும் அப்பரத்தை தலைவனைத் தன் கணவன் என்று கூறிக் கொள்ளவில்லை. தலைவன் அவளைத் தன் மனைவியாக மற்றொருத்தி இருக்கிறாள் என்பதை அறிந்த அவள் தன்னை மனைவி என்று கூறிக் கொள்ளாமல் 'தன் புதல்வன் தாய்' என்று அறிமுகம் செய்து கொள்ளும் பண்பு மிக உயர்நத் தன்மையுடையதாகப் போற்றப்பெறுகிறது. இதனை,*

**"கையும் காலும் தூக்கத் தூக்கும்**
**ஆடிப் பாவை போல**
**மேவன செய்யுந் தன்புதல்வன் தாய்க்கே"** *(குறுந். 8)*

*என்னும் பாடல் விளக்குகின்றது.*

*தலைவன் பரத்தையரை நாடிச் சென்றனர். அறிந்த தலைவி அளவிலாச் சினம் கொண்டாள். எதிர்வந்தால் நெஞ்சைச் சுடும் ஏவுகணைகள் தொடுக்க எண்ணினாள். தலைவன் தன் எதிர்ப்பட்டான். அவள் புலம்பலெல்லாம் புள்ளாகப் பறந்துவிட்டது. ஆறா அன்பு சினத்தை அழித்தது. நான் இன்று நெறிதவறிப் பரத்தமையை நாடிச் சென்றவரைச் சினம் கொள்ள வேண்டி எண்ணினேன். அவரை வீட்டுக்குள் நுழைய விடாது தடுக்க வேண்டுமென்றும் எண்ணினேன். பின்னர் அவருடைய முன்னாளின் அண்மை நினைந்தேன். அவர்மீது இரக்கம் கொண்டு திரும்பிவிட்டேன்.*

**"அம்ம வாழி தோழி யானின்று**
**அறனிலாளன் கண்ட பொழுதில்**
**சினவுவென் தகைக்குலென் சென்றெனென்**
**பின்நினைந் திரங்கிப் பெயர்தந் தேனே"** *(ஐங்கு. 11)*

*இப்பாடல் தலைவி தலைவன் மீது கொண்டிருந்த உயர்ந்த அன்பை வெளிப்படுத்துகிறது.*

**இறப்பு**

*மனித வாழ்வில் இறப்பு என்பது எப்பொழுது வேண்டுமானாலும் நிகழலாம். வாழ்க்கையின் படிநிலைகளாகிய பிறப்பு, பூப்பு, திருமணம், குழந்தைப்பேறு, மூப்பு என்ற பருவங்கள் கடந்த பின் வரும் மரணத்தையே இறப்பு என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர். இயற்கையின் நியதிப்படி மண்ணில் பிறக்கின்ற ஒவ்வொரு உயிரும் என்றாவது ஒருநாள் இவ்வுலக வாழ்வைத் துறந்து இறப்பு என்ற இறுதி நிலையைப் பெற்றே ஆகவேண்டும் என்று கால தேவனின் கட்டளையாகும்.*

**“உறங்குவது போலும் சாக்காடு உறங்கி**
**விழிப்பது போலும் பிறப்பு”** *(குறள். 339)*

*என்கிறார் திருவள்ளுவர்.*

*பண்டை நாளில் பெரும்பான்மையான மாந்தர் மட்பாண்டங்களையே பயன்படுத்தினர். சமைத்தலுக்கு மட்டுமின்றி இறந்த உடல்களைப் புதைப்பதற்கும் தாழிகள் செய்தனர். இவர்கள் கலஞ்செய்கோ’ எனப் பெற்றனர். மண்பாண்டம் செய்யப் பயன்படுத்திய கருவி ‘அக்கடைச் சாகாட்டு ஆரம்’ என அறியப்பெறுகிறது. பெரிய தாழிகளில் உடல்கள் அடக்கம் செய்யப்பெற்றன. அவை செந்நிறமாக இருந்தன.*

**“கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த**
**செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெளுவா”** *(புறம். 238: 1-2)*

*என்பதனால் அறியலாம்.*

*சங்கநாளில் இறந்தாரை உடலைப் பாடையில் கட்டிச் சுடுகாட்டிற்கும் இடுகாட்டிற்கும் கொண்டு சென்றனர். அப்பாடையினைக் ‘கால்வழிக் கட்டில்’ எனக் கூறினர்.*

**“பலர்மீது நீட்டிய மண்டையென் சிறுவனைக்**
**கால்கழி கட்டிலிற் கிடப்பித்**
**தூகெள் ளறுவை போர்ப்பித் திலதே”** *(புறம். 286: 3-5)*

எனப் புறநானூற்றுப் பாடல் விளக்குகிறது. கள்ளிச் செடிகள் மண்டிய களரியல் சுடுகாடு அமைத்த இடமாகும். அக்காட்டில் பாடையை இறக்கி வைத்தனர். பின்னர் ஈமச் சடங்குகளை முடித்தனர்.

**“கள்ளி போகிய களரி மருங்கின்**
**வெள்ளி னிறுத்த பின்றைக் கள்ளொடு**
**புல்லகத் திட்ட சில்லவிழ் வல்சி**
**புலைய னேவப் புல்மேல் அமர்ந்துண்டு”** *(புறம். 360: 16-19)*

என்னும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

வெள்ளில் என்னும் சொல் பாடையைக் குறித்தது. இறந்த உடல் மீது தூய வெள்ளாடை போர்த்தினர். இறந்து பட்டோர் உரிமை மகளிரும், பிற பெண்டிரும் தம்முடைய கைவளை சிதறத் தம் மார்பகங்களில் அடித்து புலம்பினர் என்பதை,

**“முலைபொலி யாகம் உருப்ப நூறி**
**மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்**
**ஒண்ணுதல் மகளிர் கைம்மை கூற”** *(புறம். 25: 10-12)*

**இறந்தவர்களை வழிபடும் வழக்கம்**

இறந்தவர்களை வழிபடும் வழக்கம் இறந்த அனைவர்க்கும் வாய்ப்பது அன்று. வாழும்போது பெரும்புகழ் எய்தியவர் இறந்தபின் வழிபாட்டைப் பெறுகிறார்கள். கொல்லா இடிகா பையதிரு எனும் சாதி மக்களிடம் இறந்த நல்லவர்கள் வழிபாட்டிற்கு உரியவர் ஆகிவிடுகிறார்கள் என நம்பப்படுகிறது. கொடியவர்கள் இறந்துவிடுவார்களேயானால் அவர்தம் ஆவி துன்பம் செய்யும். நோய்களைத் தரும். அழிவைத் தரும் என்று பொதுமக்களால் நம்பப்பட்டது. குறிப்பாக தற்கொலை அல்லது கொலையின் மூலமாக இறந்தவர்களின் ஆவி இவ்வாறு துன்புறுத்தும் என்று நம்பப்பட்டது என்று அன்னோர்தம் ஆவிகள் தம்மைத் துன்புறுத்தா வண்ணம் பல்வேறு வழிபாடுகள் மேற்கொள்ளப்பெற்றன.

இந்தியாவில் கொண்டாடப்பெறும் தீபாவளி என்னும் பண்டிகை இறந்தவர் வழிபாடாக இருப்பதும் கருதத்தக்கது.

**நடுகல் வழிபாடு**

தமிழர் முன்னோர் வழிபாட்டினர். முன்னோர் வழிபாட்டினர் தமிழர் என்பதினாலேயே அவர் தாழ்ந்த இனத்தார்என்று முடிவு கட்டுதல் எத்துணைப் பிழை என்பது வெளிப்படை. போரில் பங்கேற்று ஒளிறுவான் ஏந்திக் களிற்றைக் கொன்று போர்க்களத்திலேயே இறந்துவிடுதல் பெரும் செயலாகவும், வழிபாட்டிற்குரிய செயலாகவும் வீர சொர்க்கத்தை அடையும் செயலாகவும் கருதப்பெற்றது போரில் இறந்த மறவர்க்கு அவர் இறந்த இடத்திலேயே நடுகல் நடுதலும், கல்லில் உருவம் பொறித்தலும், மறவர்தம் பீடு, பெருமை ஆகியவற்றை எழுதுதலும் பண்டைத் தமிழரிடையே வழக்கங்களாக இருந்தன. இறந்த மறவர்க்கு நடுகல் நடும் பழக்கம் தொடர்ந்து தமிழரால் பின்பற்றப்பட்டு வந்தது என்பதைத் தமிழ்நாட்டில் தொடர்ந்து கிடைத்துவரும் கல்வெட்டுகளும், நடுகல் உருவங்களும் தெரிவிக்கின்றன. இவ்வாறு எடுக்கப்பட்ட நடுகற்களில் பொறிக்கப்பட்டுள்ள செய்திகள் இவர்தம் இறப்பிற்குரிய பின்னணியை எடுத்துரைக்கின்றன. ஆநிரை கவரும்போதும், மீட்கும்போதும், இறந்துவிட்ட வீரர்களையும், அதற்காக எடுக்கப்பட்ட நடுகற்களையும் இவை உணர்த்துகின்றன. இன்றும் வழங்கும் சுடு-காடு, இடு-காடு என்ற சொற்களும் புலப்படுத்தி நிற்கும் கருமாதி ‘காடாத்து’ (காடு ஆற்று) என்ற இன்றைய வழக்காறுகளும் வற்புறுத்தும். இவ்வாறு பிணமாக எறிந்து விடும் பழக்கம் இன்றும் சில உலக மக்களிடம் எச்சமாக நிற்கிறது. சிலர் பிணத்தைச் சுடுவர் வேறு சிலர்குழி தோண்டிப் புதைப்பர். சிலர் நிலத்துக்கு கீழே தாழ்ந்த இடங்களில் அடைப்பர். சிலர் தாழியில் வைத்து மூடுவர் என்று அன்றைய முறைகளை மணிமேகலை அடுக்கும்.

**“சுடுவோர் இடுவோர் தொடுகுழிப் படுப்போர்**
**தாழ்வயின் அடைப்போர் தாழியிற் கவிப்போர்”**

*சமுதாயச் சிறப்புமிக்க இயல்பகளைக் கொண்டிருந்தவர்களின்இறப்பிற்குப் பின் அவர்களது நினைவாக நடப்பட்ட கல் நடுகல் ஆகும். இதனை,*

**“நட்டபோலும் நடாஅ நெடுங்கல்”**

*(அகம். 269:7)*

*எனக் குறித்துள்ளது.*

*நடுகற்குரியோராகப் போரில் பாய்ந்தோர் செய்தியை,*

**“பல்லாத் தழீஇய கல்லா வல்வில்**
**உழைக்குரற் கூகை யழைப்ப ஆட்டி**
**நாகு முலை யன்ன நறும்பூங் கரந்தை**
**விரகறியாளர் மரபின் சூட்ட**
**நிரை இவண் தந்து நடுகல் ஆகிய**
**வெண்வேல் விடலை யின்மையிற் புலம்பி”**

*(புறம். 261: 11-16)*

*என்னும் வரிகள் மூலம் அறியமுடிகிறது.*

*மேலும் பலவிதமான முறையில் சமுதாயத்திற்காக உழைத்த நல்லவர்களுக்கும் நடுகல் எடுத்துள்ளமையும் அறியமுடிகிறது.*

*சங்கப் பாடல்கள் குறிப்பிடும் நடுகல் வழிபாட்டு முறை பழங்கால மக்களின் வழிபாட்டு இயல்புகளைக் கொண்டுள்ளனர். அவற்றில் பலியும் கள்ளும் பீலியும் துடியும் பயன்படுத்தியமை பண்டைத் தமிழரின் இயற்கையான வழிபாட்டு முறையினைத் தெரிவிப்பதாக உள்ளது. மேலும் நடுகல் வழிபாட்டினை,*

**“நுழைவதி நெடுவேற் குறும்படை மழவர்**
**முனை யாத்தந்து முரம்பின் வீழ்த்த**
**வில்லோர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்**
**வல்லாண் பதுக்கைக் கடவுள் பேண்மார்**

**நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்**

**தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலிகொடுக்கும்**

**போக்கருங் கவலைய புலவுநா றருஞ்சுரம்''**

*(அகம். 35: 4-10)*

*இதில் கரந்தை மறவர்க்கு நடுகல் நட்ட செய்தியும் வழிபட்ட மரபும் சுட்டப்பட்டிருக்கின்றன.*

**தொகுப்புரை**

*பண்டைத் தமிழர்கள் மக்கள் பேற்றைச் சிறப்புடையதாகக் கருதிய நிலையையும் அக்குழந்தைக்குப் பலவிதமான சடங்கு, விழா நடத்தியமையும், இலக்கியத்தின் வழி விளக்கப்பட்டுள்ளன. மேலும் பூப்பெய்திய பெண்ணை எவ்வாறு நடத்தியுள்ளனர் என்பதும், திருமணம் தொடர்பான பழக்க வழக்கங்களையும், இலக்கியங்கள் விளக்கப்பட்டுள்ளன. பண்டைத் தமிழர்களின் திருவிழாக்களுக்குக் கொடுத்த முக்கியத்துவமும் விழா நடத்திய காலமும் விளக்கப்பட்டுள்ளன. நடுகல் வழிபாடு போன்ற இலக்கியச் செய்திகளும் விளக்கப்பட்டுள்ளன.*

*பழக்கம் என்பது தனிமனிதனிடம் இயல்பாக அமைந்துள்ள நடத்தை எனலாம். தனிமனிதனும் சமுதாய அமைட்டபும் இணைவதால் பழக்க வழக்கங்கள் உருவாகின்றன. ஒழுக்கத்தாலும், செயல்களாலும் வழக்கம் உருவாகிறது. ஒரு இனக்குழுவிலுள்ள பலருடைய மன எழுச்சி உணர்ச்சி விருப்பு வெறுப்பு ஆகியவற்றுடன் பழக்கம் பிணைந்து நிற்கிறது. பழக்க வழக்கம் என்ற சொற்களோடு ஒருங்கிணைந்து நிற்பது மரபு.*

*சங்ககாலத்தில் நிமித்தம் பார்த்துக் காரியம் செய்யும் வழக்கம் சங்க காலத்தில் இருந்து வந்தது எனலாம். மரங்களில் தெய்வம் உறைகின்றது என்ற நம்பிக்கை அக்காலத்தில் வலிமை பெற்றிருந்தது.*

*சங்ககாலத் தமிழ்மக்கள் இறைச்சி உணவைப் பெரிதும் விரும்பி உண்டு வந்தனர். அம்மக்களிடையே மது அருந்தும் பழக்கம் மிகுந்திருந்தது*

என்பதும் ஆய்வின் வழி புலனாகிறது. சங்ககாலத்தில் மக்கள் தாம் வாடினாலும் மற்றவர் வாழவேண்டும் என்ற உயர்ந்த பண்பாடு கொண்டு விளங்கினர். இதனை ‘ஈகைப்பண்பு’ எனலாம். இக்கால மக்கள் உயிரைவிட மானம்தான் உலகில் சிறநத்து என்று கருதினர். போரில் விழுப்புண்பட்டு இறப்பதை விரும்பாமல் தாமே வடக்கு நோக்கி உயிர் துறந்தனர்.

எனவே சங்ககாலத் தமிழர்கள் பழக்க வழக்கத்திலும் பண்பாட்டிலும் உயர்ந்து சிறப்புடன் விளங்கினர் என்பதைச் சங்க நூல்கள் விளக்கி நிற்கின்றன.

# இயல் 3

## வாய்மொழி மரபில் பழக்க வழக்கங்கள்

*தனிமனிதனும், சமுதாயம் என்ற அமைப்பும் கூடிப் பழக்க வழக்கங்களை உருவாக்குகின்றன. இவை ஒரு சமூகத்தின் தேவை, குறிக்கோள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு தோன்றுகின்றன. இவ்வாறு தோன்றிய பழக்க வழக்கங்கள் சமுதாயத்தால் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. மேலும் பழக்கங்கள் அன்றாட மக்களால் ஏற்றுக் கொள்ளப்படும்போது காலப்போக்கில் வழக்கங்களாக மாறுகின்றன.*

*மனித இனத்தின் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்து பழக்க வழக்கங்கள் மனிதனின் அன்றாட வாழ்வில் இரண்டறக் கலந்து, மனிதன் எச்செயலைச் செய்தாலும் அச்செயல்கள் அனைத்தும் அவன் சார்ந்துள்ள இனக்குழுக்களின் பழக்க வழக்கங்களை வெளிப்படுத்தும் வல்லமை பெற்றதாக அமைந்து விடுகின்றன.*

*பழக்கம் என்பது தனிமனிதனிடம் இயல்பாக அமைந்துள்ள நடத்தையைக் குறிப்பதாகும். ஒருவர் பால் மட்டும் தான் அருந்துவார். தேநீர் போன்றவற்றை அருந்துவதில்லை. இதனை அவருடைய பழக்கம் என்று கூறலாம். பழக்கம் வாழ்க்கைக்குத் தேவையானதாகக் கருதப்படுகிறது. அவரவர்க்கு விரும்பிய மனநிறைவையும் பழக்கம் தருகிறது எனலாம்.*

*பழக்கத்தைத் தொடர்ந்து வருவது வழக்கம் எனப்படுகிறது. பழக்கமாகவிட்ட செயல்களைச் சமூகத்தில் வழக்கம் என்கிறோம். எனவே வழக்கம்தான் வாழ்க்கையின் முதல் கட்டுப்பாடு ஆகும். அது மக்கள் அனைவரும் ஒன்றுபட்டு அவர்களுடைய நடவடிக்கைகளை ஒத்த தன்மை பெறச் செய்கிறது. தேவையான திறமையும் உறுதியும் வாய்ந்த வழக்கங்களை உருவாக்கிக் கொள்கிறது.*

*மனிதனின் பிறப்பிலிருந்து இறப்பு வரையிலும் பலவகையான பழக்க வழக்கங்களும், அதற்குக் காரணமான சடங்குகளும் அதன்வழி வெளிப்படுத்துகின்ற வழிபாடுகளும் மற்ற மற்ற வழக்காறுகளும் இன்றும் நம்முடைய கிராமங்களிலுள்ள மக்களால் முறையாகப் பின்பற்றப்படுவதைக் காண்பதுடன், பழக்க வழக்கங்கள் அந்தந்த இனத்திற்கேற்ப மாறுபடுவதும், இவர்கள் இந்த இனத்தைச் சார்ந்தவர்கள் என்று அடையாளம் காண்பதற்கும் பெருந்துணை புரிகின்றன.*

*தமிழகத்தின் நெற்களஞ்சியமான தஞ்சை மாவட்டத்தின் புளியக்குடி வட்டத்தில் அமைந்துள்ள கருப்பமுதலியார்கோட்டை என்ற ஊரைக் கள ஆய்விற்குரிய எல்லையை வைத்துக் கொண்டு பழமரபுகளின் பிறப்பிடமாகவும் வழக்காறுகளின் தாயகமாகவும் உள்ள நாட்டுப்புற மக்களில் கள்ளர், பள்ளர், பறையர், வண்ணார், பரியாரி போன்ற மக்களால் பின்பற்றப்பட்டுவரும் பழக்க வழக்கங்கள், இன்றைய நிலையிலும் உயிர்ப்புடன் வாழ்ந்து வரும் நிலைகள் அனைத்தும் ஆய்வுக்குட்படுத்தப் பெற்றுள்ளன.*

**பிறப்பு**

*பண்டைத் தமிழர்கள் முதல் இன்றுவரை மக்கள் பேற்றை உயர்ந்ததாகவும் சிறப்புடையதாகவும் கருதினர். குழந்தை பிறப்பதற்கு முன்னும், குழந்தை பிறந்த பின்னும், பழக்க வழக்கங்களின் அடிப்படையிலான பல்வேறு சடங்குகளை மேற்கொண்டுள்ளனர். அவை மனிதனது பண்பாட்டில் முக்கியக் கூறுகளைக் கொண்டுள்ளன. அவ்வகையில் மக்கள் பிறப்பு, பூப்பு, திருமணம், இறப்பு என வாழ்க்கை வட்டச் சடங்குகளை மேற்கொள்கின்றனர். மேலும் தொன்றுதொட்டு வளர்ந்துவரும் நாகரிகம் பண்பாடு மற்றும் சமூகப் பழக்க வழக்கங்கள் நாள்தோறும் தோன்றி அழிந்து வளர்ந்து வருவதைக் காணமுடிகிறது.*

*உலகிலேயே தொன்மை சான்ற் கலாச்சாரப் பாரம்பரியம் தலமுறையாகத் தொடர்ந்துவரும் பழக்க வழக்கங்கள் ஆகியவற்றின் அடிப்படையிலேயே சடங்குகள் நிகழ்கின்றன.*

**"தெவிட்டாக் கனி பிள்ளை**

**தெவிட்டாப் பானம் தண்ணீர்"**

*என்று கூறுவதில் தமிழர்களுக்கும் பெரும் மகிழ்ச்சி உண்டு என்று டாக்டர் விதாலி ஃபுர்னிக்க (1986: 44) 'பிறப்பு முதல் இறப்பு வரை' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். குழந்தை பிறப்பது என்பது பெற்றோர்க்கு மட்டுமின்றி உற்றார் உறவினர்களுக்கும் அளவற்ற மகிழ்ச்சியைத் தருவதாகும். மேலும் 'புத்திரகாமியம்' என்ற சொல் அதே நூலில் (ப. 56) இருந்து வருகிறது. பிள்ளைகளைப் பெற்றெடுக்க வேண்டும் என்ற விருப்பத்தைக் குறிப்பதே அச்சொல் ஆகும்.*

*குழந்தை பிறப்பது தமிழ்க் குடும்பங்களிலேயே மிகவும் முக்கியமான நிகழ்ச்சியாகும். பெண்மை என்பவள் தாய்மை அடையும்போதுதான் மகிழ்ச்சி அடைகின்றாள். தாய்மையடைந்த சுமங்கலிப் பெண்கள் மனிதர்களின் வாழ்க்கை வட்டச் சடங்குகள் அனைத்திலும் கலந்து கொள்ளும் தகுதி பெறுகின்றனர். குழந்தை பேறு அடையாத எந்த சுமங்கலிப் பெண்ணையும் குடும்பங்களில் அல்லது உறவினரின் இல்லத்தில் நடைபெறும் சுபகாரியங்களை முன்னின்று செய்ய அனுமதிப்பதில்லை. பண்டைய காலங்களில் சுகப் பிரசவமே அதிகம் இருந்ததாகத் தகவல்கள் மூலம் அறியப்பட்டது. இதற்குக் காரணம் அக்காலத்தில் பெண்கள் சத்தான உணவுகளை உட்கொண்டனர் என்பதும் அவர்களின் உடல் ஆரோக்கியமானதாகவும் இருந்தனர் என்பதாகும். தாய்வீட்டில் தலைப்பிரசவம் பார்ப்பதைக் கௌரவமாகக் கருதினர். வீட்டிலேயே மருத்துவச்சியைக் கொண்டு பிரசவம் பார்த்தனர். பிரசவம் சரியாக அமையவில்லையெினல் தாயோ, குழந்தையோ ஏன்*

*இருவருமே இறந்துவிடும் நிலைகூட இருந்தது எனலாம். அதனால்தான் தலைப்பிரசவத்தை மறுபிறவி அல்லது புனர்ஜென்மம் என்று குறிப்பிடுவர்.*

*தற்காலத்தில் உள்ளதுபோல் நவீன அந்தக்காலத்தில் இல்லை. இப்போதெல்லாம் பிரசவம் சிக்கல் எனில் வெகுவிரைவாக அறுவை சிகிச்சை செய்து தாயையும சேயையும் காப்பாற்றிவிடும் நிலைக்கு அறிவியல் வளர்ந்துள்ளது.*

**குழந்தை பிறப்பதற்கு முன் நிகழக்கூடிய பழக்க வழக்கங்கள்**

*குழந்தைச் செல்வத்தின் முக்கியத்துவத்தாலும் நன்மக்கள் பேற்றில் இறை அருளின் இன்றியமையாமையாலும் மக்கள் பல்வேறு சடங்குகளை மேற்கொண்டு வருகின்றனர்.ஒரு பெண் கருவுற்ற நாளில் இருந்து அவள் பிரசவிக்கும் நாள் முடிய தன் குழந்தை எந்த பாதிப்புக்கும் உள்ளாகாமல் இருக்க வேண்டும் என்பதற்காக முன்னோரின் வழிகாட்டலின் பேரில் பலவிதமான பழக்க வழக்கங்களைப் பின்பற்றி வருகின்றனர்.*

*கருவுற்ற பெண்ணை ஐந்து ஏழு ஒன்பது என்ற ஒற்றை எண் மாதத்தில் தாய் வீட்டிற்கு அழைத்துச் செல்வர். மனிதனுக்கு இயற்கையாக உள்ள சகல புத்திகளுக்கும் மிருகத்தனமான உணர்வுகளால் ஏற்படும் இச்சைகளுக்கும் ஆளாகாத வகையில் பெண்ணானவள் தாய்மைக்காகக் காப்பாற்றப்படுகிறாள். பாதுகாக்கப்படுகிறாள் எனக் குறிப்பிடுகிறார் (துர்காதாஸ், 1980: 115) மூன்றாம் மாதத்தில் இருந்து கர்ப்பிணிக்கு மசக்கை என்ற சோர்வு ஏற்படுவதால் வாந்தி மயக்கம் போன்றவை ஏற்படுகின்றன. இதனால் ஓய்வு எடுப்பதற்காவும் தனக்குப் பிடித்த உணவுகளை வெக்ப்படாது கேட்டு வாங்கி உண்பதற்காகவும் தாய்வீட்டிற்கு அழைத்துச் செல்கின்றனர். கருவுற்ற பெண்ணுக்கு 5 அ 7 மாதத்தில் அழைத்து வந்து நல்ல நாள் பார்த்து செய்யும் சடங்கு மருந்து கொடுத்தல் ஆகும். துளசி, குப்பைமேனி, மணத்தக்காளி கீரை, காக்கரட்டை இவற்றைப் பிழிந்து சாற்றைப் பசும்பாலில் கலந்து மருந்து என்று கர்ப்பிணிப் பெண்களுக்குக் கொடுப்பர். ஆனால் இப்போதெல்லாம் அறிவியல் வளர்ச்சியின்*

காரணமாகவும் நாகரிகத்தின் தாக்குதலாலும் கடையில் விற்கப்படும் ‘குங்குமப்பூ’ என்பதையும் வாங்கிக் கொடுக்கின்றனர்.

**வளைகாப்பிடுதல்**

கருவுற்ற பெண் ஏழு அல்லது ஒன்பதாம் மாதத்தில் மாப்பிள்ளை வீட்டில் தாய்வீட்டார் செய்வது வளைகாப்புச் சடங்கு ஆகும். மஞ்சள் பிள்ளையார் பிடித்து வைத்து வளையல்கள், பழம், பூ, தாம்பூலம், தேங்காய் வைத்து பெண்ணைக் கிழக்கு நோக்கி அமரச் செய்வர். பின்னர் பெண்ணிற்கு மங்கல மகளிர் வேம்பின் கொழுத்தினால் செய்த வளையலை அணிவிப்பர். பெண்களின் கருப்பைக் கோளாறுகளுக்கு அரசும் வேம்பும் மருத்துவ நோக்கில் உதவுகிறது. அரசிலும் வேம்பிலும் நுண்கிருமிகளை அழிக்கக் கூடிய எதிர்ப்பு அதிகமாக இருப்பதாக அறிவியலாளர் கூறுகின்றனர். அதன்பிறகு வெள்ளி வளையல்களையும் பல வண்ணங்களில் கண்ணாடி வளையல்களையும் கைநிறைய அணிவிப்பர். இந்த வளையல்கள் அவரவர் பொருளாதார நிலையைப் பொறுத்தமைகிறது. பெண்ணிற்கு வளையல் அணிவிப்பதால் வளையல் இசையால் வயிற்றில் இருக்கும் குழந்தைக்குக் கேட்கும் திறன் உண்டாகும் என்ற அறிவியல் கருத்து மக்களிடம் நிலவுகிறது.

தலைப்பிரசவம் தாய்வீட்டில் பார்த்தல் என்ற வழக்கம் தன்னை மணந்த கணவரின் வீட்டில் கிடைக்காத அன்பும் ஆதரவும் அனுசரணையும் பெண்ணைப் பெற்ற தாய்வீட்டில் கிடைக்கும் என்பதுடன் அப்பெண்ணின் அருமையும் பெருமையும் பெண்ணைப்பெற்ற பெற்றோர்களுக்கே அதிகமான பற்றும் பாசமும் இருக்கும் என்பதும் காரணமாக அமைகிறது.

கருவுற்றிருக்கின்ற ஒவ்வொரு பெண்ணுக்கும் தலைப்பிசரவம் என்பது மறுபிறப்பு என்கின்றனர். தான் பிறந்து வளர்ந்த இல்லச் சூழலும் பெற்றோர்களின் பரிவான கண்காணிப்பும் அப்பெண்ணின் உடலுக்கும் உள்ளத்திற்கும் ஆறுதல் அளிக்கும் என்பதால் உளவியல் ரீதியாகத்

*தலைப்பிரசவம் தாய்வீட்டில் பார்க்கின்ற வழக்கம்உள்ளது. அப்பெண்கள் தங்களுக்கு ஏற்படும் உடல்ரீதியான பிரச்சனைகள், பிரசவிக்கும் நிலையில் ஏற்படுகின்ற உபாதைகள், பிறப்புறுக்களில் ஏற்படுகின்ற மாற்றங்கள் இவைகளைப் பற்றித் தன்னைப் பெற்ற தாயிடம்தான் வெளிப்படையாகச் சொல்ல முடியும். மற்றவரிடம் சொல்வதற்குப் பெண்களுக்கே உரிய நாணம் தடையாக வந்து முன்நிற்கும் என்ற பண்பாட்டு நிலையிலும் தாய்வீட்டில் பிரசவம் பார்க்கும் வழக்கம் உள்ளது எனலாம்.*

**குழந்தை பிறந்தபின் நிகழக்கூடிய பழக்க வழக்கங்கள்**

*குழந்தை பிறந்தவுடன் குளியாட்டுதல் வழக்கம் போல் நடைபெறுகின்றது. பின்னர் சர்க்கரைத் தண்ணீர் கொடுக்கின்றனர். தாயின் வயிற்றிலிருந்து வெளியாகும் நஞ்சுக்கொடியைச் சாக்கடையில் அல்லது வீட்டுத் தோட்டத்தில் புதைக்கின்றனர். அப்படி நஞ்சுக்கொடியைப் புதைக்காவிட்டால் அடுத்து குழந்தை பிறக்காது. தாய்ப்பால் இருக்காது என்று நம்புகின்றனர். குழந்தை பிறந்த இரண்டாம் நாள் அல்லது மூன்றாம் நாள் கழுதைப் பால் ஊற்றும் வழக்கம் அப்போது உள்ளது. ஆனால் இப்போது கழுதைப்பால் கிடைக்கவில்லை என்பதனால் அவை குறைந்து காணப்படுகிறது. கழுதைப்பால் கொடுப்பதனால் குழந்தைக்குக் குளுமையின் காரணமாக வருகின்ற நோயினைத் தடுக்க முடியும் என்கின்றனர். குழந்தையும் தெய்வமும் குணத்தால் ஒன்று என்பனதால் குழந்தைக்குரிய தெய்வத்தன்மை அக்குழந்தை வளர்வதற்குக் காரணமாக நஞ்சுக்கொடி அமைகின்றது. மேலும் குழந்தையின் தொப்புள் கொடியை வெள்ளைத் துணியால் இருக்கிக் கட்டி வைப்பர். பின்னர் 5 அல்லது 7 நாட்களில் குழந்தையின் உடல் வகுக்கேற்ப தொப்புள் காய்ந்துவிடும் குழந்தையின் தொப்புள் புண்ணாகாமல் இருப்பதற்காக அதில் சுருட்டு சாம்பல், பவுடர், தேங்காய் எண்ணை வைப்பர். ஆனால் இப்போது 'நேப்பா சல்பா' என்ற அலோபதி மருந்தைப் பயன்படுத்தி வருகின்றனர். விழுந்த தொப்புள் கொடியைப் பத்திரமாக வைத்துக்*

கொண்டு அவரவர் வசதிக்கேற்ப ஈயம், வெள்ளி, தாமிரம், பொன் ஆகியவற்றால் ஆன தாயத்து செய்து கழுத்து அல்லது இடுப்பில் கட்டும் வழக்கம் காணப்படுகிறது. நாகரிகம் கருதி இப்பழக்கம் தற்போது குறைந்து காணப்படுகிறது.

குழந்தை பிறந்து சில நாட்களுக்குத் தாயும் சேயும் தனி இடத்தில் வைப்பர். யாரும் தொடுவதில்லை. அதனைத் தீட்டு என்று குறிப்பிடுகின்றனர். தாயும் சேயும் உள்ள இடத்தில் ஒருதட்டு அல்லது தாம்பாளத்தில் மஞ்சள் நீரை கரைத்து, சுண்ணாம்பு, வேப்பிலை இரண்டுமே அதில் போட்டு வைத்திருப்பர். மேலும் பழைய துடைப்பம், சிறிய அரிவாள், கத்தி போன்றவற்றை அவர்கள் பக்கத்தில் வைத்திருப்பார்கள். தாய் வெளியில் வரும்போது அவற்றில் ஏதாவது ஒன்றைக் கையில் எடுத்துச் செல்வது வழக்கம். இதன் மூலம் கெட்ட ஆவிகளிடமிருந்து காப்பாற்றிக் கொள்வதாக நம்புகின்றனர். தட்டில் கரைத்து வைக்கப்பட்டிருக்கும் ஆரத்தி திருஷ்டியிலிருந்து காப்பாற்றுவதாகவும் நம்புகின்றனர். குழந்தை பிறந்த வீட்டில் வேப்பிலைக் கொத்து வாயிலில் செருக்கப்பட்டிருப்பது இன்றும் வழக்கத்தில் உள்ளது. மேலும் தீட்டுக் கழிக்கும் நாள் வரை சிலபேர் அந்த வீட்டில் உணவு உண்ணமாட்டார்கள். குழந்தைக்கு முதன் முதலில் வெதுவெதுப்பான சுடுதண்ணீரில் ஜீனியைக் கரைத்து சிறிய கரண்டியால் குழந்தையின் நாக்கில் வைப்பர். குழந்தையின் தொண்டை காயாமலும், நாக்கு வறண்டு போகாமலும் இருக்க இது உதவுகிறது. பின்னர் தாய்ப்பால் கொடுக்கப்படும். முதலில் கொடுக்கும் தாய்ப்பால் சீம்பால் போன்று மஞ்சளாக இருக்கும். இந்தப் பால் குழந்தையின் உடலுக்குச் சக்தியையும், நோய் எதிர்ப்பு சக்தியையும் கொடுக்கக் கூடியது.

**பத்தியச் சோறு**

குழந்தையைப் பெற்றெடுத்ததாயின் உடலைப் பச்சை உடம்பு என்று பேச்சு வழக்கில் குறிப்பிடுவர். குழந்தை பிறப்பதன் மூலம் உடல்

வலிமையின் இழப்பீடுகளை ஈடுசெய்ய பத்தியச் சோறு உண்ணுகின்றனர். குழந்தை பிறந்த முதல் இரண்டு நாட்களுக்கு திட உணவு அதாவது சோறு முதலானவை கொடுக்கின்ற வழக்கம் இல்லை. ஆனால் அதற்குப் பதிலாக வாட்ரொட்டி சர்க்கரை கலந்த பாலில் நனைத்துக் கொடுக்கின்றனர். பின்னர் மூன்றாம் நாளில் இருந்துதான் ரசம் சோறு காரம் இல்லாத பருப்பு துவையல் கலந்து கொடுக்கப்படும். சங்கிலையைப் பச்சையாக அரைத்து உருண்டையாக உருட்டி தாயை விழுங்கச் செய்வர். மேலும் பத்தியக் குழம்பில் சங்கிலையை வறுத்து சத்தாண இலையும் சேர்த்து அரைத்துக் குழம்பு வைப்பர். இதைப் பத்தியக் குழம்பு அல்லது மருந்துக் குழம்பு என்கின்றனர். பின்னர் வயல்நண்டு, கொரவமீன், உப்புக்கண்டம், இவைகளை எல்லாம் சாப்பிடுவதன் மூலம் தாய்ப்பால் அதிகம் சுரக்கும் என்றும் பிரசவத்தால் ஏற்பட்ட புண் ஆறும் என்று நம்புகின்றனர். பிறந்த குழந்தையைத் தினந்தோறும் காலையில் விளக்கெண்ணெய் அல்லது நல்ல எண்ணெய் ஊற்றி இரண்டு விரல்களாலும் குழந்தையின் கண்கள், நெற்றி, மூக்கு, புருவம், முகவாய், காதுகள் போன்றவற்றை நீவிவிடுவர். குழந்தையின் தலையை இரண்டு கைகளாலும் பிடித்து உருட்டி விடுவர். மேலும் குழந்தைக்குத் தலையில் எதுவும் வைக்காமல் படுக்க வைப்பர். குழந்தை உருண்டு, பிரண்டு படுப்பதன் மூலம் தலை அழகான வடிவத்தில் அமையும் என்கின்றனர். குழந்தையை ஒருநாள் விட்டு மறுநாள் குளியாட்டுவர். அப்போது குழந்தையின் மார்பில் உள்ள பாலைப் பீச்சி வெளியில் எடுப்பர். குழந்தையைக் குளியாட்டும் போது மஞ்சள் அரைத்து உடம்பில் பூசி தேய்த்துக் குளியாட்டுவர். குளியாட்டின பின்னர்அந்த தண்ணீரை அந்த குழந்தையின் நாக்கில் 3 சொட்டு வைப்பர். இதன்மூலம் நீர் கொள்ளாது என்று நம்புகின்றனர்.

**16ஆம் நாள் சடங்கு**

குழந்தை பிறந்த 16ஆம் நாளில் தாய்க்குத் தலைக்கு ஊற்றுவார்கள். இதன் பிறகேதாயும்சேயும் வீட்டுக்குள் அழைக்கப்படுவர். தாய்க்கும்

குழந்தைக்கும் சாம்பிராணி மற்றும் பூண்டுத்தோல் போட்டுப் புகை காட்டுவர். இதன்மூலம் சலதோஷம் பிடிக்காது என்கின்றனர். அன்று கச்சப்பிடிக்குழம்பு, பெட்டைக்கோழி குழம்பு, முருங்கை கீரை இவைகளை வைத்து முட்டை அவித்து பேச்சியம்மனுக்குப் படைப்பர். இத்துடன் கொழுக்கட்டை, களி, இவற்றையும் படைப்பர். அன்று குழந்தைக்குப் புதுச்சட்டை, கழுத்துக்குப் பாசி மணி, காலுக்குத் தண்டை, கைகளுக்குக் கருப்பு வளையல்கள் இடுப்புக்குக் கருப்பு அல்லது சிவப்பு நிறத்தால் ஆன அரைஞாண்கயிறு முதலியன அணிவிப்பர். கைகளுக்கு வேப்பிலை வளையல்கள் அணிவிக்கப்பெற்ற பின்னரே கருப்பு வளையல்கள் போடப்படும். வெள்ளை எருக்கு கயிற்றாலான அரைஞான கயிறும் அணிவிக்கப் பெறும். ஒவ்வொரு தடவைும் குழந்தையைக் குளியாட்டும் போது ஒவ்வொரு கருப்பு வளையலைக் கழட்டிக் குழந்தையின் தலையைச் சுற்றி எறிந்துவிடுவர்.இவ்வளையல் திருஷ்டிக்காக அணியப்படுவதாக நம்பப்படுகிறது. வெள்ளைப் பாசி மணிபால் செரிப்பதற்கு உதவும் எனக் கூறுகின்றனர்.

மேலும் வசம்பு, மிளகு, இவற்றைக் கையினால் நூல் கோர்த்துக் கட்டும் பழக்கமும் உள்ளது. பின்னர் சாதிக்காய், மாசிக்காய், பெருங்காயம், பூண்டு, சுக்கு ஆகியவைகளே உரைமருந்தாக கொடுக்கின்றனர். சாமிக்குப் படைத்த பின்னர் குழந்தைக்குப் புதுச்சட்டை, அணிகலன்களையும் அணிந்து மகிழ்வர். பின்னர் வயதான விதவைப் பெண்டிர் மூவரை அழைத்து படைக்கப்பட்டுள்ள மூன்று வாழை இலைகளில் அமரச் செய்து முதலில் சாப்பிடச் செய்வர். இவர்கள் சாப்பிட்ட பின்னரே மற்றவர்களுக்குச் சாப்பாடு பரிமாறுவர். இதனால் பேச்சியம்மன் குழந்தையை நோய் நொடியிலிருந்து காப்பதாக நம்புகின்றனர். இச்சடங்கின்போது பூ, பழம், இனிப்பு, வெற்றிலை, சீவல் ஆகியவை வழங்கப்பெறும். குடும்பத்தாரும், உறவினர்களும் கலந்துகொள்ளும் இவ்விழாவில் குழந்தைக்குப் பணம் வைத்துக் கொடுக்கும் பழக்கமும் உள்ளது.

குழந்தை பிறந்த முப்பதாம் நாள் அல்லது 8ஆம் மாதம் கழித்து அம்மன் கோவிலுக்குச் சென்று மாவிளக்குப் போட்டுச் சாமி கும்பிட்ட பின்னர் அன்று இரவு கோயிலிலேயே தங்கி காலையில் வீட்டிற்கு வருவர். முதன்முதலில் கோவிலுக்குச் செல்லாமல் தாயும் குழந்தையும் வேறு எந்த வீட்டிற்கோ அல்லது விழாக்களுக்கோ செல்ல அனுமதிப்பதில்லை.

குழந்தை பிறந்த 3 அல்லது 5 மாதங்களில் நல்ல நாள் பார்த்து புகுந்த வீட்டிற்கு அழைத்துச் செல்வர். அப்போது புகுந்த வீட்டிலிருந்து காப்பரிசி, பூ, பழம், இனிப்பு, புதுச்சட்டை, பவுடர், சோப்பு, மை, கிரைப்வாட்டர், தங்கத்தாலான செயின் அல்லது வளையல்கள் அணிவிப்பர். அதைப்போல் தாய் வீட்டிலும் தாய்க்கும் குழந்தைக்கும் புதுத்துணியுடன் தங்கத்தாலான செயின், வளையல்கள், அரைஞான்கொடி, வெள்ளிக்கொலுசு, பாலாடை, தொட்டித்துணி, கயிறு அல்லது மரத்தொட்டில், சிறிய பாய், சிறிய மெத்தை, ரப்பர் ஷீட் போன்றவைகளை வைத்து விளக்கேற்றிச் சாமி கும்பிட்ட பின்னர் குழந்தையின் தாய் மாமன் அல்லது பெரியவர்கள் மடியில் குழந்தையை வைத்து சந்தனம், பூமாலை போட்டு உரிய மரியாதை செய்த பின்னர் வேப்பிலை வளையல்களும், கொலுசும் தங்க ஆபரணங்களும் அணிவிப்பர்.

இவ்விழாவிற்கு வந்த உறவினர்கள் தங்கள் வசதிக்கேற்றாற்போல் புதுத்துணியும், தங்கத்தாலான மோதிரமும், பணமும் வைத்து சிறப்புச் செய்வர். பின்னர் சைவ விருந்து அனைவருக்கும் அளிக்கப்படும். அதன்பிறகு தாயையும் குழந்தையையும் பெண்ணின் தாய் புகுந்த வீட்டில் கொண்டு விட்டுவரும் பழக்கம் உள்ளது. புகுந்த வீட்டில் பெண்ணின் தாய்க்கு வசதிக்கேற்பப் புதுப்புடவை எடுத்துக்கொடுக்கும் வழக்கம் உள்ளது. தாயையும் குழந்தையையும் நல்லவிதமாகப் புகுந்த வீட்டில் ஒப்படைத்தமைக்கு நன்றி பாராட்டும் வகையில் இந்த சிறப்புகள் செய்யப்படுகின்றன. முதலாவதாகப் பிறக்கும் குழந்தைக்குச் சிறப்பாகச் சடங்கு செய்து முடிக்கின்றனர். அடுத்தடுத்து பிறக்கும் குழந்தைக்குப்

பிறப்புச் சடங்கை எளிமையாகச் செய்துமுடிக்கின்றனர். அவரவர் பொருளாதார வசதிக்கேற்ப சடங்குகள் செய்யப்படுகிறது. மேலும் பிறப்புச் சடங்குகளைக் கட்டாயம் செய்ய வேண்டும் என்ற பழக்கம் உள்ளது.

பிறப்பிலிருந்து இறப்பு வரையில் மனிதன் பல பருவங்களைக் கடந்து செல்கின்றான். இப்பருவ மாற்றங்கள் அவனைப் பெரிதும் பாதிக்கின்றன. அவனை வந்தடைகின்றன. இம்மாற்றங்கள் தனிமனிதனை மட்டும் பாதிப்பதோடு நின்றுவிடுவதில்லை. அவை அவனது குடும்பத்தையும் பாதிக்கின்றன. அவன் வாழும் சமூகத்தையும் பாதிக்கின்றன என்கின்றார் டாக்டர் ம. வேலுசாமி (1987, 88:1)

'முன்னோர்கள் யாரும் மூடர்கள் அல்ல' என்ற குறிப்பிற்கிணங்க அவர்களின் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குகள் ஆகிய அனைத்துமே ஏதோ ஒரு வகையில் அறிவியலோடு தொடர்புடையதாகவே இருக்கிறது.

**பெயர் வைத்தல்**

குழந்தைக்குப் பெயர் வைக்கும் வழக்கம் அனைத்து மக்களிடம் உள்ளது. குழந்தைகளுக்கு தன் முன்னோர்களின் பெயரையும் தன் குலதெய்வத்தின் பெயரையும் நல்ல நாள் நட்சத்திரப்படி பெயர் வைத்தல் என்ற மரபு பின்பற்றப்படுகின்றது. அன்று உறவினர்களையும், பங்காளி மற்றும் தன் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் அனைவரையும் இவ்விழாவிற்கு அழைப்பார்கள். பின்னர் அவர்கள் தேர்வு செய்த பெயரைத் தன் குடும்பத்தில் உள்ள பெரியவர்களை அழைத்து தன் குழந்தையின் காதில் மூன்று முறை சொல்லச் சொல்வார்கள். அதன்பிறகு மாமா, அத்தை, சித்தி, சித்தப்பா இன்னும் பல பேர் குழந்தையின் காதில் சொல்லச் சொல்வார்கள். இதன்மூலம் கேட்கும் திறனும் தன் பெயர் இன்னது என்று புரிந்து கொள்ளும் திறனும் உடையவராக கருதப்படுகின்றன. இவ்விழாவானது தன் இல்லத்திலும் நடக்கும் அல்லது கோவில்களிலும்

*சிறப்பாக நடைபெறும். பின் வந்தவர்களுக்கு அனைவருக்கும் உணவு, இனிப்பு, வழங்கப்படும். இந்நிகழ்ச்சிக்கு வந்தவர்கள் குழந்தைக்குத் துணி, பணம் கொடுத்து வாழ்த்து தெரிவிப்பர்.*

**குழந்தை வரம் வேண்டி நேர்ந்த கடவுளர்களின் பெயரிடுதல்**

*ஒரு பெண் குழந்தைப்பேறு வேண்டி எக்கடவுளை வணங்கினாளோ அக்கடவுளின் பெயரைக் குழந்தை பிறந்த பின்பு சூட்டுவது பொதுவாக தமிழ்நாடு முழுவதும் காணப்படும் ஒரு பழக்கமாகும். சில குடும்பங்களில் அக்குடும்பத்தின் குலதெய்வத்தின் பெயரைச் சூட்டுவது வழக்கம். இவ்வாறு பெயரிடுவது அக்கடவுளின் அருள் குழந்தையின் ஆயுள் முழுவதும் கிடைத்து, குழந்தையின் வாழ்வு சிறக்கும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்ததாகும்.*

**காணிக்கை அளித்தல்**

*குழந்தை பிறந்த பின்பு கோவில்களுக்குக் காணிக்கை செலுத்துவதும் தமிழகத்தில் பெரும்பான்மையான மக்களிடையே வழக்கில் உள்ளது. பல ஆண்டுகளாகக் குழந்தை பாக்கியம் இல்லாமல் இருந்து குழந்தை பெற்றவர்களும், தெய்வங்களின் வேண்டுதல்களுக்கிணங்க குழந்தைவரம் பெற்றவர்களும் நல்லபடியாகக் குழந்தை பிறக்கவேண்டும் என்றும் தன் குலதெய்வத்திடம் வேண்டிக் கொள்வர். மேலும் அக்குழந்தை மூன்று முறை தனது கைப்பிடி கொள்ளுமளவுகாசுகளை எடுத்துக் கோவில் உண்டியலில் காணிக்கையாக அளிக்குமாறு செய்வர்.மேலும் கோயிலில் பூசைக்காலத்தில் அடிக்கும் வெண்கலமணி அல்லது கோயிலுக்குத் தேவையான பொருட்களை வாங்கி வைக்கின்றனர். குழந்தை பிறந்தவுடன் ஒரு வருடம் கழித்து குலதெய்வக் கோயிலுக்குச் சென்று குழந்தைக்கு மொட்டை போட்டுப் பூசை செய்யும் வழக்கம் இம்மக்களிடம் காணப்படுகிறது. இவ்வாறு செய்வதால் குழந்தையையும், தாயையும் நோய் நொடியில் இருந்து தெய்வம் காத்துவரும் என்ற நம்பிக்கை வயப்பட்ட*

வழக்கமாகக் கொண்டுள்ளனர் என்று களப்பகுதியில் மக்கள் கூறியுள்ளனர்.

**காது குத்துதல்**

தமிழர் பழக்க வழக்கங்களில் பிறந்த குழந்தைகளுக்கு மொட்டை அடித்தல், காதுகளில் துளையிட்டுச் செம்பு அல்லது தங்க வளையத்தை அணிதல் என்பது மிகத் தொன்மையான வழக்கங்களில் ஒன்றாகும். உருவத்திலே ஊனமேதும் இல்லாத குழந்தைகளைக் கெட்ட ஆவிகள் தாக்கிப் பலி கொள்ளும் என்பது பழங்கால மக்களின் அச்சமாகும் இவ்வச்ச உணர்வே பின்னாளில் வழக்கமாகிச் சடங்காகப் பெயர் பெற்றிருக்க வேண்டும் என்றும், குழந்தைகளின் பாதுகாப்பு நலன் கருதி வழக்கமாக மக்களால் பின்பற்றப்படுகிறது.

காதுகுத்தும் வழக்கம் என்பது அழகான குழந்தைகளைக் கண்டு எமன்ஆசை கொள்வான் என்றும் குழந்தையின் உடலில் சிறு காயம் ஏற்படுத்தி விட்டால் எமன் ஏமாந்து குழந்தைகளுக்குத் தீங்கு செய்ய மாட்டான் என்றும் நம்பப்படும் நம்பிக்கையே இச்சடங்கிற்கான அடிப்படை என்கிறார் நா. வானமாமலை. மேலும் அடுத்தடுத்து பிறக்கின்ற முதல் இரண்டு குாந்தைகள் தொடர்ந்து இறப்பிற்கு ஆளாகும் போது மூன்றாவதாகப் பிறக்கும் குழந்தை நிலைபெற்று வாழவேண்டும் என்பதற்காகப் பிறந்த அன்றே மூக்குக் குத்தி மூக்கன் என்று ஆண் குழந்தைக்கும், மூக்காயி என்று பெண் குழந்தைக்கும் பெயர் வைக்கும் வழக்கமும் தீய ஆவிகளிடமிருந்தும் எமனிடமிருந்தும் குழந்தையைக் காப்பாற்ற வேண்டுமென்ற நம்பிக்கையே காரணமாகும். தாயின் வயிற்றிலிருந்து குழந்தை இறந்து பிறந்தாலும் பிறந்த குழந்தை வளர்ந்த நிலையில் இறந்தாலும் குழந்தையின் காதினை நெல்லினால் துளை ஏற்படுமாறு அழுத்தமாகக் குத்திய பிறகே புதைக்கின்ற வழக்கம் நாட்டுப்புற மக்களிடையே இன்றும் நடைமுறையில் உள்ளது. இவ்வழக்கம்

*புறநானூற்றுக் காலத்திற்கும் முன்பிருந்தே தமிழக மக்களால் பின்பற்றப்பட்டு வருகிறது.*

**“குழவி இறப்பினும் ஊன்றடிப் பிறப்பினும்**

**ஆளன் றென்று வாளின் தப்பார்”**

*(புறம். 74)*

*என்று குறிப்பிடுகின்றனர்.*

*உற்றார் உறவினர்களை அழைத்தல் அனைருக்கும் விருந்து வைத்தல், பின்னர் தாய்மாமன் மடியில் குழந்தையை உட்கார வைத்து ஆசாரியை அழைத்துக் காது குத்துகின்றனர். அதாவது ஆண் பிள்ளைக்கு முதலில் வலது காதையும், பெண் பிள்ளைக்கு இடது காதையும் குத்துவர். காது குத்துபவருக்கும் மொட்டையடிப்பவருக்கும் மரியாதை நிமித்தமாக பலவிதமான தட்சணைகளைக் கொடுக்கின்றனர்.*

*சிறு குழந்தைகளின் ஆயுளை நீட்டித்து அவர்களின் எதிர்கால வாழ்க்கை சிறப்பாக அமைய வேண்டும்என்றும் தீய ஆவிகளின் தாக்குதல்களில் இருந்து பிள்ளைகள் விடுபட வேண்டும்என்றும், நோயற்ற வாழ்வு வாழ வேண்டுமென்ற நோக்கத்தின் அடிப்படையிலேயே காது குத்தும் வழக்கம் தோன்றியது என்கின்றனர்.*

**மூக்குக் குத்துதல்**

*மூக்குக் குத்துதல் நாட்டுப்புற மக்களிடையே உள்ள ஒரு பழக்கமாகும். இது அழகுக்காகவும் குத்திக்கொள்வார்கள் என்பதை,*

**“முகத்துக் கழகாக மூக்குத்தி தானணிவித்தாள்”**

*முதல் இரண்டு குழந்தை பிறந்து இறந்துவிட்டால் மூன்றாவதாகப் பிறக்கும் குழந்தை ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் மூக்குக் குத்துகின்ற பழக்கம் உண்டு. ஒரு ஆண் பிள்ளை மூக்குத்தியிருந்தால் அவன் மூன்றாவது பிள்ளை என்று தெரிந்து கொள்ளலாம். பெண்கள் அப்போதெல்லாம் இரண்டு மூக்கிலும் மூக்குத்தி இருந்தன. அதனால்*

முகம் அவர்களுக்கு அழகாக இருந்தது. ஆனால் இப்போது நாகரிகம் கருதி மூக்குக் குத்துவதில்லை. இப்பொழுது பெண்கள் தங்களுடைய ஆடைகளை மாடலிங் ஆக்கியதனால் மூக்குக் குத்துவதைத் தவிர்த்துவிட்டனர் எனலாம்.

**அரைஞாண் கயிறு**

ஆண், பெண் இரு குழந்தைகளுக்கு அரைஞாண் கயிறு கட்டுவது வழக்கம் ஆகும். இதனை,

**"காதுக் கிசைந்த கடுக்கன் அரணாவுடனே"**

அரைஞாண் கயிறு என்பது முதலில் சிவப்பு அல்லது கருப்புக் கயிற்றால் இடுப்பில் கட்டினர். பின்னர் கருப்பு கயிறு தன் குலதெய்வத்திற்கும், தன் குடும்பத்திற்கும் ஆகாது என்று கருப்பு கயிறைக் கட்ட மறுத்தனர். பின்னர் தன் வசதிக்கேற்ப வெள்ளி, தங்கம், தகட்டில் இலைவடிவமாக செய்து குழந்தைகளின் இடுப்பில் கட்டி ஆண் உறுப்பும், பெண் உறுப்பும் பிறர் கண்ணில் படாதவாறு மறைத்துக் கட்டினர். பின்னர் வெள்ளி, தங்கம் இவைகளைக் கம்பிபோல் இடுப்பில் கட்டுகின்றனர். இதனைக் கட்டுதால் மற்வர்கள் குழந்தையைப் பார்க்கும்போது இடுப்பில் கட்டி இருப்பதுதான் கண்ணில் தென்படுமாம். குழந்தையை யாரும் கண்ணு வைக்க மாட்டார்கள் என்பதன் பொருளாகும். மேலும் குழந்தை வளமோடு நலமாக வளர வேண்டும், வாழவேண்டும் என்ற விருப்பமாகும்.

**தாலாட்டு**

குழந்தையைத் தூங்கச் செய்ய, தாய், பாட்டி, அத்தை போன்ற உறவினர் பாடும் பாட்டு தாலாட்டாகும். தாலாட்டு என்ற தொடரை தால்+ஆட்டு என்று பிரித்து 'தால்' என்றால் நாக்கு அதனை ஆட்டிப் பாடுவதே தாலாட்டு என்ற இலக்கியவாணர் குறிப்பிடுவர். ராராட்டு, ரோராட்டு, தாராட்டு என்றும் தாலாட்டு நாட்டாரால்

குறிப்பிடப்படுகின்றது. தாலாட்டுப் பாடுபவருக்கு நெடியதொரு பாடல் தெரிந்திருப்பினும் நீட்டிப்பாடும் திறமிருப்பினும் குழந்தை தூங்கத் தொடங்கும் நேரத்தைப் பொறுத்தே அதன் நீட்சி அமையும். உலகெங்குமுள்ள பல்வேறு மொழிகளில் தாலாட்டுப் பாடல்கள் பாடப்படுகின்றன. தாலாட்டுப் பாடல்களுக்கு முறையான தொடக்கம் உண்டு.

தாலாட்டு என்பது குழந்தைகளைத் தொட்டிலில் இட்டுத் தூங்க வைப்பதற்காகப் பாடப்படும் பாட்டாகும். இதுவும் பெண்களது தனிப்பட்ட துறையாகும். புதிய தலைமுறையினருக்கு அதிலும் நகர்ப்புறங்களில் வாழும் பெண்கள் பலருக்குத் தாலாட்டுப் பாடல்கள் பாடத் தெரியாது. கிராமத்திலுள்ள வயது முதிர்ந்த பெண்கள் இன்னும தாலாட்டுப் பாடுகின்றனர். அவர்கள் தங்களது தாலாட்டுப் பாடும் திறமை குறித்துப் பெருமையும் அடைகின்றனர். சில ஆண்களுக்குத் தாலாட்டுப் பாடல்கள் பாடத் தெரியும் என்றாலும் கூட குழந்தைகளைத் தூங்க வைப்பதற்காக அவர்கள் தாலாட்டுப் பாடும் வழக்கம் இல்லை. பெரும்பாலும் குழந்தையைத் தாலாட்டுப் பாடி தூங்க வைக்கின்றாள். சில சமயங்களில் குழந்தையின் அத்தை, சித்தி பாட்டி போன்றவர்கள் குழந்தையைத் தூங்க வைப்பதற்காகத் தாலாட்டு பாடுகின்றனர் (கோதண்டராமன், 1988: 41) ஆயினும் இன்று மக்களிடையே பொதுவாகக் காணப்படும் ஆண், பெண் தன்மைகளை ஆராயும்பொழுது உணர்ச்சி வசப்படும் இயல்பு பெண்களுக்கே அதிகமாக இருப்பதைக் காண்கின்றோம். இவ்வாறான நிலையில் தாலாட்டுக்கள் பெண்களது மகிழ்ச்சி, துக்கம், வாழ்க்கைச் சிக்கல்கள், உணர்ச்சிகள், ஆசைகள், ஏமாற்றங்கள் முதலியவற்றின் வெளிப்பாடாக அமைவதுடன் சமூகத்தில் பெண்களது நிலையைப் புரிந்து கொள்ளவும் ஏதுவான தரவுகளாக அமைகின்றன.

கிராமத்துத் தாய்மார்கள் மகப்பேறு கிடைத்த மகிழ்ச்சியாலும், ஊரார் மலடி என்று பழி தூற்றாவண்ணம் காப்பாற்றிய மகிழ்ச்சியாலும்

மக்கட்பேறு கிடைக்காவிடின் வளமில்லாதவள் என்று கணவன் கைவிட்டு விடுவானோ என்ற அச்சத்தை அகற்றியதாலும், வாழ்நாள் முழுவதும் கணவனோடும் பாதுகாப்புடன் வாழும் வகை செய்ததாலும் குழந்தைகளுக்குத் தாலாட்டுப் பாடி மகிழ்கின்றனர்.

**"பத்து வருஷமா என் கண்ணே-நீ**
**பாவனில்லா வாசலிலே**
**கைவிளக்குக் கொண்டு நீ**
**கலி தீர்க்க வந்தவனோ"**

என்று தம்முடைய மகிழ்ச்சிக்கான காரணத்தைக் கூறி குழந்தையின் அழகைக் கூறுகின்றாள்.

பெண்கள் இதற்கென்று தனியாகப் பயிற்சி பெறுவதில்லை. தாலாட்டுப் பாடல்களில் செல்வம், முத்து, பவளம், மாடு, எருமை போன்ற வளம் தரும் சொற்கள் மிகுதியும் பயன்படுத்தப்படுகின்றன. இவ்வாறு வளம் தரும்சொற்களைப் பயன்படுத்துவது குழந்தை வளம் பெற்று வளர வேண்டும், வாழவேண்டும்என்ற எண்ணம் ஆகும்.

**பூப்படைதல் (அ) பருவமடைதல்**

பருவமடைதல் என்பது ஒரு பெண்ணின் வாழ்வில் முக்கியமான கட்டமாகும். பருவமடைந்த பெண் மணவாழ்விற்குத் தகுதியானவள் என்று கருதப்படுகின்றாள். ஒரு பெண் பருவமடைந்ததைக் குறிப்பிடும் சொற்களான வயதுக்கு வந்துட்டா, பருவமடைஞ்சிட்டா, ஆளாயிட்டா, பெரிய பொண்ணு ஆயிட்டா, சமைஞ்சிட்டா, பெரிய மனுஷி ஆயிட்டா, மேஜர் ஆயிட்டா என்ற சொற்களினால் வழங்கி வருகின்றனர்.

பூப்பு என்ற சொல் பூத்தல் என்ற பொருளில் பெண் என்பவள் பூ மொட்டைப் போன்றவள் அதுபோலவே அவளையும் உருவகப்படுத்திப் பூப்படைந்து விட்டாள் என்று கூறுவது வழக்கம். சில இடங்களில் வயதுக்கு வந்த பெண்ணைச் சமர்த்தி என்கின்றனர். அவளுடைய

புத்திசாலித்தனமும், சுறுசுறுப்பும் வாய்க்கப் பெற்றுவிட்டாள் என்பதைக் குறிக்கின்ற சொல் ஆகும். அதாவது பூப்பு அடைந்த இளம்பெண் தாய்மை அடைவதற்கான உடற்தகுதியைப் பெற்றுவிடுகிறாள் என்பதைக் குறிக்கின்றன. ஒரு பெண் பூப்படைந்த நாளிலிருந்து அவளது பெற்றோருக்கும் உறவினர்களுக்கும் அவளைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு அதிகரிக்கிறது. அவளது கண்ணிமைக்குக் களங்கம் வராது அவளை மணம் புரிந்து கொடுப்பது பெற்றோர்கள் எதிர்கொள்ள வேண்டிய முக்கியப் பொறுப்பாகும். இப்பொறுப்பைப் பூப்படையும் நிகழ்ச்சி அவர்களுக்கு அறிவுறுத்தி அவர்களை அச்சமடையவும் செய்கின்றது.

**பூப்பு விளக்கம்**

குழந்தைப் பருவத்திலுள்ள ஒரு பெண்ணின் பெண் குறி விரிவடையாமல் ஒரு மெல்லிய சவ்வு போன்ற தோலால் இணைக்கப்பட்டிருக்கும். பூப்பெய்தும் காலத்தில் மெல்லிய தோல் சிதைந்து கிழிந்து விடுகின்ற வேளையில் முதல் முதலாக இரத்தம் வெளியேறுகிறது. இதைத் தொடர்ந்து பெண்ணானவள் கருத்தரித்துள்ள காலம் தவிர ஏனைய நாட்களில் இருபத்தெட்டு நாட்களுக்கு ஒரு முறை சுழற்சி முறையில் இச்செயல் நிகழ்கிறது. ஒவ்வொரு பெண்ணின் உடல்நிலையைப் பொறுத்து அதாவது உடல் வலிமையும், சத்தையும் பொறுத்து மூன்று நாட்களில் இருந்து ஏழு நாட்கள் வரை இது நிகழ்வதுண்டு. தாய் வழிச் சமுதாயத்தின் இனப்பெருக்கம் என்னும் வளமையும், செழுமையும் வெளிப்படுத்தும் சின்னமாகப் பெண்குறி அமைந்துள்ளது. பெண்குறியைப் பூப்பகம் என்றழைக்கப்படுகிறது. பூப்பகம் விரிவடைவதனால் பூப்பு என்ற சொல் வழங்கப்பட்டிருக்கலாம் என்கிறார் (சாந்தி, ந. 1996: 48) மேலும் சடங்கு என்ற சொல் பொதுச் சொல் என்ற போதிலும் சடங்கு என்றாலே அனைத்து மக்களிடம் பூப்பு என்பதைத் தான் குறிக்கிறார்கள்.

**பூப்புச் சடங்குகள்**

*முதலாவதாக, பூப்படைந்த பெண்ணை அவளது வீட்டின் உட்பகுதியில் ஒரு ஓரத்தில் தனிமைப்படுத்துகின்றனர். சில மக்களிடையே இதற்காகத் தனியான குடில்களைக் கட்டும் பழக்கமும் வழக்கில் உள்ளது.*

**“புத்தியறிந்ததின் மேல் பூவைதனைப் பொம்மனும்**
**வீட்டிற்கு மேற்கே ஒரு நாழி தூரத்தில்**
**பச்சைக் குடிசை கட்டிப் பண்பாயவன் கரித்து**
**பொம்மியம்மாளைப் பொங்கமுடன் கூட்டிவந்து**
**அந்தக் குடிசைதனில் அமர்ந்திருக்கச் செய்து வைத்து”**

*என்று பாடி மகிழ்கின்றனர்.*

*கன்னிப் பெண்கள் அதாவது பூப்பெய்திய பின்னர் அல்லாது மாதவிடாய் காலங்களில் வீட்டிற்குள்ளே செல்லக்கூடாது. சமையல் ஏதும் செய்யக் கூடாது. வீட்டிலுள்ள மற்றவர்கள் சமைத்து உணவு கொடுப்பார்கள். வீட்டிலுள்ள பாத்திரங்கள் எதையும் தொடக்கூடாது என்பதை*

**“மாமியா சுட்டுப் போட்டு**
**மாதுளங்கா(ய்) பூப்போல**
**நாத்தனாரெச் சுட்டுப் போட்டு**
**நார்த்தங்காய் பூப்போல**
**தாய் சுட்டுப் போட்டுத்**
**தாழம்பூப் பூப்போல”**

*என்ற பாடல் அடிகள் கூறுகின்றன.*

**“தண்ணிக்குப் போ மகளே**
**தடம்பார்த்துப் போ மகளே**
**முட்டாளுப் பையங் கண்டா**
**முகங்கொடுத்துப் பார்க்காதே**
**பாசங்கலந்து வரும்**

**பலபேரும் மோக்கும் தண்ணி**

**நீரும் கலந்து வரும்**

**நிண்ணு மோக்க நேரமாகும்''**

*(வரதராசன், 1988: 261)*

*இவ்வாறாக இக்காலகட்டத்தில் ஒரு பெண் அவளது அடுத்த கட்ட வாழ்விற்கு உடலளவிலும், மனத்தளவிலும் பயிற்றுவிக்கப்படுகின்றாள்.*

*பூப்பெய்திய பின்னர்தாய் தந்தை இத்தகவலைத் தாய்மாமனுக்குத் தெரிவிக்கின்றனர் அன்று மாலைக்குள் தாய்மாமன் தன் குடும்பத்துடன் வந்து உரிய சீர்வரிசை எடுத்து வருகின்றார். சீர்வரிசையாக பாவாடை, தாவாணி, தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு, சர்க்கரை, மஞ்சள், குங்குமம், பூ மற்றும் கூடுதலாகப் பாத்திரங்கள் எடுத்துவருகின்றனர். அன்று மாமனின் பங்காளிகளை அழைத்துச் செல்வார்கள். பின்னர் பூப்பெய்திய பெண்ணின் தலையில் சல்லடை பிடித்து அதன் வழியாக நீர் ஊற்றுவர். மாமன் வீட்டில் இருந்து எடுத்து வந்த புத்தாடையை அணிவிப்பர். இவையனைத்தையும் தாய்மாமனின் மனைவியே முன்னின்று செய்வர். தாய் மாமன் மற்றும் மனைவி இல்லையெனில் மாற்று ஏற்பாடு செய்வர். இதன்பிறகு சத்தான உணவுகளையும், பலகாரங்களையும் கொடுப்பார்கள். இதனால் பூப்பெய்திய பெண்ணின் உடல்வலிமை பெறும். பெண்ணிற்குப் பூப்புச் சாதகம் சிறப்புடையதாகும்.*

**''மன்னவன் பிறந்த நாளும்**

**மங்கையர் பூத்த நாளும்''**

*என்ற வரிகள்மூலம் மயிலை பூபதிராஜன் விளக்குகிறார். (மயிலை பூபதிராஜன், 1986: 22) பூப்புச்சாதகத்தில் ஒரு பெண் வாழ்வில் எப்படியிருப்பாள்? கணவன் எத்தகையவன் என்பது முதலான செய்திகள் அறியப்படும். இந்நிகழ்ச்சிக்கு வந்தவர்களுக்குச் சர்க்கரை, பூ, வெற்றிலை பாக்கு ஆகியன வழங்கப்பெறும். இந்நிலையில் அவர்கள் தீட்டுக் கழியும் வரை கோயில்களுக்குச் செல்வதில்லை. மேலும் சிறு குழந்தைகளைத்*

*தூக்கினால் அக்குழந்தையின் உடல்நலம் கெடுகிறது. முடியாத நிலையில் குழந்தைகளைத் தூக்கினால் அக்குழந்தை உடுத்தியிருந்த ஆடையைக் கழற்றிவிட்டுத் தூக்கினால் புனிதம் காக்கப்படுவதாக நம்புகின்றனர்.*

*புனித நீராட்டுதலுக்குப் பின்னர் அவள் தனது தாய்மாமன் தங்கத்தாலான பலவிதமான அணிகலன்களை அணிவார்கள். பின்னர் அ வளை ஒரு மணப்பெண்ணைப் போன்று அலங்கரித்து அமரச் செய்வர். இச்சமயம் அவளுக்கு விளையாட்டாக ஒரு திருமணம் நிகழும். அவளுக்கு மணமகனாக அவளது முறைப்பையனின் சகோதரி அல்லது மணமகன் முறையிலுள்ள வேறு ஒரு பெண் அவள் அருகில் அமர்ந்திருப்பாள். அவளுக்கு மணப்பையனைப் போன்று அலங்காரம் செய்யப்பட்டிருக்கம். இருவருக்கும் விளையாட்டாகத் திருமணம் நிகழ்த்தி உறவினர்கள் மகிழ்கின்றனர். இவ்வாறான சடங்குகள் ஒரு பெண்ணுக்குத் தனது அடுத்த கட்ட வாழ்வின் குறிக்கோள் திருமணமென்பதையும், அத்திருமண வாழ்விற்கு அவள் ஆயத்தமாக வேண்டியதையும் அறிவுறுத்துகின்றன.*

*கி.பி. முதல் நூற்றாண்டில் வந்த பிளினி (கி.பி. 23-79) என்பவர் வீட்டுக்கு விலக்காகிய மகளிர் பற்றிக் குறிப்பிடும் கருத்து இவ்வின மக்களிடம் இடங்கொண்டிருத்தலை உணரமுடிகிறது. இயற்கையின் கூறுகள் மாதவிலக்காகிய பெண்களால் பாதிக்கப்பட்டமையினை மாதவிலக்குக் கொண்ட பெண்ணொருத்தி இனிய பழம் தரும் மரத்தினடியில் நின்றால் அம்மரத்தின் பழத்தினுடைய இனிமை கசப்பாக மாறிவிடும். அவள் தானியத்தைத் தொட்டால் அத்தானியம் விதைப்பதற்கு உதவாது" என்கிறார். (இராகவன், வி.எஸ்.வி., 1977: 155-156)*

*க. காந்தியின் மேற்கோள் கருத்து ஒன்று அமைந்துள்ளது " இனிய பழம் கசப்பாகிவிடும் தானியம் அவளால் தொடப்பட்டால் விதைப்பதற்கு உதவாது. செடியினருகில் சென்றால் கருகிவிடும். மரத்தினடியில் உட்கார்ந்தால் பழங்கள் அழுகிவிடும். முகம் பார்க்கும் கண்ணாடி அழுக்குப் படிந்தது போலாகும்" (2003: 155) பெண் மாதவிலக்குக் காலத்தில் பெண்ணைப் பிரித்து வைக்கவும், தூய்மைப்படுத்தவும்*

செய்கின்றனர். (தர்ஸ்டன், 1975: 93) தீட்டுக்காலம் முடியும் வரை பெண்ணைத் தனியிடத்தில் வைப்பதால் அவளால் எவ்விதப் பாதிப்பும் ஏற்படாது என நம்புகின்றனர்.

பூப்பெய்திய பெண்ணைப் பதினாறாம் நாள் வரை வெளியில் செல்லும்போது தீய ஆவிகள் அவளை அணுகாமல் இருக்க இரும்பினைக் கையில் கொண்டு செல்வாள். அப்போது அவள் தலையில் மணம் வீசும் மலரினைச் சூடியிருப்பாள். அதனாலும் தீய ஆவிகள் தாக்கும் என்பதற்காகவும் இரும்பினைக் கொண்டு செல்கின்றனர். அவள் உறங்கும் இடத்தில் உலக்கை, அரிவாள், விளக்குமாறு போன்ற பொருட்கள் அவர்கள் அருகில் வைக்கின்றனர். இதற்குக் காரணம் வீட்டில் யாரும் இல்லாத நிலையில் மற்ற ஆண்மகனால் தனக்கு எந்தப் பாதிப்பும் வரக்கூடாது என்பதற்காகவும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் ஆயுதமாக மறைமுகமாக வைக்கப்படுகிறது.

தே. ஞானசேகரன் ‘உலக்கையையும் உரலையும் ஆண் பெண் இனச்சேர்க்கையின் குறியீடாகக் கருத இடமுண்டு. உரலும் உலக்கையும் சேர்ந்திருப்பது போன்ற பருவம் அடைந்த பெண் ஆடவனுடன் விரைவில் சேரவேண்டும் என்ற நம்பிக்கையே” இவற்றை அப்பெண்ணிடத்தில் வைப்பதற்கான காரணம் என்கிறார் தே. ஞானசேகரன் (1987: 21) இனக்குழு மக்களிடையே காணப்பட்ட இவ்வழக்கம் தொன்றுதொட்டு மரபு வழிப்பட்ட நம்பிக்கையில் நடத்தப்படும் சடங்கு முறையாகத் தொடர்கிறது எனலாம்.

பெரும்பான்மையான குடும்பங்களில் அவரவர்களின் பொருளாதார நிலைக்கு ஏற்பவும் குடும்பச் சூழல் மற்றும் பூப்பெய்திய நாளின் மீது மக்கள் வைத்துள்ள நம்பிக்கை அடிப்படையிலும் மிகச் சாதாரணமாகவோ அல்லது அழைப்பிதழ் அச்சடித்து உறவினர்களை வரவழைத்துக் கொண்டாடும் வழக்கம் உள்ளது. இந்நாளில் செய்ய இயலாதவர்கள் மூன்றாம் மாதம் அல்லது திருமணத்திற்கு முன்பாக நிகழ்த்துகின்றனர்.

**உணவு தருதல்**

*பெண் பூப்பெய்திய செய்தி தெரிந்ததும் தலைக்குத் தண்ணீர் ஊற்றும்வரை உணவு கொடுக்க மாட்டார்கள். பின்னர் பச்சை முட்டையும் நல்லெண்ணையும் கொடுப்பார்கள். அதன்பிறகு மதிய உணவாக சத்தாரண இலையும், சங்கிலையையும் வைத்து அரைத்துக் குழம்பு வைப்பர். இதனைப் பத்தியக் குழம்பு அல்லது மருந்துக் குழம்பு என்கின்றனர். இதனை உண்பதனால் கை, கால், இடுப்பு வலி இருக்காது என்றும் உடலுக்கு நல்ல வலிமையுண்டு என்பதனால் இதனை உணவில் சேர்த்துக் கொள்கின்றனர்.*

*பூப்பெய்திய அல்லது மாதவிடாய் காலங்களில் தனக்குக் கொடுக்கும் உணவை வீணாக்காது முற்றிலுமாக உண்ண வேண்டும். உண்ட உணவில் எஞ்சியவை இருந்துவிடுமானால் அதனை மற்றவர்கள் உண்ணமாட்டார்கள். மேலும் நாய் மற்றும் விலங்குகள்உண்ணாதவாறு குழி தோண்டிப் புதைத்து விடுவர். எஞ்சிய உணவை விலங்குகள் தின்றால் அவ்விலங்குகள் வாந்தி எடுத்துக் கத்திக் கொண்டே இருக்கும். வாயில் இருந்து வாணி (எச்சில்) வடிந்து கொண்டே இருக்கும்.இதுபோன்று தனக்கும் வந்துவிடும் என்று இம்மக்கள் நம்புகின்றனர்.*

**பலகாரம் கொடுத்தல்**

*அவளைக் காணவரும் நண்பர்களும், உறவினர்களும் அவளுக்கு இவ்வாறான உணவு வகைகளைக் கொண்டு வந்து கொடுக்கின்றனர். முட்டை, நல்லெண்ணெய், பனைவெல்லம், உளுந்து இவ்வாறான உணவுப் பொருட்கள் இக்காலகட்டத்தில் அவளது உணவில் முக்கிய இடம்பெறுகின்றன. இவ்வாறான உணவுப் பொருட்களை உண்டு ஓய்வெடுத்துத் தனித்து அறையினுள் தங்குவதால் அவளது உடல்நலன் முன்னேற்றமடைவதோடு, இடுப்பு வலி இல்லாமலும் உடம்பு பலவிதமான சத்துக்களையும் உடல் பொலிவு பெறுகின்றது. பின்னர் உளுந்து களி மற்றும் பச்சை அரிசியில் செய்த புட்டு, வடை இன்னும் பலவிதமான*

பலகாரங்களை உறவினர்கள் கொண்டுவந்து கொடுப்பர். இதனால் பூப்பெய்திய பெண்ணின் உடலிலிருந்து வெளிவரும் இரத்தத்தால் ஏற்படும் சோர்வு நீங்குகின்றது என்று கருதுகின்றனர்.

இந்நெறிகளில் முக்கியமானது அவள் இனி ஆண்களுடன் பழகுவதைத் தவிர்க்க வேண்டுமென்பதாகும். ஆண்கள் யாராக இருப்பனும் தனது குடும்பத்திலுள்ள நெருங்கிய உறவினர்களாக இருப்பினும்கூட விலக்கி வைத்துப் பாகு வேண்டியவர்களே என்பது விதியாகும். இக்காலகட்டத்தில்தான் அவளது வாழ்வில் கன்னிமையின் புனிதத்தன்மை வலியுறுத்தப்படுகின்றது.

பதினாறாம் நாள் காலை குடிசையைப் பிரித்து அல்லது திண்ணையைச் சாணத்தால் மொழுகி சுத்தம் செய்வர். பின்னர் மாட்டுக் கோமியத்தை மாவிலையால் தொட்டுத் தெளிப்பர். மாலை நேரத்தில் தாய் மாமன் கட்டி மேளத்தோடு சீர்வரிசை எடுத்து வருவார். பெண்ணுக்கு மாலை அணிவித்து பெண்ணை வீட்டு வாசலில் பந்தலில் அமரச் செய்வர். பின்னர் அத்தை, மாமி, பெரியவர்கள் அனைவரும் அப்பெண்ணுக்கு மஞ்சள், குங்குமம், பூ வைத்து சுற்றுவார்கள். பிறகு அம்மி குழவி, படி, வா;ழைக்காயைச் சிறு துண்டாக வெட்டி அதை விளக்கமாறு குச்சியில் செருகி பெண்ணின் தோறப்பட்டை, முழங்கால், போன்ற இடங்களில் வைத்து எடுப்பர். மேலும் படியில் நெல் நிரப்பி அதன் மேல் நல்ல விளக்குக் கொளுத்தி ஆரத்தி எடுப்பர். பின்பு தாய்மாமன் அல்லது மற்றவர்கள் பொட்டு வைத்து மஞ்சள் தண்ணீர் தெளித்து வீட்டுக்குள் அழைப்பர். அவர்கள் பணம் வைத்து பெண்ணின் கழுத்திலிருந்து மாலையைக் கழற்றுவார். மேலும் இந்நிகழ்ச்சிக்கு வந்தவர்கள் பெண்ணுக்குப் பணம் வைத்துக் கொடுப்பர். இச்சடங்கிற்கு வந்தவர்கள் அனைவருக்கும் சைவம் அல்லது அசைவம் விருந்து நடைபெறும். இவ்விருந்தினைப் பூப்பெய்திய பெண் வீட்டாரே அனைவருக்கும் கொடுக்கின்றனர்.

**திருமணம் தொடர்பான பழக்க வழக்கங்கள்**

*திருமணம் என்பது ஒரு பெண்ணின் வாழ்வின் திருப்புமுனையாக அமைகின்றது. திருமணத்தின் முக்கியத்துவம் ஆண்களின் வாழ்விலும் பெண்களின் வாழ்விலும் வேறுபட்டு அமைகின்றது. தமிழ்நாட்டில் பெரும்பான்மையான மக்கள் திருமணத்திற்குப் பின் பெண் இடப்பெயர்ச்சி முறையைக் கடைப்பிடிக்கின்றனர். திருமணமான பின் ஒரு பெண் தனது குடும்பத்தார் அண்டை அயலார், உறவினர்கள் இவர்களை எல்லாம் விட்டுப் பிரிந்து கணவன் வீடு செல்கின்றாள். பெரும்பாலும் கணவனது இல்லம் அவளுக்குப் பழகியறியாத புதிய சூழ்நிலையாகவே இருக்கும். திருமணத்திற்குப் பின் பெண்தான் அச்சூழலுக்குத் தக்கவாறு தன் வாழ்வை மாற்றிக் கொள்ள வேண்டுமென்பது சமூகத்தின் விதிமுறையாகும்.*

*ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு ஒருவருக்கொருவர் அன்பு பாராட்டி வாழ்க்கையில் ஏற்படும் இன்ப துன்பங்களில் இருவரும் சம பங்கேற்று ஒற்றுமையோடும், ஒருமித்த உணர்வுகளோடும் வாழ்க்கையின் அறக்கடமைகளை நிறைவேற்றுவோம் என்று உறுதியும் ஒப்பந்தமும் ஏற்கின்ற இல்லறத்தின் தொடக்க நாடே திருமணமாகும்.*

**மணம்–சொல்லும் பொருளும்**

*திருமணம் என்பது ஓர் ஆடவனும் ஒரு பெண்ணும் இணைந்து வாழ்வதற்காகச் சமுதாயத்தால் ஏற்படுத்தப்பட்ட வினைமுறையாகும். இவ்வினை காரணமாக மனிதன் சில மதிப்புகளையும் பல பொறுப்புகளையும் ஏற்க வேண்டியுள்ளது. ‘மணம்’ என்ற சொல் நெருங்கிக் கலத்தல், மண்ணின் நலங்களை நிறைவாக நுகரும் வாய்ப்புப் பெறுதல், புகழார்ந்த வாழ்வு வாழும் நிலைமை பெறல், வாசனை பொருந்திய வாழ்க்கை நடத்தும் வசதி படைத்தல் முதலிய பொருட்களைத் தன்னகத்தே அடக்கிக் கொண்டுள்ளது.*

மொட்டு மலர்ந்தால் தான் மணம் வீசும் என்னும் உண்மையில் பருவம் அடைந்தல்தான் திருமணம் செய்து கொள்வர் என்னும் உண்மையும் விளங்குகிறது என்கிறார் கி. இராமலிங்கம் (1991: 24) ஒருவனும் ஒருத்தியும் இணையும் நிகழ்வினைத் தற்காலத் தமிழ் மக்கள் திருமணத்தைக் 'கல்யாணம்', 'கலியாணம்' என்ற சொற்களால் வழங்கி வருகின்றனர். திருமணம் என்பது மனிதனுக்காக மனிதனால் நடத்தப்படும் ஒருவகைச் சடங்கு என்பர் க. காந்தி (2003: 34). திருமணம் என்ற சடங்கின் தொடக்கத்தைப் பற்றி ஆராயும்போது பண்டைய தமிழர்கள் திருமணம் இன்றியே இல்வாழ்க்கையில் ஈடுபட்டனர். பின்னர் இச்செயற்பாட்டில் பொய்யும் வழுவும் மிகுதிப்படவே அவைகளை களைதற்பொருட்டுச் சடங்குகள் என்ற பெயரில் சில விதிமுறைகளை ஏற்படுத்தினர்.

அத்திருமண விதிகளை அனைவரும் பின்பற்றினர். திருமணம் என்ற சொற்பொருளைக் 'கரணம்' என்ற சொல்லினால் குறிப்பிடுகின்றார். 'கரணம்' என்ற சொல்லிற்கு 'வதுவைச் சடங்கு' என்ற பொருள் கூறுகின்றார் இளம்பூரணர்.

**திருமணத்தின் தொடக்கமும் வளர்ச்சியும்**

மனித சமுதாயத்தின் தொடக்க காலத்தில் விலங்குகளைப் போலவே தங்களது வாழ்வை அமைத்துக் கொண்ட மனித இனம் விலங்கினங்களைப் போல் யார் யாரோடு எப்போதும் வேண்டுமானாலும் உடலுறவு கொள்ளலாம் என்ற கட்டுப்பாடற்ற செயல் ஆதிமனிதர்களிடம் காணப்பட்டது. பின்னர் தான் பெற்ற குழந்தைகளிடமே உடலுறவு கொண்டு வாழ்ந்த காலமும் இருந்தது. குடும்பத்துக்குள்ளே உடலுறவு கொள்வதனால் பலவிதமான சிக்கல்களும் அழிவுகளும் ஏற்பட்டன. முறைகேடற்ற இத்தகைய உறவுகள் நாகரிகமற்றதாய்க் கருதும் காலம் தொடங்கியது. பின்னர் மனிதனும் சிந்திக்க தொடங்கினான். இரத்த உறவு முறையினரான தந்தை-மகள், தாய்-மகன், சகோதரன்- சகோதரி இவர்களுடன் நிலவிய தகாத உறவுகளை விளக்கினர். பின்னர் இந்த உறவு

உடையோர் பாலுறவு கொள்வது அனைத்துப் பண்பாட்டிலும் தடைசெய்யப்பட்டது.

எனவே இரத்த உறவு உடையவர்களைத் தவிர்த்து தன் உறவு அல்லாத ஒரு சிலருடன் உடலுறவு கொண்டனர். அப்போதெல்லாம் குழந்தைகளுக்கும், தந்தைக்கும் இடையே உள்ள உறவு முக்கியத்துவம் பெறவில்லை. ஒரு குறிப்பிட்ட வயது வரைதான் தாய் தந்தையரை அண்டி வாழ்ந்தனர். பின்னர் தன்னிச்சையாக வாழ ஆரம்பித்தனர்.ஆண், பெண் இருபாலருக்கும் பொது என்ற நிலைமாறி கால்நடைகள் ஆண்களுக்கும் நிலம் பெண்களுக்கும் உரிமையாயின. அப்போது சொத்துக்களின் உரிமை தாயிடம் இருந்தது. காலப்போக்கில் அவையும் மாற்றம் பெற்றன. அதாவது பெண்களுக்கு நேரிடும் மாதவிலக்கு காலங்களில் கடினமான வேலைகளைச் செய்ய முடியாதெனினும், அதனால் பயிர்த்தொழிலுக்கு உதவுகின்ற வகையில் ஆண்கள் தேவைப்பட்டனர். பின்னர் குழந்தைகளைப் பெறவும் நிலத்தைப் பராமரிக்கவும் அவளுக்கு நிரந்தரமாக ஆண் துணை தேவைப்பட்டனர். தாய்வழி குடும்பத்திலிருந்து தந்தை வழித் தலைமைக் குடும்பம் தோன்றலாயிற்று. எனவே தாய்வழித் தலைமைக் குடும்பம் இருந்த காலகட்டத்தில் திருமணம் தோன்றியிருக்கலாம் என்று கருத முடிகிறது.

தாய்வழிச் சமுதாயத்திலிருந்து தந்தை வழிச் சமுதாயத்திற்கு மாறிய காலகட்டத்தில் மணத்துணையைத் தேடும் வகை பல இருந்துள்ளன. அவை தகுதிகாண் திருமணம் (Probationary Marriage), கடத்தல் மணம் (Marriage by capture), பணி செய்ய மணம் (Marriage by service), தேர்வுத் திருமணம் (Marriage by trial) முதலான திருமண வகைகள் உருவாயின என்கிறார் ந.சாந்தி (1993: 66)

பலவகையான திருமணங்கள் தோன்றியதன் காரணமாகச் சமுதாயத்தில் ஒழுங்கும், கட்டுப்பாடும் வரையறைகளும் காக்கப்பட்டு வருகின்றன. மேலும் இதனை உணர்வு உந்தும் கூடிவாழ்தல் என்ற நிலை

*மாறி உணர்வு ஓர் ஒழுக்கமாக ஒழுகலாறாகத் திருமணம் என்ற அமைப்பின்வழி ஆக்கப்பெற்றது என்கிறார் க.ப. அறவாணன் (1987: 109). "நாகரிக மக்களின் சமூக வாழ்வில் திருமணம் ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். பழங்கால மக்களின் வாழ்க்கை முறை விலங்கு நிலையை ஒத்துக் காணப்பட்டது. பின்னர் நாகரிகம் வளர வளர அவ்வாழ்வில் ஒழுங்கும், நியதியும் படிப்படியாகத் தோன்றத் தொடங்கின. இறுதியில் ஒருத்தி ஒருவனுக்கு உரியவள் என்ற நிலைக்கு மக்கள் வளர்ந்துள்ளனர். அப்பொழுதுதான் திருமணம் அதற்குரிய சடங்குகளும் உருவெடுத்தன என்கிறார் ஆர். வீரபத்திரன் (1968: 63).*

**திருமணம் பற்றி அறிஞர்களின் விளக்கங்கள்**

*மனிதன் ஒரு சமூக விலங்கு. மனிதன் தன்னந்தனியாக வாழ்பவன் கிடையாது. அவன் மக்களோடு மக்களாகக் கூடி வாழ்பவன். ஒவ்வொரு தனிமனிதனுடைய வாழ்வும் சமுதாயச் சூழல்களாலேயே அமைந்துள்ளது. மனித வாழ்க்கை பலவிதமான பிரச்சனைகளும், போராட்டங்களும் உள்ளன. இதனை ஒவ்வொரு மனிதனும் சந்திக்க வேண்டியுள்ளது. வாழ்க்கையில் தனக்கு வரும் சோதனைகளையும் சவால்களையும் பகிர்ந்து கொள்வதற்குத் துணைகள் தேவைப்படுகின்றன. இந்த துணைகளில் பெண்ணின் துணையே தனக்கு ஆதரவாகவும் வாழ்நாள் முழுவதும் உடன் இருக்கும் என்று உணர்கின்றனர். இத்தகைய தகுதி வாய்ந்த ஆணுடன் பெண்ணை இணைத்து வைக்கும் ஒப்பந்த நிகழ்வே திருமணம் எனலாம்.*

*வாழ்க்கையின் சுகதுக்கங்களில் பங்கெடுத்துக் கொள்ளும் தம்பதியர்களை* Life partner *என்ற ஆங்கிலச் சொல்லால் அழைப்பதும் பொருத்தமாக உள்ளது. ஒரு பாதியாகி பெண்ணும் மற்றொரு பாதியாக ஆணும் இணைவதையே திருமணம் என்பர் (சுப்பு ரெட்டியார், 1970: 2) மேலும் திருமணம் என்பது ஒழுங்குபடுத்தப்பட்ட பாலியல் பழக்கத்தினுள் மேம்பட்ட ஏதோ ஒன்று ஆகும். திருமணம் சொர்க்கத்தில்*

*நிச்சயிக்கப்படுகிறது. வாழ்க்கை என்பது ஆயிரங்காலத்துப் பயிர் என்ற வாசகங்கள் திருமணம் என்பது தெய்வீகத்துடன் இணைந்து புனிதமானது. இன்னாருக்கு இன்னார் என்று முன்னமே தெய்வத்தினால் உறுதி செய்யப்பட்டது எனலாம். வாழையடி வாழையாக பல காலங்கள் வம்சம் விருத்தி அடைய வேண்டும் என்ற நோக்கத்தினை வெளிப்படுத்துவதாகும்.*

*'திருமணம்' ஒரு வாழ்க்கை ஒப்பந்தம் என்று பல நாடுகள் கருதினாலும் திருமணம் ஒரு தெய்வீகமான பிரிக்க முடியாத தெய்வீகப் பிணைப்பு என்றே தமிழ்நாட்டில் கருதப்பெற்று வருகின்றது. 'திருமணம் என்பது ஒரு ஆண், பெண் இருவரும் நெடுங்காலம் சமூகப் பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ளும் ஒப்பந்தம்' என்பார் திருநாகலிங்கம் (1987: 596) ஒரு ஆண் மட்டுமே தனியாக வாழ்க்கையில் முழுமை அடைய முடியாது. அதுபோல ஒரு பெண்ணும் தனியாக வாழ்க்கையில் முழுமை அடைய முடியாது. இருவரும் சேர்கின்ற போதுதான் குடும்பம், வாழ்க்கை இல்லறம் என்ற சொற்களுக்கு முழுமையான பொருள் விளக்கம் பெறப்படுகிறது. திருமணம் என்ற பெயரால் ஆணும் பெண்ணும் கூடிக் குடும்பமாகும் போதுதான் முழுமை நிலை நிறைவாக வருகின்றது. அப்போதுதான் சமுதாய உரிமைகளும், கடமைகளும் அவர்களுக்கு ஏற்படுகின்றன. தனிமனித வாழ்வு சேர்ந்து வாழும் குடும்ப வாழ்வாக மாறுதற்குத் திருமணமே 'வித்து' குடும்ப வாழ்க்கைக்கு அதுவே அச்சாணியாக அச்சமுதாயத்தின் அடிப்படை அலகுமாகும். மேலும் திருமணப்ப ழக்கங்களைப் பின்வரும் பிரிவுகளாகப் பிரித்துள்ளனர்.*

1. *திருமணத்திற்கு முன்பு நிகழக்கூடிய பழக்க வழக்கங்கள்*
2. *திருமணத்தன்று நிகழக்கூடிய பழக்க வழக்கங்கள்*
3. *திருமணத்திற்குப் பின் நிகழக்கூடிய பழக்க வழக்கங்கள்*

*என்று மூன்று வகைகளாகப் பிரித்துள்ளனர்.*

**திருமணத்திற்கு முன்பு நிகழக்கூடிய பழக்க வழக்கங்கள்**
**உறவுகளின் மணமுறை**

*சாதி என்பது சமுதாயத்தில் பெரியதொரு இடத்தைப் பிடித்துள்ளது. திருமண உறவுக்குச் சாதியே மூலாதாரமாக அமைந்துள்ளது. ஒரு சாதினைச் சார்ந்தவர்கள் தங்களின் நெருங்கிய உறவுகளாக மதிக்கப்படுகின்ற தாய்மாமன் மகள், அத்தை மகள், உடன்பிறந்தவனின் மகள், மற்றும் தூரத்து உறவில் மணம் முடிப்பதற்குரிய முறையுள்ளவர்கள், அதே சாதியில் உள்ள பெண்களைத் திருமணம் செய்வதும் செய்து கொடுப்பதுமாகிய வழக்கங்கள் உள்ளன. அந்தந்த கோத்திரத்தைச் சார்ந்தவர்கள் அதே கோத்திரத்தில் பெண் கொடுப்பதும், பெண் எடுப்பதும், சகோதர சகோதர உறவு முறை காரணம் வம்சம் விருத்தியாகாது என்ற காரணத்தினால் மணம் பேசும் வழக்கம் இல்லை.*

**சாதகம் பார்த்தல்**

*மாப்பிள்ளை வீட்டாருக்கும், பெண் வீட்டாருக்கும் பிடித்திருந்தால் இருவர் வீட்டிலும் சாதகம் பார்க்கின்ற வழக்கம் உள்ளது. இருப்பினும் தனக்கு இராசியான சோதிடரிடம் பார்க்கின்ற வழக்கமும் உள்ளது. சாதகம் இல்லாதவர்கள் பெயர்ப்பொருத்தம் பார்க்கின்றனர். இதில் பத்துவகைப் பொருத்தங்கள் உள்ளன.*

1. *தினப் பொருத்தம்*
2. *கணப்பொருத்தம்*
3. *மகேந்திரப் பொருத்தம்*
4. *ஸ்திரி தீர்க்கப் பொருத்தம்*
5. *யோனிப் பொருத்தம்*
6. *இராசிப் பொருத்தம்*
7. *இராசி அதிபதிப் பொருத்தம்*
8. *வசியப் பொருத்தம்*
9. *இரட்சுப் பொருத்தம்*
10. *வேதைப் பொருத்தம்*

*இந்த பத்துவகை பொருத்தங்களில் குறைந்தது ஐந்து அல்லது ஏழு பொருத்தங்கள் பொருந்தியிருக்கும் சூழலில் இருவீட்டாரும் சம்மதம் தெரிவிக்கின்றனர். செவ்வாய் தோசம் இருந்தால் இருவருக்குமே செவ்வாய் தோசம் இருக்க வேண்டும். மூலநட்சத்திரம் உள்ள பெண்ணைத் திருமணம் செய்து கொடுக்கும் இடத்தில் மாமனார் இருக்கக் கூடாது என்றும் அப்படி இருந்தால் இறந்துவிடுவார் என்றும் நம்புகின்றனர். மேலும் பெண்ணுக்கோ அல்லது ஆணுக்கோ கேட்டநட்சத்திரம்இருந்தால் ஆகாது. அப்படி இருந்தால் முதன்முதலில் பெண் கேட்டு யார் வருகிறார்களோ அவர்கள் இறந்துவிடுவர் என்றும் நம்புகின்றனர். மேலும் தாலி பாக்கியம், குழந்தை பாக்கியம் கண்டிப்பாக இருக்கவேண்டும். நாகதோசம் இருந்தால் கோயிலுக்குச் சென்று விளக்குப் போட்டு வழிபாடு செய்தபின் திருமண ஏற்பாட்டினைச் செய்வர்.*

*சாதகம் சாதகமாக அமைந்தால் தான் திருமணத்தால் இணையும் தம்பதியர்கள் மகிழ்ச்சியுடன் நீண்ட காலம் மக்கட்பேற்றுடன் வாழ்வார்கள் என்று நம்புகின்றனர். இந்து சமுதாயத்தாருக்குச் சோதிடம் என்பது ஆண், பெண் இவர்களின் திருமணத்தைத் தீர்மானிக்கும் நீதி வாக்கியமாகத் திகழ்கிறது என்று பி. யோகீசுவரன் (1986: 226) கூறுகின்றார். எனவே சோதிடத்தின் மீதுநாட்டுப்புற மக்களுக்குள்ள அசைக்க முடியாத அளவிற்கு நம்பிக்கை வைத்துள்ளனர்.*

**பெண் பார்த்தல்**

*பெண் பார்த்தல் என்ற நிகழ்வு மிகவும் முக்கியமானதாகும். மாப்பிள்ளை வீட்டார் ஒரு நல்லநாள் பார்த்து பெண்ணைப் பார்க்கின்ற வழக்கம் உள்ளது. இந்த நிகழ்வுக்கு மாப்பிள்ளை வீட்ார் தன் உறவினர்கள் பங்காளிகள் அனைவரையும் அழைத்துச் செல்வார்கள். அப்போது பூ, பழம், வெற்றிலைப்பாக்கு, இனிப்புகள் வாங்கிச் செல்வர். பெண் பார்த்தல் என்ற வழக்கத்தின் வாயிலாகப் பெண்ணின் குண இயல்புகள், பெண்ணின் தோற்றப் பொலிவு, இவற்றுடன் பெண்ணின் பெற்றோர்களது*

குடும்பநிலை, அக்குடும்பத்தவரின் வழிவழிப் பாரம்பரியம், அக்குடும்பத்தினருக்குரிய பொருளாதாரநிலை, அக்குடும்பத்தின்மீது ஊரார்களின் நன்மதிப்பு, இவையனைத்தும் மாப்பிள்ளை வீட்டாருக்கு முழுமையான மனநிறைவினை அளிக்கும். அதோடு உடன் செல்லும் பெண்கள் பெண்ணை நடக்க வைத்துப் பார்த்தும், பேசியும், பெண்ணிற்குரிய அனைத்து இலட்சணங்களும் இருக்கின்றதா என்பதை ஆராய்கின்றனர். பின்னர் பெண் வீட்டாருக்குத் தெரியாமல் பெண்ணைப் பற்றி அக்கம் பக்கத்தில் உள்ளவர்களிடம் விசாரித்த பின்னர் முழுமையான மனநிறைவு பெறுகின்ற நிலையிலேயே பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளலாம் என்ற முடிவிற்கு வருகின்றனர். பின்னர்அந்த பெண்ணுக்குப் பூ பொட்டு வைத்து இந்த பெண் தன் மகனுக்கு என்று முடிவு செய்கின்றனர்.

**மாப்பிள்ளை வீடு பார்த்தல்**

மாப்பிள்ளை வீட்டார்கள் பெண்ணைப் பார்த்து நன்கு தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதில் அக்கறை காட்டுவது போலவே பெண் வீட்டார்களும் தனது மகளுக்கு ஏற்ற வரனைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதில் அதிகம் அக்கறை காட்டுகின்றனர். பெண்ணிற்குச் சாதகம் பொருந்தியிருந்தால் மட்டும் போதாது மாப்பிள்ளை நல்லவராக இருக்கவேண்டும், எந்தவிதக் கெட்ட பழக்கமும் இருத்தல் கூடாது, உழைப்பாளியாக இருத்தல் வேண்டும், திறமையுடையவராகவும் அறிவு உடையவராகவும் இருத்தல் வேண்டும், அவரது குடும்பம் அந்த ஊருக்குள்ளே நல்ல மதிப்பைப் பெற்றிருக்க வேண்டும் என்பதையெல்லாம் எதிர்பார்த்துதான் மாப்பிள்ளை வீடு பார்க்க செல்கின்றனர்.

தன் மகளுக்குச் சரியான மணவாழ்க்கை அமைய வேண்டும். வாழ்நாள் முழுவதும் அவள் கண் கலங்காமல் வாழவேண்டும். தன் மகளுக்குக் கணவனாக வருகிறவன் தன் மகளைப் பாசத்தோடும்

நேசத்தோடும் வைத்துக் கொள்ள வேண்டும் என்ற நியாயமான கற்பனைகள் பெண்ணின் பெற்றோருக்கு இருக்கின்ற காரணத்தினால் எல்லா நிலைகளிலும் தங்களது குடும்பச் சூழலுக்கு ஒத்து வருகின்ற மாப்பிள்ளையைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற காரணத்தின் அடிப்படையிலேயே மாப்பிள்ளை வீடு பார்க்கின்ற வழக்கம் உள்ளது. இதனைத் தொடர்ந்து நிச்சயதார்த்தம் செய்யப்படுகிறது.

**நிச்சயதார்த்தம்**

பெண் வீட்டாருக்கும், மாப்பிள்ளை வீட்டாருக்கும் இடையே ஏற்படுகின்ற திருமண ஒப்பந்தம் செய்யும் நிகழ்ச்சியை ‘நிச்சயதார்த்தம்’ என்கின்றனர். இதனை நிச்சயதாம்பூலம், பரிசம், நிச்சயதார்த்தம் என்ற சொல்லால் வழங்கிவருகின்றனர். இந்நிகழ்ச்சியை அவரவர் வசதிக்கேற்ப அமைத்துக் கொள்கின்றனர். இருவீட்டார்களின் உறவினர்கள், ஊர்ப் பெரியவர்கள், தாய்மாமன், நண்பர்கள் ஆகியோர் முன்னிலையில் இந்த ஊரைச் சார்ந்த இன்னாரின்மகனுக்கு இன்னாருடைய பெண்ணைத் தருமணம் செய்து கொடுப்பதாகச் சம்மதித்து உறுதிப்பத்திரம் எழுதி இரு வீட்டுப் பெற்றோர்கள், தாய்மாமன், ஊர்ப் பெரியவர்கள் கையொப்பமிட்டு இருவருடைய தாய்மாமன்களும் மாற்றிக் கொள்கின்றனர். இப்பத்திரத்தைப் பத்திரமாக வைத்துக் கொள்கின்றனர். மணமகன் வீட்டாரோ, அல்லது மணமகள் வீட்டாரோ சொல் மாறுவதற்குரியவாய்ப்புகள் இல்லாமல் இருக்கும். இவர்களுக்கிடையே ஏமாற்றத்தைத் தவிர்க்கலாம் என்ற நோக்கத்துடன் இப்பழக்கத்தினை மேற்கொள்கின்றனர்.

மாப்பிள்ளை வீட்டாரிடத்தில் இருந்து பெண்ணுக்குப் பரிசப் பொருள்களை வாங்கி வருகின்றனர். அதில் சீப்பு, சோப்பு, பவுடர், வளையல், பொட்டு, ரிப்பன், நகமெருகு, கண்ணாடி, புடவை, சட்டை, பாவாடை, பூ, மாலை, சடைகுஞ்சம் அனைத்தையும் அதாவது பெண்கள் பயன்படுத்தக்கூடிய அனைத்துப் பொருள்களையும் சீர்வரிசையாக வாங்கி

வருவர். பின்னர் பழங்கள், தேங்காய், கற்கண்டு, பேரிச்சம்பழம், வெற்றிலைப்பாக்கு, பூ, சர்க்கரை, மிட்டாய், மங்கலப் பொருட்கள், அனைத்தையும் தாம்பூலத்தில் வைத்து வரிசையாக எடுத்து வருவர். வெற்றிலைப் பாக்கில் வளமைத் தெய்வமான இலட்சுமி உறைவதாகவும் அவற்றை மிகுதியாக பயன்படுத்துதல் நலத்தையும் திருமகளின் அருளையும் அளிக்கும் என்ற நம்பிக்கையில் இதனைக் கையாளுகின்றனர் என்கிறார் ஜெகதீசன் (1982: 164).

திருமணம் குறித்து நிச்சயம் செய்வதால் மாப்பிள்ளை, பெண் இருவருக்கும் வேறு இடத்தலிருந்து பெண்ணோ, மாப்பிள்ளையோ கேட்டுவருவது தவிர்க்கப்படுகிறது. நிச்சயதார்த்தம் நிகழ்த்துகின்ற போதே திருமண நாள் குறிக்கின்றனர். இந்நிகழ்ச்சி முடிந்தவுடன் வந்திருந்த அனைவருக்கும் விருந்து கொடுப்பர். அசைவ உணவு கொடுக்க மாட்டார்கள். சைவ உணவு கொடுப்பது வழக்கம். ஏனென்றால் முதலில் உயிர்க் கொல்லக்கூடாது என்பதாகும்.

### திருமணத்தை முன்னிட்டு வழிபடும் முறை

இல்லற வாழ்வை ஏற்க இருக்கின்ற தம்பதியர்கள் எதிர்கால வாழ்வு விறக்காக அமையவேண்டும். அவர்கள் வாழ்வில் எந்தவிதக் குறைபாடுகளும் இடையூறுகளும் ஏற்படக்கூடாது. புத்திரப்பேறு உருவாக வேண்டும் என்றெல்லாம் வேண்டுதல் செய்து ஊர்த்தெய்வங்களையும், குலதெய்வங்களையும், குடும்ப தெய்வங்களையும் வழிபடுகின்ற வழக்கம் ஆய்விற்கு எடுத்துக் கொண்ட அனைத்து மக்களிடமும் உள்ளது.

### அழைப்பிதழ் கொடுத்தல்

அச்சு இயந்திரங்கள் தமிழகத்திற்கு வருவதற்கு முன்பாகத் திருமணம் நடைபெறும் நாள் குறித்த செய்தியைத் தங்களுடைய உறவினர்களுக்கு நேரில் சென்று தெரிவித்து பாக்கு, வெற்றிலை, மஞ்சள், குங்குமம் வைத்து அழைத்திருக்கிறார்கள். ஆனால் இப்போதெல்லாம் திருமணம்

அழைப்பிதழ் அச்சடிக்கின்றனர். அச்சடித்து வீட்டிற்கு வந்ததும் முதலி அழைப்பிதழை அவரவர்கள் தங்களின் இஷ்ட தெய்வங்களுக்கு வைத்துப் பூசை செய்தபிறகே மற்றவர்களுக்குக் கொடுக்கும் வழக்கத்திற்கு உரியவர்களாக உள்ளனர். இப்போது அனைத்து மக்களும் திருமண அழைப்பிதழை அச்சடித்துக் கொடுக்கின்றனர்.

குலதெய்வத்திற்கு அழைப்பிதழை வைத்தபின்னர், முதலில் தாய்மாமனுக்கு வெற்றிலை பாக்கு, பணம், அழைப்பிதழ் இவைகளைத் தாம்பூலத்தில் வைத்து மரியாதையுடன் கொடுக்கின்றனர். பின்னர் நாத்திப்பாக்கு, மாமிபாக்கு, என்று அழைப்பிதழ் கொடுக்கின்றனர். உற்றார் உறவினர்கள் அனைவருக்கும் அழைப்பிதழ் கொடுத்து திருமணத்திற்கு வருமாறு அழைக்கின்ற பண்பு போற்றிப் பின்பற்ற வேண்டிய உயரிய பண்புகளில் ஒன்றாகும். அழைப்பிதழ் கொடுப்பதன் மூலம் மணமக்கள் வாழ்த்துவதோடு மட்டுமல்லாமல் இருவீட்டாருக்கும் மொய் வைக்கின்றனர். இப்பணத்தை வைத்து கல்யாண கடனை ஓரளவுற்கு அடைத்து விடுகின்றனர். இது ஒரு வட்டியில்லாக் கடனாக உள்ளது.

**பந்தல்கால் (அ) முகூர்த்தக்கால்**

திருமணம் நடைபெறுவதற்கு மூன்று (அ) ஐந்து நாள்கள் முன்பாக முகூர்த்தக்கால் நடுகின்ற வழக்கம் இம்மக்களிடம் உள்ளது. முகூர்த்தம் நடைபெறுவதற்குரிய இடத்தின் வடகிழக்கு மூலையில் முகூர்த்தக்கால் நடுகின்றனர். நல்லநாள், நல்ல நேரத்தில் விடியற்காலையில் ஐந்து அல்லது ஏழு சுமங்கலிப் பெண்கள் அழைத்து மூங்கில் காலின் கீழிருந்து மேலாக ஏறுமுகமாக மஞ்சள், சந்தனம் பூசி குங்குமம் வைத்து அதன் நுனியில் மாவிலை, நாணல், பூ இவைகளை வைத்துக் கட்டுவர். பின்னர் அந்தப் பெண்கள் மூங்கில் காலைக் குழிக்குள் தொட்டுப் பிடித்து வைப்பர். மேலும் மூங்கிலை முதல் காலமாக நடுவதற்குரிய காரணம் மணவிழாக் காணும் தம்பதியர்கள் மூங்கிலைப் போல் வம்சவிருத்தி பெற்று வாழவேண்டும் என்பதாகும். பந்தலின் மேல் விமானத்தில் வண்ணத்

*துணிகளைக் கட்டுவதன் வாயிலாகத் திருமணம் நிகழும் நேரத்தில் தூசி, பல்லி, முதலானவை விழுந்து சகுனத் தடையாகிவிடக்கூடாது என்ற நோக்கத்தினால் கட்டுகின்றனர். மேலும் பந்தலில், வாழைமரம் கட்டுவதும் மணமக்களின் இல்வாழ்க்கை வாழையடி வாழையாகவும், மக்கட்பேறு பெறவேண்டும் என்றும் சுட்டுகின்றனர். மேலும் வாழை தெய்வீக வழிபாட்டுக்குரிய பொருள்களைத் தருகின்றன. அதன் பாகங்கள் அனைத்தும் மனித வாழ்விற்கு எல்லா நிலையிலும் பயன்படுவதைப் போல இத்தம்பதியரும் எல்லா நிலைகளிலும் சிறப்புப் பெற்று விளங்கவேண்டும் என்ற வழக்கத்தினையே மேற்கொண்டுள்ளனர்.*

**நாள்சோறு**

*திருமணமாக இருக்கின்ற பெண், மாப்பிள்ளை இருவருக்கும் நாள் சோறு ஆக்கிப் போடுவர். இச்சோறானது முதலில் தாய் மாமன் வீட்டில் செய்வர். பின்னர் அத்தை, அக்கா, பெரியம்மா, இவர்கள் வீட்டிலும் சோறாக்கிப் போடுவர். அப்போது அசைவ உணவை மட்டும் சமைப்பர். அதாவது கோழி, ஆடு, மீன், முட்டை போன்றவைகளைச் சமைத்து உண்பர். விருந்து முடிந்து வீட்டிற்கு வரும் போது புதிய புடவை, சட்டை, குங்குமம், மஞ்சள், பூ, வளையல், ஆகியவற்றைத் தாம்பூலத்தில் வைத்துக் கொடுப்பர். அதனை வாங்குமபோது அவர்கள் காலில் விழுந்து ஆசிர்வாதம் பெற்றுத் தாம்பூலத்தை வாங்கிக் கொள்வர். பின்னர் தன் வீடு திரும்புவர். இப்பழக்கம் இன்றும் வழக்கில் உள்ளது. அதாவது தாம்பத்திய உறவிற்கு வலிமையும், பொலிவும் பெறவேண்டும் என்ற அடிப்படையின் காரணமாகவும், மறைமுகமாகவும் நாள்சோறு என்ற விருந்து உபசரிக்கும் வழக்கம் இம்மக்களிடம் உள்ளது.*

**பெண் அழைப்பு**

*திருமணத்தன்று காலையில் ஐந்து அல்லது ஏழு மணி அளவில் பெண் அழைப்பு என்ற நிகழ்ச்சி நடைபெறும். அதாவது மாப்பிள்ளை*

வீட்டில் உள்ளவர்கள் மாப்பிள்ளையின் அக்கா அல்லது தங்கை அத்தை மாமி இன்னும் பல உறவினர்கள் ஏழு அல்லது ஒன்பது சுமங்கலிப் பெண்கள் பெண் வீட்டிற்குச் செல்வார்கள். அப்போது அவர்கள் தனது வசதிக்கு ஏற்றாற்போல் சாதாரண புடவை, பட்டுப்புடவை, மாலை, மஞ்சள், குங்குமம், பூ இவைகள் அனைத்தையும் தாம்பூலத்தில் வைத்து பெண்ணின் மாமி அல்லது அத்தையிடம் கொடுத்து புடவையைக் கட்டிவிடச் சொல்வர். பின்னர் மணப்பெண்ணுக்கு புதிய புடவையை உடுத்திக் கிழக்குப் பக்கமாக நிற்கச் சொல்லி மாலை அணிவிப்பர். வந்தவர்கள் அனைவருக்கும் தேநீர் அல்லது காலை உணவு வைப்பர். பின்னர் மணப்பெண்ணையும் அவளுடைய தோழியையும் அழைத்து மண்டபத்திற்குச் செல்வார்கள். இவ்வழக்கம் இன்றளவும் காணப்படுகிறது.

திருமண மண்டபத்திற்கு இருவீட்டார் உறவினர்களும் வருவார்கள். அப்போது பெண்வீட்டில் இருவரும் மாப்பிள்ளை வீட்டில் இருவரும் பந்தலின் முன்னின்று கையில் சந்தனம், பூ, குங்குமம், கற்கண்டு வைத்துக் கொண்டு வரவேற்பர். பின்னர் பன்னீர் தண்ணீரும் வருபவர்கள் மேல் தெளிக்கின்றனர்.

திருமண முறைகளில் சிலபேர் தலைவர்களை வைத்து திருமணம் நடத்துவர். இன்றும் சில பேர் ஐயர் (அந்தணர்) வைத்து திருமணம் நடத்துவர். முதலில் மாப்பிள்ளையை மேடைக்கு அழைத்து வருவர். வந்தபிறகு தாய் மாமன் மாலை போடுவார். ஐயர்மந்திரம் சொல்லுவார். பிறகு மாப்பிள்ளை வீட்டாரின் தாய்மாமன், அத்தை, பெரியம்மா, பெரியப்பா இன்னும் பல பெரியவர்கள் வந்து மாப்பிள்ளை அணிந்திருக்கும் மாலையையெடுத்துக் கிழக்குப் பார்த்து கும்பிட்டுவிட்டுப் பின்னர் மாலையை மாப்பிள்ளை கழுத்தில் போடுவார்கள். அப்போது அவர்கள் மாப்பிள்ளைக்குப் பணம் வைத்துக் கொடுப்பர். வசதி படைத்தோர் மோதிரம் செயின் போடுவர். இதனை எதிர்மாலை போடுதல் என்பர். பின்னர் மாப்பிள்ளைக்கு மணமகன் வேட்டி சட்டை,

துண்டு, பூமாலை கைக்குப் பூச்செண்டு ஆகியவற்றைத் தாம்பூலத்தில் வைத்து மணமகனின் தாய்மாமா (அ) மாமியிடம் கொடுத்து அனுப்புவர்.

அடுத்தது மணமகள் வருவாள். அவளுக்கும் மணமகனுக்குச் செய்யும் சடங்குகளைப் போல் செய்வார்கள். அதைப்போல் பெண்ணுக்கும் பட்டுப்புடவை, சட்டை, பூமாலை கைக்குப் பூச்செண்டு ஆகியவற்றைத் தாம்பூலத்தில் வைத்து மணமகளின் தாய்மாமா அல்லது மாமியிடம் கொடுத்து அனுப்புவர். பின்னர் கல்யாண புடவை கட்டிப் பெண்ணை அழகுபடுத்தி அதாவது அழகுநிலையம் அழகுபடுத்துகின்றனர். பெண் பார்ப்பதற்குத் தேவதை போல் காட்சி தருவாள். பின்னர் மணமேடைக்கு வந்து அமர்ந்துவிடுவாள். மாப்பிள்ளைக்கு மிஞ்சி போடுதல் என்ற நிகழ்வு நடைபெறும்.

**மிஞ்சிப் போடுதல்**

மிஞ்சிப் போடுதல் என்பது மணமகளின் அக்கா அல்லது தங்கை மணமகனுக்கு மிஞ்சி போடுதல் வேண்டும். மணமகன் வலது காலை ஒரு வாழையிலை மீது வைக்க வேண்டும். அப்பெண்ணின் சகோதரி மணமகனின் காலில் பசும்பால் ஊற்றிக் கழுவவேண்டும். பின்னர் மஞ்சள் அரைத்து காலின் மீது தேய்ப்பர். பின்னர் தான் விரலில் மிஞ்சிப் போடுவர். இந்த மிஞ்சி போட்டதற்குப் பணம், புதுத்துணி வாங்கிக் கொடுப்பார்கள்.

அதனைத் தொடர்ந்து மணமகளின் சகோதரன் மணமகனுக்கு எதிர்மாலை போடுவர். அப்போது அவருக்குக் கழுத்துக்குச் செயின், கைக்குக் கைச்செயின், மோதிரம் அணிவர். அப்போது மணமகன் வீட்டில் இரந்து பெண்ணின் சகோதரனுக்குப் பேண்ட் சர்ட் அல்லது வேட்டி சட்டை எடுத்துக் கொடுப்பர். வசதியானவர்கள் பெண்ணின் சகோதரனுக்கு செயின் அல்லது மோதிரம் போடுவர். இந்த நிகழ்வு முடிந்தபிறகு மணமகளின் சகோதரன் மணமகனின் கையைப் பிடித்துக் கொண்டு அழைத்து மேடைக்குச் சென்று அமர வைப்பர். அதைப்போல் மணப்பெண்ணையும் மாமி அல்லது அத்தை அழைத்து வந்து மேடையில்

*அமர வைப்பர். ஐயர் மந்திரம் சொல்லுவார். அதைப்போல் மணமக்கள் இருவரும் அந்த மந்திரத்தைச் சொல்கின்றனர்.*

**காப்புக் கட்டுதல்**

*திருமணத்தன்று முகூர்த்த நேரத்தில் மணமக்களுக்குக் காப்பு (கங்கணம்) கட்டுகின்றனர். இது கட்டுவதற்குக் காரணம் மணமக்களுக்கு எவ்விதத் தீங்கும் நிகழ்ந்து விடக் கூடாது என்றும் இறைவனே இவர்களுக்குக் காப்பாக இருந்து திருமணத்தை நடத்தி வைக்க வேண்டும் என்ற நோக்கத்தில் காப்புக் கட்டுகின்ற வழக்கம் ஏற்பட்டிருக்கிறது. காப்பு= காத்தல் மணமக்களைக் காத்தல் செய்கின்ற தெய்வீகக் கயிறாகக் காப்புக் கட்டுகின்ற வழக்கம் இம்மக்களிடம் நடைமுறையில் உள்ளது. இச்சடங்கை ஐயர் முன்னின்று நடத்துகிறார். வாழை இலையில் தேங்காய், பச்சரிசி, நெல், பழம் போன்ற பூசைப் பொருட்கள் வைக்கின்றனர். இந்நிகழ்ச்சி முடிந்தவுடன் அந்த பொருட்களை அனைத்தையும் திருமணம் நடத்தி வைக்கும் ஐயரிடம் கொடுப்பார்கள்.*

*திருமணத்தன்று யாகம் வளர்க்கப்படுகிறது. யாகம் வளர்ப்பதற்கு ஆலங்குச்சி, அரசங்குச்சி, தவிடு, நெய், கற்பூரம் கொண்டு யாகம் வளர்ப்பர். யாகத்தில் நெய் மற்றும் நல்லெண்ணெயை மாவிலையில் தொட்டுத் தொட்டு யாகத்தில் விடப்படுகிறது. அப்போது மணமக்களின் குலம், கோத்திரம் சொல்லி மணமக்களை வாழ்த்துகின்றனர். மேலும்*

**“மாங்கல்யம் தந்துநா அநேன மமஜீவன் வேறதுறா**
**கண்டே பத்நாபி சுபகேத்வம் ஜீவசரதச்சனம்”**

*என்று புரோகிதர் மந்திரம் சொல்வார். நான் என்னுடைய இன்ப வாழ்க்கைக்கு ஆதாரமும் காரணமாய் இருக்கும் பொருட்டு உன் கழுத்தில் மங்கல நாணை அணிவிக்கிறேன். சுபமுடையவளே நீ நூறாண்டு வாழ்வாயாக என்கின்றனர்.*

**பெற்றோருக்குப் பாதபூசை**

*திருமணத்தன்று மணமக்கள் அவரவர்களுடைய பெற்றோர்களின் கால்களைப் பித்தளைத் தாம்பலத்தில் படியுமாறு நிற்க வைக்கின்றனர். பின்னர் காலில் தண்ணீர் ஊற்றிக் கழுவுகின்றனர். மஞ்சள், குங்குமம், வைத்து மலரிட்டுக் கற்பூரத் தீபம் காட்டி வழிபடுகின்ற வழக்கம் மக்களிடம் உள்ளது. பத்து மாதங்கள் சுமந்து பெற்றெடுத்த தாய்க்கும், ஆளாக்கிய தந்தைக்கும் நன்றிக்கடன் செலுத்துகின்ற வகையில் 'அன்னையும், பிதாவும் முன்னறி தெய்வம்' என்றும் தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை என்ற சான்றோர்களின் அமுத வாக்கின் வழியில் தன்னை இந்த உலகத்திற்கு அளிக்க ஆதாரமாகவும், ஆதரவாகவும் இருந்த பெற்றோர்களை இந்த தருணத்தில் வணங்கிய பிறகுதான் மணவாழ்க்கை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற வழக்கம் தமிழ்ப் பண்பாட்டினில் திகழ்கிறது. மணமக்களுக்குப் பெற்றோர் இல்லையென்றால் அண்ணன் அண்ணி அல்லது கணவன் மனைவியாக இருக்கின்ற வயதான தம்பதியருக்குப் பாதபூசை செய்கின்றனர். இவ்வழக்கம் இப்பகுதியில் உள்ள அனைத்து சாதி மக்களிடமும் இன்றளவும் நிகழ்கிறது.*

**மங்கல நாணுக்கு அல்லது தாலிக்கு வாழ்த்துப் பெறுதல்**

*முகூர்த்த நேரத்தன்று ஐயர் (அந்தணர்) ஒரு தாம்பூலத்தில் மஞ்சள் பூசிய கயிற்றில் தாலியைக் கோர்த்து தேங்காய் மீது சுற்றி மஞ்சள் கலந்த அரிசி, பூ இவற்றுடன் தாம்பாளத்தில் வைத்து திருமணத்திற்கு வந்திருக்கும் அனைவரிடமும் காண்பித்து அவர்கள் தங்களின் இரு கரங்களாலும் தொட்டு வாழ்த்தி அந்த மஞ்சள் கலந்த அரிசியை எடுத்துக் கொள்கின்ற வழக்கம் தமிழகத்தில் இந்துமதம் சார்ந்த இன மக்களிடமும் உள்ளது. முன்பெல்லாம் நெல் வைத்து அனைவருக்கும் கொடுக்கின்ற பழக்கம்உள்ளது. ஆனால் இப்போது மஞ்சள் கலந்த அரிசியைக் கொடுக்கின்றனர்.*

*“மாங்கல்யத்தை அனைவரும் தொட்டு வணங்குகின்ற போது குறிப்பாக சுமங்கலிப் பெண்கள் தொட்டு வாழ்த்துகின்ற போது அனைத்துப் பெண்களின் வளமை ஆற்றலும் மணமக்களுக்குச் சென்று சேருமென்ற தொத்து மந்திரக் கூறுகள் இதில் காணப்படுகின்றன” என்கிறார் தே. ஞானசேகரன் (1987: 48).*

**தாலி கட்டுதல்**

*ஒரு பெண்ணும் ஆணும் கணவன் மனைவி என்று கூறுவதற்கு அடையாளமாகத் தாலி சிறந்து விளங்குகின்றது. தாலி என்ற சொல்லின் தோற்றத்தைக் குறிப்பிடும்போது தால், தாலம் என்பன பனை மரத்தின் பெயர்கள். முன்னாளில் பனையோலை குருத்தால் நகைகள் செய்து பெண்களும், சிறுவர் சிறுமியர்களும் அணிந்து கொள்வது வழக்கம். பனையோலைக் குருத்தில் தொங்கும் வடிவில் இயற்றப்பெற்ற பல அணிகளைக் கழுத்திலும் பிற உறுப்புகளிலும் நம் முன்னோர்கள் அணிந்து வந்தார்கள். அவ்வணிகள் பனையின் பெயராகிய தாலம் என்பதிலிருந்து பிறந்து தாலி என்ற பெயரால் வழங்கப்பெற்றன. பின்னாளில் பொன், வெள்ளி, தங்கம் முதலிய உலோகங்களில் தொங்கும் வடிவில் செய்து அணிந்து கொண்ட நகைகளும் முன்பு தாலி என்ற பெயரிலே அழைக்கப்பட்டன என்கிறார் அ. இராசேந்திரன் (2006: 72)*

*திருமணத்தின் போது மணமகன் அணிவிக்கும் மங்கல அணியைத் தாலி என்று குறிக்கும் சொல் வழக்கு பத்தாம் நூற்றாண்டுக்குப் பிறகுதான் தமிழ்ச் சமுதாயத்தில் நிலவி வந்திருக்கிறது. முற்காலத்தில் திருமணச் சின்னமாக அணியும் நகையினை ஈகையரிய இழை,நெடுவீழ், மங்கலவணி, பொன் முதலிய சொற்களால் பழைய இலக்கியங்களில் குறிக்கப்பட்டுள்ளன.*

*மணமகன் மணமகளின் கழுத்தில் மணவிழாவிற்கு அடையாளமாகிய புதினமான மங்கலச் சின்னத்தை அணிவித்தல் தாலி கட்டுதல் எனப்படுகிறது. மஞ்சள் பூசிய கயிற்றால் தாலி கட்டுவர். மேலும்*

சிலர் தன் பொருளாதார வசதிக்கேற்ப மஞ்சள் நூலின் தங்கத்தாலான செயின் சேர்த்துக் கட்டுகின்றனர். இந்த பழ:ககம் இப்போது காணப்படுகின்றது.

மணவறையில் விளக்கேற்றி வைத்தல் என்ற வழக்கமானது எரிகின்ற விளக்கு தெய்வத்திற்குச் சமமானது என்பதால் சாட்சியாகவும், இந்த விளக்கைப் போல் மணமகளும் மங்கலகரமான குண இயல்புகளைப் பெற்றுக் கணவனின் குடும்பத்திற்கு ஒளிவிளக்காகத் திகழ வேண்டும் என்பதற்காகவும் விளக்கேற்றி வைத்துத் தாலி கட்டுகின்றனர்.

மணமகன் பெண்ணின் கழுத்தில் தாலி கட்டி மூன்று முடிச்சு போடுதல், மணமகனின் சகோதரி பின்னால் நின்று காமாட்சி அம்மன் விளக்குப் பிடித்தல் என்ற பொதுவான வழக்கம் காணப்படுகின்றது. மணமகன் பெண்ணின் கழுத்தில் தாலி கட்டி மூன்று முடிச்சுப் போட்டதும், முடிச்சு போட்ட இடத்தில் மணமகன் கையினால் மஞ்சள் குங்கும் வைப்பதும் பெண்ணை அணைத்தவாறு பெண்ணின் நெற்றியில் குங்குமப்பொட்டு வைக்கும் வழக்கமும் பொது வழக்கமாகவே உள்ளது. இவ்வழக்கம் அவள் தன் கணவனுக்கு மட்டுமே உரியவள் என்பதையும் பிற ஆடவர்கட்கு உரியவள் அல்லள் என்பதையும் தன் கணவனுக்குக் குழந்தைப் பேற்றினை உறுதிப்படுத்தும் வளமுடையவள் என்பதையும் குறிக்கும் அடையாளமாகும் என்கிறார் பழம் கிரேக்கச் சமுதாயத்தை ஆய்ந்தறிந்த ஜி. தாம்சன் என்பார்.

நமது நாட்டில் நாணில் தாலியைக் கோத்து மணமகன் மணமகள் கழுத்தில் அணிவித்தல் தான் திருமணத்தின் இன்றியமையாத கட்டமாக இருக்கிறது எனவும், தாலி கட்டலின் போது எதை அணிவித்தாலும் நான் வேறு நீ வேறு அல்லேம் என்ற தத்துவம் அடங்கியிருக்கிறது என்கிறார் சண்முகசுந்தரம் (1983: 80).

தமிழ்நாட்டுப்புறங்களில் நடைபெறும் திருமணங்கள்ஐயர் என்று சொல்லப்படுகின்ற புரோகிதர் ஒருவரால் நடத்தி வைக்கின்றபோது தமிழர் பழக்க வழக்கங்களோடு ஆரியர்களின் திருமணப் பழக்க

வழக்கங்களும் கலந்து விடுவதோடு வடமொழி மந்திரங்களைச் சொல்லியே திருமணச் சடங்குகளைச் செய்து வருகின்றனர். தாலி கட்டும்போது கெட்டிமேளம் கொட்டுதல் என்ற வழக்கமானது மண வாழ்க்கை ஏற்கின்ற மணமக்கள் காதுகளில் எந்தவிதமான அமங்கலச் சொல்லும் ஒலிக்கக்கூடாது என்ற காரணத்தினால் கெட்டி மேளம் கொட்டுகின்றனர் என்ற நோக்கத்தினால் இவ்வழக்கம் கிராமப்புற மக்கள் பின்பற்றுகின்றனர்.

மூன்று முடிச்சுப் போடுதல் என்பது முதல் முடிச்சு பிரம்மாவின் மந்திரத்தையும், இரண்டாவது முடிச்சு விஷ்ணுவின் மந்திரத்தையும், மூன்றாவது முடிச்சு சிவமந்திரத்தையும் குறிக்கும் என்கிறார் பி.என். சண்முகசுந்தரம் (1983: 13). ஆனால் இன்றைய நடைமுறையில் முதல் முடிச்சு கணவனுக்குக் கட்டுப்பட்டவள் மனைவி என்றும், இரண்டாவது முடிச்சு தெய்வத்திற்குக் கட்டுப்பட்டவள் என்றும், மூன்றாம் முடிச்சு சொந்த பந்தங்களுக்குக் கட்டுப்பட்டவள் என்றும் மூன்று முடிச்சுகளுக்கு இம்மக்கள் விளக்கமளிக்கின்றனர். இந்த மூன்றாவது முடிச்சை மணமகனின் சகோதரி பின்னால் நின்று காமாட்சி அம்மன் விளக்குப் பிடித்தல் என்ற பொதுவான வழக்கம் காணப்படுகிறது.

**மஞ்சள் அரிசியுடன் அட்சதை போடுதல்**

தாலி கட்டும் நேரத்தில் அட்சதை என்ற பெயரில் மஞ்சள் அரிசி தூவி மணமக்கள் வாழ்த்துகின்றனர். மேலும் மங்கலப் பொருளாகிய அரிசியும் அதனுடன் சேர்ந்த மஞ்சளும் சக்தியை முழுமையாகப் பெறுகின்றன. அனைவருடைய எண்ண அலைகளும் ஒருமுகமாக்கப்பட்டு மணமக்களை மேலும் மேலும் வாழ வைக்கின்ற சக்தியை அளிக்க வல்லதாகும்.

**பட்டங்கட்டுதல்**

மணமகன் மணமகளுக்குத் தாலி கட்டி முடிந்தவுடன் அவர்கள் குடும்பத் தலைவனாகவும் தலைவியாகவும் ஏற்றுக்கொண்டோம் என்பதை

உறுதி செய்தவுடன் அன்று முதல் கணவன் மனைவி என்ற பட்டத்தைப் பெறுகின்றார்கள் என்ற பொருளில் பட்டம் கட்டுகின்ற வழக்கம் இருந்திருக்கலாம் என்றும் மணமகளுக்குத் தாய் மாமன் மனைவி மாமிப்பட்டம் கட்டுவர். அதாவது ரிப்பன் அல்லது ஒரு வெள்ளை நூலில் மஞ்சள் தடவி அதனில் தங்கக்காசு, மாங்காய், கட்டுவர். இதனை அத்தை, நாத்தனார், மாமி போன்றவர்கள் பட்டங்கள் கட்டுவார்கள்.

**அக்னி வலம் வருதல்**

யாகம் வளர்க்கப்பட்ட வேள்வித் தீயினை மணமக்கள் இருவரும் மூன்று முறை சுற்றி வருவார்கள். நாத்தனார் விளக்கு எடுத்துக் கொண்டு முன்னே செல்ல அதற்கும் பின்னால் மணமக்கள் வலமாகச் சுற்றி வருகின்ற வழக்கம் உண்டு . அவ்வாறு சுற்றி வரும்போது மணமகன் மணமகளின் சுண்டு விரலைப் பிடித்துக் கொண்டும், மணமகனின் சகோதரன் பிடித்துக் கொண்டு அக்னியை வலம் வருவர். இதனை நாம் இருவரும் அக்னிச் சாட்சியாக இணைந்து விட்டோம். இனி நம்மைப் பிரிக்க யாராலும் முடியாது என்ற கருத்தின் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்ட வழக்கமாக தோன்றியிருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

**அம்மி மிதித்து அருந்ததி பார்த்தல்**

அக்னியை வலம் வந்தபிறகு மணமகன் தனது கரத்தினால் மணமகளின் வலது காலைப் பிடித்து அம்மி மீது வைத்து காலில் மெட்டி அணிதல் வழக்கமாக உள்ளது. பெண்களின் கால்களில் மெட்டி அணிதல் வாயிலாக அப்பெண் திருமணானவள் என்பதற்குரிய அடையாளச் சின்னமாக இருப்பதுடன், தீய ஆவிகள் தங்களை அணுகாமல் இருக்கும் என்ற வழக்கத்தின் அடிப்படையில் பெண்கள் மெட்டி அணிகின்றனர்.

அம்மியும் குழவியும் ஒன்று சேர்ந்தே ஒரு பொருளை அரைக்க உதவுகிறது.அதைப்போலக் கணவன் மனைவி இருவரும் ஒன்றிணைந்தே இல்லறத்திற்குரிய நல்லறச் செயல்களைச் செய்ய வேண்டும் என்பதை

*உணர்த்துவதாகவும் அமைந்துள்ளது. இந்த கல்லைப் போலவ நீயும் நிலையாக இருப்பாயாக உன் மனமும் சஞ்சலங்களுக்கும் சபலங்களக்கும் இடம் கொடுக்காமல் உறுதியாக இருக்க வேண்டும் என்பதை உணர்த்துவதாகும்.*

*மணமக்கள் வானத்தில் உள்ள அருந்ததி மீனைப் பார்க்கின்றனர். அதாவது கற்பினிற் சிறந்த வசிட்டனின் மனைவியான அருந்ததி இன்றும் வானில் அருந்ததி நட்சத்திரமாக காட்சியளித்துக் கொண்டிருக்கிறாள். கற்புக்கரசியான அருந்ததியைப் போல நீயும் கற்புத் தன்மை உடையவளாகத் திகழவேண்டும் என்ற குறிப்பு வெளிப்படுகின்றது. திருமணத்தின்போது அம்மி மிதிப்பதும் அருந்ததி காட்டுவதும் அக்கினியைச் சாட்சியாக வைப்பதும் வேதகால வழக்கமாகும். ஆனாலும் இவ்வழக்கம் இப்போது ஒவ்வொரு திருமணத்திலும் நடைபெறுகின்றது.*

**ஆசி கூறல்**

*திருமணம் முடிந்தபிறகு மணமக்கள் இருவரும் பெரியோர்களின் காலில் விழுந்து வாழ்த்துக்களைப் பெறுகின்றனர். அப்போது மணமக்களைப் 'பல்லாண்டு வாழ்க', பதினாறும் பெற்று நீடூழி வாழ்க' என வாழ்த்துவர். இதேபோன்று தலைவர்கள் வாழ்த்தும் போது நீங்கள் மலரும் மணமும் போல வாழவேண்டும் என்பர்.*

**"நகமும் சதையும் போல வாழவேண்டும்**
**கடலும் அலையும் போல**
**உயிரும் உடலும் போல**

*என்று வாழ்த்துக் கூறுவர்.*

**"ஆல் போல் தழைத்து**
**அருகுபோல் வேரோடி**
**மூங்கில் போல் சுற்றம்**
**முறியாமல் வாழ்க"**

*என்று மணமக்களைப் பெரியவர்கள் வாழ்த்துகின்றார்கள்.*

**மொய் எழுதுதல்**

*திருமணங்களில் மொய் வாங்குதல் என்பது மிகவும் முக்கியமான ஒன்றாகும். அதாவது மணமக்களின் நண்பர்கள் அளிக்கப்படுவதையே அன்பளிப்பு என்றும், தன் உறவினர்கள், பங்காளிகள் அளிக்கும் பணத்தைப் மொய் என்றும் கருதப்படுகிறது. திருமணத்திற்கு வந்திருந்தும் மொய் எழுதாவிட்டால் அதைக் கௌரவக் குறைச்சலாகக் கருதுகின்றனர். அவரவர் பொருளாதார நிலைக்கு ஏற்ப மொய்ப்பணம் அளிக்கின்றனர். யார் யார் என்னென்ன அன்பளிப்புகளை வழங்கினார்கள் என்பதை முறையாக எழுதி வைத்து, மீண்டும் அவர்கள் இல்லத்தில் நடைபெறுகின்ற விசேடங்களில் திருப்பிச் செலுத்துகின்ற வழக்கம் அனைத்து மக்களிடமும் உள்ளது.*

*திருமணத்தில் கலந்துகொள்ள முடியாதவர்கள் திருமணத்திற்குச் செல்கின்றவர்களிடத்தில் மொய்ப்பணத்தைக் கொடுத்துத் தங்களின் பெயரில் மொய் எழுதக் கூறுகின்றனர். பொருளாதாரத்தில் மிகவும் மேன்மை அடைந்தவர்களின் இல்லத் திருமணங்களில் மொய் எழுதும் வழக்கம் இல்லை. அவர்கள் திருமண அழைப்பிதழிலேயே மொய் விலக்கப்பட்டது என்றும், அன்பளிப்புகள் தவிர்க்கப்பட்டது என்றும் தெரிவித்து விடுகின்றனர். மொய்ப்பணம் திருமணத்தில் வாங்குவதனால் திருமணத்திற்காக வாங்கிய கடனை ஒரு பகுதியை ஈடுசெய்ய முடிகின்றது என்கின்றார்கள்.*

**மணமக்கள் விளையாட்டு**

*திருமணத்தன்று இருவரிலும் எவர் திறமையானவர்கள் என்பதைத் தெரிந்து கொள்ளும் வகையில் மணமக்கள் விளையாட்டுக்களை விளையாடுகின்றனர். ஒரு பானை தண்ணீரில் மோதிரம், பாலாடை போட்டு எடுக்கச் சொல்வார்கள். இவ்விளையாட்டுக்கள் இம்மக்களிடம் இன்றும் நடைமுறையில் உள்ளது. இவ்விளையாட்டுக்களின் வாயிலாக மணமக்கள் இருவரில் யார் திறமை உள்ளவர்கள், அறிவுக் கூர்மை*

உடையவர்கள், என்பதைத் தீர்மானித்து குடும்பத்தைத் திறமையாக நடத்துகிற பொறுப்பில் இருவரில் யார் என்பதை அறிந்து கொள்வதற்கு வாய்ப்பாக இவ்விளையாட்டுக்கள் அமைகின்றன. இதன்மூலம் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து வாழும் மனப்பக்குவத்தையும் பிணைப்பையும் உண்டாக்க வேண்டும் என்பதற்காகவும் இவ்விளையாட்டுக்கள் நிகழ்த்தப்படுகின்றன.

**சீர்வரிசை கொடுத்தல்**

ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொடுப்பது என்பது சுலபமான வேலை அல்ல. பெண்ணைப் பெற்ற பெற்றோர்கள் அனைவரு அவளை எப்படியாவது கரைசேர்க்க வேண்டும் என்ற எண்ணம் அவர்களிடம் உள்ளது. ஏழை முதல் பணக்காரன் வரை ‘சீதனம்’ என்ற பெயரில் அவர்களுக்குக் கொடுக்கப்படும் சீர்வரிசை மணமக்கள் வாழும் அடிப்படைத் தேவைக்கு ஏற்ப அதாவது கட்டில், பீரோ, கிரைண்டர், மிக்சி, பொன், பொருள், பண்டம், பாத்திரம் மற்றும் பல பொருட்களை வாங்கித் திருமணத்தன்று மண்டபத்திலேயே வைக்கும் பழக்கம் உள்ளது. அதிலும் சில பேர் மறுநாள் மாப்பிள்ளை வீட்டிற்கு விருந்துக்குச் செல்லும்போது சீதனத்தையும் எடுத்துச் செல்வர். இதன்மூலம் தன் மகள் பிறந்த இடம் சிறப்புடையது என்றும், அவள் வசதியாகவும், பெருமையுடனும் புகுந்த வீட்டில் வாழவேண்டும் என்பதற்காக சீர்வரிசையை மணமகளுக்குக் கொடுக்கின்றனர். மேலும் இம்மக்களிடம் பசு மாடு கொடுக்கும் வழக்கமும் உள்ளது. தன் மகள் புகுந்த வீட்டில் பல சூழ்நிலையில் சொத்துக்கள் அனைத்தையும் இழந்தாலும் தான் சீதனமாகக் கொண்டுவந்த பசுமாட்டையாவது வளர்த்து அதில் வரும் வருமானத்தைக் கொண்டு பிழைத்துக் கொள்வாள் என்ற நம்பிக்கை இம்மக்களில் ஒரு சிலரிடம் காணமுடிகிறது.

இதேபோன்று இம்மக்களிடம் மற்றொரு பழக்கமானது உள்ளது. அதாவது மாமி, கொழுந்தி என்ற உறவுமுறையில் உள்ளவர்கள்

மணமகளுக்குத் தேவையான பொருட்களை வாங்கி வைக்கின்றனர். இவ்வாறான வழக்கத்தின் மூலம் திருமணம் நடத்தும் பெற்றோர்களின் சுமையை உறவினர்களும் பங்குகொண்டு உறவின் மேன்மையையும், நெருக்கத்தையும் பலப்படுத்துகின்றனர்.

**உணவுமுறை**

திருமணத்திற்கு வந்தவர்கள் அனைவருக்கும் உணவு அளிக்கப்படுகிறது. திருமணத்தைச் சிலர் கோயிலில் வைப்பர். சிலர் மண்டபத்தில் வைப்பர். பெரும்பான்மையான மக்கள் அசைவ உணவு அளிக்கின்றனர். சிலபேர் மட்டும் சைவ உணவு அளிக்கின்றனர். அதிலும் சிலர் சைவம், அசைவம் இரண்டு உணவையும் அளிக்கின்றனர். இச்செலவினைப் பெண்வீட்டார் மட்டுமே ஏற்றுக் கொண்டனர். ஆனால் இப்போதெல்லாம் இச்செலவினை இருவீட்டாரும் பகிர்ந்து கொள்கின்றனர்.

**வலது காலின் சிறப்பு**

திருமணம் முடிந்தபிறகு மணமகன் வீட்டிற்கு வரும்போது வலது காலை எடுத்து வைத்து வரச் சொல்லுதல், மணமேடையை வலம் வருதல் என்ற வழக்கங்களில் வலது கால், வலது பக்கம் என்பது வலிமை வாய்ந்தது என்பதாகும். இந்த உலகமே வலம் நோக்கிச் சுற்றுகிறது. உலகை அநுசரித்து உலகியல் வாழ்க்கையை நடத்து என்றொரு பொருளும் உண்டு என்பதாகும்.

**சம்மந்தி ஏசல்**

மணமக்கள் ஏசலைப் போன்று சம்மந்தி ஏசலும் காணப்படுகிறது. இவற்றில் பலபாடல்கள் பாடுகின்றனர். இப்பாடல்கள் மணமகனது அன்னை, மணமகளது அன்னை, இவர்கள் இருவரது தோற்றம், கஞ்சத்தனம், உரத்த குரல், இவைகளைக் கேலி செய்து பாடுகின்றனர். வளவனது (1985: 108) இவற்றில் மணமகன் அன்னையைவிட மணமகள் அன்னையைக் கேலி செய்து பாடும் பாடல்களே மிகுதியாக உள்ளன. இது

*சமூக நிலையில் மணப்பெண் மட்டுமின்றி அவளைப் பெற்ற அன்னையும் கூட தாழ்நிலையில் வைக்கப்படுவதை வெளிப்படுத்துகின்றது.*

**திருமணத்திற்குப் பின்பு நிகழக்கூடிய பழக்க வழக்கங்கள்**

*திருமணம் என்ற சடங்கியல்களோடு கூடிய நிகழ்ச்சியின் வாயிலாகக் கணவன் மனைவியாக ஒன்று சேர்ந்த மணமக்களுடைய மணவாழ்க்கை எல்லா நிலைகளிலும் மேலோங்கித் திகழவேண்டும் என்பதில் நாட்டம் செலுத்துகின்ற இருவீட்டுப் பெற்றோர்கள் திருமணத்திற்குப் பிறகு சில பழக்க வழக்கங்களை மேற்கொள்கின்றனர்.*

**சாந்தி முகூர்த்தம்**

*திருமணம் என்பதன் மூலம் ஆணும் பெண்ணும் உடலுறவு கொண்டு குழந்தை பெறச் சமூகம் அனுமதி கொடுத்து அங்கீகரிக்கின்றது. ஒரு ஆணும் பெண்ணும் திருமணம் என்ற சடங்கின் வாயிலாக ஒன்றிணைந்து உள்ளத்தால் ஒன்றுபட்டு உணர்வுகளாலும் ஒன்று கலந்து இன்பம் துய்க்கின்ற முதல் நாள் இரவு அத்தம்பதியர்களின் வாழ்க்கையில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய மகிழ்ச்சியான நன்னாளாகும்.*

*கன்னித்தன்மை கழியாத அப்பெண்ணும் ஆடவனும் உடலால் ஒன்றிணைகின்ற முதல் இரவைச் சில சடங்கியலோடு கூடிய பழக்க வழக்கங்களுடன் தொடர்புபடுத்திச் செய்கின்றனர். வீட்டில் பூசை அறையில் விளக்கு ஏற்றி மணமக்கள் இருவரும் வணங்கிய பின் மணமகன் அவர் அறைக்குச் சென்றுவிடுவார். பின் நாத்தனார் அல்லது அத்தை, மாமி இவர்கள் யாரேனும் ஒருவர் பெண்ணின் கையில் பால் கொடுத்து மணப்பெண்ணைச் சாந்தி முகூர்த்த அறைக்குள் கொண்டுபோய் விடுகின்ற வழக்கத்தினை இம்மக்கள் கொண்டுள்ளனர்.*

**தாலி பிரித்துக் கட்டுதல்**

*திருமணம் முடிந்தபிறகு தாலி பிரித்துக் கட்டுதல் என்ற நிகழ்ச்சி நடைபெறுகிறது. திருமணமாகி மூன்று மாதத்திற்குள் தாலி பிரித்துக் கட்டுகின்றனர். மணப்பெண்ணை தாய்வீட்டிற்கு அழைத்துச் சென்று குளம், ஆறு இவற்றில் குளிக்க வைத்துப் பூசை செய்கின்றனர். பின்னர் திருமணத்தின்போது பயன்படுத்திய பூமாலையை ஆற்றில் விட்டுவிடுவர். திருமணத்தன்று உடுத்தியிருந்த ஆடையை உடுத்தி, கழுத்திலுள்ள பழைய கயிற்றை மாற்றிப் பதிய கயிற்றில் தாலி மணி, மாங்காய், காசு முதலானவற்றைக் கோர்த்து அணிந்து கொள்ளும் வழக்கம் உள்ளது. சில பேர் ஆடி மாதம் பதினெட்டாம் நாள் இந்நிகழ்வைச் செய்கின்றனர். இந்நிகழ்ச்சிக்கு வந்தவர்கள்அனைவருக்கும் இனிப்பு, பூ, பழம், மிட்டாய், புதுத்தாலிக்கயிறு கொடுக்கின்றனர். பின்னர் வந்தவர்கள் அனைவருக்கும் விருந்து வைக்கின்றனர்.*

**ஓராண்டு வரை செய்யும் சீர்வரிசைகள்**

*திருமணம் முடிந்து தொடர்ந்து சீர் செய்யும் முறை வழக்கில் உள்ளது. தீபாவளி வரிசை, பொங்கல் வரிசை கொடுக்கும் பழக்கம் உள்ளது. தீபாவளிக்கு அனைத்து வகை பலகாரங்களும் புதியஆடைகள், பூ. பழம், தேங்காய், மஞ்சள், குங்குமம், வெற்றிலைப்பாக்கு அவர்களால் முடிந்த அளவு பணம் இவற்றைத் தாம்பாளத்தில் வைத்து மாப்பிள்ளையின் தாய் தந்தையிடம் கொடுப்பார்கள். இதனைத் தலைதீபாவளி என்பர்.*

*அதேபோல் பொங்கல் சீர்வரிசை கொடுக்கும் பழக்கம் உள்ளது. கரும்புக்கட்டு, வாழைப்பழம், பொங்கல் வைக்க பானை (பித்தளை), கரண்டி, தட்டு, மஞ்சள் கொத்து, பச்சை அரிசி, வெல்லம், நெய், முந்திரி, ஏலக்காய், திராட்சை, இவற்றுடன் பூ, குங்குமம் வெற்றிலைப்பாகசு வைத்து வரிசை கொடுப்பார்கள். ஒவ்வொரு ஆண்டும் இவ்வரிசையைப் பணம் வைத்துக் கொடுப்பார்கள்.*

ஆடிமாதம் வரிசை வைத்துப் பெண்ணைத் தாய்வீட்டிற்கு அழைக்கின்றனர். பெண் வீட்டார் மூன்று வகை பலகாரங்கள், பெண், மாப்பிள்ளை இருவருக்கும் புதிய ஆடைகள்,வைத்துக்கொடுப்பர். சில பேர் இவைகள் எதுவும் இல்லாமல் பணமாகவே கொடுக்கும் பழக்கமும் உண்டு. திருமணமான புதிதில் ஆடிக்கு முன்பாகவே பெண் கருவுற்றால் வரிசை வைக்கும் வழக்கமும், பெண்ணைத் தாய்வீட்டிற்கு அழைக்கும் வழக்கமும் இல்லை. இவ்வாறான பழக்க வழக்கங்கள் திருமணம் தொடர்பாக மேற்கொள்கின்றனர்.

**இறப்புத் தொடர்பான பழக்க வழக்கங்கள்**

இறப்பு என்பது மனித வாழ்வில் மிகவும் கொடூரமானது. தொடக்க காலத்தில் கூட்டங்கூட்டமாக வாழ்ந்து வந்த மனிதன் தன்னோடு வாழ்ந்து வந்த மற்றொரு மனிதன் திடீரென்று இறந்ததைக் கண்டு பயந்தான். அவ்வாறு ஏற்படுகின்ற பயத்தைப் போக்கிக் கொள்ள பலவகையான சடங்கு முறைகளை மேற்கொண்டான்.

“இறப்பு என்பது தாயின் கருப்பைக்குள் மீண்டும் புகுவது’ என்று ரிக்வேதம் கூறுகிறது. இறந்தவர்களின் ஆன்மா சாந்தி அடையவும், அவர்களை மறந்து அன்றாட வேலைகளில் ஈடுபடவும் இறப்புச் சடங்குகள் நடத்தப்படுகின்றன. சமுதாயத்தில் இறப்பு என்பது துக்க நிகழ்ச்சியாகும். இறப்பினை எந்த ஒரு குடும்பமும் ஏற்பதில்லை. எந்த நேரத்தில் எவருக்கு இறப்பு நேரிடும் என்று எவராலும் அறிய முடியாது. மேலும் இறப்பு நேர்ந்த குடும்பம் தீட்டுப்பட்டதாக கருதப்படுகிறது.

இறப்புத் தீட்டு என்பது நீராடுவதனால் போகக்கூடியது அல்ல. சடங்குகள் மூலமாகவே போக்க இயலும்.இறப்புச் சடங்குகளைச் செய்வதனால் அவ்ாகளது ஆன்மா எவ்விதத் தடையுமின்றி மறு உலகு சென்றடையும் என்ற நம்பிக்கை இப்பகுதி மக்களிடம் இருந்து வருகிறது. இறந்தவர்களின் ஆவி மயானத்திலிருந்து திரும்பி வரக்கூடாது

என்பதற்காக அவற்றைத் திருப்திப்படுத்தும் நோக்கில் செய்யப்படும் சடங்குகள் இறப்புச் சடங்குகளாகும்.

இறப்புத் தொடர்பான பழக்க வழக்கங்களை,

1. இறப்பிற்கு முன்பு நிகழக்கூடிய பழக்க வழக்கங்கள்
2. இறப்பிற்குப் பின்னுள்ள பழக்க வழக்கங்கள்

என்று இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கிறார் ந. சாந்தி (1994: 306)




**பச்சைச் சடங்குகள்**

ஒரு மனிதன் வாழாது வாழ்கின்றனன் பின்னர் ஏதொரு வகையில் அவனது உடலில் உறைந்திருக்கும் ஆவியானது அவனை விட்டுப் பிரிந்து செல்கிறது. இதன் மூலம்தான் இறப்பு நேரிடுகிறது. அதாவது பச்சைச் சடங்கானது உடலில் இருந்து ஆவி பிரிந்து இறப்புக்குள்ளாகிய சதைப்பகுதிக்குச் செய்யப்படுவது என்கிறார் சீ. பக்தவத்சலபாரதி (1990: 507). பச்சைச்சடங்கு என்பது இறந்தவர் உடலுக்கு வீட்டிலும் சுடுகாட்டிலும் செய்யப்படும் சடங்குகள் ஆகும். பாடையில் இறந்த உடலை வைத்து வீதி வழியாக எடுத்துச் சென்று பின் சுடுகாட்டில் வைத்து அனைத்துச் சடங்குகளையும் செய்வர். அதாவது சுடுகாட்டில் நடைபெறும் சடங்குகள் அனைத்தும் பச்சைச் சடங்குகள் ஆகும்.

**உலர்ந்த சடங்குகள்**

*ஒருவர் இறந்தபிறகு மூன்றாம் நாள் பால் தெளித்தல் என்ற நிகழ்வும், பதினாறாம் நாள் ஈமச்சடங்கும், பின்னர் ஒரு வருடம் கழித்து இறந்த நாளில் வருசப் படையல், மற்றும் திவசம் போன்ற சடங்குகள் அனைத்தும் உலர்ந்த சடங்குகள் ஆகும்.*

**இறப்பிற்குப் பின் நிகழக்கூடிய பழக்க வழக்கங்கள்**

**பால் ஊற்றுதல்**

*இறப்பிற்காகப் போராடிக் கொண்டிருக்கம் ஒருவரின் இறப்பு உறுதி செய்யப்பட்ட பிறகு அவரின் பாசத்திற்குரியவரான, மகன், மகள், பேரன், பேத்தி இவர்களின் கையினால் பால் ஊற்றுகின்ற வழக்கம் உள்ளது. பால் ஊற்றுபவர்கள் தங்களின் பெயரைச் சொல்லி நான்தான் என்று பால் ஊற்றுவதன் மூலம் இறப்பவர்களின் ஆத்மா அமைதி அடைவதுடன் மட்டுமல்லாமல் பால் ஊற்றுகின்றவருக்கும் நம்முடைய கையால் பால் ஊற்றுகின்ற வாய்ப்பு கிடைத்ததே என்று ஆறுதல் அடைகின்றனர்.*

*மூச்சு விடுவதற்குத் திணறிக் கொண்டிருக்கும்போது பால் ஊற்றினால் மூச்சடைத்து உயிர் பிரிந்து விடும் என்ற அறிவியல் காரணம் ஒரு புறம் இருந்தாலும், இரண்டு மூன்று நாள்களுக்கும் மேல் இழுத்துப் பிடித்துக் கொண்டிருக்கும் கோரத்தைப் பார்த்துக் கொண்டிருக்க முடியாது என்பதற்காகப் பால் ஊற்றி விரைவில் உயிர் பிரிந்து ஆத்மா சாந்தி அடையும் என்று இம்மக்கள் நம்புகின்றனர்.*

**மண்ணையும் பொன்னையும் இழைத்து ஊற்றுதல்**

*மரணத்திற்காகப் போராடிக் கொண்டிருக்கும் ஒருவரின் உயிர் விரைவில் பிரியவில்லை என்றால் அவருக்கு தன் பொருட்கள் மீது தன் நிலங்கள் மீது ஆசை அதிகம் இருப்பதனால் எப்படிச் சாவது என்ற தவிப்பும் வேதனையும் அவர்களிடம் இருக்கும் அதனால் அவர்கள்*

நிலத்தில் இருந்து சிறிதளவு மண்ணையும், அவர்கள் வைத்துள்ள பொன்னையும் இழைத்து வாயில் ஊற்றுகின்ற வழக்கம் உள்ளது. இதன்மூலம் ஆத்மா நிறைவும் மன அமைதியும் பெறுவதாக நம்புகின்றனர். ஆனால் இப்போது இவ்வழக்கம் குறைந்து காணப்படுகின்றது.

**இறந்த பின்னர் நிகழக்கூடிய பழக்க வழக்கங்கள்**

**உயிர் பிரிந்ததும்**

இறப்புக்குரியவரின் உயிர் பிரிந்ததும் கற்பூரம் ஏற்றித் தேங்காய் உடைத்து வயதில் பெரியவராக இருந்தால் காலில் விழுந்து கும்பிடுவர். கண்ணிமைகளை மூடுதல், கால் கட்டைவிரல்களைச் சேர்த்துக் கட்டுதல் இறந்தவர் ஆணாக இருந்தால் பிணத்தில் நெற்றியில் விபூதி அணிவித்தல் இறந்தவரின் மனைவிக்குத் தலைநிறைய பூ வைத்து முகம் நிறைய மஞ்சள் பூசி பொட்டு வைத்தல் பிணத்தின் தலைமாட்டில் காமாட்சி அம்மன் விளக்கு ஏற்றி வைத்தல், போன்ற சடங்கு முறைகளைச் செய்கின்றனர். சுமங்கலிக் கோலம் பூணச் செய்வதனால் இறுதியாக அப்பெண்ணைச் சுமங்கலிக் கோலத்தில் பார்க்க வேண்டும் இனி அவள் சுமங்கலியாக வாழ்வதற்கு இந்தச் சமுதாயமே சடங்குகளும், சம்பிரதாயங்களும் அனுமதிக்காது என்பதனால் அன்றைய நாளில் இருந்து அவள் தாலியைக் கழுத்திலிருந்து அகற்றுகின்ற நாள்கள் வரைக்கும் சுமங்கலியாக இருக்க அனுமதிக்கின்றனர். சுமங்கலியான பெண்ணுக்கு அன்று செய்கின்ற கோலமே இறுதியானது என்பதனால் இவ்வழக்கம் பின்பற்றப்படுகின்றது.

இறந்தவர்களின் உடல் வீணாகாமல் இருப்பதற்காக நல்லெண்ணையுடன் உப்புத்தூள் சேர்த்துப் பிணத்தில் வாயில் ஊற்றி வெற்றிலைப்பாக்கு இடித்து வைத்து வாயைக் கட்டினால் பிணம் கெடாமல் இருக்கும் என்று களப்பணியில் கூறுகின்றனர். இவ்வழக்கம் அறிவியல் அடிப்படையில் பார்த்தால் இறப்பு நடந்த வீட்டின் சுகாதாரத்தைப் பாதிக்கக்கூடாது என்பதற்காகப் பின்பற்றப்படுகிறது எனலாம். இறந்தவர்களைப் படுக்க வைக்கின்றனர். அவர்களின் தலை

தென்திசையை நோக்கி இருக்கும்படி வைக்கின்றனர். ஏனென்றால் தென்திசை எமனின் திசையாகக் கருதப்படுகிறது. வீட்டிற்கு முன்பு சாவுப் பந்தல் போடுகிற வழக்கம் உள்ளது.

இறந்தவரின் நெற்றிப் பகுதியில் ஒரு ரூபாய் நாணயம் வைப்பதற்குக் காரணம் இறந்தோர் உலகிற்கு எடுத்துச் செல்வதற்குச் செலுத்த வேண்டிய கட்டணம் ஏதேனுமிருந்தால் அதற்காக இது வைக்கப்படுகிறது என்று களப்பகுதியில் கூறினர். இறந்த உடலுக்கு வாய்க்கட்டு தவிர மூக்கு, காது போன்ற துவாரத்தில் பஞ்சு வைத்து துர்நாற்றம் வீசுவதைத் தடுக்க முடியும் என்கின்றனர். அதனால் பன்னீர், ஊதுபத்திகள் இவற்றை வாங்கிக் கொளுத்தி வைக்கின்றனர். இச்சடங்கு முடிந்த பிறகு பங்காளிகள் மூலமாக மற்ற உறவினர்களுக்கு இறப்புச் செய்தியைத் தெரிவிக்கின்றனர்.

**இறப்புச் செய்தி அறிவித்தல்**

இறப்பு நிகழ்ந்ததும் அனைத்து உறவினர்களுக்கும் கிராமத்திலுள்ள வெட்டியான் மூலம் நெருங்கிய நண்பர்ள் மூலம் இறப்புச் செய்தியைச் சொல்லி அனுப்பும் வழக்கம் இம்மக்களிடம் உள்ளது. வெளியூர் உறவினர்களுக்கு ஆள் போகமுடியவில்லை என்றால் தொலைபேசி தந்தி மூலம் இறப்புச் செய்தியைத் தெரிவிப்பர். மேலும் கார் வைத்து ஓர் இரங்கல் செய்தி என்றும் இறப்புச் செய்தி என்றும் விவரங்களைக் கூறுவார்கள். இவை இன்றும் வழக்கில் உள்ளது.

ஊரிலுள்ளோருக்கும் மற்றும் உறவினர்களுக்கும் தப்படித்தல் மூலமாக இறப்புச் செய்தியைப் பரவுகின்றனர். தப்படித்தலை வைத்து யாரோ இறந்துவிட்டார்கள் என்ற செய்தி உணரப்படும். இசைக்கருவிகள் யார் வீட்டில் என்ன நிகழ்கிறது என்பதை உணர்த்தும் வகையில் இறப்புத் தொடர்பான பழக்க வழக்கங்களை மேற்கொள்கின்றனர்.

**ஓப்பாரி வைத்தல்**

*இறப்பு நடந்த வீட்டில் ஒப்பாரி என்பது மிகவும் முக்கியமானது. அங்கு வந்த உறவினர்கள் துக்கம் விசாரிக்கின்றனர். பெண்கள் பலரும் மனதளவில் பாதிக்கப்பட்டவரைச் சேர்த்தணைத்துக் கொண்டு ஒப்பாரி வைத்து அழுகின்ற வழக்கம் இம்மக்களிடம் உள்ளது. இறந்தவர்களின் புகழ், செயல்பாட்டை இட்டுக்கட்டிப் பாடுவர்.*

*இறப்பு வீட்டிற்கு வருகின்ற உறவினப் பெண்கள் தம்தம் வீட்டில் நடந்த துயர நிகழ்ச்சிகளை எண்ணிக் கண்ணீர் விடுகின்றனர். எனவே ஒப்பாரி என்பது தம்தம் மனக்குறையைத் தீர்க்க உதவும் கருவியாகவும் பயன்படுகிறது என்று களப்பணியின்போது மக்கள் கூறுகின்றனர்.*

*இறந்தவர்களின் ஆவிகள் சாந்தியடைவதாகவும் ஒப்பாரிப் பாடாவிட்டால் ஆவிகள் துன்புறுவதாகவும் இவ்வுலகம் விட்டு மறு உலகம் செல்ல ஒப்பாரிகளே இறக்கைகளாகப் பயன்படுவதாகவும் இவற்றால் ஆவிகள் மூலம் தீங்கு வராமல் காக்க முடிகிறது என்று மக்கள் நம்புகின்றனர்.*

**கோடி போடுதல்**

*கோடி என்பது இறந்தவரின் பிறந்த வீட்டிலிருந்து கொண்டுவரும் துணி வகையினைக் கோடி என்பர். அதாவது கணவன் இறந்து மனைவி உயிருடன் இருந்தாலும் மனைவி இறந்துவிட்டாலும் அப்பெண்ணின் தாய்வீட்டார் தன் மகளுக்குச் செய்யும் இறுதி சீர் கோடித் துணி ஆகும். புதுப்புடவையுடன் மஞ்சள், குங்குமம், வளையல், பூ, பிணத்தைக் குளிப்பாட்டுவதற்குரிய பொருள்கள் அனைத்தையும் கோடியாகக் கொண்டு வருவார்கள். அப்போது அவர்களுக்கு முன்பாகத் தப்படித்து வருவார்கள். தப்படித்தல் என்பது முக்கியமானதாகும். இதனை,*

**“ஆரங்கிரவுக்கையும்**
**ஆனைமுகம் தங்கக்காப்பு**

**அதட்டிக் கட்டயிலே என்**

**அங்கம் ஒடங்கிக் போகுதே**

**சேலய அவுறுங்கடி- எனக்கு**

**சித்தாடயத் தாருங்கடி- என்**

**பட்டை அவுறுங்கடி**

**பழந்துணியைத் தாருங்கடி"**

*(இராமநாதன், 1982: 287)*

*என்ற பாடல் இந்நிலையை விளக்குகின்றது.*

**நீர்க்கொண்டு வருதல்**

*இறந்தவர்களை குளிப்பாட்டும் வழக்கம் உள்ளது. குளிப்பாட்டுவதற்கு மூன்று அல்லது ஐந்து குடத்தில் தண்ணீரை மகன், மகள், பங்காளிகள், இவர்கள் தெருவில் உள்ள குளத்திலோ, கிணற்றிலோ தண்ணீர் எடுத்து வருவர். அங்கு கொள்ளி வைப்பவர் தலையில் நீர் ஊற்றி திருநீறு பூசி வருவர். தண்ணீர் கொண்டு வரும்போது வண்ணார் கொடுக்கும் வேட்டியினை நான்கு மூலைகளிலும் பிடித்துக் கொண்டும் பறை அடித்துக் கொண்டும் வருவார்கள். இவை இப்பகுதி மக்களின் வழக்கமாக உள்ளது.*

**தலையில் எண்ணெய் வைத்தல்**

*இறந்தவர்களின் குடும்ப உறவுகள் மற்றும் நெருங்கிய உறவினர்கள் நல்லெண்ணையையும் சீயக்காய்த் தூளையும் இடது புறங்கையில் மூன்றும் தொட்டு இறந்தவர்களின் தலையில் வைப்பர். இறந்தவர்கள் ஆண், பெண் பேதம் இல்லாமல் இச்சடங்கு நடைபெறும். பிணத்தைக் குளிப்பாட்டும் போது வேட்டியால் மறைந்து கட்டுவர். குடும்பத் தலைவர் இறந்துவிட்டால் அவரது கால்மாட்டில் மனைவியை உட்கார வைத்து இறந்த கணவருக்கும் மனைவிக்கும் ஒன்றாகவே நீராட்டி பிணத்திற்கு*

*வெள்ளைத் துணி போர்த்தியும், மனைவிக்கு அவரது தாய் வீட்டார் கொண்டுவந்த கோடி துணியைக் கழுத்தில் போட்டு முகம் நிறைய மஞ்சள் பூசி குங்குமம் வைத்து பூ வைத்து வளையல் அணிவிக்கின்ற வழக்கம் உள்ளது.*

**பாடை கட்டுதல்**

*பச்சை மூங்கிலால் பாடை தயாரிப்பர். இதனைப் பறையர் சாதியினர் செய்கின்றனர். இறந்தவர்களின் உயரத்திற்குத் தகுந்தவாறு பாடை கட்டுவர். இதில் பூ, மாலைகள் இவைகளைத் தொங்கவிட்டு அலங்கரிப்பர். பின்னர் இவற்றிற்குக் காகித பூவும் பயன்படுத்துகின்றனர். உள்ளிருக்கும் பிணம் வெளியில் தெரியாமல் மறைத்துக் கட்டப்பட்டிருக்கும் மூங்கில்களை வளைத்து கட்டியிருப்பர். அதன் மேல் கும்பம் போல் வைத்து அதன் மேல் பூவைக் கட்டி வைப்பர். பாடை செய்யக் கூடியவருக்குச் சாராயம், பணம் கொடுப்பார்கள். ஆனால் இப்போதெல்லாம் ஊர்களிலேயே 'சாவுப்பெட்டி' அல்லது சாவு வண்டி என்று உள்ளது. அவற்றில் இறந்தவர்களை வைத்து இழுத்துச் செல்வார்கள். இதுதான் இப்போது இப்பகுதி மக்களிடம் பழக்கமாக உள்ளது.*

**நெய்ப்பந்தம் சுற்றுதல்**

*"தாய்க்குத் தலைப்பிள்ளை*
*தந்தைக்குக் கடைசிப் பிள்ளை"*

*அதாவது இறப்பு நிகழ்ந்த வீட்டில் தாய் இறந்தால் மூத்த பிள்ளையும், தந்தை இறந்தால் கடைசிப் பிள்ளையும், மனைவி இறந்தால் கணவனும் ஈமக்கடன் செய்வதற்கு உரிமையுடையவர் என்று முன்னோர்கள் வகுத்துள்ளனர். கொள்ளி வைப்பவர்கள் முகச்சவம் செய்து மொட்டை அடித்து தலை முழுகி கொள்ளி வைக்கும் வழக்கத்தினைப் பின்பற்றுகின்றனர். நெய்ப்பந்தம் என்பது ஒரு குச்சியில் துணியைச் சுற்றி*

அதில் எண்ணெயும், நெய்யும் விட்டு நெருப்பில் காட்டுவர். பின்னர் இவை அணையாமல் இருக்கும். கொள்ளி வைப்பவர் தன் கையில் ஏந்திக் கொள்வர். பிணத்தை மூன்று முறை சுற்றி வருவர்.

**பிணம் எடுத்தல்**

இறந்தவர்களை அன்றோ அல்லது மறுநாளோ எடுத்து விடும் வழக்கம் உள்ளது. இதற்கு பாடை செய்து அதாவது ஏழு குறுக்குக் கழிகளும், இரண்டு நெடுக்குக் கம்பும் இணைத்துக் கட்டி அதன் மேல் வைக்கோலைப் பரப்பி அதில் துணியைக் கட்டி தென்னை ஓலையை முடைந்து பிணத்தைத் தூக்கி வைத்துக் கட்டி விடுவார்கள். நான்கு பக்கமும் நான்குபேர் பாடையைத் தூக்கிச் செல்வார்கள். பாடைக்கு முன்னே இறுதிச்சடங்கு செய்பவர்கள் கொள்ளிச் சட்டியை எடுத்துக் கொண்டு செல்வார்கள்.

பிணத்தை எடுத்துச் செல்லும்போது இறப்பிற்கு வந்த ஆண்கள் அனைவரும் உடன் செல்வார்கள். பிணத்தைத் தூக்கிச் செல்லும்போது பூவைத் தூவிக் கொண்டே செல்வார்கள். பிறகு பூ பந்தையும் தூக்கி வீசி விளையாடிக் கொண்டே செல்வார்கள்.

**சாணம் தெளித்து தீட்டுக் கழித்தல்**

இறப்பு நிகழ்ந்த வீட்டில் இருந்து பிணத்தைத் தூக்கிச் சென்றதும் இறந்தவர் பயன்படுத்திய பாய், தலையணை, போர்வை அல்லது சமுக்காளம், அன்று அவர்கள் உடுத்தியிருந்த ஆடைகளை எறியும் நெருப்பில் அனைத்தையும் எறிந்து விடுவார்கள். அவைகள் மட்டுமல்ல இறந்தவர்கள் அருகில் வைக்கப்பட்டுள்ள பொருட்களையும் நெருப்பில் எரித்து விடுவார்கள். பின்னர் வீட்டைச் சுத்தம் செய்து சாணத்தைக் கரைத்து வீட்டைச் சுற்றித் தெளிப்பார்கள். அப்படி தெளிப்பதனால் இறந்தவர்களுக்குக் காரணமாக ஏற்பட்ட கிருமிகள் நீங்கும். அசுத்தங்கள் நீங்கி அந்த இடம் தூய்மை அடையும் என்று நம்புகின்றனர். பிணத்தை

எடுத்ததும் சாணம் தெளிப்பதும் சாவு வீட்டைச் சாணத்தால் மெழுகிச் சுத்தம் செய்வதுமான வழக்கங்கள் உள்ளன.

இறப்புக் காலங்களில் மட்டுமல்லாது விழாக்காலத்திலும் பிறப்பு, பருவமடைதல், திருமணம், போன்ற விழாக்களிலும் புரட்டாசி மாதம் மற்றும் பொங்கல் காலங்களில் சுவரில் சுண்ணாம்பு பூசுவது வழக்கம் தரையினைச் சிலர் சுண்ணாம்பினாலும் பெரும்பாலோர் மாட்டுச் சாணத்தாலும் மெழுகின்றனர். இந்நாட்டு மக்கள் தங்களுடைய வீடு முழுவதிலும் மாட்டுச் சாணத்தைப் பூசுகிறார்கள் என்று மார்க்கோ போலோ குறிப்பிடுகிறார். சிலர் வாரத்திற்கு ஒருமுறை வீட்டை மெழுகித் தூய்மையாக வைத்திருப்பர். ஒவ்வொரு கிழமையன்றும் ஏதாவது ஒரு காரணத்தால் வீட்டை மெழுகுவர். சிலர் வெள்ளிக்கிழமை அன்று வீடு மெழுகுவர் என்பதை,

**“வெள்ளிக் கிழமையன்று வள்ளியும்**
**வீடு மெழுகையிலே”**

என்பதைப் புலப்படுத்துகின்றன. இவை மகிழ்ச்சி காலங்களில் மட்டுமல்லாமல் இறப்பு நிகழ்ச்சியில் இறுதிச் சடங்கின் பொழுதும் வீட்டினை மெழுகுகின்றனர். வீட்டை மெழுகுவது வெறும்அழகிற்காக மட்டுமின்றி வளம் பெறவும் ஆவிகளை மன நிறைவு செய்து அமைதிப்படுத்துவதற்காகவும் வீட்டை மெழுகுகின்றார்கள்.

### சுடுகாட்டில் நடைபெறும் பழக்க வழக்கங்கள்

இறந்தவர்களுக்குச் சுடுகாட்டில் பல வகையான பழக்க வழக்கங்கள் மேற்கொள்ளப்படுகின்றன. இறந்தோரை இறப்போரினின்றும் பிரித்து முன்னால் இறந்துபோன மூதாதையருடன் சேர்ப்பதாகும் என்ற ஈமச் சடங்குகளின் உள்நோக்கம் ஆகும். இறந்தவர்களை முறைப்படி அடக்கம் செய்யப்படாத பிணங்கள் குழியிலிருந்து வெளியேறி வாழ்பவர்களைத் தாக்கி, அவர்களின் இரத்தத்தை உறிஞ்சிவிடும் தன்மையன என்றும்

பழைய மெசபடோமிய மக்கள் நம்பினர். பின்னர் இக்கருத்து நாளடைவில் உலகின் எல்லாப் பகுதிகளுக்கும் பரவிவிட்டது (இராகவேந்திரராவ், 1932: 112) என்கிறார். இதனால் இறந்தவர்களை முறைப்படி அடக்கம் செய்யப்படுகின்றனர்.

மேலும் அழுகிய பிணங்களோடு வாழ்வது சுகாதாரக் கேடானது, பிணங்களை அப்படியே விட்டுவிடுவதும், இடம் மாற்றுவதும் நடைமுறைக்கு ஒவ்வாதது. எனவே மனிதன் அவற்றை ஒழுங்குபடுத்த வேண்டியுள்ளது. இக்காரணிகளால் சுடுகாட்டில் மேற்கொள்ளும் இறுதிச் சடங்குகள் சார்ந்த பழக்க வழக்கங்கள் நாட்டுப்புற மக்களால் மிகவும் முக்கியமானதாக கருதப்படுகின்றன.

இறந்தவர்களின் ஆவி மயானத்திலிருந்து திரும்பவரக்கூடாது என்பதற்காக அவற்றைத் திருப்திப்படுத்தும் நோக்கில் செய்யப்படும் சடங்குகளே இறப்புச் சடங்குகளாகும் என்று தே. ஞானசேகரன் (1984: 23-24) குறிப்பிடுகிறார்.

இப்பகுதியில் உள்ள மக்கள் (சாதி) ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு சுடுகாடு உள்ளது. ஆனால் அனைத்து மக்களும் பிணத்தை எரிக்கவோ, அல்லது புதைக்கவோ செய்கின்றனர். புதைப்பதாக இருந்தால் இறந்தவுடனே ஆட்களை அழைத்துக் கொண்டு குழியை வெட்டி வைத்து விடுகின்றனர். பின்னர் பிணம் சுடுகாடு வந்தவுடன் புதைகுழியை மூன்று முறை பாடையுடன் சுற்றி வருவர். பிறகு மேற்கு பக்கம் பிணத்துடன் பாடையை வைப்பர். மூங்கில் பாடையிலிருந்தோ அல்லது சாவு வண்டியில் இருந்தோ பிணத்தைத் தரையில் மேற்கில் வைப்பர். பின்ர் எரிப்பதாக இருந்தால் விறகுகள் அடுக்கி இருக்கும் சிதையில் வைப்பார்கள். தலை தெற்காகவும், கால் வடக்காகவும் வைப்பார்கள். பிணத்தின் கால், கைக்கட்டுகளை அவிழ்த்து விடுகின்றனர். சுமங்கலிப் பெண்ணாக இருந்தால் அவள் கழுத்தில் மஞ்சள் கயிறு மட்டும் இருக்கும். ஏற்கனவே அணிந்துள்ள மாங்கல்யத்தைக் கணவனின் கையினால் கழற்றி விடுகின்றனர். பின்பு வரட்டினயால் உடல் முழுவதும் மூடி முகத்தை

*மட்டும் மூடாமல் வாய்க்கரிசி போடும் வழக்கத்தினை மேற்கொள்கின்றனர்.*

**வாய்க்கரிசி போடுதல்**

*இறந்தவர் வீட்டிலிருந்து வாய்க்கரிசியை கொண்டு வருகின்றனர். பிணத்திற்கு மேல் வண்ணார் வெள்ளைத் துணியை விரிப்பார். பின்னர் முதலில் இறுதிக்கடன் செய்வதற்கு உரிமையானவர் காசு, வாய்க்கரிசியைப் பிணத்தின் மேல் போடுவார். அடுத்த இறந்தவருக்குரிய மாமன், மச்சான், பங்காளிகள் போடுவர். இறந்தவருக்குரிய ஈமச் சடங்கில் வாய்க்கரிசி போடுதல் என்பது மிகவும் இன்றியமையாத ஒன்றாகக் கருதப்படுகிறது. இறந்தவருக்கு வாய்க்கரிசி போட்டால் தான் அவர் உயிர் மீண்டும் மண்ணில் பிறப்பெடுக்காது என்று வே. சரோஜா (1991: 43) கூறுகிறார். மேலும் இறந்தவருக்கு உயிர் பிரியும் வேளையில் உணவு கொடுக்க முடியவில்லை என்பதற்காக இறுதியில் வாய்க்கரிசி போடுவதாக மக்கள் நம்புகின்றனர் என்று களப்பணி மூலம் அறியமுடிந்தது.*

**நீர் பானை உடைத்தல்**

*கொள்ளி வைக்கும் மகனுக்கு நாவிதரால் மொட்டையடித்து மீசையும் எடுத்து விடுவர். பின்னர் சட்டையில்லாமல் வேட்டியுடன் குளிக்கச் செய்து புது மண்பானையில் இறுதிக்கடன் செய்பவரின் வலது தோளில் வைத்து சிதையின் மேல் அல்லது குழிக்குள் வைக்கப்பட்டுள்ள பிணத்தின் வலமாக மூன்று சுற்றி வரச் செய்து ஒவ்வொரு சுற்றுக்கும் மூன்று துளையினை வண்ணார் போட அதன் வழியாக வெளிப்படுகின்ற நீரினைப் பிணத்தின் மீது படுமாறு செய்வர். இதனைச் சுற்றி வந்த பின் பிணத்தின் தலைமாட்டில் குடத்தைப் போட்டு உடைத்து சுக்கு நூறாக்கிடுகின்ற வழக்கம் உள்ளது.*

*மனித உடல் மண்பாண்டத்திற்குச் சமமானது. மண்குடத்திற்குள் இருக்கும் தண்ணீரைப் போன்றது மனித உடலுக்குள் இருக்கும் உயிர்*

என்ற ஆன்மா மனிதன் இந்த உலகத்தில் பெறவேண்டிய மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்ற மூன்றுவிதமான ஆசைகளையும் ஆண்டனுபவித்து இறுதியில் மூன்று ஆசைகளையும் துறந்து மண்டுகமாகிய மனித உடலில் இருந்து தண்ணீராகிய உயிர் பிரிகின்றது என்ற குறியீட்டு நிலையே நீர்பானை உடைத்தல் என்பது வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

## கொள்ளி வைத்தல்

இறந்தவர்களை எரிக்கும் வழக்கத்தில் உள்ளவர்கள் கட்டைகள் அடுக்கப்பட்ட சிதைக்கு மேல் பிணத்தை வைத்து வாய்க்கரிசி போடுவார்கள். பின்னர் முகத்தை மூடி இறுதிக்கடன் செய்யும் உரிமையுள்ளவர்கள் சிதைக்குத் தீ வைத்து அதாவது கால்மாடு, தலைமாடு, பக்கவாட்டிலும் தீ வைத்து கால்மாட்டில் கற்பூரம் ஏற்றி விழுந்து வணங்கிவிட்டுக் கொள்ளி வைத்தவர்கள் திரும்பிப் பார்க்காதவாறு அழைத்துச் செல்கின்றனர்.

கொள்ளி வைக்கும் உரிமை ஆண்களுக்கு மட்டுமே வழங்கப்பட்டுள்ளது. பெண்களுக்கு இவ்வுரிமையைத் தமிழ்ச் சமுதாயத்தினரால் வழங்கப்படவில்லை. கொள்ளிப்போடுகின்றவருக்கு இறந்தவர் சேர்த்து வைத்தள்ள சொத்தில் அதிகமான பங்கு வழங்கப்படுவதும் உண்டு. பிள்ளைப் பேறில்லாத இளம் வயதுச் சுமங்கலி இறந்தால் அவளது கணவன் கொள்ளிப்போடும் உரிமை பெறுகிறான் .அதே கணவன் மீண்டும் மறுமணம் செய்து கொள்வதாக இருந்தால் மனைவிக்குக் கொள்ளிப் போடக்கூடாது. அப்படிக் கொள்ளிப் போட்டால் ஒரு ஆண்டு வரை அவன் மறுமணம் செய்து கொள்ளாமல் இருக்க வேண்டும் என்ற கட்டுப்பாட்டினையும் இம்மக்கள் விதித்துள்ளனர். பிள்ளைப்பேறே இல்லாத வயது முதிர்ந்த தம்பதிகள் இறக்க நேர்ந்தால் அவர்களுக்குரிய சொத்தினை யார் அனுபவிப்பதற்கு

உரிமையானவர்கள் என்று உறுதி செய்யப்படுகிறார்களோ அவர்கள்தான் கொள்ளி வைக்க வேண்டும்.

**குழியில் மண் அள்ளிப் போடுதல்**

இறந்தவர்கள் சிலபேரைப் புதைக்க நேரிடுகிறது. இறுதிக்கடன் செய்பவர் தனது கையினால் மூன்று முறை மண் அள்ளிப்போட வேண்டும். பின்னர் வந்திருக்கும் அனைவரும் குழிக்குள் மண் அள்ளிப் போடுவார்கள். பின்னர் இறந்தவர்களை மண் போட்டு மூடி விட்டுத் திரும்பிப் பார்க்காமல் வரும் வழக்கத்தினைக் கொண்டுள்ளனர்.

**இழவுப் பணம்**

இறந்தவர் வீட்டை இழவு விழுந்தது என்று கூறுவார்கள். சுடுகாட்டில் சடங்குகள் முடிந்த பிறகு இறந்தவர் வீட்டிற்கு இழவுப் பணம் கொடுக்கும் வழக்கம் உள்ளது. இந்த பணத்தைத் திரும்பக் கொடுப்பது கிடையாது. இதைத்தான் இம்மக்கள் எவருக்காகவது பணம் கொடுத்து திருப்பித் தரவில்லை என்றால் அவனுக்கு இழவுப்பணம் பொட்டாச்சி என்று கோபமாகக் கூறுகின்றார்கள். இந்த இழவுப்பணம் இறந்தவர் வீட்டிற்கு உதவியாக இருக்கின்றன. இச்சடங்கு முடிந்தபிறகு அனைவரும் குளித்துவிட்டு விடு திரும்புகின்றனர்.

**தீபம் பார்த்தல்**

இப்பகுதியில் உள்ள மக்கள் சுடுகாட்டில் சடங்கினை முடித்துவிட்டு இறுதிக்கடன் செய்தவர் முதலான அனைவரும் குளத்திற்குச் சென்று குளித்துவிட்டு வீட்டிற்கு வருவார்கள். வரும்போது வாசலில் வைக்கப்பட்டுள்ள தண்ணீரில் கை கால் அலம்பி விபூதியை நெற்றியில் வைத்துக் கொண்டு வாசலில் போடப்பட்டுள்ள உலக்கையைத் தாண்டி வீட்டிற்குள் வந்து உயிர்விட்ட இடத்தில் எரிகின்ற தீபத்தை வணங்கிச் செல்வார்கள். இது இறந்தவர்களைத் தீப வடிவத்தில் பார்த்தலைக் குறிக்கும்.

*இறந்தவர்கள் தெய்வத்திற்குச் சமமானவர்கள் என்பதாலும் கோவில்களில் விளக்கு ஏற்றி வைப்பது பால் உயிர் விட்ட இடத்திலும் விளக்கு ஏற்றி வைக்கின்றனர். நெற்றியில் விபூதி வைப்பதனால் தங்களைத் தொடர்ந்து வருகின்ற கெட்ட ஆவிகள் விபூதியை வைத்ததும் ஓடிவிடுகின்றன என்று அம்மக்கள் நம்புகின்றனர். கெட்ட ஆவிகளைக் கட்டுப்படுத்தும் சக்தி விபூதிக்கு உண்டு என்பதனாலும் என்றைக்காவது ஒருநாள் நமது உடலும் இந்த விபூதிச் சாம்பலைப்போல் சாம்பலாகக் கூடியதுதான் என்ற நிலையாமையை உணர்த்துகின்றது. உலக்கை தாண்டுவதனால் ஒரு கட்டுப்பாட்டு எல்லையைத் தாண்டி காத்து கருப்புகள் வராது என்ற நம்பிக்கையும் உள்ளது.*

*உலக்கை என்பது சத்தியக் கட்டுப்பாடு உடையது. அதனை மீற முடியாத இறந்தவர்கள் பந்த பாசத்தை முன்னிட்டுப் பூத உடலுடன் வந்துவிடக் கூடாது என்ற எண்ணத்தில் நடைபெறுவதாக சி. ஜனார்த்தனன் (1993: 196) கூறுகின்றார். உலக்கையைப் போட்டு தாண்டுகிற வழக்கம் இன்றளவும் இம்மக்களிடம் நிகழ்கின்றது.*

**பங்காளிச் சாப்பாடு**

*காடு புகையும்போது விடு புகையக் கூடாத என்பதால் இறப்பு நடந்த வீட்டில் அடுப்பு பற்றவைத்துச் சோறு ஆக்கும் வழக்கம் அனைத்து மக்களிடமும் இல்லை. அதனால் அவ்வூரில் உள்ள பங்காளிகள் யாரேனும் ஒருவர் வீட்டில் சமைத்து இறப்பு நிகழ்ந்த வீட்டிற்குக் கொண்டு வந்து சாப்பாடு போடுகின்ற வழக்கம் உள்ளது. சைவ உணவைக் கொடுக்கின்றனர். இந்த உணவை அத்தெருவில் உள்ள ஆண், பெண் இருபாலரும் சாப்பிடுகின்றனர். இப்பகுதியில் தான் பங்காளி சமைக்கின்ற வழக்கம் உள்ளது. பள்ளர், பறையர் இனத்தில் எல்லாம் உறவுமுறையில் உள்ளவர்களும், சம்மந்தி உறவில் உள்ளவர்களும் இந்த முறையைச் செய்கின்றனர். இது இவர்களின் வழக்கமாகும்.*

**இறந்ததற்குப் பின்னால் நடைபெறக்கூடிய பழக்க வழக்கங்கள்**

*இறந்தவர்களை எடுத்த பின்னர் சருமாதி முடிகின்ற வரையிலும் இதனைத் தொடர்புடைய பழக்க வழக்கங்கள் கடைப்பிடிக்கப்படுகின்றன. ஈடச் சடங்குகளுக்குப் பிறகு இரண்டாம் நாளில் இருந்து பலவகையான பழக்க வழக்கங்கள் நிகழ்கின்றன. இறுதிச் சடங்குகளை உலர்ந்த சடங்கு என்றும் கூறுவர். உலர்ந்த சடங்கானது ஒருவனது ஆவி இறந்த பின்னும் அவர் சார்ந்த பகுதிகளில் உலவும் என்றும், பின்னர் இறுதியாக ஓரிடத்தில் உறையும் என்றும் கருதி அவரது ஆவி அவ்வாறு தங்கிய பின் செய்யும் சடங்காகவே இது கருதப்படுகிறது என்கிறார் சீ. பக்தவத்சல பாரதி (1990: 507). இறுதிச் சடங்குகள் ஒவ்வான்றிலும் அந்தந்த இன மக்களுக்குரிய பழக்க வழக்கங்களும் நம்பிக்கைளும் வெளிப்படுகின்றன.*

*இறப்பு நேர்ந்த வீட்டில் காரியம் முடியும் நாள்கள் வரை இறந்தவரின் வீட்டாருக்கும் அவரைச் சார்ந்த உடன் பங்காளிகளுக்கும் தீட்டு உண்டு. கொள்ளி வைத்தவர்கள் தலையில் எண்ணெய் வைக்கக் கூடாது. தலைமுடியை வெட்டக்கூடாது என்றும், அசைவ உணவு உண்ணக் கூடாது என்றும், மேலும் காரியம் முடியும் வரை கோயிலுக்குப் போவதில்லை. இறந்தவர் வீட்டின் திண்ணையில் அவர்களின் புகைப்படத்தை வைத்து, பூமாலை போட்டு விளக்கேற்றி வைக்கின்றனர். பின்னர் ஒரு செம்பில் தண்ணீர் வைக்கின்றனர். கருமாதி முடிகின்ற வரைக்கும் இறந்தவரது ஆன்மா வந்து போய்க்கொண்டிருக்கும். அவ்வாறு வரும்போது தாகம் ஏற்படின் தண்ணீரை குடித்துத் தாகத்தைத் தீர்த்துக் கொள்வதாக நம்பப்படுகிறது.*

*கொள்ளி வைத்தவர் காக்கைக்கு உணவு வைத்த பின்னர் தான் சாப்பிட வேண்டும் என்கின்றனர். இறந்தவர்கள் காக்கையின் உருவில் வருவார்கள் என்று நம்பிக்கை கொள்கின்றனர். கொள்ளி வைத்தவர் வெளியூர்களுக்குச் செல்லக்கூடாது. அப்படிச் சென்றால் இரவு தங்காமல் வீட்டிற்கு வந்தாக வேண்டும். தினசரி உயிர்விட்ட இடத்தில் கற்பூரம் ஏற்றி வழிபட வேண்டும் என்றும் பெண்கள் பலர் ஒன்றுகூடி விடியற்காலையிலும், அந்தியிலும் அழுவார்கள். இதனை அந்தி அழுவுதுல் என்று கூறுகின்றனர்.*

**பால் தெளித்தல் அல்லது எட்டாம் துக்கம்**

*இறப்பு வீட்டில் இறப்பு நடந்த மறுநாள் அல்லது மூன்றாம் நாள் செவ்வாள், வெள்ளி, ஞாயிறு இந்த நாட்களில் மட்டும் பால் தெளிக்கின்றனர். பால் அபிசேகப்பொருள்கள், பலகாரம், படையல் பொருட்களுடன் இறுதிக்கடன் செய்பவர் முன்னே செல்வார்கள். அவர் பின்னே உறவினர்கள் செல்வார்கள். புதைக்கப்பட்ட பிணத்தின் தலைமாட்டில் மூன்று முறை பால் ஊற்றுவர் பின்னர் வந்தவர்களும் பால் ஊற்றுவார்கள். பிறகு படையல் போட்டு வழிபடுகின்றனர். எரிக்கப்பட்ட பிணமாக இருந்தால் சுடுகாட்டிற்குச் சென்று மண் குடுவைக்குள் எலும்புகளை வைத்துப் பாதுகாப்புடன் எடுத்துச் சென்று ஆறுகளிலும், குளத்திலும் அதனைக் கரைத்து விடுகின்றனர். தலை முழுகி வீட்டிற்கு வருவர். வீட்டில் பலவகையான பலகாரங்களை வைத்து படையல் போட்டு இருப்பர். இறந்தவரின் ஆவி உயிருடன் வாழ்ந்த காலத்தில் உண்டு மகிழ்ந்த பலவகையான உணவுப் பொருள்களின் மீதும் ஆசை இருக்கும் என்பதால் அந்த ஆவியை மகிழச் செய்யவே இப்படையலைச் செய்கின்றனர். பின்னர் வந்தவர்கள் அனைவருக்கும் இப்பலகாரங்களைக் கொடுக்கின்றனர். அது மட்டுமல்லாது மதிய உணவும் அளிக்கின்றனர்.*

**விளக்குப் பார்த்தல்**

*கணவன் இறந்துவிட்டால் தாலியைஇழக்க உள்ள பெண்ணை அவளது தாய் வீட்டிற்கு அழைத்துச் செல்கின்ற வழக்கம் அனைத்து மக்களிடமும் உள்ளது என்கிறார் அ. இராஜேந்திரன் (2004: 195). எட்டாம் துக்கம் முடிந்து அன்று மாலை தாய் வீட்டிற்கு அழைத்து வருவார்கள். வீட்டிற்கு வந்ததும் நடுவீட்டில் ஏற்றி வைக்கப்பட்டுள்ள விளக்கைப் பார்த்து கும்பிடச் செய்து, அங்கு வைத்துள்ள உப்பு, தவிடு, பருப்பு இவற்றில் கை வைத்துத் தொடச் செய்வர். பின்னர் அத்தெருவில் உள்ளவர்கள் துக்க விசாரித்து அணைத்து அழுவார்கள்.*

*கணவனை இழந்த மகளை தன் வீட்டிற்கு அழைத்து வருவதனால் அங்கு நடைபெறுகின்ற மங்கல நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு முதன்மை பெறுகின்ற தகுதியினை இழந்துவிட்டாள் என்றும் இருந்தபோதிலும் தனது மகள் ஒருமுறை சுமங்கலிக் கோலத்துடன் தாய் வீட்டிற்கு வந்து போகட்டும் என்றும், அவளுக்குத் தாய் வீட்டாரின் ஆதரவும் அனுசரனையும் எக்காலத்திலும் உண்டு என்பதற்காக தாய்வீட்டிற்கு அழைத்து வருகின்றனர். தாய் வீடு மட்டுமல்லாது மற்ற உறவினர்கள் வீட்டிற்கும், அக்கா, தங்கை, பெரியப்பா, பங்காளி வீட்டிற்கு விளக்கு பார்க்க அழைத்துச் செல்கின்றனர்.*

**உத்திரகிரியைப் பத்திரிகை**

*கருமாதி சடங்கை நடத்த வேண்டும் என்ற கட்டாயம் அவர்களிடம் உள்ளது. தங்கள் வசதிக்கேற்றவாறு அமைத்துக் கொள்கின்றனர். சருமாதி பத்திரிகையை அச்சடித்து உள்ளூர் மற்றும் வெளியூர் உறவினர்களுக்குக் கொடுப்பர். இந்த அழைப்பிதழைப் பார்த்த பின்னர் உரிய நாளில் வந்து சேர்வர். அந்த பத்திரிகை கொடுக்கும்போது அதன் மூலையில் கருப்பு நிறம் இருக்கும். அனைக் கிழித்துவிட்டுத்தான் வீட்டுக்குள் எடுத்து செல்வார்கள். சிலர் வீட்டிற்குக் கொண்டு செல்வது இல்லை. கருமாதிச் சடங்கினை மிகவும் பிரபலமாகச் செய்வது கிடையாது. வசதியானர்கள் ஆடம்பரமாகச் செய்கின்றனர்.*

**பதினைந்தாம் நாள் சடங்கு**

*இறந்தவர் வீட்டில் கரும காரியங்கள் செய்வது வழக்கமாகும். பதினைந்தாம் நாள் அன்று மாலை ஆறு மணி முதல் உறவினர்களும், நண்பர்களும் ஊர்மக்களும்வரத் தொடங்கி விடுவார்கள். உயிர் விட்ட இடத்தில் சுவரில் மஞ்சள் பூசி, குங்குமம் வைத்து, இறந்தவரின் நிழற்படத்தையும் வைத்து புக்களால் அலங்கரித்து இறந்தவர் பயன்படுத்திய துணிமணிகளை வைத்து காரியத்திற்காக வந்திருக்கும்*

உறவினர்கள் கொண்டுவந்த பலகாரங்கள், பழ வகைகள், இவைகள் அனைத்தையும் வைத்து படையல் போட்டுக் கற்பூர தீபாரதனை காட்டி கும்பிடுகின்றனர். வந்த பெண்கள் அனைவரும் ஒன்றுகூடி அழுவார்கள். பின்னர் இறந்தவர்களின் மகள் வீட்டிலும், சம்பந்தி வீட்டிலும், தாய் வீட்டிலும் பலகாரங்களைப் பொட்டலமாகப்போடுகின்றனர். இதற்கு முன் அன்று மாலையில் இறந்தவருடைய மகள் கடலை போடுகின்றனர். அதாவது பட்டாணி, வாழைப்பழம், மிட்டாய், வெற்றிலைப்பாக்கு, போன்றவற்றைப் பொட்டலமாக வைத்து ஊரிலுள்ள அனைத்து வீடுகளிலும் கொடுத்து விடுவர். இதற்கு கடலை போடுதல் என்று கூறுவார்கள். கொண்டுவந்த பலகாரப் பொட்டலங்களை அனைவருக்கும் கொடுப்பர். பிறகு அனைவருக்கும் உணவு அளிப்பர். சில பேர் தீட்டு என்று உண்ணமாட்டார்கள். அதனால் கடையில் இருந்து கலர் என்று சொல்லக்கூடிய குளிர்பானத்தை வாங்கிக் கொடுப்பார்கள். இன்றும் இவை வழக்கில் இருக்கிறது.

**தாலி வாங்குதல்**

இறப்பு நடந்த பதினாறாம் நாள் விடியற்காலையில் கணவனை இழந்த பெண்ணைத் தலைமுழுக வைத்துவிட்டுப் பிறந்த வீட்டு ஆடையை அணிவித்துத்தாலியைக் கழற்றிப் பாலில் இடுவார்கள். தாலி மட்டுமல்லாது குங்குமம், மஞ்சள், வளையல், பொட்டு அனைத்தையும் எடுத்து விடுகின்றனர். தாலி கழற்றும் போது சுமங்கலிகள் அங்கிருத்தல் கூடாது. இதனைப் பார்க்கும் சுமங்கலிகள் மனதால் பாதிக்கப்படுவார்கள் என்ற எண்ணமே இதற்குக் காரணமாகும்.

**கருமாதி**

பதினாறாம் நாள் காலையில் எழுந்தவுடன் வீட்டைச் சுத்தம் செய்து வீட்டிலேயே இந்நிகழ்ச்சி நடைபெறுகிறது. வள்ளுவர் இனத்தைச் சார்ந்த பாலகுரு என்பவரால் வீட்டிலேயே கலசம் வைத்து புண்ணியாவசனம்

செய்வார்கள். இந்த நீரை வீடு முழுவதும் தெளிப்பார்கள். பொருளாதாரத்தில் வசதி படைத்தவர்கள் பத்திரிகை அடித்து திருவையாற்றில் இடச்சங்கினை மேற்கொள்கின்றனர். அப்போது கொள்ளி வைத்தவர்களுக்கு வேட்டி, துண்டு, பணம் கொடுப்பர். மேலும் சிலர் மோதிரம் போடுவர். அங்கு முடிந்தபிறகு வீட்டிற்கு வந்து எண்ணெய் தேய்த்துத் தலை முழுகிய பின்னர் தான் விளக்கேற்றி கற்பூரம் காட்டிக் கும்பிட்ட பின்னர்தான் அனைவரும் சாப்பிடுவார்கள்.

**சோறு ஆக்கிப் போடுதல்**

ஆக்கிப் போடுதல் என்பது இறந்தவர்களின் வீட்டில் கருமாதி முடிந்த பிறகு இந்நிகழ்வு நடைபெறுகின்றது. அதாவது அந்த வீட்டில் பிறந்த மகள், அத்தை, மாமன், மச்சான், பங்காளிகள், அனைவரும் அவர்களால் முடிந்த அளவிற்கு பணம் கொடுப்பார்கள். அது மட்டுமல்லாது அரிசி, எண்ணெய், பருப்பு இன்னும் பலவகையாக சமையல் பொருட்கள் கொண்டுவந்து கொடுப்பர். அதில் இருந்து ஆன்று உணவு சமைப்பார்கள். மேலும் அசைவ உணவைச் சமைக்கின்றனர். அன்றிலிருந்து அசைவ உணவை உண்ண ஆரம்பிக்கின்றனர். அப்போது வந்தவர்கள் அனைவரும் சாப்பிடுவார்கள். ஆண்களுக்குச் சாராயம் வாங்கிக் கொடுக்கின்ற பழக்கமும் உள்ளது. இச்சடங்கு மூலம் இறப்புத் தீட்டு நீக்கப்பட்டு சமூக இணைப்பு பெற்றுவிடுகின்றனர். மற்றவர்களைப் போல இயல்பு வாழ்க்கைக்குத் திரும்புகின்றனர். இத்துடன் பதினாறாம் நாளான இறப்புச் சடங்கு மற்றும் கருமாதிச் சடங்குகள் நிறைவு பெறுகின்றன.

**தலைதிவசம்**

இறந்தவர்க்கு ஒரு ஆண்டு நிறைவில் இறந்த நட்சத்திரம் திதி இவைகளைக் கணக்கிட்டு அதே நட்சத்திரம் திதி வருகின்ற நாளில் இறந்தவரை நினைத்துச் செய்யப்படும் நிகழ்வு திவசம் ஆகும். நீத்தார்

நினைவுநாள் சடங்கிற்குத் திவசம் என்று பெயர். இறந்தவர்க்குரிய குடும்பத்தைச் சார்ந்தவர்கள் தாங்கள் உயிருடன் வாழுகின்ற காலங்கள் வரைக்கும் தனது தந்தை அல்லது தாய்க்குத் திவசம் கொடுக்க வேண்டும் என்ற வழக்கம் அனைத்து இன மக்களிடமும் உள்ளது.

அந்நாளில் இறந்தவருக்குரியவரின் ஆண் வாரிசுகள் விரதம் இருந்து இவரவர்களின் சடங்கினைச் செய்து வைக்கும் புரோகிதர், பண்டாரம், வள்ளுவர், இவர்களை அழைத்து வந்து கலசம் நிறுத்தி ஹோமம் வளர்க்கின்றனர். இறந்தவரின் பெயருடன் பாட்டன், முப்பாட்டன் பெயர்களைச் சொல்லி எள்ளும், தண்ணீரும் விட்டுத் தர்ப்பணம் செய்து வீடு முழுவதும் கலச நீரைத் தெளித்துப் புதுவேட்டி, துண்டு, மற்றும் அரிசி, காய்கறிகள், பணம் முதலான பொருள்களைத் தானமாக வழங்குவர். இறப்பு நடந்த முதல் ஆண்டில் தலைத்திவசம் கொடுக்கின்ற வழக்ம் அனைத்து இன மக்களிடமும் உள்ளது.

திவசத்தன்று காலையில் வீட்டைச் சுத்தம செய்வர். ஊரில் உள்ளவர்களை அழைத்து மதியம் உணவு கொடுப்பர். சிலபேர் திவசத்தன்று ஏழை எளியவர்களுக்கு அன்னதானம் கொடுப்பார்கள். இத்திவசமானது இறந்தவரின் குடும்பம் வம்ச விருத்தி அடையவும் திவசம் கொடுக்கப்படுகிறது. திவசத்தின் போது பலவகையான தானங்களை வழங்குவதால் இறந்தவரின் ஆன்மா பாவங்களில் இருந்து விடுபட்டு ஈடேற்றம் பெறுகிறது என்று இம்மக்கள் நம்புகின்றனர்.

### இறப்புச் சடங்கும் தெய்வ வழிபாடும்

இயற்கையாக இறந்தவர்களையும் அவர்களுடைய குடும்பத்தார்கள் தெய்வமாக வழிபடுவதனை இறப்புச் சடங்குகள் வழி அறிந்து கொள்ள முடிகிறது. இறப்புச் சடங்குகள், தெய்வ வழிபாட்டில் தெய்வத்திற்குச் செய்யும் சடங்குகளோடு பொருந்தி வருகின்றன. ஒருவர் பிறப்பு முதல் இறப்பு வரையிலான ஓராண்டு மற்றும் அதற்கு அடுத்து வரும் ஆண்டுகளில் நிகழ்த்தப்படும் சடங்குகள், தெய்வ வழிபாட்டுச்

*சடங்குகளோடு எந்த அளவிற்குத் தொடர்புடையாக இருக்கின்றது என்பதை இங்கு கூறப்பட்டுள்ளன.*

**இறப்புச் சடங்கும் தெய்வமாக்கலும்**

| | | |
|---|---|---|
| *1.* | *வாயில் பால் ஊற்றுதல் துளசி மாலை கட்டிப் போடுதல்* | *சாமிக்குப் பால் அபிசேகம் செய்தல் துளசிமாலை போடுதல்* |
| *2.* | *பந்தலில் இளநீர் கட்டுதல்* | *இளநீர் அபிஷேகம் செய்தல்* |
| *3.* | *புதிய ஆடை உடுத்தல்* | *புதிய ஆடை உடுத்தல்* |
| *4.* | *தேங்காய் உடைத்து வைத்துப் பத்தி கொளுத்தி வைத்தல்* | *தேங்காய் உடைத்து வைத்தல் பத்தி கற்பூரம் காட்டல்* |
| *5.* | *பொங்கல், பலகாரங்கள், பழங்கள், முதலானவற்றைப் படைத்தல்* | *பொங்கல், பலகாரம், பழங்கள் வைத்துப் படைத்தல்* |
| *6.* | *மாலை இடுதல்* | *மாலை இடுதல்* |
| *7.* | *பாடையைப் பூக்களால் அலங்கரித்தல்* | *பல்லக்கைப் பூக்களால் அலங்கரித்தல்* |
| *8.* | *பிணத்தை ஊர்வலமாக எடுத்துச் செல்லுதல்* | *சாமியை ஊர்வலமாக எடுத்துச் செல்லுதல்* |
| *9.* | *பிணத்தைத் தூக்கிச் செல்லும்போது கையெடுத்துக் கும்பிடுதல்* | *சாமியை ஊர்வலமாகத் தூக்கி வரும்போது அனைவரும் கும்பிடுதல்* |
| *10.* | *இறந்தவரின் கையில் நவதானியங்களைக் கொடுத்து வாங்குதல்* | *விதைப்பதற்கு முன் நவதானியங்களைச் சாமிக்குக் காட்டல்* |
| *11.* | *தீபாவளி, பொங்கல், ஆடிக்கழிவு போன்ற தினங்களில் இறந்தாருக்கு வழிபாடு செய்கிறார்கள்* | *தீபாவளி, பொங்கல்,ஆடிக்கழிவு போன்ற தினங்களில் சாமிக்கு வழிபாடு செய்கிறார்கள்* |

**வழிபாடும் பழக்க வழக்கங்களும்**

*மனிதன் தன் வாழ்நாளில் தனக்கு ஏற்படுகின்ற மிகப்பெரிய துன்பங்களிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ளவும், வாழ்வில்*

சோதனைகளும், வேதனைகளும் வராமல் தன்னைக் காத்துக் கொள்ளவும் தெய்வத்தை வழிபடுகின்றனர். இறைவழிபாடு என்பது மனிதன் நாடோடியாய் வாழ்ந்து பின் பயிர்த்தொழிலில் ஈடுபட்டு ஒன்றுபட்ட சமுதாயமாய் வாழ முற்பட்டபோது தோன்றியது எனலாம். இயற்கையை வழிபடுதன் மூலம் அதன் கோபத்திற்கு ஆளாகாமல் இரு:ககலாம் என நம்புகின்றனர். பின்னர் இயற்கைக்கு உருவம் கொடுத்து வழிபடத் தொடங்கினான். ஒவ்வொரு இயற்கைப் பொருள்களுக்குள்ளும் ஒரு சக்தி உண்டு என்கின்றனர்.

**வழிபாடு—விளக்கம்**

வழிபாடு என்ற சொல் ‘வழிபடு’ என்ற சொல்லினின்றும் பிறந்த தொழிற்பெயராகும். வழிபாடு என்ற சொல்லுக்கு வணக்கம், வழியிற் செல்லுகை, பின்பற்றுகை, பூசனை, வழக்கம் என்று பல்வேறு பொருள்கள் உள்ளன என்று நிகண்டுகளும், அகராதிகளும் புலப்படுத்துகின்றன. ‘வழிபாடு’ என்ற சொல் இன்று ‘தொழுதல்’ என்ற பொருளிலேயே பெரும்பாலும் வழங்கப்படுகிறது. காட்டிய வழியில் பின்பற்றி நடத்ததே வழிபடுதல் எனப்படுவது என்கிறார் அ. சொக்கலிங்கம் (1952: 24). காலப்போக்கில் அச்ச உணர்வு அன்பாகவும் அருளாகவும் மாற்றம் பெற்று வழிபாட்டின் வளர்ச்சி நிலைக்கு வித்திட்டது எனலாம்.

**வழிபாட்டின் தோற்றம்**

தொடக்க காலத்தில் மனித இனம் கூட்டடட் கூட்டமாக வாழ்ந்தனர் அப்போது இயற்கையின் செயல்களுக்குப் பொருள் புரியாமல் இதன் பின்னால் ஏதோ ஒரு சக்தி இருக்கிறது என்று நம்பத் தொடங்கினர். மனிதன் தன் ஆற்றல் ஒரு எல்லைக்கு உட்பட்டது என்று உணரத் தலைப்பட்ட நிலையில் இயற்கையை வழிபடவேண்டும் என்று எண்ணினர். காலப்போக்கில் அதற்கு உருவம் கொடுத்து வணங்கினர். எனவே இயற்கை வழிபாடே மனிதன் அறிந்த முதல் வழிபாடு ஆகும்.

*மனிதன் தனக்கு நலன் அளிக்கவும், தனக்கு அளிக்கப்பட்ட நலனுக்கு நன்றி செலுத்தும் பொருட்டும் இயற்கையை வழிபடத் தொடங்கினான் என க.ப. அறவாணன் கூறுகின்றார். ஆதி மனிதனிடமிருந்துதான் வழிபாடுகள் தோற்றம் பெற்றன என்று கூறலாம். இயற்கையின் புதில் நிறைந்த செயலை மனிதன் அறிய இயலாத நிலையில் அதனை அமைதிப்படுத்த முயன்றபோது வழிபாடு உருவாகிறது.*

**குலத்தெய்வம்**

*தகவல்கள் சேகரிக்கப்பட்ட இப்பகுதி மக்களிடம் அவர் அவருக்குரிய அதாவது இனத்தவருக்குரிய தனித்தனிக் குலத்தெய்வங்களும் காணப்படுகின்றன. இவர்கள் தங்கள் குடும்பங்களில் நிகழும் காதுகுத்து, திருமணம், வளைகாப்பு முதலான மங்கல நிகழ்ச்சிகளைச் செய்வதற்கு முன்பாக குலத்தெய்வங்கள் எழுந்தருளியிருக்கின்ற ஊருக்குச் சென்று அத்தெய்வத்திற்கு அபிசேகம் செய்கின்றனர். பினனர் கோவில் பூசாரிகள் மூலமாக அருள்வாக்குப் பெறுகின்றனர். குலத்தெய்வத்தை முறையாக வழிபாட்டால் குடும்பத்தவர்களுக்கு எவ்வித குற்றங்குறைகளும் நேராது என்ற நம்பிக்கையின் அடிப்படையிலேயே வழிபடுகின்றனர்.*

*குலத்தெய்வ வழிபாடு ஊர்த்தெய்வ வழிபாடாகவும் பிறகு பலரும் வணங்கும் சக்தியுள்ள தெய்வ வழிபாடாகவும் பரவிச் செல்வாக்குப் பெறுவது உண்டு என்கிறார் ஆறு. இராமநாதன் (1987: 208). மேலும் 'குருவை மறந்தாலும் குலத்தெய்வத்தை மறவேன்' என்றும், 'குலத்தெய்வத்தைக் கும்பிட்டுக் கும்மியடி' என்றும் குலத்தெய்வ வழிபாட்டினைப் பாடல்களில் சிறப்பித்துக் கூறுகின்றன என்கிறார் வெ. அமுதா (1996: 41).*

*இதன் அடிப்படையில் இப்பகுதியில் உள்ள ஒவ்வொரு இன மக்களும் ஒவ்வொரு ஊரிலும் குலத்தெய்வமாக ஆண் தெய்வங்களையும், பெண் தெய்வங்களையும் வழிபட்டு வருகின்றனர்.*

**வீட்டுத் தெய்வம் மாரியம்மன்**

மாரியம்மன் என்னும் தெய்வமாக அம்மை நோயால் பாதித்து இறந்தவர்களைக் குறிப்பிடுகின்றனர். இவர்களை அனைத்து இன மக்களும் தெய்வமாக வணங்குவதைக் களப்பணியின் போது தெரிந்து கொள்ள முடிந்தது. வீட்டில் சுமங்கலியாக வாழ்ந்து இறந்த பெண்ணையும், வயதுக்கு வந்த திருமணம் ஆவதற்கு முன்பாக இறந்த பெண்ணையும், சிறு குழந்தையாக இருக்கும்போது நோய்வாய்ப்பட்டு இறந்த குழந்தைகளையும் வீட்டுத் தெய்வமாக வழிபடுகின்றனர். வீட்டில் நடக்கும் சுப நிகழ்ச்சியின்போது இத்தெய்வத்தை வணங்குவதை மேற்கொள்கின்றனர். வெள்ளி, செவ்வாய் சூடம், பத்தி ஏற்றியும் சாம்பிராணி போட்டும் வழிபடுகின்றனர். இவ்வாறு வழிபடுவதனால் தான் செய்யும் காரியத்திற்குத் துணையாக தெய்வம் இருப்பதோடு வெற்றியும் கிடைக்கும் என்ற நம்பிக்கையைக் கொண்டுள்ளனர்.

கோவிலுக்குச் சென்று தெய்வத்தை வழிபாடு செய்து விட்டு வீட்டிற்குள் வருவதற்கு முன் கை கால்களைக் கழுவிவிட்டு வரக்கூடாது. அவ்வாறு செய்தால் தெய்வத்தை வழிபட்ட பலனையும் சேர்த்துக் கழுவிவிட்டதாக நம்புகின்றனர். மேலும் கோயிலுக்குச் சென்றுவிட்டு உறவினர் வீட்டுக்குப் போகக்கூடாது. தன் வீட்டிற்கு வரவேண்டும். அவ்வாறு வராவிட்டால் கோயிலுக்குப் போன புண்ணியம் நன்மை நமக்குக் கிட்டாது என்று நம்புகின்றனர்.

**மரவழிபாடு மாப்பிள்ளையை நல்கல்**

தமிழகச் சிற்றூர்களில் அரசமரமும், வேப்பமரமும் சேர்ந்து வளர்ந்த இடங்கள், வழிபாட்டிடங்களாக உள்ளன. அரசமரம் மாப்பிள்ளையாகவும், வேப்ப மரம் பெண்ணாகவும் உருவகிக்கப்பட்டு அவ்விரு மரங்களுக்கும் திருமணம் நடத்தி வைக்கப்படும். இம்மரத்தடியிலே நாக உருவங்கள் பதிக்கப்பட்டிருக்கும். நல்ல மணவாளர் வேண்டும் பெண்டிர், இம்மரங்களைச் சுற்றி வந்து வழிபடுவர். தம்

மகளுக்கு நல்ல மாப்பிள்ளை வரன் வேண்டும் தாய்மாரும் இவ்வாறு வேண்டி வழிபடுவதுண்டு. நல்ல வரன் அமைந்து திருமணமும் நிகழ்ந்து விட்டால் அரசமர வேப்பமர மணத்திருவிழா செய்து வைப்பதாகவும் வேண்டிக் கொள்வதுண்டு. அதிகமாகப் பெண்கள் மட்டுமே வழிபடுகின்றனர்.

நாக உருவம் மானுடவியலாய்வின்படி புணர்ச்சியைக் காட்டும் குறியீடாகும். இங்கேபதிக்கப்பட்டுள்ள நாக உருவங்களில் ஆண் நாகமும், பெண் நாகமும் சேர்ந்து பின்னி உடலுறவு கொள்ளும் சிற்பங்களும் காணப்படுகின்றன. அரசும், வேம்பும் சேர்ந்து இருக்கும் ஊர் பொதுமன்றங்கள் பெரும்பாலும் தெருச் சந்திப்பிலோ ஊர் முனையிலோ ஆற்றங்கரையிலோ குளத்தங்கரையிலோ அமைந்திருக்கும். ஊர் மக்கள் குறிப்பாக ஆடவர் அனைவரும் திரண்டு இங்கே அமர்ந்து பேசிக் கொண்டிருப்பர். இவர்களைக் காணும் முகமாக அல்லது இவர்கள் வழிபடும் களிரைக் காணும் முகமாக அமைந்ததே இம்மர வழிபாடு. மணமகனைத் தேடும் இடமே மரவழிபாடு. அரச வேப்பமரச் சுற்று, நல்ல மணமகனைத் தரும்என்ற எண்ணம் இந்த அடிப்படையிலேயே தோன்றி இருக்க வேண்டும். இதன் அடுத்த வளர்ச்சியே மகப்பேற்றை நல்க வேண்டும் என்று அதே மரங்களை வரிபடுகின்றனர்.

**வேப்ப மரம்**

வேப்பமரம் பன்னெடுங்காலமாகத் தமிழகத்தில் வளர்ந்து வாழ்ந்து வரும் மரம். திட்டமிட்டு விதையிட்டு வளர்க்காமலே தானே ஆங்காங்கு முளைத்துத் தழைத்துவிடும். காக்கைக்கு வேப்பம் பழம் மிகப் பிடிக்கும். வேப்பம் பழச்சதையைத் தின்று விட்டுக் காக்கை ஆங்காங்கு கொட்டையை எச்சமாக விடும். அக்கொட்டையே முளைத்துப் பெரும் மரமாக வளரும்.

வேப்பமரத்தை மருந்துமரம் எனலாம். காரணம் வேப்ப மரத்தின் இலை, பூ, பழம், விதை, மரப்பட்டை, மரம் ஆகிய அனைத்தும் மக்களுக்கு மருந்துப் பொருளாகத் தலைமுறை தலைமுறையாக இருந்து வருகின்றன.

வேப்பமரம், காளியம்மனின் மரமாகக் கருதப்படுகிறது. காளி கோயில் அனைத்தும் தலமரமாக வேப்பமரத்தையே பெற்றிருக்கும். காளியை வழிபட வருவோர் வேப்பிலையைக் கையில் ஏந்தியும், இடையில் செருகியும், கோயிலை வலம் வருவர். வேறு சிலர் வேப்பிலையைக் கூப்பிய இரண்டு கைகளிலும் பற்றிக் கொண்டு, படுத்துக் புரண்டே கோயிலை மும்முறை வலம் வருவர். இன்னும் சிலர், தம் ஆடைகளைக் களைந்துவிட்டு அதற்கு மாறாக வேப்பிலைத் தழையுடையைத் தரித்து வலம் வருவர்.

அம்மை நோய் வந்துற்றால் வந்துற்றவர் படுக்கையில் அம்மனை நினைவாக வேண்டிக் கொண்டு வேப்பிலைகளைப் பரப்பி வைப்பர். குழந்தை பிறந்த வீடுகளிலும், தீட்டுநாள் கழியும் வரை வேப்பிலையை வாயில் கூரையில் செருகி வைப்பர். அம்மை நோயுற்ற வீட்டாரும் தம் வீட்டு வாயிலில் வேப்பிலையைச் செருகி வைப்பர். வேப்பிலை முற்று முழுவதுமாக அம்மனுடன் இணைந்து நினைக்கப்பட்டுப் போற்றப்படுகிறது. வேப்பமரம் வீடுதோறும் வளர்க்கப்பட வேண்டும் என்ற விழைவும் நம்பிக்கையும் தமிழரிடம் உள்ள பொதுவான எண்ணங்கள். சிலர் தம் வீடுகளில் தலைவாயிலில் அதாவது வாசலில் வேப்பமரத்தை நட்டு வைப்பர். அப்படி இருந்தால் பேய் பிசாசு அண்டாது என்பது ஒரு நம்பிக்கையாகும்.

வேப்பமரத்தினைச் சுற்றி வந்தால் குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கை உள்ளது. அரச மரத்தையும் வேப்பமரத்தையும் சுற்றி வருவது 21 முறை சுற்றுவது வழக்கில் உள்ளது. குழந்தை பெறுவதற்கு உடல் தசை, அதிக கொழுப்பள்ள பெண்களுக்குப் பிள்ளை பேற்றிற்குத் தடையாகும். இதனால் 21 முறை சுற்றி வந்தால் உடல் அசைவில் பிள்ளை கருவுற வாய்ப்பே. அரசமரமும், வேப்பமரும் இணைந்த இடங்களில் மகளிர் சுற்றி

*வருவர். வேப்பமரம் பெண்பால் என்பது மக்கள் நம்பிக்கை. அதனாயே அரசமர மாப்பிள்ளைக்கு வேப்பிலைப் பெண்ணைத் திருமணம் செய்து வைக்கின்றனர். குழந்தை பிறந்தவுடன் தாய், குழந்தை இருவருக்கும் வேப்பிலையை வைத்துத்தான் வெளியில் அழைத்துச் செல்வார்கள். அப்படிச் செய்தால் குழந்தையை எதுவும் தாக்காது என்று இம்மக்கள் நம்புகின்றனர். இன்றும் இவை வழக்கில் உள்ளது. மேலும் மாதவிடாய் காலங்களில் வயிற்று வலிக்கும் என்பதனால் வேப்பிலை கொழுந்தைப் பரித்து அரைத்து அதனைச் சிறுசிறு உருண்டையாக விழுங்கச் செய்வர். அப்படிச் செய்தால் வலியிருக்காது என்கின்றனர்.*

*வேப்பமரத்தைத் தெய்வமாகக் கருதி அதன் மேல் மஞ்சள் பூசி பொட்டு வைத்து பூ வைத்து பாவாடை உடுத்தி வழிபடுகின்றனர். இதற்கு செவ்வாய், வெள்ளி, ஞாயிறு போன்ற நாட்களில் விளக்கேற்றி கும்பிடுகின்றனர். இவை இன்றளவும் இம்மக்களிடம் வழக்கில் இருக்கின்றது. ஆகவே வேப்பமர வழிபாடு தமிழரிடையே இன்று நேற்றுத் தோன்றியது அல்ல. இது பல நூறு ஆண்டுகளாக இருந்து வருகின்றது.*

**நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு**

*உலகின் மூத்த தமிழ் மொழியையும் தமிழினத்தின் வாழ்வியலையும் சிறப்பாக எடுத்துரைப்பது நம் தமிழ் மக்களின் கோயில்களும், வழிபாடுகளும் அதைச் சார்ந்த இலக்கியங்களுமேயாகும். உலகில் பக்தியும் வழிபாட்டு முறைகளும் பரவலாக இருந்தாலும் கோயில்களும் வழிபாடும் நம் தமிழகத்தில் தான் மிகுதியாக உள்ளது. மக்கள் தத்தம் வாழ்வியல், தொழில், சூழ்நிலை, நாகரிகம், பண்பாடு ஆகியவற்றிற்கேற்ப நாட்டுப்புறங்களிலும் சில தெய்வ வழிபாடுகளும் கோயில்களும் தோன்றின.*

*எனவே 2000 ஆண்டுகளுக்கு முன் தோன்றிய தொல்காப்பியர் நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு மக்களிடம் இருந்ததை ஏற்றுக் கொண்டு ஐந்து நிலங்கட்கும் ஐந்து தெய்வங்களைக் குறிப்பிட்டதில் கொற்றவை*

*(துர்க்கை) என்ற பெண் தெய்வமாம் நாட்டுப்புறத் தெய்வத்தையும் குறிப்பிட்டார். அத்துடன் வேலன், வெறியாட்டு, விரிச்சி கேட்டல் போன்ற நாட்டுப்புற வழிபாடுகளையும் குறிப்பிட்டதை அறியலாம். நாட்டுப்புற மக்களால் தொன்றுதொட்டு வழிபட்டு வரும் கிராமத் தெய்வங்களையே நாட்டுப்புறத் தெய்வங்கள் அல்லது சிறு தெய்வங்கள் என அழைக்கின்றோம்.*

*நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டின் தோற்றம் பழமை உடையதாகவே உள்ளது. குடும்பத்தெய்வ வழிபாடும், குலதெய்வ வழிபாடும் ஊர்த்தெய்வ வழிபாடம் இவற்றில் அடங்கும். வேதக் கடவுளோடு தொடர்பில்லாத ஊர்த்தெய்வங்கள் நாட்டுப்புறத் தெய்வங்கள் என்றழைக்கப்படுகின்றன.*

*சமுதாயத்தில் உயர்ந்தோர், தாழ்ந்தோர் மேலோர்-கீழோர், பெரியவர்-சிறியவர் முதலிய பாகுபாடுகள் தோன்றி வளர்ந்ததைத் தொடர்ந்து மனிதனது நிலைமையைப் பிரதிபலிப்பது போன்று தெய்வங்களும் பெருந்தெய்வம்-சிறுதெய்வம் எனப் பகுக்கப்பட்டன. இது சமுதாயத்தின் சமூகப் பொருளாதார சமய வேறுபாடுகளைக் காட்டுகிறது என்று சமூக நிலையிலான கருத்தைக் கூறுகின்றார் க. கைலாசபதி (1966: 61).*

*நாட்டுப்புறத் தெய்வங்களுக்குப் பூசை, திருவிழா முதலியவற்றில் திட்டவட்டமான வரையறைகள் கிடையாது. பிராமணர் மட்டுமல்லாது மற்றவர்களும் பூசை செய்வார்கள். இத்தெய்வத்திற்கு வரலாறும் உண்டு. இத்தெய்வங்களை மக்களால் உருவாக்கப்பட்டு மக்களால் அதன் மரபுகள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இத்தெய்வத்திற்கு உயிர்ப்பலி உண்டு.அசைவம் வைத்துப் படைக்கின்றனர்.*

**ஆண்டுப்பிறப்பு**

*தமிழரின் ஆண்டுப்பிறப்பு ஒவ்வொரு ஆண்டும் தைப்பொங்கலின் போது என்று கூறுவர். மக்களின் மரபுவழிப் பண்பாட்டின்*

அடிப்படையில் சித்திரை முதல் நாளே தமிழரின் ஆண்டுப் பிறப்பு எனக் கொண்டாடப்பட்டு வரும் பண்பாட்டுத் தொடர்ச்சி எனலாம்.

தை முதல் நாளே தமிழரின் ஆண்டுப்பிறப்பு என்பது உலகம் முழுமையும் கொண்டாடப்பம் அறுவடைத் திருநாளைப் போலத் தமிழர்களும் அறுவடைத திருநாளைக் கொண்டாடினர். அதோடு தமிழரின் புவியியல் தன்மைகளுக்கேற்ப வாழ்ந்த தமிழர்கள் தென்திசையில் நின்ற கதிரவன் வடதிசைக்குச் செல்லத் தொடங்கும் நாளையும் இணைத்துக் கொண்டனர். அதனால் தமிழரின் பண்பாட்டுத் தளத்தில் தைத் திங்களுக்கு ஒரு சிறப்பிடம் கிடைத்துள்ளது.

அனைத்து இன மக்களும் ஆண்டுப் பிறப்பின்று வீடுகளைச் சுத்தம் செய்து மாட்டுச் சாணத்தால் மெழுகுகின்றனர். பின்னர் கோலம் இடுகின்றனர். வீட்டு வாயிற் படியில் இராமக்கட்டி, மஞ்சள், குங்குமம், இவைகளைக்கொண்டு பொட்டு வைக்கின்றனர். சில பேர் அன்றே ஏர் பூட்டுகின்றனர். வீட்டுத் தோட்டத்தில் மண்வெட்டியால் வெட்டி நவதானியங்களை விதைக்கின்றனர். சில பேர் வயல்களுக்குச் சென்று இச்சடங்கினைச் செய்கின்றனர். இதற்குக் காரணம் ஆண்டின் முதல் நாளிலிருந்து அமோக விளைச்சலுடனும், செழிப்பாகவும், இருக்க வேண்டும் என்பதற்காக இச்சடங்கைச் செய்கின்றனர். அப்போது விளக்கேற்றி தேங்காய் உடைத்து சூடம் ஏற்றி வெற்றிலை பாக்கு வைத்து பச்சரிசியைக் கழுவி வெல்லம், தேங்காய், எள்ளு போட்டு வைக்கின்றனர். இதற்கு ஏர் அரிசி என்று பெயர்.

**வைகாசி திருவிழா**

கருப்பமுதலியார்கோட்டை என்ற ஊரில் எழுந்தருளி உள்ள காளியம்மன் திருவிழா மிகவும் சிறப்புடையதாகும். இக்கோயில் திருவிழாவின்போது அம்மனை அலங்கரித்து பூசை செய்வர். பின்னர் மாவிளக்கு போடுகின்றனர். அன்று இரவு கொழுக்கட்டை செய்து அம்மனுக்குப் படைக்கின்றனர். அப்போது அக்கோயில் பூசாரி கரகம் எடுத்தம், மற்றொருவர் அக்கினிச்சட்டி ஏந்தியும் வீடுவீடாக வருவார்கள்.

வீட்டில் உள்ளவர்கள் தேங்காய் உடைத்து சூடம் ஏற்றி கும்பிடுவர். கரகம், அக்கினி எடுத்து வருபவருக்கு ஒரு செம்பில் தண்ணீர் வைத்து மஞ்சள் தூள், போட்டு அவர்கள் காலில் ஊற்றுவார்கள். சிறு குழந்தைகளுக்கும், பெரியவர்களுக்கும் அவர்கள் கையினால் திருநீர் வைக்கின்றனர். அவர்களின் பின்னால் அனைத்துச் சாதி மக்களும் வருவார்கள். வண்ணார் அல்லது பரியாரி நெய்ப்பந்தம் பிடிக்கின்றனர். ஒரு சிறுவன் உண்டியலைக் குலுக்கிக் கொண்டு அனைவரிடமும் காசுகளைப் பெற்றுக் கொள்வான். அன்று இரவே கரகத்தைக் குளத்தில் கரைத்து விடுகின்றனர். பிறகு பத்து மணியளவில் நாடகம், அல்லது ஆடல் பாடல் நிகழ்ச்சி நடைபெறும்.

இவ்வைகாசித் திருவிழாவானது கள்ளர் இன மக்கள் மட்டும் செய்கின்றனர். மற்ற இன மக்கள் அனைவரும் கோவிலுக்கு வருவார்கள் ஆனால் கள்ளர்களுக்கு மட்டும் முன்னுரிமை கொடுக்கின்றனர்.

**ஆடி மாத விழா**

ஆடி மாதம் அம்மனுக்கு உகந்த மாதம் ஆகும். இம்மாதத்தில்தான் அம்மன் கோயில்களில் சிறப்பு வழிபாடுகளும், பூசைகளும், திருவிழாக்களும் நடைபெறுகின்றன. ஆடிமாதம் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையன்று சாமி கும்பிடுவார்கள். அதாவது அசைவ உணவு வைத்தும், வடை, பணியாரம், தயிர்ச்சாதம், சுண்டல், பொட்டுக்கடலைச் சர்க்கரை, வெற்றிலைப்பாக்கு இவைகளை வைத்துச் சாமி கும்பிடுவர். சைவ உணவுகளை ஒரு பக்கம் வைத்தும் அசைவ உணவுகளை மறுபக்கம் வைத்தும் தெய்வத்தை வணங்குவர். அசைவ உணவை நம் வீட்டில் இறந்த முன்னோர்களுக்காக வைத்து படைக்கின்றனர். இப்பழக்கம் இப்பகுதி மக்கள் அனைத்துச் சாதியினரும் மேற்கொண்டு வருகின்றனர்.

இம்மாதத்தில்தான் அம்மனுக்கு கூழ் ஊற்றுகின்றனர். ஆடி மாதம் வெயிலில் அம்மன் குளிர்ச்சியடைய வேண்டும் என்பதற்காக செய்யப்படுகிறது. ஆடிப்பட்டம் தேடி விதை என்ற பழமொழியின் சிறப்பிற்கு ஏற்ப ஆடிமாதம் விவசாயிகள் விதை தூவும் காலம்

வேளாண்மைக்கு உகந்த மாதம், பட்டம் தப்பினால் நட்டம் என்று அம்மக்கள் கூறுகின்றனர்.

**புரட்டாசி விரதம்**

புரட்டாசி மாதத்தில் வீட்டைச் சுத்தம் செய்து சுண்ணாம்பினால் வெள்ளைடியப்பர். அம்மாதம் முழுவதும் அசைவ உணவுகளை உண்ண மாட்டார்கள். புதிய பாத்திரங்களை வைத்து உணவு சமைப்பர். ஒவ்வொரு சனிக்கிழமையன்றும் விரதம் மேற்கொள்வர். சோறு, சாம்பார், காய்கறிகள், வடை, பாயசம், சுண்டல் வைத்து சாமி கும்பிடுவர். பெண்கள் மாதவிடாய் காலங்களில் இந்த உணவைக் கொடுக்க மாட்டார்கள்.

வீட்டை விட்டு ஊர்களுக்குச் சென்றவர்கள் குளித்து விட்டுத்தான் வீட்டிற்குள் வருவார்கள். புரட்டாசி விரதம் 'கோவிந்தராசு' என்னும் தெய்வத்திற்குரியது. இதைக் கள்ளரின மக்கள் மட்டும் செய்கின்றனர். மற்ற இனத்தினர் இதனைக் கடைப்பிடிப்பது இல்லை. ஆனாலும் அசைவ உணவை உண்ணாமல் இருப்பது வழக்கமாக உள்ளது.

**தீபாவளி**

அதிகாலையில் எழுந்து நல்லெண்ணெய் தலைக்கு வைத்து பின்னர் புத்தாடைகள் இனிப்பு பலகாரங்கள், பட்டாசுகள் வைத்து விளக்கேற்றி வழிபடுகின்றனர். பின்னர் தான் குளிக்கச் செய்து உணவு உட்கொள்கின்றனர். இறந்த முன்னோர்களுக்காக இவ்விழா மேற்கொள்ளப்படுகிறது என்று களப்பணியில் கூறுகின்றனர். அனைத்து இன மக்களும் கொண்டாடுகின்றனர்.

**கார்த்திகை**

ஒவ்வொரு ஆண்டும் கார்த்திகை மாதத்தில் பெரும் கார்த்திகை என்று ஒரு நாளில் வீடுகள் தோறும் விளக்கேற்றி வைப்பர். மாட்டுத் தொட்டில், குப்பை, திண்ணை மாடம், தண்ணீர் தொட்டில் மற்றும்

*வீட்டைச் சுற்றி விளக்கேற்றுவர். அப்போது வீட்டைப் பார்ப்பதற்கு மிகவும் எளிமையாகக் காட்சி அளிக்கும். அன்று பலவகையான பலகாரங்கள் செய்து வெடி வெடித்து சாமி கும்பிடுவர். இவ்வூரில் உள்ள அனைத்து இன மக்களிடம் இவ்வழக்கம் உள்ளது.*

*ஐப்பசி அடைமழை பெய்து முடிந்தவுடன் உயிர்களுக்கு எந்தவிதப் பாதிப்பும் வரக்கூடாது என்பதாலும் பெய்த மழையினால் எந்தவிதமான நோய்களும் வரக்கூடாது என்றும், விவசாய நிலங்கள் செழித்து வளர வேண்டும் என்பதற்காகவும் இவ்வாறான வழிபாடுகளை இப்பகுதி மக்கள் கொண்டாடுகின்றனர்.*

**பங்குனி உத்திரம்**

*இவ்விழா முருகனுக்காக எடுக்கப்படும் விழாவாகும். இவ்விழாவானது கள்ளரினத்தில் உள்ள சேனாதிபதியார் என்று பட்டப்பெயர் கொண்டவர்கள் மட்டும் மேற்கொள்கின்றனர். இவ்விழாவின் போது மாவிளக்கு போடுகின்றனர். காவடிகளை சடல்காவடி, பரக்கும் காவடி, பால் காவடி, பொதுக்காவடி என்று எடுக்கின்றனர். தாங்கள் வேண்டியது நிறைவேற வேண்டும் என்பதற்காகவும், நிறைவேற்றியதற்காவும் இவ்விதமான காவடிகளை மக்கள் எடுக்கின்றனர்.*

*பொதுக்காவடி என்பது பங்காளிகளின் மூத்தவர்கள் எடுக்கின்றனர். மக்கள் அனைவரும் தெய்வத்தை வழிபட்ட பின்னர் அனைவருக்கும் அன்னதானம் கொடுக்கின்றனர். அன்று இரவு முருகனை அலங்கரித்து சந்தனகாப்பு செய்கின்றனர். அதன் உடல் முழுவதும் சந்தனத்தைப் பூசுவார்கள். அதனை மறைத்து செய்கின்றனர். பின்னர் மக்கள் அனைவரும் வணங்கி வழிபடுகின்றனர். பிறகு சிறிய உருவத்தில் உள்ள முருகனைப் பூக்களால் அலங்கரித்து பல்லக்கில் வைத்து ஊர் முழுவதும் சுற்றி வருவார்கள்.*

பல்லக்கில் வரும் முருகனைக் காணப்தற்குத் தவமாய்க் காத்து இருப்பர். பின்னர் ஒவ்வொரு வீட்டிலும் தேங்காய் உடைத்து மாலை போட்டுத் தெய்வத்தை வழிபடுவர். மறுநாள் காலையில் அந்த பூமாலையை அனைவருக்கும் கொடுப்பர். இப்பூவைக் கன்னிப் பெண்கள் வைப்பது இல்லை. சிறுவர்கள் மட்டும் பூவை வைத்துக் கொள்கின்றனர். பிறகு திருவிழா முடிந்ததும் மீதமுள்ள பொருட்களை ஏலம் இடுகின்றனர். ஏலமிடும் பணத்தைக் கோவில் கணக்கில் வைத்துக் கொண்டுள்ளனர். இவை இன்னும் வழக்கத்தில் உள்ளது.

**வாழ்வைப் புதுப்பிக்கும் பொங்கல்**

தமிழகத்தில் மிகவும் பிரபலமான பொங்கல் விழாவைப் பற்றித் தமிழ் இலக்கியங்களில் காணலாம். கதிரவனை வாழ்த்தி வழிபடுகின்ற பெருவிழா பொங்கல். வேளாண் மக்களின் உழைப்பைப் போற்றும் திருவிழா பொங்கல். மனிதருக்கு உற்ற துணை நின்று உதவும் மாடுகளைப் பாராட்டும் விழா பொங்கல். தை மாதத்தின் முதல் நாட்களில் இந்த விழா பெருமகிழ்ச்சியோடு கொண்டாடப்படுகிறது. தை பிறந்தால் வழி பிறக்கும் என்பது தமிழ்ப் பழமொழி. முன்பனிக் காலத்தின் போது இவ்விழா கொண்டாடப்படும். பொதுவாக அறுவடை முடிந்து கண்டு முதல் விற்பனைக்கு வருகின்ற காலத்தில் கொண்டாடப்படுவது.

மூன்று நாட்களுக்குச் சிறப்பாகக் கொண்டாடப்படும் இவ்விழா தமிழகம் மட்டுமின்றி, தமிழர்கள் வாழக்கூடிய ஸ்ரீலங்கா, மலேசியா போன்ற நாடுகளிலும் முக்கியத்துவம் பெற்றது. பொங்கலுக்கு முன்னர் தங்களது வீடுகளைப் புதுப்பித்துத் துப்புரவு செய்வர். சுண்ணாம்பு கொண்டு வெள்ளை அடிப்பர். சாயம் கொண்டு வீட்டுத் திண்ணைகளிலும் சுவர்களிலும் பட்டை தீட்டுவர். புத்தம் புது அடுப்புகளைப் பதிப்பார்கள். புத்தம் புது நெல், புத்தம் புதிய பானை, அடுப்பு இப்படி எல்லமே புதியதாக இருப்பது எதிர்காலத்தை மகிழ்ச்சியோடு புதிய பொலிவோடு எதிர் நோக்குவதைக் குறிக்கின்றன.

கோலம் போடுவது தமிழகத்தின் உன்னதக் கலைகளில் ஒன்றாகும். எனவே பொங்கல் திருநாளை ஒட்டிப் புதிய கோலங்கள் போட்டுச் சிறப்பிக்க சிறுமிகள் தங்களது ஏடுகளில் அவற்றைப் போட்டுப் பார்த்து பழகுவது சுவையான அனுபவம். பொங்கலன்று தெருவில் நடந்து செல்லுகையில் வாசலில் ஒவ்வொரு வீட்டின் முன்னரும் விதவிதமான கோலங்களை நாம் கண்டு மகிழலாம்.

முதல் நாள் போகிப் பண்டிகை எனப்படும். வேதகாலக் கடவுளாகிய இந்திரனின் பல்வேறு பெயர்களில் போகி என்பதும் ஒன்று. அதனைச் சிறப்பிக்கும் வகையில் இந்தப் பெயர் அமைந்துள்ளது. இது பற்றிய புராணக் கதை ஒரு முறை இந்திரன் பெருமழை ஒன்றைப் பெய்யுமாறு செய்தான். உலகமே நடுக்குற்றது. ஆனால் கண்ணன் பெரிய மழை ஒன்றைக் குடையாகத் தூக்கி மக்களையும், விலங்குகளையும் காத்தான். இது கண்டு அதிசயித்த இந்திரன் மழையை நிறுத்திவிட்டான். இது தை மாதத் தொடக்கத்திலே நடந்தது. இந்த நிகழ்ச்சியை விழாவாகக் கண்ணனே தொடங்கி வைத்தான் என்று கூறுவர்.

பொங்கல் அன்று மக்கள் அனைவரும் மழை தரும்படி இந்திரனை வேண்டிக் கொள்வர். இதனையொட்டி செய்யக்கூடிய பொங்கல் சூரியப் பொங்கல் எனப்படும். ஐரோப்பிய மக்கள் புத்தாடை அணிந்து மகிழ்ச்சியோடு கொண்டாடுவது போல தைத் திருநாளில் பொங்கலோ பொங்கல், பொங்கலோ பொங்கல் என்று கூவி மகிழ்கின்றனர். ஆக்கிய பொங்கலை வீட்டுத் தலைவி சூரியனுக்கு முதலில் படைப்பாள். பின்னரே மற்றவர்கள் உண்பர். ஆனால் சைவர்கள், வைணவர்கள் இவர்களிடையே ஒருசில வேறுபாடுகள் காணப்படுகின்றன. அதாவது வைணவர்கள் வீடுகளில் மரக்கறி உணவுகளே பரிமாறப்படும். அதேவேளை சைவர்கள் வீடுகளில் மாமிசத்துடன் விருந்து படைக்கப்படும். பின்னர் புதிய திரைப்படங்கள், பத்திரிகைகளின் அநுபந்தச் செய்திகள், இனிப்புகள், பரிசுகள், ஆடல், பாடல் இப்படி பொங்கல் திருநாள் மகிழ்ச்சியோடு கழிகின்றது.

**மாட்டுப் பொங்கல்**

*இரண்டாம் நாள் நிகழ்ச்சி மாட்டுப் பொங்கல் பசுக்களைப் போற்றுவதற்குரிய நாள். மாட்டுப் பொங்கலன்று அனைவர் வீட்டிலும் அசைவம் சமைப்பர். அது மட்டுமல்லாது தயிர்சாதம், வடை, பணியாரம் செய்வர். அன்று மாலை நேரத்தில் வீட்டின் முன்புறம் வாசலில் 3 அல்லது 5 வாழை இலை போட்டு அதில் மாட்டுக்குப் பொங்கிய வெண்பொங்கல், வெல்லம், கரும்பு, வாழைப்பழம் இவற்றை வைத்துப் படைப்பர். படைத்த பின்னர் வீட்டில் உள்ள மாடுகளுக்கு எண்ணெய் தேய்த்துப் பின்னர் சீயக்காய் தேய்த்து தண்ணீரால் சுத்தம் செய்வர். மாட்டுக்கு உணவு கொடுப்பர். மாவிலையாலும், மாலைகள் கட்டிப்போடுவர். பிறகு தெய்வத்தை வணங்கி தங்களுக்கு உதவியாக இருக்கும் மாடுகளுக்குக் கொடுத்துப் பின் தாங்களும் உண்கின்றனர்.*

**கன்னிப் பொங்கல்**

*மூன்றாம் நாள் ஊரில் உள்ள கன்னிப் பெண்கள் அனைவரும் ஒன்றுகூடி வழிபடுகின்ற பொங்கல் கன்னிப் பொங்கல் என்கின்றனர். அன்று பெண்கள் அனைவரும் பாட்டுப்பாடி, பலவிதமான விளையாட்டுக்களை விளையாடியும் மகிழ்கின்றனர். இவ்வாறு விளையாடிய பின்னர் கோயில்களுக்குச் சென்று அம்மனை வழிபடுகின்றனர். கோவில்களில் விளையாட்டுப் பொருட்கள், வளையல் மணிகள் போன்ற அணிகலன்களை வாங்கி வருவார்கள். இவ்வாறு நிகழ்ச்சிகள் மூலம் பெண்கள் ஒற்றுமையும், ஊர் ஒற்றுமையும் சமுதாய ஒற்றுமையும் காணமுடிகிறது.*

**நாட்டுப்புறத் திருவிழாக்களும் பண்பாடும்**

*நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு நாட்டுப்புற மக்களின் வாழ்க்கையுடன் பின்னிப் பிணைந்துள்ளது. நாட்டுப்புற மக்கள் ஆண்டுதோறும் நாட்டுப்புறத் தெய்வங்களுக்கு விழாக்*

கொண்டாடுகிறார்கள். நாட்டுப்புறத் தெய்வத்திற்கு எடுக்கும் விழாவே நாட்டுப்புறத் திருவிழா எனலாம். ஒவ்வொரு ஊரிலும் நாட்டுப்புறத் திருவிழாக்கள் கொண்டாடப்படுகின்றன. இத்திருவிழாவை மக்கள் மிகுந்த உற்சாகத்துடன் கொண்டாடுவர். உற்றார் உறவினர்களையும் பக்கத்து ஊர் மக்களையும் இத்திருவிழாக்களின் போது தங்களது வீடுகளுக்கு அழைத்து விருந்து வைப்பர். வட்டார அளவில் நாட்டுப்புற மக்களிடம் ஒற்றுமை உணர்வும் சமத்துவமும் சமூகத் தொடர்பும் வளர நாட்டுப்புறத் திருவிழாக்கள் உதவி வருகின்றன.

நாட்டுப்புறத் திருவிழாக்கள் பெரும்பாலும் ஆடி மாதத்தில் கொண்டாடப்படுகின்றன. ஓரிரு நாட்களுக்கு நாட்டுப்புற மக்கள் வெகு விமரிசையாக இத்திருவிழாவைக் கொண்டாடுகிறார்கள். உழைக்கும் மக்கள் ஓய்வாக இருக்க இவ்விழாக்கள் துணைசெய்கின்றன. உழைக்கும் மக்கள் அனைவரும் உற்சாகத்துடன் பங்கு கொள்வதை இத்திருவிழாக்களின் போது காணலாம். நாட்டுப்புறங்களில் நிலவிவரும் பகைமை உணர்வு குறுகிய மனப்பான்மை வேற்றுமை இவற்றை நீக்க நாட்டுப்புறத் திருவிழாக்கள் துணைபுரிகின்றன.

ஊர் செழிப்பாக இருக்கும்போது நாட்டுப்புறத் தெய்வத்திற்கு விழா எடுக்க ஊர் மக்கள் ஒன்று கூடுகின்றனர். நல்ல மகசூல் இல்லாமல் ஊரில் கடும் வறட்சி நிலவினால் ஊர்த்திருவிழாவை ஓர் ஆண்டுக்குத் தள்ளி வைக்கும் வழக்கமும் காணப்படுகிறது. ஊரின் நன்மை கருதியே நாட்டுப்புறத் திருவிழாக்கள் கொண்டாடப்பட்டு வருகின்றன.

நாட்டுப்புறப் பாடல்கள், நாட்டுப்புறத் திருவிழாக்களிலும் பின்னிப் பிணைந்து இருக்கின்றன. அதாவது வடமொழி மந்திரங்களைச் சொல்லி வழிபடும் வழக்கம் நாட்டுப்புறத் திருவிழாக்களில் இடம்பெறுவதில்லை. நாட்டுப்புற மக்களே கோயில் பூசாரியாக இருப்பதால் தமிழ்ப் பாடல்களைப் பாடி அருச்சனை செய்கிறார்கள். நாட்டுப்புற மக்களும் தங்களுக்குத் தெரிந்த நாட்டுப்புறப் பாடல்களைப் பாடி வழிபடுகிறார்கள்.

நாட்டுப்புற இசை நாட்டுப்புறத் திருவிழாக்களில் முக்கிய இடம் வகிக்கிறது. நாட்டுப்புற இசையினை நாட்டுப்புறத் திருவிழாக்களின் போதுதான் கேட்க முடிகிறது. இவ்விசை முழக்கம் திருவிழாக்களில் கலந்து கொள்வோரை உற்சாகப்படுத்துகிறது. ஆட்டம் ஆடத் தூண்டுகிறது. நோய் நீங்கவும் பிள்ளைவரம் கிடைக்கவும் மழை பெய்யவும், பேய் விலகும் என நம்புதலும் எடுத்த காரியம் சுபமாக முடியவும் ஊருக்கு நல்லது நடக்க வேண்டும் என்ற நம்பிக்கையிலும் மக்கள் நாட்டுப்புறத் தெய்வங்களை வழிபடுகின்றனர் என்று சு. சக்திவேல் (1999: 144) கூறுகின்றார்.

**வேண்டுதலும் காணிக்கையும்**

தமிழர் பழக்க வழக்கங்களில் வேண்டுதலும் காணிக்கை கொடுப்பதும் முக்கியப் பங்கு வகிக்கின்றன. மக்கள் தெய்வத்தை வேண்டிக் கொண்டு அனைத்து சுப நிகழ்ச்சிகளையும் நற்காரியங்களையும் தொடங்குகின்றனர். தனக்கு வரும் துன்பங்களையும் துயரங்களையும் கடவுளிடம் வேண்டிக் கொள்வதால் கடவுள் தன்னைக் காப்பதாகவும் அதற்குப் பதிலாக கடவுளுக்குக் காணிக்கையும் வேண்டுதல்களையும் நிறைவேற்றுகின்றனர். மொட்டை அடித்தல், மாவிளக்கு போடுதல், காவடி எடுத்தல், பால்குடம் எடுத்தல், அன்னதானம் போடுதல் போன்ற வழிபாடு தொடர்பான நம்பிக்கைகளையும் தெய்வத்திற்கு நன்றிக் கடனாகச் செலுத்துகின்றனர்.

குழந்தை வரம் வேண்டி, வேண்டிக் கொண்டவர்களும், குழந்தை பிறந்த பின்பு நன்றிக் கடனாகத் தெய்வத்திற்குக் காணிக்கை அபிசேம் செய்து வழிபடுகின்றனர். இவ்வாறான வழிபாட்டு முறைகள் மூலம் ஊர் ஒற்றுமையும், சமுதாய ஒற்றுமையையும் காணமுடிகிறது. மேலும் கடவுளுக்குச் செலுத்தும் நன்றிக் கடனாகவும் காணிக்கையாகவும் இது அமைகிறது. இதன் மூலம் நாடு நலம் பெறவும், அனைவரும் தெய்வத்தின் அருளால் காக்கப்பட வேண்டும் என்ற நம்பிக்கையில் இவ்வாறான வழிபாடு மக்களிடம் மரபு வழியாகப் பின்பற்றப்பட்டு வருவதைக் காணமுடிகிறது.

**தொழில் சார்ந்த பழக்க வழக்கங்கள்**

*கருப்பமுதலியார்கோட்டை என்னும் ஊரில் வழாக்கூடிய கள்ளர், பள்ளர், பறையர்,வண்ணார், பரியாரி போன்ற இனத்தினர் அனைவரும் வேளாண்மை தொழிலில் ஈடுபடுகின்றனா. வண்ணார் துணி துவைப்பவராகவும், பரியாரி முடிகளைத் திருத்தம் செய்பவராகவும், பறையர் பாய் பின்னுபவராகவும் சிலபேர் கூலி வேலைக்குச் செல்பவராகவும் உள்ளனர்.*

**வேளாண்மை செயல்முறைகள்**

**நிலம் பண்படுத்தல்**

*நன்செய் நிலங்கள் நல்ல எருதுகளைப் பூட்டிய ஏர் கொண்டும், மேலும் உழக்கூடிய இயந்திரங்களான (குபேட்டா, டிராக்டர்) கொண்டும் உழுகின்றனர். உழுததைச் சேறுகலக்கி, பரம்படித்து வயலில் நீர் நிற்கும் திறனை அதிகப்படுத்த வேண்டும். இதனால் களைகளும் மட்டுப்படுத்தப்படுகின்றன.*

**எருவிடல்**

*விவசாயத்திற்கு எது இடுதலை முக்கியச் செயலாகக் கருதப்படுகிறது. கால்நடைகளை அதிகமாக வளர்த்துஅதனுடைய கழிவுப் பொருளாகிய சாணத்தைப் பயன்படுத்துகின்றனர். மேலும் தழை எரு எனப்படும் பசுந்தாள் உரங்களைப் போட்டு உழுது நிலவளம் காக்கப்படுகின்றது.*

**விதை போடுதல்**

*நிலங்களுக்குத் தேர்வு செய்யப்பட்ட தரமான விதைகள் பயன்படுத்தப்பட்டன. அதற்கு முதலில் கதிர்களைத் தேர்வு செய்து அதனைப் பூச்சி தாக்காதவாறு பாதுகாத்து வைக்கின்றனர். நன்செய் பயிருக்கு நாற்றங்களால் அமைத்து எவரேனும் ஒருவர் விதை நெல்லை*

*எடுத்து ஒரு பக்கத்தில் இருந்து வீசி வருவார்கள். பின்னர் அவை முளைத்து விடுகின்றன. அதனைப் பிடுங்கி நடுகின்றனர்.*

**நீர்ப்பாய்ச்சுதல்**

*நீர்ப்பாசனம் பெரும்பாலும் வாய்க்கால் அமைத்துப் பாய்ச்சப்படுகிறது. நீர்வளம் குறைந்தால் மற்றவர் மோட்டார் மூலம் தண்ணீர் விடுகின்றனர். மேலும் குளம், ஆறு போன்றவற்றிலிருந்து வாய்க்காலில் நீரைப் பிரித்துப் பாசன வசதி ஏற்படுத்திப் பராமரிக்கப்பட்டுள்ளது.*

**களையெடுத்தல்**

*நடவு நடுதலையும், களையெடுத்தலையும், அக்காலத்தில் இருந்து இன்றுவரை பெண்களே செய்து தந்துள்ளனர். பயிரில் உள்ள களைகளைக் கையினால் எடுக்கின்றனர். மேலும் களைகளைக் களைக்கொட்டு கொண்டு வெட்டப்படுகின்றது. களை வெட்டும் நேரத்தில் நிலத்தில் சிறிதளவேனும் ஈரம் வேண்டுமென்பதால் மழை பெய்த ஈரம் உள்ள நிலையில் களையெடுக்கப்படுகிறது.*

**அறுவடை**

*பயிர் பழுத்துவிட்டது என்றால் அரிவாள் கொண்டு ஆண்களும், பெண்களும் அறுத்துக் கட்டுக்கட்டி களம் சேர்க்கப்படுகின்றன. ஆனால் இப்போது கதிர் அறுக்கும் இயந்திரம் கொண்டு கதிர் அறுக்கப்படுகிறது. முன்பு கதிரடித்துத் தூற்றி நெல் மணிகளைப் பிரித்தெடுத்தாலும் தலையடி போக மாடுகளின் கால்களில் இட்டுத் தாம்படித்து வைக்கோலையும், நெல்லையும் பிரித்ததாகவும் அறியப்படுகிறது. பின்னர் நெல்களைக் குதிர் கொண்டு பாதுகாத்தனர். அல்லது உடனுக்குடனே நெல்லை விற்பனை செய்கின்றனர். வைக்கோல் தாள்களை வீட்டின் கூரை வேய்வதற்கும் மாடுகளுக்கும் பயன்படுத்துகிறார்கள்.*

**பயிர்கள்**

*அதிக மகசூல் பெறப்பட்டுச் சிறப்பான பயிர்த்தொழிலும் இம்மக்கள் செய்கின்றனர்.ஒரே பருவத்தில் ஒரே நிலத்தில் இரு பயிர்ச்சாகுபடி செய்யப்பட்டுக் கலப்புப் பயிர் முறையில் கூடுதலை விளைச்சலைப் பெறுகின்றனர். தானியப்பயிர்கள், பயிறு வகைப் பயிர்கள், எண்ணெய் வித்துப் பயிர்கள், கரும்பு தோட்டப் பயிர்கள் போன்ற பல்வகை பயில்கள் இம்மக்களால் பயிர் செய்யப்பட்டு வருகின்றன.*

**வேளாண்மைக் கருவிகள்**

*வேளாண்மை செய்வதற்கு மிகவும் முக்கியமானது கருவிகள் ஆகும். உழவுத்தொழிலின் இன்றியமையாத கருவி கலப்பையேயாகும். கலப்பை, மண்வெட்டி, களைக்கொட்டு, தளம்பு, ஏற்றம், பாறை, உழவாரம், அரிவாள் போன்ற கருவிகள் வேளாண் கருவிகளாகப் பயன்பட்டன.*

*மேலும் இப்போது வேளாண்மை கருவிகளாக டிராக்டர், குபேட்டா, கிரசர், நடவு இயந்திரம், கதிர் அறுக்கும் இயந்திரம் போன்றவை வேளாண்மைக்குப் பயன்படக்கூடிய இயந்திரங்கள் ஆகும்.*

*பூமி தோன்றிய நிலையில் மனித இனத் தோற்றத்தின் போதே வேளாண்மை செய்தலுக்கான அடித்தளம் உண்டாக்கப்பட்டுள்ளது. மனிதனது உணவுத் தேவையின் அடிப்படையே வேளாண்மையின் அடித்தளமாகக் கண்டுணரப்பட்டுள்ளது எனலாம். தமிழகத்தின் வேளாண்மை வளர்ச்சிக்கான அடித்தளம் சங்க காலத்திலேயே அமைக்கப்பட்டு அது இன்றளவும் வளர்ந்து அறிவியல் துணைக்கொண்டு சிறந்து விளங்குகிறது. இப்பகுதியில் வாழ்கின்ற அனைத்து சாதி மக்களிடமும் ஒரே மாதிரியான பழக்கங்கள் காணப்படுகின்றன.*

**உணவு பதப்படுத்துதல்**

*இப்பகுதியிலுள்ள மக்கள் தங்களுக்குத் தேவையான உணவுகளையும், ஊறுகாய்களையும் தானேதயார் செய்து பயன்படுத்திக்*

கொள்கின்றனர். வருடத்தில் ஒருமுறை தன் வீட்டில் இருக்கும் மரங்கள் காய், கனிகளைக் கொடுத்தாலும் அவ்வருடம் மழுவதும் உணவுக்குப் பயன்படும் அளவிற்குப் பக்குவப்படுத்தி, பதப்படுத்திப் பாதுகாத்துக் கொள்கின்றனர். அதாவது மாங்காய், எலுமிச்சை, நார்த்தங்காய், கிடாரங்காய், மிளகாய் போன்றவற்றைப் பதப்படுத்திப் பலவிதமான ஊறுகாய் செய்து வைக்கின்றனர். மேலும் ஆட்டுக்கறியைக் காயவைத்து உப்புக்கண்டமும், மீனைக்காயவைத்து கச்சப்படி, கருவாடு போன்றவற்றைத் தயாரித்துக் கொள்கின்றனர்.

கொத்தவரங்காய், குமட்டிக்காய், கோவக்காய் போன்ற காய்களை வத்தல் செய்து சில மாதங்கள் கெட்டுப் போகாமல் உணவுக்குப் பயன்படுத்திக் கொள்கின்றனர். இவ்வித காய்களைத் துண்டு துண்டாக நறுக்கி உப்பு சேர்த்து அரைவேக்காடு வேக வைத்து வெளியில் நல்ல வெயில் உள்ள இடத்தில் காய வைக்கின்றனர். பின்னர் எண்ணெயில் வறுத்து உணவுக்குப் பயன்படுத்திக் கொள்கின்றனர். இவ்விதமான உணவுகளைத் தானே தயார் செய்து பயன்படுத்திக் கொள்வதால் உடல் நலத்திற்கும் நீண்ட ஆயுளுக்கும் உத்தரவாதம் உண்டு என்று இப்பகுதியிலுள்ள அனைத்துச் சாதியினரும் நம்புகின்றனர். இதன்மூலம் பலவிதமான நோய்களைத் தடுக்க முடியும் என்றும் அவர்கள் நம்புகின்றனர்.

**மருத்துவப் பழக்க வழக்கங்கள்**

ஒரு மனிதன் இயற்கையை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு பல காலமாக மருத்துவ முறையை மேற்கொண்டு வருகின்றான். தானே உணர்ந்த உண்மைகளின் அடிப்படையிலும், பிறருடைய அனுபவ அறிவினாலும் இன்ன நோய்க்கு இன்ன மருந்து அல்லது இன்ன மருத்துவம் என்பதனை மனிதனே உருவாக்கிக் கொள்கின்றான்.

ஒவ்வொரு மனித சமுதாயக் குழுக்களும் தனக்கென ஒரு மருத்துவ அமைப்பு முறையைக் கொண்டுள்ளது. நோயும் மருத்துவமும் மனித இனப்

*பண்பாட்டு வரலாற்றில் பிரிக்க முடியாதன ஆகும். ஒரு சமுதாயத்தின் பழமை வரலாற்றுச் சிறப்பியல்புகள் ஆகியவற்றை வெளிப்படுத்த வல்லவையாக அச்சமுதாயத்திலிருந்து வெளிப்படுகின்ற பழக்க வழக்கங்கள் நம்பிக்கைகள், சடங்குகள், நாட்டுப்புறக் கலைகள், வழிபாடுகள் மட்டுமல்லாமல் அச்சமுதாய மக்கள் பின்பற்றுகின்ற மருத்துவ முறைகளும் அடங்கும் என்கிறார் அ. இராசேந்திரன் (2006: 107).*

*நாட்டுப்புற மக்கள் தங்களுக்கென சில மருத்துவ முறைகளைக் கொண்டுள்ளனர். அன்றாடம் தம் வாழ்வில் கையாளும் மருத்துவ முறைகளை நாட்டுப்புற மருத்துவம் அல்லது மரபுவழி மருத்துவம் என்று கூறுகின்றனர். நாட்டு வைத்தியம், வீட்டு வைத்தியம், கை வைத்தியம், பாட்டி வைத்தியம், மூலிகை மருத்துவம் என்று பல பெயர்களில் குறிப்பிடுகின்றனர்.*

*மேலும் நோய்க்கு ஏற்ற மூலிகையை எடுத்து பொடி செய்தல், ஆவிபிடித்தல், பசையாகத் தடவுதல், கசாயம் வைத்துக் குடித்தல், சாறு பிரிந்து குடித்தல், ஒத்தடம் கொடுத்தல், போன்றவற்றில் ஏதாவது ஒரு முறையில் நோய்க்கு ஏற்றவாறு மருந்தினை மேற்கொள்கின்றனர்.*

**பொடி**

*மூலிகையை எடுத்துக் கொண்டு காயவைத்துப் பொடி செய்து நோய்க்கு ஏற்றவாறு பயன்படுத்துகின்றனர்.*

**ஆவி பிடித்தல்**

*மூலிகைகளைச் சேர்த்து வெந்நீரில் கொதிக்க வைத்து அதிலிருந்து வரும் ஆவியை நுகர்ந்து பார்ப்பதன் மூலம் நோயைக் குணப்படுத்த முடியும் என்கிறார்கள்.*

**பசை**

*மூலிகைகளை ஒன்றாகச் சேர்த்து அரைத்து கூழ் போன்று செய்து நோயுள்ள அதாவது புண் இருக்கும் இடத்தில் பூசிக் கொள்ள வேண்டும்.*

**கசாயம்**

*மூலிகைகளை வெந்நீரில் வேகவைத்து கசாயத்தை உட்கொண்டு நோயினைப் போக்கிக் கொள்ள வேண்டும்.*

**சாறு குடித்தல்**

*மூலிகைகளைக் கசக்கிப் பிழிந்து அந்த சாற்றை உட்கொண்டு நோயைக் குணப்படுத்திக் கொள்கின்றனர்.*

**ஒத்தடம்**

*மூலிகையை எடுத்து வெந்நீரில் கொதிக்க வைத்து இளஞ்சூடாக இருக்கும்போது வெள்ளைத் துணியால் தொட்டு மெல்ல மெல்ல நோய் உள்ள இடத்தில் ஒத்தடம் கொடுத்தல் வேண்டும். இவ்வாறாக களப்பகுதி மக்கள் மருத்துவத்தினை மேற்கொள்கின்றனர்.*

**குழந்தை மருத்துவம்**

*குழந்தை மருத்துவம் பதினான்கு வயதுக்கு உட்பட்டோருக்குப் பொருந்தக்கூடியது. அவ்வயதில் வரக்கூடிய நோய்களையும் அதற்கான காரணத்தையும் உணர்ந்து குழந்தைகளுக்கு நாட்டு மருந்தைக் கொடுக்கின்றனர். குழந்தை எப்பொழுதும் அழுதுகொண்டே இருக்கும் எதற்கு அழுகிறது என்று தெரியாமல் இருப்பார்கள். அதற்கு ஓமம் தண்ணீர் கொடுக்கின்றனர். இதுபோன்ற பலவகையான மருத்துவத்தை இன்னும் இம்மக்கள் மேற்கொண்டு வருகின்றனர் என்பதைக் களஆய்வில் தெரிந்து கொள்ள முடிந்தது.*

**சளி பிடித்தல்**

*சிறு குழந்தையாக இருந்தால் வெற்றிலையில் தைலம் தடவி விளக்கில் காட்டி இளஞ்சூடாக வெற்றிலையை நெற்றியிலும், நெஞ்சிலும் ஒட்டவேண்டும். பிறகு எண்ணெயையும், கற்பூரத்தையும் சூடாக்கித் தடவ வேண்டும். குழந்தையைக் குளிப்பாட்டும்போது சளி பிடித்தால் பூண்டுத் தேலை நெருப்பில் காட்டிப் புகையை நுகர வேண்டும். இதுபோல சிறு குழந்தைகளுக்குச் செய்தால் சளி பிடிக்காது என்கின்றனர்.*

*முள்ளுமுருங்கை, முடக்கத்தான், தூதுவளை இலை, முசுமுசுக்கை, துளசி இவற்றின் சாறைப் பிழிந்துக் குழந்தைக்குக் கொடுத்தால் சளித் தொல்லை நீங்கும் என்று தகவலாளர் கூறுகின்றார்.*

**காது வலி**

*குழந்தைகளுக்குக் காது குத்தலோ அது காது வலியோ வந்தால் நல்லெண்ணையை நன்கு காய வைத்து வலியுள்ள காதில் இரண்டு சொட்டு விட்டால் காது வலி நின்றுவிடும் என்றும் மருளின் இலையைத் தேங்காய் எண்ணெயில் காய்ச்சி பொறுக்கும் சூட்டில் ஊற்றவேண்டும். தென்னை மரத்தின் வேரைச் சின்னதாக நறுக்கித் தேங்காய் எண்ணெயில் போட்டுக் காய்ச்சி நான்கு துளிகள் ஆற வைத்தபின் விட்டால் காது வலி நீங்கும் என்கின்றனர்.*

**வாந்தி, வயிற்றுப்போக்கு**

*குழந்தைகளுக்கு வயிற்றுவலியோ வயிற்று போக்கோ இருந்தால் சிறிதளவு ஓமநீரைப் பாலில் விட்டுப் புகட்ட வேண்டும். வயிற்றுப்போக்கு நிற்க கோவை இலையும் வெங்காயமும் சேர்த்து எண்ணெயில் வதக்கி நுகரவேண்டும் அல்லது உட்கொள்ளலாம். வயிற்றுப்போக்கைத் தடுக்க தேனைக் கொடுத்தால் நின்றுவிடும் என்கின்றனர்.*

*வாந்தி எடுக்கின்ற குழந்தைக்கு வெற்றிலை சாற்றில் கஸ்தூரி கலந்து கொடுத்தால் வாந்தி நிற்கும். பின்னர் உப்புநீர் கொடுப்பர். அதிமதுரம்,*

கடுக்காய், வசம்பு, மஞ்சள், இவைகளைச் சமஅளவு எடுத்து அரைத்து மிளகு அளவுள்ள உருண்டைகளாகச் செய்து கொடுப்பார்கள்.

**ஆண்கள் மருத்துவம்**

ஆண்களுக்கென்றே ஏற்படும் சில நோய்களுக்கான மருந்துகள்

- ❖ ஆண்மை விருத்திக்கு வல்லாரை இலை நல்லது.
- ❖ முருங்கைக்காய் விதைப் பாலில் கலந்து அவற்றைச் சாப்பிட ஆண்மை விருத்தி உண்டாகும்.
- ❖ இதற்கு முருங்கைப் பூவை நெய்விட்டு வதக்கிச் சாப்பிடலாம்.
- ❖ ஆண்களுக்கு இளம் வயதில் முடி உதிர்ந்து சொட்டை ஏற்பட்டால் தேனில் பூண்டினை உரைத்து முடி உதிர்ந்த இடத்தில் தேய்த்து வந்தால் விரைவில் முடி வளரும்.
- ❖ அகத்திக்கீரை ஆண்மைக்குறைவுக்கு நல்லது.
- ❖ ஆண்களுக்கு விதை வீக்கம் இருந்தால் ஜாதிக்காயை உடைத்துத் தூளாக்கி அதைக் கோழி முட்டையை விளக்கெண்ணயினால் வேகவைத்து வெறும் வயிற்றில் சாப்பிட்டால் விதைவீக்கம் சரியாகும்.
- ❖ இரவு தூங்கும்போது தன்னை அறியாமல் பல் கடித்தல், உடலுறவின் போது ஆண்குறியில் வலி ஏற்படுதல் போன்ற நோய்களுக்கு உள்மருந்தாக அருகம்புல் சாறு எடுத்து வடிகட்டி காலை உணவுக்கு முன்னர் ஒரு குவளை நீராகாரத்தில் கலந்து குடித்தால் இந்நோய் குணமாகும்.

**பெண்கள் மருத்துவம்**

மூலிகை மருத்துவம பொதுவானதாக இருந்தாலும் பெண்களுக்கு ஏற்படுகின்ற மாதவிலக்கு, பருவம் அடைதல், கர்ப்பம் உண்டாகுதல், வெள்ளைப்படுதல், பால் சுரத்தல், பால் வருவதைத் தடுத்தல் போன்ற

*நோய்களுக்கு இம்மக்கள் மூலிகைகளைப் பயன்படுத்தி நோயைப் போக்குகின்றனர்.*

**பருவம்அடைதல்**

*பருவம் அடையாத பெண்ணுக்குத் தும்பை இலை, பூண்டு, வேப்பெண்ணெய், பனைவெல்லம், இவற்றை ஒன்றாகச் சேர்த்து இடித்துச் சாறெடுத்து காலை உணவுக்கு முன் ஒரு குவளை கொடுத்து வந்தால் விரைவில் பருவம் அடைவாள் என்று நம்புகின்றனர்.*

**மாதவிலக்கு**

*கன்னிப் பெண்ணுக்கும், திருமணமான பெண்ணுக்கம் ஒரு மாதத்தில் மூன்று நாட்கள் முதல் ஐந்து நாட்கள் வரை உதிரப்போக்கு ஏற்படும். அப்போது பெண்களுக்கு உடல் வலி, வயிற்று வலி, இடுப்பு வலி போன்றவை ஏற்படுகின்றன. இதற்கு உளுந்து களியும், முட்டை, நல்லெண்ணெயும் கொடுக்கின்றனர். பிறகு வேப்பிலையையும், பாகற்காய் இலையும், அரைத்து குடித்தால் வயிற்று வலி இருக்காது என்கின்றனர்.*

**கர்ப்பம் உண்டாக்குதல்**

*திருமணமான பெண்களுக்குக் கருத்தரிக்காமல் இருந்தால் மலைவேம்பு இலையையும், அரச இலையையும் அரைத்து சாறெடுத்து காலை (மாதவிலக்கு இரண்டாம் நாள் மூன்றாம் நாள்) காலையில் குடித்தால் விரைவில் கருத்தரிக்கும் என்றும் மேலும் சோற்றுக் கற்றாழையின் சதைப்பகுதியைச் சாறெடுத்துக் காலை உணவுக்கு முன் குடித்து வந்தால் விரைவில் கர்ப்பம் உண்டாக வழிவகை செய்யும் என்று நம்புகின்றனர்.*

## வெட்டை அல்லது வெள்ளைப்படுதல்

*ஒரு சில பெண்களுக்கு வெள்ளைப்படுதல் வெட்டை நோய் போன்றவை ஏற்படக் கூடும். அவற்றைப் போக்க பலவகை மருந்துகள் பயன்படுத்தப்படுகின்றன. வாழைக்குருத்து இலையைப் பால்விட்டுச் சாப்பிடுதல், ஆவாரம்பூ, பச்சைஅரிசிப் புட்டு செய்து சாப்பிடுதல், சோத்துக் கத்தாழை இலையைத்தொடர்ந்து சாப்பிடுதல் இவைகளின் மூலம் வெள்ளைப்படுதல் குணமாகும்.*

## தாய்ப்பால் சுரத்தல்

*குழந்தையைப் பெற்றெடுத்த தாய்க்குத் தாய்ப்பால் அதிகமாகக் கிடைக்கவில்லை என்றால் பூண்டு வேகவைத்துச் சாப்பிடுவர். வயல் நண்டு, சுராமீன், கருவாடு, இவைகளைக் குழம்பு வைத்துச் சாப்பிட்டால் தாய்ப்பால் அதிகரிக்கும் என்றும், அதாவது அசைவ உணவுகளை அதிகம் உட்கொள்கின்றனர். அதனால் பால் சுரக்கும் என்கிறார்கள்.*

## தாய்ப்பாலை நிறுத்துதல்

*தாயின் மார்பகத்தில் பால் சுரக்காமல் வற்றுவதற்காகச் சோற்றுக் கற்றாழையின் சாறு பிழிந்து மார்பகத்தில் தடவுவர். அல்லது மல்லிகை பூவையும், முட்டைக்கோஸ் இலையையும, வேப்பிலையும் அரைத்து இரவில் மார்பகத்தில் நூல் துணியால் கட்டினால் பால் சுரப்பதைத் தடுக்க முடியும். மேலும் பச்சரியும், மஞ்சளையும் சேர்த்து அரைத்து மார்பகங்களில் பற்றுப் போட்டால் பால் வடிவதைக் குணப்படுத்த முடியும்.*

## பொது மருத்துவம்

*பொது மருத்துவம் இருபாலருக்கும் பொருந்தக்கூடியது ஆகும். அவையாவன:.*

- ❖ *தலைவலிக்கு சுக்கை நீரில் கரைத்துப் பற்றுப்போடக் குணமாகும்.*

- கண் அரிப்பு, கண் சிவத்தல் இவற்றிற்குத் தாய்ப்பாலை விடலாம்.
- பல்வலிக்குக் கிராம்பு, புதினா, உப்புடன் சேர்த்து பல்வலி இடத்தில் வைத்தால் வலி நிற்கும்.
- வாய்ப்புண்ணுக்கு மணத்தக்காளி கீரையும், தேங்காய் பூவையும், பயிற்றம்பருப்பு இவைகளை உட்கொண்டால் குணமாகும்.
- நெஞ்சுவலிக்கு செம்பருத்தி மொட்டையும், ஆட்டுக்கால் சூப், தேங்காய்ப்பால், இவைகளைச் சாப்பிட்டால் நெஞ்சுவலி சரியாகிவிடும்.
- வயிற்றுப் போக்கைத் தடுக்கத் தேன் சாப்பிடுவது நல்லது மேலும் வேப்ப இலைக் கொழுந்தும், புளிச்சக்கீரையையும் பச்சைப் பூண்டு இவைகளைச் சாப்பிட்டால் குணமாகும்.
- நீர்க்கடுப்புக்குப் புளியங்கொட்டையை மென்றும், கால்களின் கட்டை விரல் நகத்தில் சுண்ணாம்பு தடவியும், முள்ளங்கிச்சாறு, வாழைத்தண்டு சாறு குடித்தால் நீர்க்கடுப்பு நின்றுவிடும்.
- மூல நோய்க்கு நத்தைக் கறியைச் சமைத்துச் சாப்பிட்டால் உள்மூலம், வெளிமூலம் இரண்டு மூலமும் குணமாகும். மேலும் பப்பாளி பழத்தைத் தேனில் ஊறவைத்துச் சாப்பிட்டால் இந்நோய் குணமாகும்.
- இடுப்பு வலிக்கு வெள்ளை எலிக்கறி நல்லது.
- மலச்சிக்கலுக்குத் தினமும் இரவில் நார் பழங்களும், முடக்கத்தான் இலை ரசமும், வாழைத்தண்டு இவைகளைச் சமைத்து உண்பதனால் மலச்சிக்கல் தீர்ந்து விடும்.
- வாந்தியை நிறுத்தச் சிறிது சீரகத்துடன் ஒரு துண்டு கருப்பட்டியையும் சேர்த்துத் தின்றால் வாந்தி நிற்கும்.
- கறிவேப்பிலை சாப்பிட்டால் தலைமுடி நரைக்காது என்றும் முயல் இரத்தத்தை முடியில் தடவினால் முடி கருகருவென்று நன்கு வளரும் மேலும் பொடுகுக்குக் குமளம் பழத்தைத் தேய்க்க வேண்டும்.

- ❖ *மஞ்சள் காமாலைக்குப் பொன்னாங்கன்னி, கரிசலாங்கன்னியை அடிக்கடி உணவில் சேர்த்துக் கொண்டால் இந்நோயைத் தடுக்கலாம்.*
- ❖ *அம்மை நோய்க்குக் குளிக்கும்போது பச்சை மஞ்சள், வேப்பிலை இரண்டும் அரைத்துத் தேய்த்துக் குளிப்பாட்டினால் நல்லது.*
- ❖ *உதடு வெடித்தால் அதில் வெண்ணெய் அல்லது நெய் தடவினால் வெடிப்பு நீங்கும்.*
- ❖ *சாப்பிட்ட பின் சிறிது பச்சை வேர்க்கடலை சாப்பிட்டால் உணவு சீரணம் ஆகும்.*
- ❖ *உடல் இளைப்பதற்குத் தினமும் காலையில் ஒரு ஸ்பூன் தேன் சாப்பிட வேண்டும். உடம்பு குண்டாவதற்கு ஆமணக்கு நீரைக் காயவைத்து இடித்து நீரில் கலந்து குடிக்கலாம்.*
- ❖ *பசியெடுக்க இஞ்சிச்சாறு சாப்பிடுதல் நல்லது.*

*இம்மருந்துகள் அனைத்தும் ஆண், பெண்இருபாலருக்கும அளிக்கப்பெறும் நாட்டுப்புற மருத்துவம் தொடர்பாகக் களப்பணி வாயிலாகச் சேகரித்த தரவுகள் ஆகும்.*

**விளையாட்டுக்கள்**

*விளையாட்டு குழந்தையின் முழு வளர்ச்சிக்கு இன்றியமையாததாகிறது. விளையாட்டுக்களை விளையாடுவதன் மூலம் உடல் வளர்ச்சி, உடல் வலிமை, நோய் எதிர்ப்புத் தன்மை, மன அமைதி, இன்றைய நிலையில் பலரது நட்பு, பல நாடுகளின் நட்பு போன்ற அனைத்து சிறப்பம்சங்களையும் உள்ளடக்கிய ஒன்றாகவே விளையாட்டு திகழ்கிறது.*

*விளையாட்டு என்பது வாழ்க்கைக்குப் பயிற்சி அளிக்கும் களம் என்கிறார் இரா. பாலசுப்பிரமணியம் (1980: 2) சிறுவர்கள் போட்டி விளையாட்டுகளில் அதிகம் ஈடுபடுகின்றனர். சிக்கல் மிகுந்த சமூக*

வாழ்க்கையில் பின்னர் ஈடுபட வேண்டியிருப்பதற்கு இளம் வயதிலேயே அவற்றை எதிர்நோக்கும் பயிற்சியை விளையாட்டு அளிக்கிறது என்று சு. சக்திவேல் (1992) கூறுகிறார்.

ஆண்கள் விளையாடக்கூடிய விளையாட்டக்கள் என்றும், பெண்கள் விளையாடக்கூடிய விளையாட்டுக்கள் என்றும் இருபாலும் விளையாடக் கூடியதாகவும் உள்ளன. பல்லாங்குழி ஓய்வு நேரங்களில் பெண்கள் விளையாடக்கூடிய விளையாட்டு இவ்விளையாட்டைப் பெண்கள் விளையாடுவதன் மூலம் ஒருமுக சிந்தனையும், யோசிக்கும் தன்மையும் ஏற்படுகின்றன. இதேபோன்று பெண்கள் தாயமும் விளையாடுகின்றனர்.

மட்டைப்பந்து, கிட்டிப்புள், பம்பரம், பளிங்குகி, எரிகுச்சி, பந்து, கபடி போன்ற விளையாட்டுக்களை ஆண்கள் விளையாடுகின்றனர். இதன் மூலம் உடல் ஆரோக்கியமும், வலிமையும் பெற்றுள்ளனர். இன்னும் பல விளையாட்டுக்களை இவ்வூர் மக்கள் விளையாடுகின்றனர். களப்பணி மேற்கொண்டதில் கிடைக்கப்பெற்ற விளையாட்டுக்கள் எண்ணிலடங்கா அவற்றில் சிறுவர் விளையாட்டுகள் சிலவற்றைக் காணலாம்.

**சாட் பூட் திரி**

சிறுவர் நெருங்கி வட்டமாக நின்றுகொண்டு சாட்பூட்திரி என்று சொல்லிக்கொண்டே தங்கள் இரு கைகளையும் சேர்ப்பர். மேற்புறம் உள்ள கையை உள்ளங்கைப் பக்கம் திருப்பியோ அல்லது புறங்கைப் பக்கம் திருப்பியோ வைக்கலாம். இப்படியே எல்லோரும் வைக்க எப்பக்கத்தைக் குறைவான எண்ணிக்கையில் வைத்துள்ளனரே அவரெல்லாம் பழமாகியவராகக் கருதப்படுவர். மீதமுள்ளோர் முன்போலச் செயல்பட இறுதியில் இருவர் மட்டுமே இருப்பர். இருவரும் சாட்புட்திரி போடுதல் இயலாது என்ற காரணத்தினால் பழமேறியவர்களில் ஒருவர் துணைக்கையாக வருவார். இவ்வாறு இறுதியில் ஒருவரை வெற்றி பெற்றவராகத் தேர்ந்தெடுப்பர்.

**தவக்களை விளையாட்டு**

*தவக்களைப் போல் குந்திய நிலையில் குதித்து விளையாடுவதால் இவ்விளையாட்டுக்குத் தவக்களை விளையாட்டு என்று பெயர் வந்தது. இருவரோ அதற்கு மேற்பட்டவரோ ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து இடுப்பில் கைகளை வைத்துக் குந்திய நிலையில் குதித்துக் குதித்து ஒரு குறிப்பிட்ட இடம் வரை சென்று திரும்பி வரவேண்டும். யார் முதலில் வருகிறாரோ அவரே வென்றவராவர்.*

*குதித்துச் செல்கையில் எவரேனும் இடுப்பில் இருந்து கைகளை எடுத்தாலோ கீழே விழுந்தாலோ அல்லது எழுந்து நின்றாலோ அவர் விளையாடும் வாய்ப்பினை இழந்து விடுவார்.*

*மேலும் இவ்விளையாட்டுக்களினால் உடல் உறுப்புகளில் கால்களில் இயக்கத்தால் இவ்விளையாட்டு நடைபெறுவதால் சிறுவர்களின் கால்கள் வலுவடைய தவக்களை விளையாட்டு பயனுடையதாகிறது.*

**ஒளிந்து விளையாடல்**

*நிலாக்கால இரவுப் பொழுதில் சிறுவர்கள் ஒளிந்து பிடித்து விளையாடுவர். ஒருவன் தன் கண்ணைத் தானே பொத்திக் கொள்ள வேண்டும். மற்றவர்கள் ஓடி ஒளிந்து கொள்வர். கண் பொத்தியவன் வரலாமா? என்று கேட்பான். ஒளிந்து இருப்பவர் சூட் வரலாம் என்று கூறியவுடன் கண்ணைத் திறந்து மற்றவர்களைப் பிடிப்பான். முதலில் ஒருவனைத் தொட்டுப் பெயர் கூறிவிட்டால், பிடிபட்டவன் கண் பொத்தி வரவேண்டும் ஒளிந்தவர்கள் வந்துவிடலாம். ஒளிந்தவர்கள் கண் பொத்திய இடத்தை வந்து தொட்டுவிட்டால் முதலில் கண் பொத்தி வந்தவன் மீண்டும் பிடிக்க வேண்டும். இவ்வாறு இவ்விளையாட்டு தொடரும்.*

**நீர் விளையாட்டு**

*காலையில் நீர்நிலைகளில் குளிக்கச் செல்லும் கிராமப்புறச் சிறுவர்கள் பலர் ஒன்றுகூடி கரையின் மேல் நின்றுகொண்டு வரிசையாக*

நீரில் துடும் எனக் குதிப்பர். நீரிலிருந்து கொண்டே கண்டுபிடித்து விளையாடுவர். நீருக்குள் மூழ்கி மூழ்கி அகப்பாடல் செல்வர். தலையைப் பொதுவாக வெளியே நீட்டுவர். நீந்தியும் செல்வர். நீரிலிருந்து வெளியே வந்து மறுபடியும் கரையின் மேலிருந்து குதிப்பர்.

இவ்வாறாக நீரில் மூழ்கும்போதும் மூச்சை அடக்கிக் கொள்ளும் பயிற்சி பெறுகின்றனர். கை, கால்களை அசைத்து நீந்திச் செல்வதால் கை கால்களுக்குப் பயிற்சி கிடைக்கிறது. நீரில் மூழ்கும்போது மூச்சை அடக்கிக் கொள்ளும் பயிற்சிப் பெறுகின்றனர். இவ்விளையாட்டுக்கள் மூலம் விளையாடி மகிழ்கின்றனர்.

இவ்வாறான விளையாட்டுக்கள் மட்டுமல்லாது பலவகையான விளையாட்டுக்களை விளையாடுகின்றனர். இவ்விளையாட்டுக்கள் பொதுபோக்காகவும் மனமகிழ்ச்சிக்காகவும் விளையாடப்படுகின்றன. இவ்விளையாட்டுக்கள் சிறுவர்களுக்கு ஏற்ற தன்மையுடையனவாய் அமைந்துள்ளன. இத்தகைய இயல்பைப் பெரியவர்கள் அதாவது ஆண்கள், பெண்கள் விளையாட்டில் காண்பது அரிதாகும் என்பது களப்பணி மேற்கொள்ளும் போது கிடைக்கப்பெற்ற செய்தியாகும்.

**தொகுப்புரை**

வாய்மொழி மரபில் பழக்க வழக்கங்கள் என்னும் இவ்வாய்வின் வாயிலாக கருப்பமுதலியார்கோட்டை என்னும் ஊரில் உள்ள அனைத்து இன மக்களின் பழக்க வழக்கங்கள் தெளிவுறுத்தப்பட்டுள்ளன. இலக்கியத்தில் இடம்பெறும் பழக்க வழக்கங்கள் சுட்டிக்காட்டப்பட்டு அதன் தொடர்ச்சியாக இன்றைய நிலையில் நாட்டுப்புற மக்கள் பலவிதமான பழக்க வழக்கங்களைப் பின்பற்றி வருகின்றனர் என்பதைக் கூறப்பட்டுள்ளன.

பழக்க வழக்கங்கள் மக்களால் உருவாக்கப்பட்டுக் காலம் காலமாக ஒரு தலைமுறையிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குப் பரவி வருவதால் மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான அனைத்து

நிலைகளிலும் பலவிதமான பழக்க வழக்கங்களை உயிர்நாடியாகக் கொண்டு பின்பற்றி வருகின்றனர் என்பதை இவ்வியலின் மூலம் அறியமுடிகிறது.

இப்பகுதி மக்கள் தங்கள் வீட்டில் நடைபெறும் சுப நிகழ்ச்சிகளான காதுகுத்து, பூப்பு, திருமணம், வளைகாப்பு போன்ற மங்கல நிகழ்ச்சிகளைச் செய்யத் தொடங்கும் முன் தன் இஷ்ட தெய்வத்திற்கும் குலதெய்வத்திற்கும் படையல் இட்டு வழிபட்டபின்பு தான் செயலைத் தொடங்க வேண்டும் என்பதில் களப்பகுதி மக்கள் உறுதியாக உள்ளனர்.

இம்மக்கள் வாழ்வில் நேரும் துன்பங்களுக்கும் நோய்களுக்கும் நாட்டுப்புறத் தெய்வங்களை வழிபடுகின்றனர். படையலும், பலியும் இட்டுத் தங்கள் வேண்டுதல்களை நிறைவேற்றிக் கொள்கின்றனர். நாட்டுப்புறத்தில் நடைபெறும் விழாக்களில் மக்கள் தொன்மையான பண்பாட்டையும் பாரம்பரியத்தையும் பின்பற்றி வருகின்றனர் என்பது தெளிவாகின்றது. இம்மக்கள் உழைக்கும் வர்க்கத்தினர் என்பதால் அவர்கள் வேளாண்மை தொழிலில் ஈடுபட்டு வருகின்றனர். அதனால் அவர்களின் வாழ்விலும் வளர்ச்சியும் வளமையும் அடைவார்கள் என்று நம்புகின்றார்கள்.

நாட்டுப்புற மருத்துவத்தின் மூலம் வளரும் மூலிகைச் செடிகளைக் கொண்டு இம்மக்கள் தங்களுக்கு ஏற்படுகின்ற நோய்களைப் போக்கிக் கொள்கின்றனர். விளையாட்டிற்கு இம்மக்கள் முக்கியத்துவம்கொடுத்து விளையாடுவதற்கு வழிவகைகளைச் செய்து கொடுத்துள்ளனர் என்பதையும் தெளிவாக அறியமுடிகின்றது.

# இயல் 4

## நம்பிக்கை வயப்பட்ட பழக்க வழக்கங்கள்

ஆதிமுதல் மனித இனத்திற்குத் தேவையான உணவு, உடை, உறையுள் ஆகிய மூன்றையும் நிறைவேற்றிக் கொள்ள உறுதுணையாக இருப்பது இயற்கையேயாகும். வேட்டைச் சமுதாய நிலையாகிய முதனிலையிலேயே மனிதன் சடங்குகளின் மீது நம்பிக்கை வைத்து அதையே பற்றுக்கோடாகக் கொண்டு தொடரப்பட்டுள்ளதை அறிந்து கொள்ள முடிகிறது. நம்பிக்கையின் உச்சநிலையே சடங்குகளில் எச்சநிலையாகும்.

வேட்டை நிலையிலிருந்து மனித சமுதாயம் இயற்கையுடன் இணைந்து வாழும் சூழ்நிலையில் இயற்கையான தாவரங்களிடமிருந்து உணவு கிடைப்பதை அறிந்து அதனைச் சேகரித்துப் பயன்படுத்தினான் என்று அறியப்படுகிறது. அப்போது ஆண்கள் வேட்டைக்கும் பெண்கள் உணவு சேகரிப்பிற்கும் என்ற பணிநிலை உருவானது. இயற்கையின் கோபத்தைத் தணிக்க வழிபாடு என்ற ஒன்றை ஏற்படுத்தினான். அதனால் விளைந்த நன்மைகளுக்கு நன்றி தெரிவிக்கும் பொருட்டுப் படையல்களைப் படைத்து வழிபாட்டினை மனிதன் உருவாக்கினான்.

மக்களின் சமுதாயம் ஓர் ஆலமரம். அதன் ஆணிவேர் நம்பிக்கையாகும். அந்த நம்பிக்கையை வலுப்படுத்தும் சடங்குகள் அதன் விழுதுகளாகும். ஞானத்தின் பண்பாட்டையும், பழமையையும் அவர்தம் நம்பிக்கைகள் வெளிப்படுத்துகின்றன.

சிந்தனை மனித மனத்தின் சொத்து. மனம்தான் ஏற்ற எதனையும் நம்பியே சிந்திக்கிறது. நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டுச் சமுதாயத்தால் புரக்கப்படுவன. அவை சமூகத் தேவைகள் மற்றும் குறிக்கோள்களின் அடிப்படையில் தோன்றின. மனிதனின் தன்னல உணர்வும் சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன.

இவை காலங்காலமாகத் தொடர்ந்து மரபுவழியாகப் பின்பற்றப்பட்டு வருகின்றது.

நம்பிக்கைகள் பெரும்பாலும் மனிதனின் அச்ச உணர்வினை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவையாகவே காட்சி தருகின்றன. அறிவியல் வளர்ச்சியால் மனித இனம் பல நன்மைகளைப் பெற்றிருந்தாலும் அவ்வளர்ச்சியைக் கொடுத்தது நம்பிக்கையே ஆகும். ஒரு சமுதாயத்தின் வளர்ச்சி நிலையை எடுத்துக் காட்டக்கூடிய ஒன்றாகத் திகழ்வது நம்பிக்கை எனலாம்.

மனிதன் இயற்கையின் பாதிப்பிற்கு மிகுதியாக உட்பட்டிருந்த அறிவு வளர்ச்சியின் தொடக்கக் காலத்தில் நம்பிக்கைகள் தோன்றியிருக்கலாம் என்கிறார் அ. இராசேந்திரன் (2006:1). நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டுச் சமுதாயத்தால் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. மனிதனின் தன்னல உணர்வும் சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன. சமூகம் என்பது பல்வேறு வகைப்பட்ட வாழ்வியக்க நடைமுறைகளைக் கொண்டே பல்வேறு மக்கள் குழுவினர் ஒருங்கிணைந்த தொகுதியாகும். ஒவ்வொரு குழுவினரும் தங்களுக்கெனத் தனித்தனி நம்பிக்கைகளைக் கொண்டுள்ளனர்.

**நம்பிக்கையின் சொல்லும் பொருளும்**

நம்பிக்கையினைச் சுட்டும் ஆங்கிலச் சொற்கள் Faith, Belief என்ற சொற்களாகும். இச்சொல் நம்பிக்கை என்ற ஒரே பொருள் உள்ளதாக ஆங்கில அகராதிகள் உணர்த்துகின்றன. மேலும் Faith என்ற சொல் பெரும்பாலும் சமயம் சார்ந்த நம்பிக்கையைக் குறிப்பதாகும். Belief என்னும் சொல் பெரும்பாலும் சமயம் சார்ந்த நம்பிக்கைகள் மட்டுமின்றி ஏனைய சமூக வாழ்வியல் நம்பிக்கைகளையும் குறிப்பிடுகின்றன.

நம்பிக்கை என்ற சொல்லுக்கு அமெரிக்கக் கலைக்களஞ்சியம் தரும் விளக்கங்களில் “ஒரு பிரச்சனையின் மூலமாக நாம் தெரிந்து கொள்ளும்

*உண்மையை விரும்பி ஏற்றுக் கொள்ளுதலே பொதுவாக நம்பிக்கை எனப்படும். ஆனால் சமய ரீதியாகவும், நுட்பமாகவும் பார்க்கும்போது ஒரு மனிதனின் மனத்திண்மையும், விருப்பத்தையும் பொறுத்தே இது அமைகிறது''* *என்பது நம்பிக்கை என்ற சொல்லுக்குப் பொருளாக அமைந்துள்ளது.*

*நம்பிக்கை என்பதற்கு விசுவாசம், ஆணை, நம்பியொப்புவிக்கப்பட்டது, மேலும் உண்மை என்றும், சத்தியம், நிசம், உறுதிப்பாடு என்று மதுரைத் தமிழ்ப்பேரகராதி பல்வேறு பொருள்களைத் தருகின்றது. இதனைத் தொல்காப்பியத்தில்,*

''**நம்பு மேவு நசையா கும்மே**'' *(தொல். சொல். 329)*

*தொல்காப்பியர் நம்பு என்ற சொல்லினை 'நசை' அல்லது விருப்பம் என்ற பொருளில் கையாண்டுள்ளார். மேலும் நம்பு என்பதற்கு விருப்பம், ஆவல், ஆசை என்றும், அருச்சகம், நம்பென்னேவல் என்றும் அகராதிகள் பொருள் தருகின்றன. மேலும் நற்றிணையில்,*

''**சோரியம் பெண்டிர் சிறுசொல் நம்பிச்**
**சுடுவான் போல நோக்கும்**'' *(நற்றிணை 175: 7-8)*

*அதாவது இப்பாடலில் நம்பு என்ற வினைச்சொல் நம்பிக்கை என்ற பொருளில் பயின்று வந்துள்ளது. நற்றிணையில் மற்றொரு பாடலில் நம்புதல் என்ற சொல்லும் இடம்பெற்றுள்ளது.*

''**நாடல் சான்றோர் நம்புதல் பழியெனிற்**
**பாடில கலுழுங் கண்ணொடு சாஅய்ச்**
**சாதலு மினிதே காதலந் தோழி**'' *(நற்றிணை 327: 1-3)*

*இதன்மூலம் நட்பு என்ற சொல் தொடக்கத்தில் விருப்பம் என்ற பொருளிலும், பின்னர் நம்பிக்கை என்ற பொருளிலும் கையாளப்பட்டு வந்துள்ளன. காலப்போக்கில் இச்சொல் நம்பிக்கையை மட்டும் குறிப்பதற்குப் பயன்பட்டு வந்துள்ளதனை இன்றைய நடைமுறை வழக்காறுகளைக் கொண்டு உணரலாம்.*

**நம்பிக்கை குறித்து அறிஞர்களின் கருத்துகள்**

*நம்பிக்கைகள் குறித்த செய்திகளை நாட்டுப்புறவியல், சமூகவியல், மானிடவியல், உளவியல் சார்ந்த அறிஞர்கள் போன்றோர் பல்வேறு ஆய்வுகள் நிகழ்த்தியுள்ளனர். நம்பிக்கைகள் குறித்து அவர்கள் கூறும் விளக்கங்கள் பின்வருமாறு:*

*நம்பிக்கை என்பது ஒன்றின் உரிமையை ஏற்றுக் கொள்வதாகும். நம்பிக்கைகளின் அடிப்படை மனிதனின் அகமனம் என்பர். மூளைக்கு அகமனமானது காரண காரியங்களுக்கு அப்பாற்பட்ட எண்ணங்களை உணர்த்துகிறது. மூளையில் பதியும் அவ்வெண்ணங்கள் உண்மையாகி உறுதிப்படும் போது நம்பிக்கையாகிறது. மனித வாழ்வின் உறுதிப்பாட்டிற்கு ஆதரவு தரும் இந்நம்பிக்கைகள் மனித வாழ்வில் மிக இன்றியமையாதது என்று ஜேம்ஸ் வின்செஸ்டர் கூறுவதாக சண்முகசுந்தரம் குறிப்பிடுகின்றார் (1975: 180).*

*மனிதர்களே தோற்றுவித்து வளர்த்துக் கொண்ட நிலையில் நம்பிக்கைகள் சமுதாய மானிடவியல்* (Social Anthropology) *சமுதாய உளவியல் (*Social Psychology*) சார்ந்து அமைகின்றன. இதனை ஓர் ஆய்வாளர் வாழ்வில் தமக்கு ஏற்படும் பல்வேறு அலுவல்காளினால் இவற்றைச் செய்தல் தகும், இவற்றைச் செய்தல் தகாது என்று பல காலத்திற்கும் முன்னே பிரித்து வைத்த செய்திகள் எல்லாம் காலப்போக்கில் காரணம் அறியாமலேயே நம்பிக்கைகளாகவும், பழக்க வழக்கங்களாகவும் மாறுகின்றன என்கிறார் (வி.சரசுவதி, 1982: 152).*

*நம்பிக்கைகள் காலங்காலமாக ஒவ்வொரு குல முன்னோர்களால் உருவாக்கப்பட்டுப் பின்னர் வருவோரால் பின்பற்றப்பட்டுப் பாதுகாக்கப்படுகின்றன. மனிதர்களின் சுய உணர்வும் சமுதாய உணர்வும் பல நம்பிக்கைகளை எளிதில் தோற்றுவிக்கின்றன. அறிவின் அடிப்படையிலோ, அல்லது மேற்சொன்ன இரண்டின் அடிப்படையிலோ ஒரு கூற்று, ஒரு நிலை, ஒருமுறை, ஒரு மனிதன், போன்றவற்றின் மேல்*

ஈடுபாடு கொள்ளும் கட்டுப்பாட்டு நிலையே நம்பிக்கையாகும். இது ஊகத்திற்கு மேற்பட்டது. அறிவிற்குக் கீழ்ப்பட்டது ஆகும் என்கிறார் (Helen Sewell Johnson, 1968; Vol.3).

கண்ணால் பார்க்காமலும் அறிவாராய்ச்சி செய்யாமலும் சில செய்திகள் காரண காரியம் கருதாமல் மக்களால் அவ்வாறே ஏற்றுக் கொள்ளப்பட்டுச் செயலாற்றுகின்றன. முன்னோர் வழங்கியதை அப்படியே ஏற்றுக் கொள்வர். ஏன்? எதற்கு? என்ற வினாக்கள் எழுப்பப்படுவதில்லை. அவை உண்மையா கட்டுக்கதையா எனக் கருதிப் பார்க்கப்படுவதில்லை. இயற்கையில் ஏற்படும் எதிர்பாரா நிகழ்ச்சிகளுக்கெல்லாம் கருத்துக்கள் கற்பித்து அப்படியே நம்பப்படும் இவற்றை நம்பிக்கைகள் என்பர் என்று கூறுகின்றார் (நாராயணன், பி, 1986: 115).

எதையும் காரண காரிய அடிப்படையில் எண்ணிப் பார்க்காமல் பரம்பரையாகச் சொல்லப்பட்டு வந்த கருத்துக்களை அவ்வாறே ஏற்றுக் கொள்வது நம்பிக்கை ஆகும் என்கிறார் (பி. யோகீசுவரன், 1985: 86).

மேலும் தனது சொந்த குணத்தை ஒரு சமூகம் மாற்றும்போது, அல்லது இழக்கும்போது அவற்றிற்கு ஏற்ப முன்பே அமைந்திருந்த நடைமுறைகள் நம்பிக்கைகளாய் எஞ்சுகின்றன என்று (தமிழவன், 1976: 6) விளக்கமளிக்கிறார்.

**சங்ககால நம்பிக்கைகள்**

சங்கப் பாடல்களில் செம்பாதிக்கு மேல் விளங்கும் அகப்பாடல்களில், செம்பாதிக்கு மேல் விளங்குவன பிரிவுப் பாடல்கள். பிரிவில் துவளும் தலைவி, எப்போது தலைவன் வருவான் என்று எதிர்நோக்கி இருப்பதால் நிமித்தம் (புள்) பார்ப்பதும் விரிச்சிக் கேட்பதும், கூடலிழைப்பதும் செய்வாள். தலைவியின் நலிவு கண்டு பெற்றோர் வேலன் வெறியாட்டு, கட்டுவிச்சி கூற்று ஆகியவற்றை நம்பினர்.

**விரிச்சி கேட்டல்**

*ஒரு செயலைத் தொடங்குவதற்கு முன்னர்ப் பிறர்கூறும் சொற்களைச் சகுனமாகக் கொள்ளும் வழக்கம் பண்டுதொட்டே நம்மிடையே நிலவுகின்றது. இதனைப் பண்டைத் தமிழர்கள் விரிச்சி எனச் சுட்டியுள்ளனர். விரிச்சி என்பது வருங்காரியத்தை விரிவாய் முன்னே தெரிவிப்பதாகும். ஏதேனும் ஒரு செயலை மேற்கொள்ளப் புகுங்கால் அம்முயற்சி இன்னவாறு கைகூடும் என்பதனை அறிதற்கே இவ்வாறு செய்வர். இதனை நற்சொல் எனவும் கூறலாம். விரிச்சி நம்பிக்கையின் அடிப்படையில் தோன்றுவது.*

*விரிச்சி கேட்டலை அசரீரி என்கின்றனர் சிலர். அவ்வாறு கூறுவது தவறானது எனலாம். அதாவது அசரீரி என்பது உருவமற்று விண்வெளியில் எதிர்பாராமல் தோன்றும் குரலாகும். ஆனால் விரிச்சி என்பது வழிப்போவோர் கூறும் சொற்களை நிமித்தமாகக் கொள்ளும் முறையிலும் நற்சொல்லை எதிர்நோக்கி நிற்கும் நிலையிலும் அசரீரியிலிருந்து வேறுபட்டு விளங்குகின்றது. மேலும் அசரீரி பற்றிய செய்தியினைச் சங்க இலக்கியத்தில் காணமுடிவதில்லை. முதன்முதலில் காப்பியத்தில் தான் இதுபற்றிய குறிப்பு காணப்பட்டது. அசரீரி என்பதனை இன்று தெய்வவாக்கு எனக் கூறுகின்றன.*

*விரிச்சி கேட்டல், அகம், புறம், ஆகிய இருமரபுகளிலும் காணப்படுகின்றன. இதனை 'வாய்ப்புள்' என்று முல்லைப்பாட்டில் கூறியுள்ளனர். அதாவது,*

**"இன்னே வருகுவர் தாய ரென்போள்**
**நன்னர் நன்மொழி கேட்டன மதனால்**
**நல்ல நல்லோர் வாய்ப்புள்"** *(முல்லை. 16-18)*

*மேலும் இது நன்னிமித்தம் உணர்த்தும் பாங்கில் பயின்று வந்துள்ளதனைச் சங்கப் பாடல்கள் கூறுகின்றன. நிமித்தக் கூறாகப் பெண்டிரின் சொல்லே நன்னிமித்தமாக அமைந்துள்ளன.*

**"விடர்முகை யடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்**
**கடனும் பூணாம் கைந்நூல் யாவாம்**
**புள்ளு மோராம் விரிச்சியும் நில்லாம்**
**உள்ளது முள்ளா மன்றே தோழி"** *(குறுந். 218: 1-4)*

*புறத்துறையிலும் விரிச்சி கேட்பதுண்டு. வெட்சித்திணையில் ஆநிரை கவர, விரிச்சி கேட்டு வீரர் புறப்படுவர். வெட்சிப்பூவும் தினையும் ஆட்டுக்கடாவின் குருதியும் தெளித்து விரிச்சி பார்ப்பர் என்பதை,*

**"செங்கால் வெட்சியும் தினையும் தூஉய்**
**மறிக்குரல் குருதி மன்று துகளவிப்ப**
**விரிச்சி ஓர்ந்து"** *(புறம். 498)*

**"நல்லிசை நிறுத்த நாணுடை மறவர்**
**நிரைநிலை நடுகற் பொருந்தி இமையாது**
**இரைநசை இக்கிடந்த முதுவாய்ப் பல்லி"**

*(அகம். 387: 14-16)*

**"இடூஉ ஆங்க ணினிய படூஉம்**
**நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கிற் றேற்றும்"**

*(நற். 246: 1-2)*

**"உயர்புகழ் நல்லி லொண்சுவர்ப் பொருந்தி**
**நயவரு குரல பல்லி**
**நள்ளென் யாமத் துள்ளுதொறும் படுமே"**

*(நற். 333: 10-12)*

**"உள்ளார் கொல்லோ தோழி கானவர்**
**பொன்புனை பகழி செப்பங் கொண்மார்**
**உகிர்நுதி புரட்டும் ஓசை போலச்**
**செங்காற் பல்லி தன்துணை பயிரும்**
**அங்காற் கள்ளியங் காடிறந் தோரே"**

*(குறுந். 16)*

**"இனநல முடைய கானஞ் சென்றோர்**
**புனைநலம் வாட்டந ரல்லர் மனைவயிற்**
**பல்லியும் பாங்கொத் திசைத்தன**
**நல்லெழி ஒண்கணும் ஆடுமா லிடனே"**

*(கலித். 11: 19-22)*

**புள்**

*ஒரு செயலைத் தொடங்குவதற்கு முன் நல்ல நேரம், நாள் பொழுதும் நன்னிமித்தமும் பார்த்து ஒரு செயலைத் தொடங்குவது தமிழ் மக்களிடம் தொன்றுதொட்டு இருந்துவரும் ஒரு வழக்கமாகும். பண்டைய தமிழிலக்கியத்தின்கண் நல்லநேரம், நன்னிமித்தம் பார்த்த செய்தி கூறப்பட்டுள்ளது.*

**"புள்ளும் பொழுதும் பழித்த லல்லதை**
**உள்ளிச் சென்றோர்ப் பழியல ரதனாற்**
**புலவேன்"** *(புறம். 204: 10-12)*

**"அம்ம வாழி தோழி கைம்மிகக்**
**கனவுங் கங்குல்தோ றினிய நனவும்**
**புனைவினை நல்லிற் புள்ளும் பாங்கின"**

*(அகம். 141: 1-3)*

**"தோள்வலி யாப்ப ஈண்டுநம் வரவினைப்**
**புள்ளறி வுறீயின கொல்லோ"** *(நற். 161? 8-9)*

**கண் துடித்தல்**

*பெண்களுக்கு இடது கண்ணும், ஆணுக்கு வலது கண்ணுக்ம் துடித்தால் நன்மை என்றும் மாறித் துடித்தால் தீமை என்றும் கொண்டனர்.*

**"பல்லியும் பாங்கொத் திசைத்தன**
**நல்லெழில் உண்கணும் ஆடுமா லிடனே"** *(கலித். 11)*

*எனப் பல்லியும் இடக்கண் துடிப்பும் நன்மை உணர்த்திய செய்தியைக் கலித்தொகை கூறுகின்றது.*

*இந்திரவிழா நாளில் கோவலன் மாதவியைப் பிரியப் போகிறான் என்பதால் மாதவி வலக்கண்ணும், கண்ணகியை வந்து சேரப் போகிறான் என்பதால் கண்ணகி இடக்கண்ணும் துடித்தனவாம்.*

**“கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்**
**உண்ணிறை கரந்தகத் தொளித்து நீருகுத்தன**
**எண்ணுமுறை இடத்தினும் வலத்தினும் துடித்தன**
**விண்ணவர் கோமான் விழவுநாளகத் தென்”**

*(சிலப். 5: 237-239)*

**தந்தைப் பெயரன்**

*பண்டைத் தமிழர் பிள்ளைகளுக்குப் பெயரிடுவதில் ஒரு முறையான வழக்கத்தினைப் பின்பற்றினர். பெயரிடுதலில் முன்னோரைப் போற்றும் மரபு இருந்துள்ளதனை இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. இதனை,*

**“சீர்கெழு மடந்தை யீர்மை பொருந்த**
**நள்ளென் கங்குற் கள்வன் போல**
**அகன்றுறை யூரனும் வந்தனன்**
**சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே”** *(நற். 40: 9-12)*

*மேலும் மேதக்க எந்தைப் பெயரன், தான் தன் முதல்வன் பெரும்பெயர் முறையுளிப் பெற்ற புதல்வர் எனக் குறிப்பது அன்றைய தமிழ் மக்கள் பெயரிடுவதில் ஒரு வரன்முறையினைப் பின்பற்றி வந்திருப்பதனைத் தெரிவிக்கின்றன. இதனை,*

**“பகலான் டல்கினை பரத்த என்றியான்**
**இகலியிருப்பே னாயின் தான்றன**
**முதல்வன் பெரும்பெயர் முறையுளிப் பெற்ற**
**புதல்வற் புல்லிப் பொய்த்துயில் துஞ்சும்”**

*(கலி. 75: 22-25)*

*இந்நம்பிக்கையின் அடிப்படையிலேயே பண்டைத் தமிழர் தங்களது குழந்தைகளுக்கு முன்னோரது பெயரிட்டழைத்துள்ளனர்.*

**பிறை தொழுதல்**

*பிறைதொழுதல் இயற்கை வழிபாட்டின் அடிப்படையில் தோன்றிய மற்றும் சில கற்பித நம்பிக்கைகளை உள்ளடக்கியதாகும்.*

**மதி காட்டுதல்**

*குழந்தைகளுக்கு மதி காட்டல் பழந்தமிழ் இலக்கியத்தில் சுட்டியிருப்பினும் அதன் வளர்ச்சியினைச் சிறப்பாகச் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்றான பிள்ளைத்தமிழில் மதி காட்டுதல் என்னும் அம்புலிப் பருவம் இடம்பெற்றிருக்கிறது. அம்புலிப்பருவம் இரு பாலருக்கும் பொதுவான ஒன்றாக அமைந்திருப்பது இதன் சிறப்பினை உணர்த்துவதாக உள்ளது. பிள்ளைகளுக்குப் பிறை காட்டும் வழக்கம் இன்றும் உள்ளது. பிறைகாட்டலின் உட்பொதிவாக இருப்பது பிறை வயப்பட்ட ஒரு நம்பிக்கையாகும். தான் நாள்தோறும் வளருவது போன்று பிள்ளைகளையும் பிறை வளரச் செய்யும் என்ற நம்பிக்கையின் காரணமாகவே பிறைகாட்டல் என்னும் வழக்கம் மனித சமுதாயத்திடையே நிலவுகின்றது. மதிகாட்டும் தாயரின் செயலைப் புறநானூறும், பழமொழி நானூறும் குறிப்பிடுகின்றன. இதனை,*

**“இல்லுணாத் துறத்தலின் இல்மறந் துறையும்**
**புல்லுளைக் குடுமிப் புதல்வன் பன்மாண்**
**பாலில் வறுமுலை சுவைத்தனன் பெறாஅன்**
**கூழுஞ் சோறுங் கடைஇ யூழின்**
**உள்ளில் வறுங்கலந் திறந்தழக் கண்டு**
**மறப்புலி யுரைத்தும் மதியங் காட்டியும்**
**நொந்தன ளாகி நுந்தையை யுள்ளி”** *(புறம்.160: 17-23)*

**"செறிவுதைத் தார்வேந்தன் செவ்வியன் பெற்றால்**
**அறிவுடையார் அவ்வியமும் செய்வர்- வறிதுரைத்துப்**
**பிள்ளைகளை மருட்டும் தாயர்போல் அம்புலிமேல்**
**ஒள்ளியகாட் டாளர்க்கு அரிது"**

*(பழ. 264)*

*தாய் ஊட்ட வளரும் பிள்ளையைத் தாய் மருட்ட வேண்டிய நிலைக்கு வறுமைத் துன்பம் பிடித்து உந்தியதையே இப்பாடல் தெரிவிக்கின்றது.*

*குழந்தைகளுக்கு மதிகாட்டல் நல்லதெனக் கலித்தொகையும், நிலாக்காட்டல் இனிதென இனியவை நாற்பதும் தெரிவிக்கின்றன.*

**"ஐய திங்கட் குழவி வருகென யான்நின்னை**
**அம்புலி காட்டல் இனிது"**

*(கலி. 80: 18-19)*

**"தங்கண் அமர்வு உடையார் தாம்வாழ்தல் முன்இனிதே**
**அங்கண் விசும்பின் அகல்நிலாக் காண்பு இனிதே**
**பங்கம் இல் செய்கையர் ஆகிப் பரிந்து யார்க்கும்**
**அன்புடையர் ஆதல் இனிது"**

*(கலி. 9)*

*பழந்தமிழர் கொண்டிருந்த மதி பற்றிய நம்பிக்கைகள் இன்றைய சமுதாயத்தில் மரபுவழியே தொடர்ந்து நிலவுகின்றன. அறிவு மற்றும் அறிவியல் வளர்ச்சியின்மையால் அன்று காரணம் காட்ட முடியாத பலவற்றிற்கு இன்று ஆராய்ச்சிகளின் வாயிலாகக் காரணங்கள் கண்டுபிடிக்கப்பட்டு உணர்த்தப்பட்டமையால் மக்களிடையே நிலவிய நம்பிக்கைகள் இன்று மூடநம்பிக்கைகளாக மாறிக் கொண்டிருக்கின்றன.*

*இதனை இன்று மதியில் ஔவைப்பாட்டி வெள்ளாட்டின் தலை ஆகியன இருப்பதாகக் காட்சி அளவில் நம்பும் நிலை மற்றும் மதியினைப் பாம்பு விழுங்குவதாகக் கருதும் நம்பிக்கை ஆகியவை கல்வியறிவற்ற*

*சமுதாயத்திடையே பெருவழக்குப் பெற்றுள்ளன. எனினும் நம்பிக்கைகளும் அது தொடர்பான மூடப்பழக்கங்களும் இன்றைய தமிழ்ச் சமுதாயத்தினரிடையே நின்று நிலவும் நிலை தொன்றுதொட்டு வரும் மரபுகள் நிலையினைப் புறங்கண்டுவிடும் தன்மைக்குச் சான்று கூறத்தக்கதாக அமைகின்றது.*

**நீராடல்**

*நீராடலைத் 'தீர்த்தமாடுதல்' எனவும் கூறுவர். தீமை செய்தவர்கள் தங்களது பாவச் செயல்களுக்குக் கழுவாயாகக் கடலிலோ அல்லது ஆற்றுநீரிலோ குளித்துத் தம் பாவங்களைப் போக்கிக் கொண்டனர். பண்டைத் தமிழ் மக்களிடம இதுபோன்ற நம்பிக்கை நிலவியதனைத் தீது செய்தோர் கடலில் மூழ்கித் தம்மைப் புனிதப்படுத்திய செயல் கொண்டு அறிய முடிகின்றது.*

*இதனைப் பட்டினப்பாலையில் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பரதவர் சினைச் சுறவின் கோட்டினை நட்டு வழிபட்டுப் பின்னர்ப் புகார்முகத்தே காவிரி கடலோடு கலக்குமிடத்தே தங்களது பழவினை நீங்கக் கடலாடிய செயல்கொண்டு காட்டிச் செல்கின்றனர். இதனை,*

"**தேறுநீர்ப் புணரியோடு யாறுதலை மணக்கும்**
**மலியோதத் தொலிகூடற்**
**றீதுநீங்கக் கடலாடியும்**
**மாசுபோகப் புனல்படிந்தும்**"

*(பட்டி. 97-100)*

*பாவம் செய்தோர் தம் பாவங்கள் நீங்கக் குமரியில் நீராடுவதனை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இதனை இரட்டைக்காப்பியங்களின் கதைமாந்தரின் செயலால் உணரமுடிகின்றது.*

"**தாழ்நீர் வேலித் தலைச்செங் கானத்து**
**நான்மறை முற்றிய நலம்புரி கொள்கை**

**மாமறை முதல்வன் மாடல னென்போன்**
**மாதவ முனிவன் மலைவலங் கொண்டு**
**குமரியம் பெருந்துறை கொள்கையிற் படிந்து**
**தமர்முதற் பெயர்வோன்"**

*(சிலம்பு. 15: 11-16)*

*என்று சிலம்பில் மாடலன் குமரியம் பெருந்துறையில் நீராடியமையையும் அதனால் பாவம் தொலைந்தனர் என்றும் நம்புகின்றனர்.*

*அதேபோல் மணிமேகலையில் சுதமதி தன் தீவினை போக்கக் கன்னியாகுமரியில் கடலாடினாள் என்பதனை,*

**"பார்ப்பனி சாலி காப்புக்கடை கழிந்து**
**கொண்டோற் பிழைத்த தண்ட மஞ்சித்**
**தென்றிசைக் குமரியாடிய வருவோள்"**

*(மணி. 13: 5-7)*

*இன்றும் புனித நாட்களிலும் தீமை பயப்பதாகக் கருதுங் காலங்களிலும் கடலில் நீராடிப் பாவம் போக்கிப் புனிதப்படுத்திக் கொள்ளும் நிலை பண்டைய நம்பிக்கையின் செயற்பாடாக அமைகின்றது.*

**வேள்வி**

*வேள்வி என்பது தமிழ்ச்சொல். ஆனால் இதனை வடமொழியில் 'யாகம்' எனக் கூறினர். பின்னர் பண்டையத் தமிழர் 'வேள்வி' எனப் பெயரிட்டழைத்தனர் இயற்கை வழிபாட்டினரான தமிழர் காலப்போக்கில் பிற பண்பாட்டின் தாக்கத்தால் தீ வளர்த்து, நெய் சொரிந்து, பலியிட்டுத் தெய்வத்தை வணங்கினர்.*

*வேதகால ஆரியரிடம் சிறப்புப் பெற்று விளங்கிய இவ்வழிபாட்டு முறை பழந்தமிழகத்தில் பரவியிருந்தது என்பதற்குச் சங்க இலக்கியச் சான்றுகள் தெரிவிக்கின்றன. இதனைக் கலைக்களஞ்சியம் 'வேள்வி என்பதற்கு முக்கியமான பொருள் பயன் கருதியோ பயன் கருதாமலோ ஒரு*

*தேவதைக்கு அர்ப்பணம் செய்வது என்பதுதான். அர்ப்பித்த பொருள் பிறகு தீயில் போடப்படும்" என்கிறது (தொகுதி. 7, ப. 308).*

**கனவு**

*இலக்கியங்களில் கூறப்படும் கனவு நிகழ்ச்சிகள் வருங்கால நிகழ்ச்சிகளை முன்னர் உணர்த்துவனவாக அமைந்துள்ளன. இவை அடிப்படையில் ஆதாரமற்றவை. சங்க இலக்கியங்களில் காணப்படும் கனவு புலவர்களின் கற்பனையில் தோன்றியவை. அக்கால மக்களின் வாழ்க்கையில் நிலவிய நம்பிக்கைகளே இப்புனைவுக்கு ஆதாரம் ஆகும்.*

*கனவு என்பது மனிதனின் உள்ளுணர்வை வெளிப்படுத்தும் ஒரு கருவியாகும். மக்கள் பொதுவாகக் கனவுகள் வாழ்வில் பின் நிகழ்வனவற்றை முன்னுணர்த்துகின்றன என நம்புகின்றனர். அடக்கி வைக்கப்பட்ட விருப்பத்தின் மறைமுகமான வெளிப்பாடே கனவு என்கின்றனர்.*

*கனவு பற்றிப் புறநானூறு எயிறு நிலத்தில் வீழ்தல் தலையில் எண்ணெய் தேய்த்திருத்தல், களிறு மேல் ஊர்தல், கட்டிய ஆடை நழுவுதல், படைக்கலம் கவிழ்தல் போன்ற கனவுகள் தீ நிமித்தங்களைக் குறிப்பான என வகுத்துரைக்கின்றன. இதனை,*

**"திசை இரு நான்கும் உற்கம் உற்றவும்**
**பெருமரத் திலையில் நெடுங்கோடு வற்றல் பற்றவும்**
. . . . . . . . . . .
**எயிறுநிலத்து வீழவும் எண்ணெய் ஆடவும்**
**களிறுமேல் கொள்ளவும் காழகம் நீப்பவும்**
**வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவும்**
**கனவின் அரியன காணா"**

*(புறம். 41: 4-11)*

*என்னும் செய்யுளால் அறியலாம்.*

*தீ நிமித்தங்களை உணர்த்தும் கனவுகளில் வாழ்வின் பின் நிகழ்வுகளே காட்டப்படுகின்றன. இதனைக் கண்ணகியின் கனவுக் காட்சிகள் கொண்டு அறியலாம்.*

**“கடுக்குமென் னெஞ்சங் கனவினா யென்கை**
**பிடித்தனன் போயோர் பெரும்பதியுட் பட்டேம்**
**பட்ட பதியிற் படாத தொரு வார்த்தை**
**இட்டன ரோரிரு தேளிட் டென்றன்மேல்**
**கோவலற் குற்றதோர் தீங்கென் றதுகேட்டுக்**
**காவலன் முன்னர் யான் கட்டுரைத்தென்”**

*(சிலம்பு. 9: 45-50)*

*என்னும் பாடல் விளக்குகின்றது. பழமொழி நானூற்றில் ‘கான முந்துறாத வினை இல்லை’ என்ற நம்பிக்கையும், தீய கனாக் கண்டால் பிறரிடம் கூறக்கூடாது என்ற அறிவுறுத்தலும் தென்படுகின்றது.*

**“வினாமுந் துறாத உரையில்லை இல்லை**
**கனாமுந் துறாத வினை”** *(பழம். 12: 3-4)*

**“விழித்தலரும் நெய்தற் றுறைவா உரையார்**
**இழித்தக்க காணிற் கனா”** *(பழம். 130: 3-4)*

*என்று பழமொழி நானூறு குறிப்பிடுகின்றது. சங்க இலக்கியங்களில் இக்கனவுகள் உள்ளுறையாகவும், விருப்பங்களின் விளைவாகவும் நிமித்தமாகவும் வருகின்றன. கனவு சங்க காலத்தில் இருந்து நம்பிக்கையாகவும் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றது.*

**கடவுள் உறையும் மரம்**

*குறிப்பிட்ட சில மரங்களில் கடவுள் உறைவதாக நம்பி அவற்றை வழிபடும் வழக்கம் பண்டைக்காலத்தில் இருந்து வந்தது என்பதற்கு நற்றிணையில் கூறப்பட்டுள்ளது.*

**“தொன்றுறை கடவுள் சேர்ந்த பராரை**
**மன்றப் பெண்ணை”** *(நற். 303: 3-4)*

**"தாதெரு மறுகி னாபுறத் தீண்டு**

**நெடுவீ ழிட்ட கடவுளாலத்**

**துகுபலி யருந்திய தொகுவிரற் காக்கை"**

*(நற். 343:3-5)*

**"கடவுள் மரத்த முள்மிடை குடம்பைச்**

**சேவலொடு புணராச் சிறுகரும் பேடை"** *(அகம். 270: 12-13)*

*என்று சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன. தம் குலத்தெய்வத்தையும், ஊர்ப் பொதுத் தெய்வத்தையும் பனை மரத்தில் ஏற்றி வணங்குவது தொன்றுதொட்டு வரும் நெய்தல் நில மக்கள் வழக்கு என்பது இவ்வடிகளுக்கு உரிய விளக்கமாகும்.*

*மிக முதிர்ந்த ஆலமரங்களில் தெய்வம் உறைவதாக அக்கால மக்களால் நம்பப்பட்டது. இதனை,*

**"கடவுள் ஆலத்து தடவுச் சினைப் பல்பழம்**

**நெடுந லுண்டன பென்னாது பின்னும்"** *(புறம். 199: 1-2)*

*என்னும் செய்யுளடிகள் கொண்டு நிறுவலாம்.*

*அரச மரத்தையும் வேம்பையும் சுற்றிவந்து வழிபட்டால் மகப்பேறு உண்டாகும் என்ற நம்பிக்கை இன்றும் கிராமங்களில் நிலவி வருகின்றது. மரங்கள் நிமித்தமுணர்த்தும் திறத்தினைத் தொல்காப்பியமும் சங்க இலக்கியமும் சுட்டுகின்றன.*

*எனவே சங்க காலத்தில் இறைவன் மரத்தடியில் உறைகின்றான் என்னும் நம்பிக்கை நிலவியது. மேலும் வழிபடுவதை மக்கள் வழக்காகக் கொண்டிருந்தனர்.*

**மந்திரம்**

*சமயம் தோன்றுவதற்கு முன்னுள்ள மக்கள் நிலையினை மந்திர ஆற்றலில் நம்பிக்கைமிக்க காலகட்டமாகக் கருதுவர். மந்திரம் போலச் செய்தல் என்ற கொள்கையினை அடிப்படையாகக் கொண்டது. மந்திரங்களின் வாயிலாகத் தேவதைகளைச் சுவாதீனம் செய்தல்,*

*இயற்கையைக் கட்டுப்படுத்துதல், பகைவரை அழித்தல், நோயை அகற்றுதல், பொருள் சம்பாதித்தல் ஆகியவற்றை அடையலாமென மக்கள் நம்புகின்றனர்.*

*தமிழிலக்கியத்தில் மந்திரத்தை உச்சரிப்பதன் மூலம் பயன்பெற்ற நிலைமைகளையே சான்றுகள் தெரிவிக்கின்றன. மந்திரத்தை நிறைமொழி மாந்தரின் மறைமொழியாகத் தொல்காப்பியர்,*

**“நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளக்கும்**
**மறைமொழி தானே மந்திரம் என்ப”**

*(தொல்.பொருள். 480)*

*எனக் குறிக்கின்றார். மந்திர ஆற்றலில் நம்பிக்கைமிக்க சமுதாயமாகத் திகழ்ந்தமையினையே காப்பியங்களும் அற இலக்கியங்களும் உணர்த்துகின்றன. திருமுருகாற்றுப்படை ஆறெழுத்து எனவும், சிலப்பதிகாரம் ஐந்து, எட்டு ஆகிய எழுத்துக்களாகிய எனச் சுட்டுவது கொண்டு மந்திரம் எழுத்துக்களை அடிப்படையாகக் கொண்டது என்பது தெரியவருகின்றது.*

**“உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்**
**தாறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி**
**நாவியன் மருங்கி னவிலப் பாடி”** *(திருமுரு.185-187)*

**“அருமறை மருங்கி னைந்தினு மெட்டினும்**
**வருமறை யெழுத்தின் மந்திர மிரண்டும்**
**ஒரு முறையாக வுளங்கொண் டோதி”**

*(சிலப். 11: 128-130)*

*மேலும் நான்மணிக்கடிகை மந்திரத்தால் நாகப்பாம்பினைக் கட்டுப்படுத்தலாமெனச் சுட்டுகின்றது. இதனை,*

**“கந்தில் பிணிப்பர் களிற்றை கதம் தவிர**
**மந்திரத்தினால் பிணிப்பர் மாநாகம்”** *(நான்ம. 10: 1-2)*

*என நான்மணிக்கடிகை குறிப்பிடுகின்றது.*

**ஊழ்வினை**

*சங்ககால மக்கள் ஊழ்வினையில் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்திருந்தனர். இதனை,*

**“கல்பொருது இரங்கும் மல்லற் பேர்யாற்று**
**நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்**
**முறைவழிப் படூஉம் என்பது திறவோர்**
**காட்சியில் தெளிந்தனம்”**

*(புறம். 192: 8-11)*

*என்னும் புறப்பாடல் தெளிவுறுத்துகின்றது.*

*வினை, தலைவிதி, விதி என்று இன்று சுட்டப்படுவதையே பண்டைத் தமிழர் பால், முறை, ஊழ், விதி எனக் குறிப்பிட்டுள்ளனர். அவையாவன:*

**“பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவனை**
**என்னை யென்றும் யாமே யிவ்வூர்**
**பிரிதொன் றாகக் கூறும்**
**ஆங்கு மாக்குமோ வாழிய பாலே”**

*(ஐங். 110: 2-5)*

**“கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று**
**நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்**
**முறைவழிப் படூஉ மென்பது திறவோர்**
**காட்சியிற் றெளிந்தன மாகலின்”**

*(புறம். 192: 6-8)*

**“ஊழிப் பெருவுளி யாவுள மற்றொன்று**
**குழினுந் தான்முந் துறும்”**

*(குறள். 380)*

*எனத் திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார்.*

*பழந்தமிழ் இலக்கியத்தின்வழி முற்பிறப்பில் ஒருவர் செய்த நல்வினை, தீவினைகளுக்கேற்ப இப்பிறப்பில் அவருடைய இன்ப துன்பங்கள் நிச்சயிக்கப்படுகின்றன என்ற கொள்கை,*

**“யாம்செய் தொல்வினைக் கெவன்பே துற்றனை**
**வருந்தல் வாழி தோழி”**

*(நற். 88: 1-2)*

*என்று நற்றிணைப் பாடல் குறிப்பிடுகின்றது. மேலும் சங்க இலக்கியத்தில் அகம், புறம் ஆகிய இரு மரபுகளிலும் ஊழ் செயலாற்றுவதனை இலக்கியச் சான்றுகள் தெரிவிக்கின்றன. இளமையில் பூசல்கொண்டிருந்த சிறுவதை உடனுறை வாழ்க்கைக்குக் கூட்டியதும் ஊழ்வினையின் செயலாகக் காட்டப்படுகிறது.*

**“இவனிவள் ஐம்பால் பற்றவும் இவளிவன்**
**புன்றலையோரி வாங்குநள் பரியவும்**
**காதற் செவிலியர் தவிர்ப்பவுந் தவிராது**
**ஏதில் சிறுசெரு வுறுப மன்னோ**
**நல்லைமன் றம்ம பாலே மெல்லியற்**
**றுணைமலர்ப் பிணையல் அன்னவிவர்**
**மணமகி ழியற்கை காட்டி யோயே”**

*(குறுந். 229)*

*என்ற பாடல் தெளிவுபடுத்துகின்றது.*

**“மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்**
**பால்தர வந்த பழவிறற் றாயம்**
**எய்தின மாயி னெய்தினஞ் சிறப்பென”**

*(புறம். 75: 1-3)*

*என்ற புறநானூற்றுப் பாடலில் அரசுரிமையை எய்தியதற்குச் சான்றுகள் உள்ளன. மேலும் பழந்தமிழருக்கு ஊழ் நம்பிக்கை மிகுந்து இருந்தது என்பதும் முற்பிறப்பு வினைகளே ஊழ்வினைக்குக் காரணமாய்*

*அமைந்தமையும் நல்வினை, தீவினைகளே பிற்பிறப்பிற்கும் பிறவி இன்ப துன்பங்களுக்குக் காரணமாவது தெரியவருகின்றது.*

**நடுகல்**

*சமுதாயச் சிறப்புமிக்க இயல்புகளைக் கொண்டிருந்தவர்களின் இறப்பிற்குப் பின் அவர்களது நினைவாக நடப்பட்ட கல்லே நடுகல் ஆகும். நடுகல் என்றால் நடப்பட்ட கல் எனப் பொருள்படும். இதனை அகநானூறு,*

**“பிடிமடிந் தன்ன குறும்பொறை மருங்கின்**
**நட்ட போலும் நடாஅ நெடுங்கல்**
**அகலிடங் குயின்ற பல்பெயர் மண்ணி”**

*(அகம். 269: 7-10)*

*வீரத்தினைப் போற்றும் பண்பின் அடிப்படையில் தோன்றிய நினைவுச் சின்னம் காலப்போக்கில் ஆவி பற்றிய நம்பிக்கையின் பாற்பட்ட நிலையில் நடுகல் வழிபாடாக உருப்பெற்றது. எனவே நடுகல் நடும் வழக்கம் நம்பிக்கை வயப்பட்ட நிலையில் நம்பிக்கை வயப்பட்ட வழக்கமாக மாறிவிட்டது.*

*நடுகல் வீரத்தினை அடிப்படையாகக் கொண்ட நினைவுச் சின்னமாக அமைந்து வழிப்போக்கர்க்கு உதவும் என்ற நம்பிக்கை அடிப்படையிலும் தோன்றியதாகும். நடுகல் எடுக்கும் வழக்கம் சங்க காலத்தில் ஆண்களுக்குரிய ஒன்றாகக் காட்டப்படுகிறது. காலப்போக்கில் பெண்ணுக்கும் நடுகல் எடுத்துக் கடவுளாக்கிய நிலையினை முதன் முதலில் சிலம்பில்தான் காண்கிறோம். இளங்கோவடிகள், தொல்காப்பியர் காட்டும் நெறியில் நின்று கண்ணகிக்குக் கல் நாட்டிக் கடவுளாக்கிய புதுமையினைச் செய்துள்ளார். இதனைக் காலத்தால் ஏற்பட்ட வழிபாட்டு மாற்றம் எனக் கொளலே பொருந்தும்.*

*தொல்காப்பியர் புறத்திணையினுள் வெட்சித்திணையின் மறுதலையாகிய நிரைமீட்டலாகிய கரந்தைத் திணைத்துறைகளுள் நடுகல் எடுக்கும் வழக்கத்தினை,*

**“காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்**
**சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தலென்று**
**இருமூன்று மரபிற் கல்லொடு புணர”**

*(தொல். பொருள். 63: 19-21)*

*எனக் குறித்துள்ளார். சங்க இலக்கியத்திலும் நடுகல் ஆண்களுக்குரிய ஒன்றாகக் காட்டப்பட்டிருப்பது கொண்டு பழந்தமிழர் நடுகல் நாட்டுவதனை ஆண்களுக்குரிய ஒன்றாகக் கருதியமை தெளிவாகின்றது. சிலம்பு காட்டும் நடுகல் வழிபாட்டு நிலையில் கடவுளாக்கிய மாற்றத்தினை உணர்த்துவதாகும்.*

*சங்ககாலப் பாடல்கள் குறிப்பிடும் நடுகல் வழிபாட்டு முறை பழங்கால மக்களின் வழிபாட்டு இயல்புகளைக் கொண்டிருக்கின்றன. அவற்றில் பலியும் கள்ளும் பீலியும் துடியும் பயன்படுத்தியமை பண்டைத் தமிழரின் இயற்கையான வழிபாட்டு முறையினைத் தெரிவிப்பதாக உள்ளது. நடுகல் வழிபாட்டினை,*

**“நுழைவதி நெடுவேற் குறும்படை மழவர்**
**முனையாத் தந்து முரம்பின் வீழ்த்த**
**வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்**
**வல்லாண் பதுக்கைக் கடவுள் பேண்மார்**
**நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்**
**தோப்பிக் கள்ளொடு துருஉப்பலி கொடுக்கும்**
**போக்கருங் கவலைய புலவுநா றருஞ்சுரம்”**

*(அகம். 35: 4-10)*

*என்னும் பாடல் விளக்குகின்றது.*

*நடுகல்லில் நடுகற்களான வீரனின் பெயரும் , சிறப்பும் பொறித்தமையும் மற்றும் அவனது படைக்கலங்களை நடுகற்கருகிலேயே ஊன்றியிருத்தமையினையும் மருதனிளநாகனார்*

**“நடைமெலிந் தொழிந்த சேட்படர் கன்றின்**
**கடைமணி யுகுநீர் துடைத்த ஆடவரும்**
**பெயரும் பீடு மெழுதி அதர்தொறும்**
**பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்**
**வேலூன்ற பலகை வேற்றுமுனை கடுக்கும்**
**வெருவரு தகுந கானம்”** *(அகம். 131: 8-13)*

*எனச் சுட்டிச் செல்கின்றார். நடுகல்லில் பீடும் பெயரும் எழுதுதல் பெருவழக்காக இருந்தன.*

**நம்பிக்கைகள்**

*நம்பிக்கை என்பது சிலவற்றை மறுக்க முடியாத உண்மை என்று கருதி ஏற்றுக் கொள்வதே என்று வரையறுக்கலாம். ஒன்றை உண்மை என்று நம்புவதில் இரு கூறுகள் அடங்கியுள்ளன. அதாவது அறிவுபூர்வமான ஒரு கூறும், உணர்ச்சிபூர்வமான மற்றொரு கூறும் நம்பிக்கையினுள் அடங்கியுள்ளன. ஒருவர் சிலவற்றை உண்மை என்று எண்ணலாம், சிலவற்றை உண்மை என்று உணரலாம். சிலவற்றை உண்மையென்று எண்ணும்போது அவ்வாறு எண்ணுவதற்குச் சில காரணங்களைத் தர முடியும். ஆனால் சிலவற்றை உண்மை என்று உணரும்போது ஏன் அவ்வாறு உணருகின்றனர்என்று அவனால் விளக்கமளிக்க முடியாது.*

**பிள்ளைப்பேறு குறித்த நம்பிக்கைகள்**

*சங்ககாலம் முதல் இன்று வரை வீட்டையும் நாட்டையுட்மகாப்பதக்க்காகப் பிள்ளைப்பேறை மக்கள் முதன்மையாகக் கருதினர். அந்த காலத்தில் அதிக பிள்ளை பெறுகிற தாய்மார்கள்*

‘வீரத்தாய்மார்கள்’ என்று மதித்து வைத்திருந்தார்கள். அந்த காலத்தில் அதிகமாகப் பிள்ளைகளைப் பெற்றுக் கொள்வதை கௌரவமாகக் கருதினார்கள். எனவேதான் பிள்ளைப்பேறு இல்லாத பெண்களை ‘மலடி’ என்று இழிவாகப் பேசுவார்கள். பிள்ளைகளை ‘மக்கட்செல்வம்’ என்று மக்கள் கொண்டாடினார்கள்.

அரச மரத்தைச் சுற்றி வந்தால் குழந்தை பிறக்கும் என்பது அன்றும் இன்றும் நாட்டுப்புற மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையாகும். பளிள்ளை இல்லாத பெண்கள் பிள்ளை வரம் வேண்டி அரசமரத்தடி பிள்ளையாரைச் சுற்றி வருவார்கள். சிலர் ஆலமரத்தையும் சுற்றிவருவார்கள். அரசமரமும் ஆலமரமும் பால் மரங்கள். பால் மரங்களைச் சுற்றித் தினமும் வந்தால் பெண் கருத்தரித்து அவள் மார்பிலும் பாலூறும் என்ற நம்பிக்கையில் எழுந்த வழக்காகும்.

பெண்கள் காலையில் நீராடிவிட்டு அரசும், வேம்பும் ஒன்றாக இணைந்திருக்கும் மரத்தினைச் சுற்றி வருவதன் நோக்கம் இரண்டு மரங்களும் மருத்துவக் குணம் உடையவை. குழந்தை இல்லாத பெண்கள் வயிற்றில் இருக்கும் கிருமிகளை அழித்துவிடும். பின் கருத்தரிக்க வாய்ப்பு இருக்கிறது என்ற நம்பிக்கையில் சுற்றுகின்றனர். நீண்ட நாட்களாகக் குழந்தை இல்லாதவர்களுக்கு அரச இலையும், வேம்பு இரண்டையும்சேர்த்து அம்மியில் அரைத்து பின் அதன் சாற்றைக் குழந்தை இல்லாத பெண்களுக்கு வெறும் வயிற்றில் அதாவது பெண்கள் மாதவிடாய் இருக்கும் மூன்றாம் நாள் கொடுக்க வேண்டும். அப்படி கொடுக்கப்படுவதால் பெண்கள் வயிற்றில் இருக்கும் கெட்ட பூச்சிகள் அழிக்கப்பட்டுப் பின் பெண்கள் கர்ப்பம் அடைவதற்கு வாய்ப்பு அதிகம் இருக்கிறது.

பிள்ளைவரம் வேண்டி பல கோயில்களுக்குச் சென்று தனக்குப் பிள்ளை வரம் கொடுத்தால் என் குழந்தை பிறந்தவுடன் மும்முடி எடுக்கிறேன், உன் பெயரையே என் குழந்தைக்குச் சூட்டுகிறேன் அல்லது உனக்கு ஆடுவெட்டி, பொங்கல் செய்து காணிக்கை செலுத்துகிறேன்

என்றும் இவ்வேண்டுதல்களுடன் அத்தெய்வ கோயிலில் உள்ள மரத்தில் தொட்டி கட்டி அதில் குழந்தையாக எலுமிச்சை பழம் போட்டுத் தொட்டிலை ஆட்டி விடுகின்றனர்.

**"தவுட்டுக்கு வாங்கிய பிள்ளை"**

களப்பகுதியில் இவ்விதமான நம்பிக்கையை இன்றும் காணமுடிகிறது. அதாவது குழந்தைக்கு அடிக்கடி காய்ச்சல் வந்தால் பெற்றோர்கள் மருத்துவரிடம் அழைத்துச் செல்கின்றனர். பின்னர் மருந்தில் குணமாகவில்லை என்றால் குழந்தையின் சாதகத்தைப் பார்த்துக் குழந்தைக்கு இப்போது நேரம் சரியில்லை. அதனால் குழந்தையைத் 'தத்து' கொடுக்க வேண்டும் என்று கூறுகிறார்கள். ஏதாவது கோயிலுக்கு அழைத்துச் சென்ற அங்கு அந்தணரிடம் தவிடு, எள்ளு, கம்பு, பூசை பொருட்கள் கொடுத்து அபிசேகம் செய்கின்றனர். பின்னர் குழந்தைக்கு மாலை போட்டு அவர்களுடன் வந்திருக்கும் உறவினர்களிடம் குழந்தையைக் கொடுக்கின்றனர். அன்று முழுவதும் அந்த குழந்தை அப்பா, அம்மா இவர்களைப் பார்க்காமல் உறவினர் வீட்டில் வைத்து இருக்கின்றனர். இதைப்போல் செய்தால் குழந்தை நலம் பெறுவார்கள் என்று இப்பகுதி மக்கள் நம்பிக்கை அடைகின்றனர்.

'கருவுற்றிருக்கும் பெண் உயிர் கொள்ளக் கூடாது' என்ற நம்பிக்கை இப்பகுதி மக்களிடம் மிகுதியாகக் காணப்படுகிறது. உயிர் மீன்களையும், கோழி, வண்டுகள், பூச்சி போன்ற உயிர்களைக் கொல்லக் கூடாது. தன் வயிற்றில் இருக்கும் குழந்தையும் ஒரு உயிர்தான் என்ற மனிதாபிமானம் ஒரு காரணமானாலும், கருவுற்றிருக்கும் பெண் இரத்தத்தைப் பார்த்தால் மயக்கம் வந்து உடல்நிலை சரியில்லாமல் போய்விடும் என்றும், அதனால் கரு கலைந்து விடும்ட என்ற எண்ணத்தில் இவ்விதமாக நம்பிக்கை தோற்றம் பெற்றன என்கின்றனர்.

கருவுற்றிருக்கும் பெண் எந்த பொருள் மீது ஆசைப்பட்டாலும் அப்பொருளை வாங்கித் தந்து பெண்ணின் ஆசையை நிறைவேற்ற

*வேண்டும். அப்படி நிறைவேற்றவில்லையென்றால் குழந்தையின் காதில் 'சலம்' (சீல்) வரும் என்று நம்புகின்றனர்.*

**"ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால்**

**தன் பிள்ளை தானே வளரும்"**

*என்பது இம்மக்களின் பழமொழி ஆகும். இதற்குரிய காரணத்தை அவர்கள் தன் வீட்டுக்கு வாழவந்த பெண்ணைக் குறித்து சொல்லப்பட்ட பழமொழியாகும். அந்த பெண் ஊரார் வீட்டில் பிறந்து தன் வீட்டுக்கு வாழ வந்தவள் ஆகையால் அவள் கருவுற்றிருக்கும் பெண் ஆசைப்படும் பொருட்களை வாங்கிக் கொடுத்து மகிழ்ச்சியை வைத்திருந்தால் அவள் வயிற்றில் வளரும் தன் குடும்ப வாரிசு சத்தானதாகவும், திறமையானதாகவும் வளரும் என்ற நம்பிக்கையில் எழுந்த பழமொழியாகும்.*

*பிறந்த குழந்தையின் முகத்தைக் கண்ணாடியில் காட்டக்கூடாது. கண்ணாடியில் குழந்தை தன் முகத்தைப் பார்த்தால் குழந்தைக்குப் பேச்சு வராது ஊமையாகிவிடும். குழந்தை தூங்கிக் கொண்டிருக்கும் நிலையில் சிரித்தாலோ, அழுதாலோ குழந்தையை நரி மிரட்டுகிறது என்றும், அப்பாவைத் தொடு என்றால் சிரிக்கும், அம்மாவைத் தொடு என்றால் அழும் என்று நம்புகின்றனர்.*

*குழந்தை தூங்கிக் கொண்டிருக்கும்போது குழந்தைக்குத் தலைவாரி, பொட்டு வைத்து பூ வைக்கக் கூடாது. அவ்வாறு செய்வது இறந்த குழந்தைக்குச் செய்வது போலாகும் . குழந்தைகள் கால தாமதமாகப் பேச ஆரம்பித்தால் சொல்லாற்றல் மிக்க குழந்தைகளாக வளரும். கணவன் மனைவி தூங்கும்போது இருவருக்கும் இடையில் குழந்தையைப் படுக்க வைக்கக் கூடாது. ஏனென்றால் நிதானம் இல்லாமல் தூங்கும்போது அவர்கள் குழந்தையின் மேல் கை கால்களைப் போட்டுவிடுவர் என்று நம்புகின்றனர்.*

சிறுகுழந்தைகளைத் தூக்கத் தெரியாமல் தூக்கினால் (உரம்) உறை விழும் என்று நம்புகின்றனர். அதனால் குழந்தையை முறத்தில் போட்டுப் புடைப்பர். அல்லது மாமன் வேட்டியில் குழந்தையைப் போட்டு இரண்டு முனைகளிலும் அம்மா, மாமா அல்லது வேறு யாராவது பிடித்து உருட்டுவார்கள். இப்படி ஐந்து அல்லது ஏழு முறை செய்தால் உரம் (உறை) போய்விடும் என்று நம்புகின்றனர்.

சிறு குழந்தை தும்மினால் தாய் தலையைத் தட்டிவிட்டு 'நூறு' என்று கூறுவார்கள். இந்த நம்பிக்கைகள் குழந்தைக்கு நீர் பிடித்துக் கொண்ட நிலையில் இவ்வாறாக சொல்லியிருக்க வேண்டும். ஆனால் அதே குழந்தை பெரியவராக ஆன நிலையில் இருவர் பேசிக்கொள்ளும்போது தும்மினால் நல்லது நடக்கும் அல்லது கெட்டது நடக்கும்என்று நம்புகின்றனர். சாப்பிட்ட பின்னர் கையைக் கழுவிய பிறகு துடைக்க வேண்டும். துடைக்காமல் உதறக்கூடாது அப்படி உதறினால் குடும்பம் குலைந்து விடும் என்கின்றனர். இதன் காரணம் சாப்பிட்டவுடன் குழந்தை கைகளைக் கன்னத்தில் வைத்தால் கையில் உள்ள காரத்தன்மை எரிச்சலை ஏற்படுத்தும் என்ற நோக்கத்தில் குழந்தைக்குச் சொல்லியிருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது.

**கண்ணேறு குறித்த நம்பிக்கைகள்**

கண்திருஷ்டி கழித்தல் என்று ஒரு நம்பிக்கை இன்றும் கிராமத்து மக்களிடம் காணப்படுகிறது. மனிதன் பார்க்கும் பார்வையில் ஒருவனை அழித்துவிடும் அளவிற்குச் சிலர் பார்வை அமைந்துவிடும். செழிப்பான பயிரைக் கண்டு சிலர் கண் வைப்பார்கள் என்று எண்ணி ஒரு கம்பை நட்டு அதன் மேல் ஒரு கரும்புள்ளை செம்புள்ளி குத்தி பானையைக் கவிழ்த்து நடுவார்கள். சிலர் சோளக்கட்டு பொம்மைகளைச் செய்து வைப்பார்கள். சிலர் வேப்பங்குச்சியை இலையுடன் நட்டு வைப்பார்கள். இவ்வாறு வயலில் வைப்பதனால் கண் திருஷ்டி உடையவர்களின் பார்வை பொம்மைகள் மீதும் பானைகள் மீதும் பட்டால் பயிரைப் பார்க்க

முடியாமல் மனதைத் திசை திருப்பக் கூடும் என்ற நம்பிக்கையில் செய்கின்றனர்.

மேலும் மனிதன் போன்று உருவம் செய்து வயலில் வைப்பார்கள். இதுவும் ஒருவகையான நம்பிக்கை தான். திருடன் வயலில் இருக்கும் பொருட்களைத் திருட வருவான் அப்போது இந்த வைக்கோல் பொம்மை மனிதன் போல் தெரிவதால் யாரோ வயலில் ஆள் இருப்பதாக நினைத்து ஓடிவிடுவான். அப்பொழுது பயிரும் பொருளும் காக்கப்படுவதாக நம்புகின்றனர்.

குழந்தைகளுக்குக் கண்ணேறு படக்கூடாது என்பதற்காகக் கையில் கருப்பு வளையலும், கழுத்தில் கருப்பு மணியும் கன்னத்தில் கருப்புப் பொட்டும் வைக்கின்றனர். சிறு குழந்தைகள் பார்ப்பதற்கு அழகாகவும், மென்மையாகவும் இருப்பதால் அவர்களைப் பார்க்க வருவோரின் பார்வை குழந்தைக்குப் பட்டுக் குழந்தை நோய்வாய்படக்கூடும் என்ற எண்ணத்தில் அவர்களிடம் இருந்து தன் குழந்தையைக் காப்பாற்ற இவ்விதமான நம்பிக்கைகளைப் பின்பற்றுகின்றனர். மேலும் கண்திருஷ்டியைக் கழிக்க செவ்வாய்க் கிழமைகளில் சுத்திப் போடுகின்றனர். அதாவது சந்தேகிக்கப்படும் நபரின் காலடி மண்ணை எடுத்து உப்பு, மிளகாய், மூன்றையும் சேர்த்து குழந்தையின் தலையை மூன்றுமுறை சுற்றி நெருப்பில் போடவேண்டும். அல்லது மண்சட்டியில் இதைப்போல் செய்து புகையைக் குழந்தைக்குப் பிடிப்பதால் கண் திருஷ்டி கழியும் என்று நம்புகின்றனர்.

புதிதாக வீடு கட்டுபவர்கள் கண்திருஷ்டி பொம்மை, அல்லது பூசணிக்காய் கட்டி வைக்கிறார்கள். வியாபாரிகள் தங்கள் கடையின் முன்னே ‘என்னைப்பார் சிரி’ என்னும் தொடரை எழுதி வைக்கின்றனர். நிலைப்படியில் சிலர் கழுதைப் படத்தை வைத்து ‘என்னைப் பார் யோகம் வரும்’ என்று எழுதி வைக்கிறார்கள். புதிய வீடு கட்டுபவர்கள் வைக்கோலால் பொம்மை செய்து அதாவது விகாரமாக செய்து மாட்டி

*வைக்கின்றனர். இவ்விதமான கண்திருஷ்டியில் இருந்து தன் உடைமைகளைக் காக்க முடியும் என்ற நம்பிக்கையில் செய்கின்றனர்.*

*திருமணமான மணமக்கள் வீட்டிற்குள் வரும்போது தாம்பாளத்தில் மஞ்சள் தண்ணீர் வைத்து அதில் குங்குமம், சூடம் ஏற்றி ஆரத்தி எடுத்து கண்திருஷ்டி கழிக்கின்றனர். அப்போது ஆலாத்துபவர்கள்,*

**“பேய்க் கண்ணு பிசாசுக் கண்ணு**
**நாய்க் கண்ணு நரிக்கண்ணு**
**வந்தவங்க கண்ணு போனவங்க கண்ணு**
**தாய் கண்ணு தகப்பன் கண்ணு**
**தாய் கூடப் பிறந்த மாமன் கண்ணு**
**அந்தி கண்ணு சந்திக் கண்ணு**
**அண்ணங் கண்ணு தம்பி கண்ணு**
**நல்லக் கண்ணு கெட்டக் கண்ணு**
**எல்லாக் கண்ணும் போகட்டும்**
**நாலுமுக்கு பிடி. . . பிடி. . . சுடு. . . சுடு”**

*(வ. தனவள்ளி)*

*என்று தலையைச் சுற்றி வீட்டின் வாசலில் கொட்டிச் சூடத்தை எரிய விட்டுக் கண்திருஷ்டி கழித்துப் பின் மணமக்களை வீட்டுக்குள் அழைக்கின்றனர். இதுவும் நாட்டுப்புற மக்களால் இன்றும் பின்பற்றப்படுகின்றதொரு வழக்கமாகும்.*

**விலங்குகள் குறித்த நம்பிக்கைகள்**

*நரி முகத்தில் விழித்து விட்டுச் சென்றால் நல்லது நடக்கும் என்ற இம்மக்கள் நம்புகின்றனர். நரி காட்டுப்பகுதியில் வசிக்கக்கூடியது. வீட்டை விட்டு வெளியில் செல்பவர்கள் பலதூரம் சென்ற பிறகு நரி பார்த்துப் பயம் வந்து பின் வீட்டிற்கு வந்துவிடக் கூடாது என்பதற்காக நரி முகத்தில் விழித்தால் நல்லது என்கின்றனர்.*

நாய் முகத்தில் விழித்து விட்டுச் சென்றால் போன காரியம் முடிவடையாது. ஏனென்றால் நாயைப்போல் அலைந்து திரிந்து கொண்டு இருக்க வேண்டும். காரியம் கைகூடாது என்று நம்புகின்றனர். பூனை இடமிருந்து வலமாகச் சென்றால் தீமை நடக்கும், வலமிருந்து இடமாகச் சென்றால் நன்மை நடக்கும் என்றும், கழுதைகள் காது நெட்டுக்குத்தாய் நிற்கு மழை வரும், இப்பகுதியில் உள்ள மக்கள் வீட்டைச் சுற்றிப் பூச்சி மருந்து போட்டால், பூச்சி, எறும்பு, வண்டுகள் வராது என்றும், உப்பை வீட்டைச் சுற்றிப் போட்டால் உப்பினைத் தாண்டி நாகம் போன்ற பாம்பினங்கள் வராது என்றும் நம்புகின்றனர்.

நரிப்பல், சிங்கப்பல் இவைகளில் தாயத்து செய்து கழுத்தில் அணிந்து கொண்டால் தன்னைத் தீண்டவரும் கெட்ட ஆவிகளில் இருந்து விடுபடலாம் என்று நம்புகின்றனர். பூனை குறுக்கிட்டால் போன காரியம் தடைபடும் ஆகையால் வீட்டை விட்டுப் போனவர்கள் மீண்டும் வீட்டுக்கு வந்து கொஞ்சம் தண்ணீர் குடித்துவிட்டுச் சற்றுத் தாமதமாக செல்கின்றனர்.

வீட்டில் ஏதாவது ஓரிடத்தில் பல்லி ஒலி எழுப்பினால் இறந்துபோன அவ்வீட்டின் முன்னோர்கள் வந்து நினைவுபடுத்துகின்றனர் என்றும் ஒரு செயலை எண்ணிக் கொண்டோ அல்லது அச்செயல் குறித்துக் கவலையுறும்போதோ பல்லி ஒலி எழுப்பினால் நல்லது நடக்கும் என்பதையும், ஒலி எழுப்பும் திசையை வைத்து நல்லது கெட்டது என நம்புகின்றனர். இதனைக் ‘கெவிளி அடித்தல்’ என்றும், ‘கெவிளி சொல்லுதல்’ என்றும் கூறுவர். பல்லி தலையில் விழுந்தால் உடனே தலை குளித்துவிட்டு அருகில் இருக்கும் கோயிலுக்குச் சென்று தன் பெயரில் அர்ச்சனை செய்து தனக்கு நேர இருக்கும் துன்பத்தில் இருந்து காக்க வேண்டும் என்று வேண்டிக் கொள்கின்றனர்.

**பறவைகள் பற்றிய நம்பிக்கைகள்**

*காகம் வீட்டிற்குள் எலி எழுப்புதல் கூடாது அவ்வாறு ஒலி எழுப்பினால் அன்றைய தினம் விருந்தினர் வருவர் அல்லது இறப்பு செய்தி வரும் என்று முன்கூட்டியே அறிவிப்பதாக இன்றளவும் நம்புகின்றனர். காகம் பறந்துவரும்போது தன் தலையில் இறகு பட்டுவிட்டால் வீட்டிற்கு ஆகாது என்றும் நம்புகின்றனர்.*

*இரவு நேரம் அல்லது விடியற்பொழுதில் வீட்டின் அருகில் ஆந்தை ஒலி எழுப்பினால் குடும்பத்திற்குக் கெட்ட நேரம் நெருங்குவதாகவும், ஆந்தை வீட்டிற்குள் புகுந்து விட்டால் அவ்வீட்டில் வாழ்ந்தால் நோய்களும் வறுமையும் தம்மைத் தொடர்ந்து வரும் என்று கருதி அந்த வீட்டையே மாற்றி விடுகின்ற பழக்கமும் உள்ளது.*

*வீட்டிற்குள் வௌவால் இருந்தால் குடும்பம் சீரழியும் என்று நம்புகின்றனர். இதன் நோக்கம் வீட்டில் வௌவால் இருந்தால் அதன் கழிவுகளால் துர்நாற்றம் வீசும். அதனால் அதனை வீட்டை விட்டுத் துரத்த வேண்டும் என்ற நோக்கத்தினால் எழுந்த நம்பிக்கையாகும்.*

*குருவி, காகம், குழவி போன்றவற்றின் கூடுகளை அழிக்கக் கூடாது. அழித்தால் பாவம், தான் குடியிருக்கும் வீட்டையும் கர்ப்பமாக இருக்கும் பெண்ணின் குழந்தையையும் அழிப்பதற்குச் சமம் என்று நம்புகின்றனர்.*

*கருட தரிசனம் ஞாயிற்றுக் கிழமைகளில் பார்த்தால் நோய் தீரும். திங்கள், செவ்வாய் கிழமைகளில் தரிசித்தால் அழகு சேர்ந்து கஷ்டம் நீங்கும் என்று நம்புகின்றனர்.*

**பேய், பிசாசு, பில்லி, சூனியம் குறித்த நம்பிக்கைகள்**

*இன்றைய அறிவியல் வளர்ச்சியில் பேய் பிசாசுகள் போன்றவை இருக்கிறதோ இல்லையோ ஆனால் அவற்றைப் பற்றிய நம்பிக்கைகள் நாட்டுப்புறத்து மக்களிடம் அதிகமாகக் காணப்படுகின்றன.*

*ஒருவனுக்குத் திடீர் என்று நோய் வந்துவிட்டால் ஏதோ குறை வந்துவிட்டது என்ன குறையோ என்று கருதுகின்றனர். இறந்தவர்கள்*

ஆவிகளாகவும், பேய்களாகவும் உலாவுவர் என்ற கருத்து நாட்டுப்புற மக்களிடையே ஆணித்தரமாகப் பதிந்துள்ளது. மேலும் விபத்தில் இறந்தவர்கள் தற்கொலை செய்து கொண்டவர்கள், கொலை செய்யப்பட்டு இறப்பவர்கள் மற்றும் கர்ப்பிணிப் பெண்கள் இறந்தால் அவர்கள் பேயாகவும், ஆவிகளாகவும் அலைவர் என்று நம்புகின்றனர்.

செவ்வாய், வெள்ளி வீட்டை விட்டுச் செல்லும் கர்ப்பிணிப் பெண்கள், பூப்படைந்த பெண்கள், கைக்குழந்தை உள்ள பெண்கள் வெளியில் செல்லும்போது தன் தலையில் வேப்பிலை வைத்துச் செல்வார்கள். இதன்மூலம் பேய், பிசாசு அண்டாது என்றும், குழந்தை பிறந்த வீட்டின் வாசலில் முன்பாக வேப்பிலை செருகினால் வீட்டையும் வீட்டில் உள்ளவர்களையும் பேய் பிசாசு நெருங்காது என்று நம்புகின்றனர்.

நடுப்பகலில் அல்லது இரவு நேரங்களில் கன்னிப் பெண்கள் மல்லிகைப்பூ வைத்துச் சென்றால் பேய் பிசாசு தீண்டும். மாமிச உணவுகள், வாழைப்பழம், வடை, கொழுக்கட்டை இவைகளை எடுத்துச் செல்லும்போது கரித்துண்டு அல்லது இரும்பு வைத்து எடுத்துச் செல்ல வேண்டும். அவ்வாறு எடுத்துச் செல்லவில்லை என்றால் பேய், பிசாசுகள் பின்தொடர்ந்து வரும், தன்னைத் தீண்டக் கூடும் என்று நம்புகின்றனர்.

பில்லி, சூனியம், செய்வினை போன்றவற்றைச் செய்கிறார்கள். யாருக்குச் செய்வினை செய்ய வேண்டுமோ அவர்களின் நகத்தைம், கழித்த தலைமுடியையும் வைத்து மந்திரித்து விட்டு எல்லையில் போட்டுவிட்டால் குடி நாசமாகிவிடும் என்று நாட்டுப்புறத்து மக்கள் இன்றும் நம்புகிறார்கள். அதேபோல் தகடு வைத்தல், ‘திருநீறுமந்திரித்தல்’, எலும்பிச்சைப்பழம் மந்திரித்தல் போன்ற பொருட்களிலும் மந்திர்த்து எதிராளியைப் பழிவாங்குகின்றனர். கன்னிப்பெண்களின் தீட்டுச் சேலை இநத மாதிரியான வசியங்களுக்குப் பயன்படுவதாகவும் நம்புகிறார்கள். இவற்றினால் மந்திரித்து வைக்கப்பட்டவர்களுக்கு நோய் ஏற்பட்டு இறக்கும் தருவாயும் ஏற்படுகிறது.

பலநாட்கள் நோயினால் கஷ்டப்பட்டு எந்த மருந்துக்கும் நோய் கட்டுப்படாத நிலையில் மக்கள் தங்களுக்கு வேண்டாதவர்கள் ஏதோ மந்திரித்து வைத்துள்ளனர், அதை நீக்கினால் நோய் குணமாகும் என்று எண்ணி மந்திரவாதியின் உதவியை நாடுகிறார்கள். மந்திரவாதி அவருக்குள்ள மந்திரச் சக்தியின் மூலம் நோய்வாய்ப்பட்டோரின் நோய்க்குக் காரணத்தை அறிந்து அதை நீக்கும் பொருட்டு மந்திரசக்தி மூலம் தகடு வைத்ததை எடுப்பது, எலுமிச்சம்பழம், பில்லி, சூனியம், மந்திரித்து வைத்ததை எடுப்பது போன்ற செய்கையால் நோயைக் குணப்படுத்துகிறார்.

இவ்வாறாக நாட்டுப்புற மக்களிடம் செய்வனையால் ஒருவனைக் சொல்லவும் முடியும், காப்பாற்றவும் முடியும் என்று எண்ணி இப்பகுதி மக்கள் அனைத்து சாதியினரும் பேய், பிசாசு, பில்லி, சூனியம் இவற்றின் அதிக நம்பிக்கைகள் வைத்துள்ளனர் என்பது களப்பகுதியின் போது நன்கு தெரிந்து கொள்ள முடிந்தது.

**மழை குறித்த நம்பிக்கைகள்**

மழை பொழியாமல் கடுமையான வறட்சி ஏற்பட்டிருக்கும் நிலையில் ‘கொடும்பாவி’ செய்து எரிக்கின்றனர். இதனை வைக்கோல் கொண்டு உருவம் செய்து தெருத்தெருவாக இழுத்துச் செல்வார்கள். அப்போது அனைவர் வீட்டிலும் சோறு, குழம்பு வாங்கி வருவார்கள். பன்னர் ஊர் முச்சந்தியில் அந்த கொடும்பாவியை எரித்து அனைவரும் ஒப்பாரி வைத்து அழுவார்கள். பிறகு சோறு, குழம்பு ஒன்றாக சேர்த்து பிசைந்து உருண்டையாக உருட்டி அனைவருக்கும் கொடுத்து உண்பர். மேலும் சுடலை கொளுத்தினால் மழைவரும் என்று நம்புகின்றனர்.

ஏர் உழும் கலப்பை நேராக நிமிர்த்தி வானத்தை நோக்கிப் பிடித்தால் மழை பொழியாது பஞ்சம் ஏற்படும் என்ற நம்புகின்றனர். தட்டான் தாழ்வாகப் பறந்தால் மழைவரும் என்றும், தவளைகள் இரவு நேரத்தில் கத்தினால் மழை வரும் என்றும், ஆட்டுக்குட்டிகள் ஒன்றையொன்று

நெருங்கியும், உரசிக்கொண்டும் இருந்தால் மழைவரும். ஈக்கள் அதிகமாக மொய்த்தால் மழை வரும் என்று இப்பகுதி மக்கள் நம்புகின்றனர்.

எறும்பு முட்டை கொண்டு திட்டை ஏறினால் மழைவரும். இதன் உண்மைத் தன்மை மழைக்காலத்தில் தனக்கு உணவு வேண்டும் என்று எண்ணி எறும்பு சிறுகச் சிறுக உணவு சேகரித்து வைத்துக் கொள்ளும். தன் இடத்தில் மழை பொழிந்து நம் உயிருக்கும், உணவுக்கும் பாதிப்பு வந்துவிடும் என்று எண்ணி அதனை மேடான பகுதிக்குச் செல்லும். இதனைப் பார்க்கும் விவசாயி ஒன்றிரண்டு நாட்களில் மழை வரும் என்று நம்புகின்றனர்.

மழை பெய்யவில்லையென்று செய்யப்படும் சடங்குகள் முடிந்தபின்பு மழை அதிகமாகப் பெய்தபோது அதனை நிறுத்துவதற்கான சடங்கும் செய்யப்படுகின்றது. மழை பெய்து கொண்டிருக்கும்போது எரியும் கொள்ளிக்கட்டையைக் கொண்டு வான்நோக்கிக் காட்டுவது இன்றும் நாட்டுப்புற மக்களின் நம்பிக்கையாக உள்ளது. இச்செயலால் மழை சூடு பொறுக்கமுடியாமல் மழையை நிறுத்திக் கொள்வதாகக் கூறப்படுகின்றது.

**வீடு பற்றிய நம்பிக்கைகள்**

வீட்டின் எதிரே வேப்பமரம் இருப்பது நல்லது. இதன் காற்று உடல் நலத்திற்கு நல்லது. மேலும் மருத்துவக் குணம் உடையது. இம்மரத்திற்குப் பேய், பிசாசு அண்டாது என்றும் நம்புகின்றனர். இம்மரத்தை வீடு கட்டுவதற்கும் பயன்படுத்துகின்றனர். இம்மரம் கசப்புத் தன்மை உடையதால் கரையான் அரிக்காது என்றும் நம்புகின்றனர்.

வீட்டின் எதிரே முருங்கை மரமும், பஞ்சு மரமும் இருந்தால் வீட்டுக்கு ஆகாது என்று மக்கள்நம்புகின்றனர். முருங்கை இலையைக் கம்பளிப்பூச்சி உணவாக உட்கொள்ளும். இவை மரத்திலேயே தங்கிவிடும். இப்பூச்சி மனிதர்களின் உடலில் தீண்டினால் அரிப்பு ஏற்படும். பின்னர்

*தடித்துவிடும். பிறகு வீட்டுக்குள் வரநேரிடும் அது வீட்டில் உள்ளவர்களுக்கு ஆபத்தாக முடியும் என்று இம்மக்கள் நம்புகின்றனர்.*

*வீட்டிற்கு முன்பாக வாயிற்படியில் நெற்கதிர்களைக் கட்டி வைப்பர். இதன் காரணம் தான் செல்வந்தர் என்று காட்டிக் கொள்வதற்கும், குருவிகள் அந்த நெற்கதிர்களைத் தின்ன வந்து அங்கேயே கூடுகட்டி நிரந்தரமாக தங்கிவிடும். அவ்வாறு குருவிகள் வீட்டில் தங்கிவிட்டால் குடும்பம் தானிய வளங்களுடன் செழிப்பாக இருக்கும் என்று நம்புகின்றனர்.*

*வீடு குடிபோகும்போது பசுமாட்டை வைத்து பூசை செய்வர். பசு மாட்டின் கோமியத்தை வீட்டில் தெளிப்பதாலும் வீடு புனிதம் பெறும் என்ற நம்பிக்கையில் இவ்விதமான வழக்கம் உள்ளது.*

*வீடு கட்டும் இடத்தில் கோவில் குத்து அல்லது தெருகுத்து இருந்தால் அந்த வீட்டிற்குப் பல தொல்லைகள் வரும். இதிலிருந்து விடுபம முன் பிள்ளையார் சிலை அல்லது சாமி புகைப்படம் வைத்து வழிபடுவது நல்லது. மேலும் வீட்டின் எதிரில் வேப்பமரம் வைத்து வழிபடுவது நல்லது என்று நம்புகின்றனர்.*

*தெற்குப் பார்த்த வாயிற்படி வைத்து வீடு கட்டுவதனால் மழைக்காலத்தில் குளிருக்கும், வெயில் காலத்தில் வெப்பத்திற்கும் வீட்டைப் பாதிக்காமல் காப்பாற்றிக் கொள்ள முடியும் என்ற நோக்கத்தினால் கட்டினர். வீடுகளில் அடுப்பு அக்னி மூலையில் தான் இருக்க வேண்டும். அடுப்பு எரிய வைப்பவர்கள் கிழக்கு முகமாக இருந்து எரிக்க வேண்டும். சமையல் அறையும் பூசை அறையும் எதிரெதிராக இருக்க வேண்டும். அப்படி இருப்பதனால் வீட்டிற்கு நடக்கும் கெட்ட நிகழ்வுகள் துன்பங்கள் அனைத்தையும் அக்னி அழித்துவிடும் என்று நம்புகின்றனர்.*

**மருத்துவத்தில் நம்பிக்கைகள்**

*நாட்டுப்புற மருத்துவம் மிகப் பழமையானது. நாட்டுப்புற மக்களால் காலம் காலமாகப் பின்பற்றப்பட்டு வருவது. இவை வாய்மொழியாகப்*

பரவி வருகின்றன. தனக்கு ஏற்பட்ட நோய்களைத் தீர்த்தக் கொள்ள மூலிகைகள், செடி, கொடிகள், தாதுப் பொருட்கள், மிருகங்களின் பொருட்கள் முதலியவற்றிலிருந்து மருந்துகளைத் தயார் செய்து கொண்டனர். இதுவே நாட்டுப்புற இயற்கை மருத்துவம் ஆகும். அம்மை நோயால் பாதிக்கப்பட்டவர்களை 'அம்மா போட்டிருக்கு' அல்லது 'முத்து போட்டிருக்கு' போன்ற வார்த்தைகளையே அவர்கள் பயன்படுத்துவதைக் காணமுடிகிறது. மாரியம்மன் மீது உள்ள பயபக்தியும் நம்பிக்கையுமே இதற்குக் காரணமாகும்.

அம்மை போட்டிருக்கும் வீட்டின் முன்னால் வேப்பிலை செருகி வைத்திருப்பார்கள். இந்நோய் உடையோர் பாய் போட்டுப் படுப்பதில்லை. ஒரு துணியைக் கீழே போட்டுப் படுக்கின்றனர். அவர்கள் தலைமாட்டில் வேப்பிலைகள் வைத்திருப்பர். அவர்களுக்கு பழ வகைகள் அதிகம் கொடுப்பார்கள். பழங்களை மிகவும் குளிர்ச்சியுடையது என்பதற்காகக் கொடுக்கின்றனர்.

இந்நோயால் பாதிக்கப்பட்டவர்களுக்குக் குறவால் (கொறவை) மீன் உயிருடன் வாங்கித் தண்ணீரில் போட்டு அம்மை நோய் உள்ளவர்கள் பார்ப்பர். பின்னர் அதனைச் சமைத்து உண்கின்றனர்.

விஷக்கடிகள் ஏதாவது கடித்திருக்கும் என்று சந்தேகம் இருந்தால் அவர்கள் வாயில் மிளகாயைப் போட்டு மென்று தின்றால் விஷக்கடியா என்பது தெரிந்துவிடும். அதாவது மிளகாய்க் காரம் தெரிந்தால் விஷம் இல்லை என்றும், மிளகாய் காரமில்லாமல் இனிப்பதுபோல் உணர்ந்தால் விஷம் ஏறிவிட்டது என்றும் நம்புகின்றனர்.

உடம்பில் கட்டியோ அல்லது கொப்பளமோஏதாவது இருந்தால் மஞ்சளையும், வேப்பிலைகளையும் அரைத்து அதன் மேல் தடவினால் கட்டியோ கொப்பளமோ உடைந்துவிடும் என்கின்றனர். கை, கால்களில் வெட்டுக்காயம் இருந்து இரத்தப்போக்கு வந்து கொண்டே இருந்தாபல் அந்த இடத்தில் காப்பித்தூள் வைத்தால் இரத்தம் வருவது நின்று விடும் என்கின்றனர்.

இருமல், சளி இருந்தால் பாலில் மஞ்சள் தூள், பூண்டு இவற்றைக் கொண்டு நன்கு காய்ச்சி வெதுவான சூட்டில் அருந்தினால் இத்தொல்லை நீங்கிவிடும் என்றும் குழந்தைகளுக்குச் சளிஇருந்தால் வெற்றிலையில் தேங்காய் எண்ணெய் தடவி விளக்கில் சூடேற்றி, நெற்றியிலும், நெஞ்சு குழிகளிலும் ஒட்டி வைப்பர்.

**நேர்த்திக்கடன்**

தெய்வத்திற்கு வேண்டிக் கொண்டு நேர்த்திக்கடன்களை நிறைவேற்றுவது நம்பிக்கை மருத்துவத்தின் அடிப்படையில் தோன்றியது ஆகும். தீ மிதிப்பதனால் அம்மை நோய் தாக்காது மாரியம்மனின் சினத்திற்கு ஆளாகாமலிருக்கலாம் என்றும், மாவிளக்குப் போடுவதினால் வயிற்றுவலி, தலைவலி, நெஞ்சுவலி, உயிர்ச்சேதம் ஆகியவற்றை நீக்கும் என்றும் மக்கள் நம்புகின்றனர். தனக்கும் தன் குடும்பத்தினருக்கும் எவ்விதமான துன்பம் வரக்கூடாது என்பதற்காக காவடிகள் எடுக்கின்றனர். முடிகாணிக்கை செலுத்துகிறேன் கஞ்சி, மோர் ஊற்றுகிறேன், அன்னதானம்செய்கிறேன் என்று வேண்டிக் கொள்கின்றனர். இந்நம்பிக்கையின் அடிப்படையில் நோய் நீங்கியவுடன் வரும் திருவிழாவின் போது இவ்வாறான நேர்த்திக்கடன்களைச் செய்கின்றனர்.

**வேண்டுதல்களை நிறைவேற்றுதல்**

வேண்டுதல்களை நிறைவேற்றுவதன் மூலம் நோய்களிலிருந்து நீங்கவும், இனி இம்மாதிரியான நோய்கள் தன்னைத் தாக்கக்கூடாது என்றும் வேண்டுதல்கள் நிறைவேற்றப்படுகின்றன. கை, கால், கண் இவற்றின் வலி இருந்தால் அம்மனுக்குக் கை, கால், கண் சாத்துவதாக வேண்டிக்கொண்டு அதனை நிறைவேற்றுகின்றனர்.

நாக்கில் செடல் குத்திக் கொள்வதன்மூலம் நான்கு பிறண்டு நன்கு வார்த்தைகள் பேசவரும் என்றும் பேசாதவர்கள் பேசுவார்கள் என்ற

நம்பிக்கையும் உள்ளது. ஆனால் இப்போது யார் வேண்டுமானாலும் நாவில் செடல் குத்திக் கொள்கின்றனர்.

**வேளாண்மை குறித்த நம்பிக்கைகள்**

ஒரு நாட்டின் முதுகெலும்பாகத் திகழ்வது விவசாயம். இப்பொருளாதாரத்தை வைத்துத்தான் ஒரு நாட்டின் வளர்ச்சியையும் வீழ்ச்சியையும் கணக்கிட முடியும். விவசாயத்தை நம்பி வாழ்கின்ற கிராமத்து மக்கள் அதில் வரும் வருமானத்தைக் கொண்டு ஒரு வருடத்தின் வாழ்வாதாரத்தை வகுத்துக் கொள்கின்றனர். இவ்வாறு வாழ்வாதாரத்திற்கு உயிர்நாடியாக இருக்கக்கூடிய விவசாயத்தில் அதிக மகசூல் கிடைக்கவும் இயற்கையில் இருந்து பாதுகாத்து அறுவடை செய்யவும் உயிர்களைக் காக்கவும் பலவிதமான நம்பிக்கைகளைக் கொண்டுள்ளனர்.

உற்பத்திப் பொருள்களை முதலில் கன்னிப்பெண்களுக்கும் குழந்தைப்பேறுடைய பெண்களுக்கும் கொடுத்தால் அவர்களுடைய வளமைச்சக்தி அவர்களால் செய்யப்படும் பயிர்த்தொழிலின் செயல்களில் சென்றடைந்து நல்ல மகசூல் கிடைக்கும் என்ற நம்பிக்கை மக்களிடத்தில் தோன்றியுள்ளது.

தமிழகம் மட்டுமல்லாமல் உலகமெங்கும் பூமியைப் பெண்ணாகக் கருதுவதுடன் வழிபடுவதும் வளமைச் சடங்குகளுக்குப் பெண்களை முன்னிலைப்படுத்துவதையும் காணமுடிகிறது. இப்பகுதி மக்களைப் பொறுத்தமட்டிலும் பயிர்த்தொழிலில் விதைத்தலின்போதும் சாக்கில் விதைநெல் கட்டுவதற்கும் பெண்களைப் பயன்படுத்துகின்றனர்.

முதல்நாள் நடவு நடும்போது சனிமூலையில் பிள்ளையார் பிடித்து வைத்து, வெற்றிலை பாக்கு வைத்து தீபம் ஏற்றிப் பொட்டுக்கடலைச் சர்க்கரை வைத்துத் தெய்வத்தை வழிபடுகின்றனர். இதன் பின்னர் நடுவதற்குத்தொடங்குகின்றனர்.

முதல் நாள் நடவு வயலுக்கு உரிமையானவர்கள் நாற்றை எடுத்து நட்டுத்தொடங்கி வைப்பார்கள். இல்லையென்றால் அதிக பிள்ளைகளைப்

*பெற்ற தாய்மார்களை முதல்நாள் நடவு நடச் சொல்வர். அதிக பிள்ளைகளைப்பெற்றது போலத் தன் வயலும்அதிக மகசூல் கொடுக்க வேண்டும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் தான்இந்த நம்பிக்கை உருவாகி இருக்கக் கூடும் என்கின்றனர்.*

*நிலத்தில் முதன்முதலாக அறுவடை தொடங்கும்போது சனி மூலையில் தான் தொடங்கவேண்டும் என்ற நம்பிக்கை இப்பகுதி மக்களிடம் உள்ளது. வீட்டில் உள்ள பெரியோர்கள் அல்லது கைராசிக்காரர்கள் அறுவடைக்கு முந்திய நாள் ஒரு கைபிடி கதிர்களை அறுத்துவிடுவர். மறுநாள் வேலைக்கு வந்தவர்கள் அறுவடையைத் தொடங்குவார்கள்.*

*அறுவடை செய்யும்போது கழனிகளில் வேரை விட்டுவிட்டுச் செடியை மட்டும்அறுக்க வேண்டும். அப்படி வேர்ப்பகுதி கழனியில் இருப்பதனால் வேரில் சத்துக்கள் சேமித்து வைக்கப்பட்டிருப்பதால் கழனிக்கு நல்லது என்கின்றனர். மேலும் மாட்டின் சாணத்தையும், குப்பைகளையும், கழனியில் கொட்டுகின்றனர். இதனால் பயிர்கள் சத்தானதாகவும், அதிக மகசூலைத் தருகின்றன என்றும் இப்பகுதி மக்கள் நம்பிக்கை அடைகின்றனர்.*

**சகுனம் குறித்த நம்பிக்கைகள்**

*சகுனம் பார்க்கின்ற நம்பிக்கை உலக மக்கள் அனைவரிடமும் காணப்படுகிறது. சகுனம் என்பது நிகழக்கூடிய நன்மை, தீமைகளைச் சில குறியீடுகளின் வாயிலாக முன்னமே உணர்த்தக்கூடியது ஆகும். பண்டைய தமிழர்கள் இதனை ‘நிமித்தம்’ என்ற சொல்லால் அழைத்தனர். சகுனம் இரு வகைப்படும்.*

1. *நல்ல சகுனம்*
2. *கெட்ட சகுனம்*

**நல்ல சகுனம்**

*வீட்டை விட்டு வெளியே செல்லும்போது பசுமாடு எதிரில் வந்தால் நல்லது. அதாவது தெய்வத்தைப் பார்த்ததுபோல் இருக்கும் என்று நம்புகின்றனர். நல்ல குணம் உடைய இராசியான சுமங்கலிப் பெண்கள் எதிரில் வந்தால் நல்லது என்றும், அதிக பிள்ளைகளைப் பெற்று வாழ்ந்து வளம் கண்டவர் வந்தால் நல்லது என்றும், குழந்தையைப் பார்த்துவிட்டுச் செல்வது நல்லது என்றும் நம்புகின்றனர்.*

*பூக்கூடை, பழக்கூடை எதிரில் வந்தால் நல்லது என்றும், இவை தெய்வங்களுக்குப் படைக்கக்கூடிய பொருட்கள் என்பதனால் நம்புகின்றனர். இரட்டைப் பிராமணர் எதிரில் வந்தால் நல்லது, வண்ணார் அழுக்கு துணிமூட்டையைக் கொண்டு வந்தால் நல்லது என்றும் நம்புகின்றனர். சுமங்கலிப் பெண்கள் நிறைகுடம் ஏந்தித் தண்ணீர் கொண்டு வருவதும் நல்லது என்கின்றனர்.*

*சாமி ஊர்வலம், சவ ஊர்வலம் எதிரில் வருவது நல்லது. கழுதை கத்துவதைக் கேட்டல், நரி முகத்தில் விழித்தல், கருடனைப் பார்த்தல், இவையனைத்தும் நல்ல சகுனங்கள் என்று இப்பகுதி மக்கள் நம்புகின்றனர்.*

**கெட்ட சகுனம்**

*பூணூல் அணிந்த எந்த இனத்தவரும் ஒற்றை ஆளாக எதிரில் வரக்கூடாது. எருமை மாடு எதிரில் வரக்கூடாது. தண்ணீர் இல்லாமல் வெறும் குடத்தோடு எதிரில் வரக்கூடாது. திருமணம் ஆகாத கன்னிப் பெண்கள் எதிரில் வரக்கூடாது.*

*எண்ணெய் குடத்தை எதிரில் பார்த்தல் கூடாது. வீட்டை விட்டு வெளியே செல்லும்போது வீட்டின் நிலைப்படி தாழ்வாரம் இடித்தால் போகக்கூடாது. அப்படி போனால் போன காரியம் நிதானம் இல்லாமல் போகும். அதனால் அமர்ந்து தண்ணீர் குடித்துவிட்டு நிதானமாகப் போகவேண்டும். வீட்டை விட்டு வெளியில் போகும்போது பின்நின்று*

*அழைக்கக் கூடாது. போனகாரியம் வெற்றி பெறாது என்றும் நம்புகின்றனர்.*

**கனவு பற்றிய நம்பிக்கைகள்**

*பாம்பு கடிப்பது போல் கனவு கண்டு கடித்த இடத்தில் இரத்தம் வெளியாவதாகக் கண்டால் அவனைப் பிடித்த சனியன் விட்டது என்றும், பிற்காலத்தில் அவன் நன்றாக வாழ்வான் என்றும் நம்புகின்றனர். பாம்பு கடிக்காமல் துரத்திக் கொண்டே சென்றால் சனியன் தொடங்கிவிட்டது என்றும், ஏதோ ஒரு வகையில் கெட்டது நடக்கப் போகிறது என்றும் நம்புகின்றனர்.*

*திருமணம் நடப்பதாக கனவு கண்டால் கெட்டது நடக்கும். பொதுவான நல்லது நடக்கும் என்று கண்டால் கெட்டது நடக்கும் என்று நம்புகின்றனர். பசுமாட்டைப் பார்ப்பது நல்லது. ஏனென்றால் பசுமாடு எல்லாவிதத்திலும் பயன்தரும். அதைப்போல் தங்கள் வாழ்வும் பயனுள்ளதாக அமையும் என்று நம்புகின்றனர்.*

*விடியற்காலையில் கனவு கண்டால் பலிக்கும் என்கின்றனர். கனவில் தெய்வத்தைப் பார்த்தாலும் அல்லது கோயிலுக்குப் போவது போல் கனவு கண்டால் கோயிலுக்குச் சென்று விளக்குப் போட்டுத் தெய்வத்தை வழிபடவேண்டும் என்கின்றனர். போலிஸ் கனவில் பார்த்தால் கெட்டது நடக்கும். மீன்களைப்பார்த்தால் கெட்டதுநடக்கும் என்று நம்புகின்றனர்.*

*கனவில் மலத்தைத் தொடுவதாகக் கண்டாலும் உப்பைக் கண்டாலும் செல்வம் பெருகும் என்று நம்புகின்றனர். சிறு குழந்தை கனவில் வந்து பேசினால் தெய்வம் வந்து பேசியது போல் நம்புகின்றனர். கனவு என்பது மனிதனின் உள்ளுணர்வை வெளிப்படுத்தும் ஒரு கருவியாகும் என்று இப்பகுதி மக்கள் கூறுகின்றனர்.*

**பழமொழிகளும் விடுகதைகளும் குறித்த நம்பிக்கைகள்**

*வாய்மொழி வழக்காற்றில் அதிகமான செல்வாக்கினைப் பெற்றிருப்பது பழமொழிகளும் விடுகதைகளும் ஆகும். பழமொழிகளும், விடுகதைகளும் மக்கள் சமுதாயத்தின் சிந்தனைப் போக்கினையும், வாழ்க்கைச் சூழலையும் பழக்க வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் வெளிப்படுத்தும் காரணிகளாக அமைந்துள்ளன. ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் வாழ்வியல் பண்பாட்டுக் கூறுகளையும், மொழி வளத்தினையும் அளவிட்டு நோக்குவதில் பெரும்பங்கினை ஏற்றுக் கொண்டிருப்பது பழமொழிகளும் விடுகதைகளும் ஆகும்.*

**பழமொழிகள்**

*பழமொழிகள் ஒரே மூச்சில் சொல்லக்கூடியதாக இருக்கவேண்டும். சிறந்த பொருள் தருவதாகச் செறிவுடன் இருத்தல் மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு விரும்பப்பட்டு அன்றாட வாழ்வில் எல்லோராலும் பயன்படுத்தப்படுகின்றன. பழமொழிகள் ஒன்றைச் சொல்லி மற்றொன்றை விளக்குவனவாக அமையும் பழமொழிகள் இயற்கைச் சூழலைப் பொறுத்தே அமைந்துள்ளன. இவை நேரடியாகப் பொருளை உணர்த்துவதாக அமைந்துள்ளன. இவை வாழ்க்கை அனுபவத்திலிருந்து சிக்கலைத் தீர்க்க உதவுகிறது. இவை அனுபவத்தின் பொக்கிஷங்கள் எனலாம்.*

**“தை பிறந்தால் வழி பிறக்கும்”**

*வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க முடியாமல் தை மாதம் அறுவடை முடிந்தபிறகு கடனைக் கொடுத்து விடுகிறேன் என்பார்கள். இதனையே தை பிறந்தால் வழி பிறக்கும் என்கின்றனர்.*

**“ஆடிப்பட்டம் தேடி விதை”**

*ஆடி மாதம் விதைக்கின்ற விதை நன்றாக முளைத்து மழையில் அழிந்துபோகாமல் காய் கனிகளைத் தரும் என்று கூறுகின்றனர்.*

**"வெளுத்ததெல்லாம் பால்"**

ஒருவர் காண்பதற்கு மிகவும் எளிமையானவராகவும், தூய்மையானவராகவும் இருப்பர். தங்களிடம் உண்மையானவர்கள் போல் நடித்து நம்மிடம்உள்ள செய்திகளை வாங்கிக் கொள்வர். அதனால் அவர்களை நம்பாதீர்கள் என்றும் வெளுத்ததெல்லாம்பால் என்று எண்ணி ஏமாந்துவிட்டேன் என்கின்றனர்.

**"கண்கெட்ட பிறகு சூரிய நமஸ்காரமா?"**

என்பது அதிகாலையில் சூரியஒளியை ஒரு வினாடி பார்த்தால் கண் நோய் தீரும் என்ற நம்பிக்கையில் எழுந்த பழமொழி ஆகும். இப்படிப்பட்ட சூரியனைக் கண் இல்லாதவர்கள் ஏன் வணங்க வேண்டும் என்று கூறுவதும், முடிந்த காரியத்தைப் பற்றி இனி பேசி என்னாகப்போகிறது என்ற கருத்தின் அடிப்படையில் கூறுகின்றனர்.

**"பொன் கிடைத்தாலும்புதன் கிடைக்காது"**

வாழ்க்கையில் எவ்வளவு பணம் பொருள் கிடைத்தாலும் புதனன்று குழந்தை பிறந்தாலும், பெண் பூப்பெய்தினாலும் நல்லது என்று கூறுகின்றனர். புதன்கிழமையன்று நல்ல காரியங்களைத் தொடங்கலாம் என்கின்றனர்.

**"கழுதைக்குத் தெரியுமா கற்பூர வாசனை"**

அறிவுபூர்வமாகப் புரிந்து செயல்படாதவர்களைப் பார்த்து இந்தப் பழமொழியை இப்பகுதி மக்கள் கூறுகின்றனர். பொதுவான ஒன்றின் தன்மையையும் அதன் சிறப்பு, பெருமை, இவற்றை அறிந்து செயல்பட வேண்டும்.

**"ஒரே கல்லில் இரண்டு மாங்காய்"**

ஒருவர் வேலையின் காரணமாக வேறொரு ஊருக்குச் செல்கிறார். அப்போது எதிர்பாராமல் மற்றொரு வேலையும் முடிந்து விடுகிறது. அதற்கு அவர் வீட்டில் வந்து ஒரே கல்லில் இரண்டு மாங்காய் அடித்துவிட்டேன் என்று மகிழ்ச்சியாகக் கூறுகின்றார்.

"குரைக்கின்ற நாய் கடிக்காது"

என்பது ஒருவருக்கும் பக்கத்து வீட்டிலுள்ளவர்களுக்கும் ஏதாவது பிரச்சனை என்றால் வாய் வார்த்தையாகவே பேசிக் கொள்வர். அப்போது குரைக்கின்ற நாய் கடிக்காது என்ற பழமொழியைப் பயன்படுத்துகின்றனர்.

**விடுகதைகள்**

மக்கள் சமுதாயத்தின் சிந்தனைப் போக்கினை வெளிப்படுத்தும் வகையில் படித்தவரும் படிக்காதவரும் சிறுவர்களும் பெரியவர்களும் வேடிக்கையாகவும் சிந்திக்கும் திறனை வளர்க்கவும், பொழுதுபோக்கிற்காகவும் இம்மக்களால் வாய்மொழியாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. மேலும் விடுகதைக்கு இம்மக்கள் 'புதிர்' என்ற சொல்லையும் பயன்படுத்துகின்றனர். அதாவது 'என்ன புதிர் போடுகிறார்?' என்று கேட்கிறார்கள். அதாவது ஒரு பொருளை மனதில் வைத்துக் கொண்டு எது எனக்கூறுவதே புதிர் அல்லது விடுகதை ஆகும்.

இப்பகுதி மக்களிடம் வழக்காறில் உள்ள விடுகதைகள்அவை உணர்த்தும் கருப்பொருள்கள் அடிப்படையிலும் வகைப்படுத்தியுள்ளன.

இயற்கைப் பொருள்கள் பற்றியும், தாவரங்கள் பற்றியும், உணவுப்பொருள், விலங்குகள், பறவைகள், உடல் உறுப்புகள், வாகனங்கள், பண்ட பாத்திரங்கள், மற்றும்பல்பொருள் சார்ந்த விடுகதைகள் இம்மக்களிடம் நிரம்ப உள்ளன எனலாம்.

1. ஏழை படுக்கும் பாயை எடுத்துச் சுருட்ட ஆளில்லை (பூமி)
2. பொழுது போனால் பூந்தோட்டம்- அது என்ன?
   (வானம்-நட்சத்திரம்)
3. கழுத்து உண்டு தலையில்லை
   கையுண்டு விரல் இல்லை அது என்ன? (சட்டை)
4. அட்டை ஆயிரம் கண்
   முட்டைக்கு மூன்று கண்
   நாவளத்த ராசாவுக்கு ஒரே கண் (சல்லடை, தேங்காய், ஊசி)

*5. உருச்ச குருவி ஊர்க்குப் போகுது*

*(தேங்காய்)*

*6. சிவப்பாய் இருப்பான்*
*தெருவில் நிற்பான்*
*திறந்த வாயை மூடமாட்டான் (தபால்பெட்டி)*

*7. கறுத்த பாறைக்கு வெளுத்த வேர்*

*(யானைத் தந்தம்)*

*8. அப்பா சொரியன்*
*அம்மா சடைச்சி*
*பிள்ளை சக்கரைக் கட்டி (பலாப்பழம்)*

*9. குள்ள மனிதன் குனிய வைத்தான்*

*(முள்)*

*10. பத்தாயிரம் பேரை ஒரு நிமிடத்தில் ஒன்றுசேர்ப்பது*

*(சீப்பு)*

*இதுபோன்று பலவகையான விடுகதைகள் இக்கள ஆய்வு மக்களிடம் நிரம்பக் காணப்படுகின்றன.*

**தொகுப்புரை**

*நம்பிக்கையின் தோற்றத்திற்கு மனிதனிடம் காணப்பட்டஅச்சம், அறியாமை, தன்னலப் பாதுகாப்பு உணர்வு எதையும் ஆய்ந்து சிந்தித்து நோக்காமல் தனக்கு முன்னே வாழ்ந்த பெரியவர்கள் பின்பற்றினார்கள். அதையே நாமும் பின்பற்றுதல் வேண்டும் என்ற மனப்போக்கு போன்றவைகளே அடிப்படைக் காரணங்களாக அமைந்துள்ளன. நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டுக் காலம் காலமாக ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குப் பரவி வருவதால் மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான அனைத்துப் பழக்க வழக்கங்களிலும் சடங்குகளிலும் வழிபாட்டு முறைகளிலும் முதன்மை பெற்றுள்ளன.*

நம்பிக்கைகளே மனித வாழ்வோடு வாழ்வாகப் பின்னிப் பிணைந்துள்ளதால் மனிதனின் வாழ்வு வேறு நம்பிக்கைகள் வேறு என்று பிரிக்க இயலாத நிலையே இப்பகுதி மக்களிடம் காணப்படுகின்றது. இவைகள் சமுதாயத்தால் மாற்றம் பெற்றிருக்கின்ற போதிலும் பழமையான நம்பிக்கைகளிலிருந்து விடுபடவில்லை எனலாம். மனித சமுதாயம் உள்ளவரையில் நம்பிக்கைகள் வாழ்ந்து கொண்டுதான் இருக்கும். மனிதனுக்கு இறப்பு உண்டென்றாலும் மனிதனால் உருவாக்கப்பட்ட பழமையான நம்பிக்கைகளுக்கு இறப்பு என்பது இல்லை என்று களஆய்வின்போது மக்கள் கூறுகின்றனர்.

# இயல் 5

## தமிழரின் பழக்க வழக்கங்கள் மரபுத் தொடர்ச்சி

*ஒரு காலத்தில் செய்யப்படும் செயல்கள் நன்மையுடனும், உண்மையுடனும் இருக்குமாயின் பின்வரும் தலைமுறையினரால் ஏற்றுக்கொள்ளப்பட்டு வழிவழியே கடைப்பிடித்து அச்சமுதாயத்தில் நிலைபெற்றுவிடச் செய்யும் தன்மையை மரபு என்கிறோம். சுருக்கமாகக் கூறின் பழமையைப் பேணுவது மரபாகும். இதனை நன்னூல்,*

**“எப்பொருள் எச்சொல்லின் எவ்வாறு உயர்ந்தோர்**
**செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே”**

*எனக் குறிப்பிடுகிறது. அதாவது உயர்ந்தோர், எந்த பொருளை எந்தச் சொல்லால் எந்த முறைப்படி வழங்கினார்களோ அதே முறைப்படி வழங்குதல் மரபாகும் என்கிறார் மு. வரதராசன் (1960:86).*

*ஏதேனும் ஒருமுறை உருவாகியபின் வழக்கத்தில் நிலைத்து விடுகிறது. அவ்வாறு வழங்கி வழங்கி நிலைபெற்று விடுகின்ற ஒன்றைத்தான் மரபு என்று குறிக்கின்றோம் என்று கூறுவதிலிருந்து மரபு என்பது எழுதப்படாத சட்டம் ஆகும். இதனை சமூகம் உள ஒருமைப்பாட்டால் உருவாக்குகின்றது. இம்மரபுகள் சமுதாய நலன் கருதி ஏற்பட்டவை. இவை வழக்கமாகத் தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றப்படுவது எனப் பொருள்படும். ஒவ்வொரு சமுதாயமும் தனக்கெனச் சில தனித்த மரபுகளைக் கொண்டிருக்க வேண்டும். ஒரு சமுதாயத்தின் மரபினைப் பிறிதொரு சமுதாயத்தின் மரபு கட்டுப்படுத்துவதில்லை. எனவே மரபுகள் சமுதாயந்தோறும் மாறுபடினும் அவை அச்சமுதாயத்தின் சிறப்பியல்புகளாக இருப்பதால் மானுட சமுதாயம் இன்றும் அவைகளைப் போற்றிப் பாதுகாத்து வருகின்றது.*

ஒரு சமுதாயச் சிறப்பைப் போற்றிப் பாதுகாத்து வரும் மரபுகளைக் கொண்டு அளவிடும் போக்கு சமுதாயப் பண்பாட்டு வரலாற்றில் சிறப்பிடம் வகிக்கின்றது. ஒரு சமுதாயத்தின் மரபுகளைப் பிறிதொரு சமுதாயத்தின் மரபுகளோடு இயைத்துக் காண்பது சமூக விதிக்கு மாறுபட்டதாகும். மரபினை மீறுவது சட்டப்படி குற்றமில்லை எனினும் சமுதாய நீதிப்படி குற்றமாகக் கருதப்படும். எனவேதான் மரபினை மீறுவோர் சமுதாயத்தால் தனித்து வைக்கப்படுகின்றனர். அவர்களுக்குரிய தண்டனையைச் சமூகம் என்ற கூட்டு நிறுவனம் விதிக்கின்றது.

பழக்கம், வழக்கம், மரபு என்ற சொற்கள் ஒன்றோடொன்று உறவுடையன. ஒன்றின் வளர்ச்சி நிலையே மற்றொன்றின் தொடர்ச்சியாக அமைகின்றது. பழக்கம், வழக்கம், மரபுகள் எளிதில் மாற்றமுடியாதவை. அவை கால, இட, சூழ்நிலைகளைால் உருப்பெற்றுள்ளன. அவ்வாறு உருப்பெறும் மரபுகளே சமுதாய நியதிகளாகக் கருதப்படுகின்றன. எனவே பழக்கம் என்பது தனிமனிதனைச் சார்ந்ததென்றும், வழக்கம் சமுதாயத்தைச் சார்ந்ததென்றும், மரபு சமுதாயம் விதிக்கும் கட்டுப்பாடு எனவும் கூறப்படுகிறது.

பழக்கம் என்பது தொடக்க நிலையாகவும், வழக்கம் தொடர்நிலையாகவும், மரபு பண்பாட்டின் முதிர்நிலை எனவும் வகைப்படுத்துகின்றன. தனிமனிதப் பழக்கங்களே காலப்போக்கில் சமுதாய வழக்கங்களாக உருப்பெற்றுத் தலைமுறை தலைமுறையாக இடையறாது நிலைத்து வாழ்வு பெறும் நிலையில் மரபுகளாக வாழ்வு பெறுகின்றன. பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும், சமுதாயத்தின் குறிக்கோள்கள், தேவைகள், அடிப்படையில் தோன்றியவைகளாகும். பழக்க வழக்கங்கள் மனித சமுதாயத்தின் தேவை கருதிப் படைத்துக் கொண்டவைகளாகவே தென்படுகின்றன. தனிமனிதப் பழக்கங்களே காலப்போக்கில் கூட்டமைப்புடைய மக்கள் குழுக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டு வழக்கங்களாகவும், மரபுகளாகவும் நிலைபெறுகின்றன. அவை நிலைபெறுவதற்கு மரபும் ஒரு காரணமாக அமைகின்றது. இயற்கையால்

படைக்கப்பட்டுள்ள பொருட்களுக்கும் மனிதனின் செயல்களுக்கும் தொடர்புண்டு என்ற உளவியல் அடிப்படையில் தோன்றியனவாகவே நம்பிக்கைகள் அமைகின்றன.

இந்நம்பிக்கைகள் மனித சமுதாயத்தில் காலங்காலமாக நிலைகொள்வதற்கு மரபு ஒரு காரணமாக அமைகின்றது என்று தோன்றின என வரையறுக்க இயலாத பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் மக்களின் இன்றைய நடைமுறை வாழ்விலும் தொடர்ந்து பயிற்சி பெற்று வருகின்றன. இத்தகைய பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும் பெரும்பாலும் நாகரிகம் தோன்றாத காலப்பகுதியில் வாழ்ந்த மக்களிடம் தோன்றியதாகும். தனிமனிதப் பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும் காலப்போக்கில் உணர்ச்சிப் போக்கால் மாறும் தன்மையுடையது.

மரபு என்பது உள ஒருமைப்பாட்டால் இயல்பாக வந்து அமைகின்ற ஒன்றாகும். இம்மரபுகள் சமுதாய நலன்கருதி அமைந்தவைகளாகும். ஒவ்வொரு சமுதாயமும் தனக்கெனச் சில தனித்த மரபுகளைக் கொண்டிருக்கிறது. மரபுகள் சமுதாயம் தோறும் மாறுபடினும் அவை அச்சமுதாயத்தின் சிறப்பியல்புகளை காக்க வல்லனவாக மனித சமுதாயம் சிறப்பினை அச்சமுதாயம் போற்றிப்பாதுகாத்து வருகின்றது. ஒரு சமுதாயத்தின் சிறப்பினை அச்சமுதாயம் போற்றிப் பாதுகாத்துவரும் மரபுகள் கொண்டு அளவிட இயலும்.

பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் என்று தோன்றின என வரையறுத்து இயலாததெனினும் இவை பெரும்பாலும் புராண மனிதரிடம் தோன்றியவைகளாக காட்சி தருகின்றன. ஒரு சமுதாயம் என்பது மக்களின் ஒன்றிணைந்த கூட்டுத் தொகுதியாகும். அச்சமுதாயத்தில் பல்வேறுபட்ட மக்களினங்களும், தொழில்வயப்பட்ட பிரிவுகளும் காணப்படினும் அவற்றுள்ளும் சில பிரிவினரே சமுதாய மதிப்பு மிக்கவர்களாகத் திகழ்கின்றனர். பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில்

*சமுதாய மதிப்பு மிக்கவராக திகழ்ந்தனர் என்பதையும், தற்காலச் சமுதாயத்தில் சமுதாய மதிப்பு மிக்கவராகத் திகழ்ந்தனர் என்பதை ஆய்வு செய்யப்பட்டுள்ளன.*

*மரபுகளும் மாற்றங்களும் சில வேளைகளில் ஒன்றையொன்று நிலைநிறுத்திக் கொள்ள முயற்சிக்கின்றது. மரபுகள் காலங்காலமாக வழிவழியாகக் கடைப்பிடிக்கப்பட்டு வரும் சூழ்நிலையிலும் சில மரபுகள் கால ஓட்டத்திற்கு ஏற்பத் தன்னைப் புதுப்பித்துக் கொள்ளும்ட செயலே மாற்றமாகக் கருதப்படுகிறது. பிறப்பு முதல் இறப்பு வரையிலான மரபுகளிலிருந்து இப்போது பல மாறுபாடுகள் ஏற்பட்டுள்ளன. இவற்றை ஆய்வு செய்வதே இவ்வியலின் நோக்கம் ஆகும்.*

*சங்க இலக்கியங்களில் காணப்படக்கூடிய நாட்டுப்புறக் கூறுகள் நடைமுறையில் வாழ்ந்தாலும் மக்களின் வாய்மொழி வழக்காறுகளோடு ஒப்பிடும்போது சில ஒற்றுமை, வேற்றுமைகளை அறிய முடிந்தது. அவை இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.*

**பிறப்பு**

*மனித வாழ்வின் முதல் அத்தியாயம் அவன் பிறப்பிலிருந்து தொடங்குகிறது. உலகில் காணப்படும் எந்தவொரு உயிரினமும் அதன் பிறப்பின் மூலம்தான் பெருமையடைகிறது. அதிலும் மனிதன் பிறப்பிற்கு அளிக்கும் முக்கியத்துவமும் முன்னுரிமையும் பெரும் போற்றுதலுக்கு உரியதாகும். தன்னோடு மட்டுமல்லாமல் தான் பெற்ற பிறவியின் பயனானது பல கிளைகளுடன் தழைத்தோங்க வேண்டும் என்ற எண்ணத்தின் வெளிப்பாடாகக் குழந்தை பிறப்பு திகழ்கின்றது.*

*இல்லற வாழ்வில் குழந்தைப்பேறு ஒன்றே இன்பம் நல்கக்கூடியது என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். இதனை,*

**“காமஞ்சான்ற கடைக்கோட் காலை**

**ஏமஞ்சான்ற மக்களொடு துவன்றி**

**அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்**

**சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே''**

*(தொல். பொருள். 190)*

*என்ற நூற்பாவின் மூலம் விளக்குகிறார்.*

*பெண்பிறவியின் தலையாய நோக்கம் குழந்தைப் பேற்றினை உருவாக்கித் தருதலே பெருமை வாய்ந்ததாகப் போற்றப்படுகிறது. அதிலும் தலைப்பிள்ளையைப் பெற்றெடுத்தல் என்பது பெண்ணின் மறுபிறவி என்றும் கூறுவர். மேலும் பெண்ணை வாழ்த்த மனநிறைவுடன் பயமின்றிப் பிள்ளையைப் பெற்றெடுக்கும் வகையில் சில சடங்குகளைச் சங்கத் தமிழர்கள் மேற்கொண்டுள்ளனர்.*

*பெண்ணின் வயிற்றில் கருப்பம் கருக்கொண்டதை எண்ணி அனைவரும் மகிழ்ந்த நிலையை,*

**''கணைக்கோட்டு வாளைக் கமஞ்சூல் மடநாடு**

**மனையோள் மடமையின் புலக்கும்**

**அனையேம் மகிழ்நற்குயாம் ஆயினும் எனினே''**

*(குறுந். 164)*

*என்றமைந்துள்ள வரிகள் சான்று காட்டுகின்றன.*

*பெண் கருவுற்றதனால் அவளுக்கு வயாநோயாகப் புளிப்புச் சுவை தேடியதாகக் கீழ்க்காணும் பாடல் வரிகள் விளக்கம் தருகின்றன. இதனை,*

**''புளிங்காய் வேட்கைத்து அன்றுநின்**

**மலர்ந்த மார்பு இவன்வயாஅ நோய்க்கே''**

*(ஐங். 51)*

*என்றும் மேலும்,*

**''முந்நால் திங்கள் நிறைபொறுத்து அசைஇ**

**ஒதுங்கல் செய்யாப் பசும்புளி வேட்கைக்**

**கடுஞ்சூல் மகளிர்போல் சூல்கொண்டு''**

*(குறுந். 287)*

என்றமையும் தொடர்கள் மூன்று திங்கள் நிறைந்த கருவின் நிலையையும் அக்கருவுற்றக் காலத்தில் பெண்ணிற்கு இயற்கயைாகத் தேடும் புளிப்புச் சுவையினையும் விளக்குகின்றன.

வயிற்றில் உருவாகிய கரு பத்து மாதக் காலங்கள் தங்கி எந்தவித இடையூறும் ஏற்படாமல் இருப்பதற்காகத் தெய்வங்களை வழிபட்டுள்ளனர்.

பண்டைத் தமிழர்கள் மக்கள் பேற்றைச் சிறப்புடையதாகக் கருதினர். குழந்தை பிறந்த வீட்டில் பலவிதமான பழக்க வழக்கங்களை மேற்கொண்டனர். குழந்தை பெற்ற வீட்டில் ஐயவி என்ற வெண் சிறு கடுகைப் பூசியதையும், பிள்ளைப்பேறு வாய்த்த தாய் நெய் பூசி நீராடிச் சடங்குகள் மேற்கொண்டதனையும் நற்றிணை குறிப்பிடுகின்றது.

**"கடும்புடைக் கடுஞ்சூல் நம்குடிக் குழவி**
**நெய்யோ டிமைக்கும் ஐயவித திரள்காழ்**
**விளங்குநகர் விளங்குக் கிடந்தோட் குறுகி**
**புதல்வனை யீன்றெனப் பெயர் பெயர்த்து"**

*(நற்றி. 370: 2-5)*

குழந்தை பிறந்த பதினாறாம் நாள் வரை தீட்டு என்பதனால் தனியே இருப்பர். தீட்டு என்பது அசுத்தமான பகுதியில் இருந்து மனிதனைப் பாதுகாக்கிறது. பிரசவித்த தாய்க்கு ஒரு குறிப்பிட்ட நாள்கள் வரை முழுமையான ஓய்வு தேவை என்பதாலும், வீட்டின் மற்ற இடங்களில் சுகாதாரக் கேட்டினை உண்டாக்கக் கூடாது என்பதாலும் முன்னோர்கள் தீட்டு என்ற பெயரில் பிரசவித்த தாய் சேய் இருவரையும் விலக்கி வைக்கும் வழக்கம் உருவானது என்று கருதலாம்.

**தனியறையில் தங்க வைத்தல்**

குழந்தை பிறந்ததும் தாய் சேய் இருவரையும் 'வாலாமை நாள்' என்று கருதி தூய்மைக்காகத் தனியறையில் வைத்துள்ளனர். கருவுயிர்த்த

*மாளிகையில் பேய், பிணி முதலாயின தொந்தரவுகள் இல்லாமல் இருப்பதற்குச் சிறுபெவண் கடுகினைத் தூவி வைத்த நிலையை,*

**"கடும்புகை கடுஞ்சூல் நம்குடிக்கு உதவி**
**நெய்யோடு இமைக்கும் ஐயவித் திரள்காழ்**
**விளங்குநகர் விளங்கக் கிடந்தோட் குறுகிப்**
**புதல்வன் ஈன்றெனப் பெயர் பெயர்த்து"** *(நற்றி. 370)*

*என்னும் பாடலடிகள் விளக்குகின்றன.*

*குழந்தையையும், தாயையும் மான்தோல் விரித்துப் படுக்க வைத்திருந்தனர் என்பதை,*

**"மான்தோல் பள்ளி மகவொடு முடங்கி**
**ஈன்பிளவு ஒழியப் போகி"** *(பெரும். 89-90)*

*என்ற வரிகளால் அறியலாம்.*

*குழந்தை ஈன்ற பெண் மற்றும் குழந்தையின் மேல் துர்நாற்றம் வீசும் என்பதாலும் மகவுற்ற பெண்ணினால் எவ்வித வேலையும் செய்ய இயலாததால் குறிப்பிட்ட காலம் ஓய்வு எடுக்கும் விதத்திலும் இருவரையும் தனிமைப்படுத்தி வைத்திருக்கின்றனர். மேலும் அவர்கள் தங்கிய இடத்தினைச் சுற்றி ஐயவி என்னும் வெண் கடுகினால் புகை எழுப்பி ஆவிகள் தீண்டாதவாறு அமைத்திருந்தது குறிப்பிடத்தக்கதாகும்.*

*மகவீன்றப் பெண்ணிடத்தில் வெளிப்படும் அசுத்த இரத்தம், பால் மணம், போன்றவற்றினால் தாய் சேய் ஆகியோரின் உடலில் ஒருவகையான துர்நாற்றம் வீசும். அதனைப் போக்கி உடலினைத் தூய்மை செய்யும் நோக்கில் நீராட்டியுள்ள முறையைச் சங்ககால மக்கள் பின்பற்றியுள்ளனர்.*

*குழந்தையினைப் பெற்றெடுத்த பெண் எண்ணெய் தேய்த்துக் குளித்ததாக நற்றிணை கூறுகின்றது. இதனை,*

**"புனிறுநாறு செவிலியொடு புதல்வன் துஞ்ச**
**ஐயவி அணிந்த நெய்ஆட்டு ஈரணிப்**
**பசுநெய் கூர்ந்த மென்மை யாக்கை"** *(நற்றி. 140)*

*என்னும் அடிகள் விளக்குகின்றன.*

*மனிதன் மண்ணிலும் விண்ணிலும் அடைய முடியாத இன்பம் குழந்தைப் பேறாகும். அவ்வின்பத்தைப் பெற்றவன் வீடுபேறு அடைவான் எனப் பேயனார் தெரிவிக்கிறார். இதனை,*

**“மறியிடைப் படுத்த மான்பிணைப் போலப்**
**புதல்வன் நடுவணன் ஆக நன்றும்**
**இனிது மன்ற அவர் கிடக்கை முனிவின்று**
**நில்நிற வியலகம் கவைஇய**
**ஈனும் உம்பரும் பெறலருங் குரைத்தே”** *(ஐங்கு. 401)*

*என்ற பாடலால் அறிந்து கொள்ளலாம். புதல்வன் நடுவில் உறங்க தலைவன் தலைவி இருவரும் அருகருவில் படுத்துறங்கும் இல்லற வாழ்வின் சிறப்பினை உணரமுடிகிறது.*

**“யாரொடு கொள்ளா பொழுதொடும் கொள்ளா**
**பொருள் அறிவாரா ஆயினும் தந்தையர்க்கு**
**அருள் வந்தனவால் புதல்வர்தம் மழலை**
**என்வாய்ச் சொல்லும் அன்ன”** *(புறம். 92)*

*எனும் பாடல் வரிகள் யாழிசை, பொருள் சேர்த்தல் ஆகியவை இருந்தாலும் பெற்றோர்க்கு மழலைச் சொல் ஒன்றே அனைத்தையும் அளிக்கும் என்று விளக்கம் தருகின்றன.*

**பிறந்தநாள் விழா**

*பண்டைத் தமிழகத்தில் மன்னர்களே தமது பிறந்தநாளைக் கொண்டாடியதாக இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. இதனைத் தொல்காப்பியம் முதன்முதலில் சுட்டியுள்ளது. தொல்காப்பியர்,*

**“சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப்**
**பிறந்த நாள்வயின் பெருமங் கலமும்”**

*(தொல். பொருள். 88: 7-8)*

*பிறந்தநாளை வெள்ளணி நாளெனக் குறிக்கும் வழக்கம் முதன்முதலில் சிலப்பதிகாரத்தில் தான் கூறப்பட்டுள்ளன. இதனைச் சிலப்பதிகாரத்தில்,*

**“படுநுகம் பூணாப் பகடே மன்னர்**
**அடித்தளை நீக்கும் வெள்ளணி யாமெனும்**
**தொகுப்பே ருழவ ரோதைப் பாணியும்”**

*(சிலம்பு. 27: 28-30)*

*மேலும் பிறந்தநாளைப் பெருமங்கலம் என்ற சொல்லால் குறிப்பிடுகின்றார். நன்னனின் பிறந்தநாளை அவனது மக்கள் கொண்டாடிய செய்தியினை மதுரைக்காஞ்சி கூறுகின்றது.*

**“மன்றுதொறும் நின்ற குரவை சேரிதொறும்**
**உரையும் பாட்டும் ஆட்டும் விரைஇ**
**வேறுவேறு கம்பலை வெறிகொள்பு மயங்கிப்**
**பேரிசை நன்னன் பெறும்பெயர் நன்னாள்**
**சேரி விழவின் ஆர்ப்பெழுந் தாங்கு”**

*(மதுரை. 615-619)*

*பிறந்தநாள் விழாவன்று வெண்ணிற ஆடை உடுத்தி வெண்கோலம் புரிந்தனர். இக்காரணத்தினால் தான் பிறந்தநாள் விழா வெள்ளணி, வெள்ளணி நாள், வெள்ளணி விழா எனப்பட்டது. மேற்காட்டிய சான்றுகளிலிருந்து மன்னர்கள் தங்களது பிறந்த நாளினைக் கொண்டாடும் வழக்கத்தினைக் கொண்டிருந்தனர்.*

*பிறந்தநாள் விழாவைத் தற்போதும் மக்களால் கொண்டாடப்படுகின்றன. பிறந்தநாள் அன்று காலையில் எழுந்து குளித்துவிட்டுப் புதிய ஆடை அணிந்து கோயிலுக்குச் செல்வார்கள். பொருளாதார வசதியுடையவர்கள் தெருவில் உள்ளவர்களுக்கு அல்லாது ஊரில் உள்ளவர்களை அழைத்து விருந்து கொடுப்பர். சில பேர் அன்னதானம் கொடுப்பர். அன்னதானம் கொடுப்பதனால் அவர்களின் வாழ்வு நல்வாழ்வு பெறும் என்றும், நீடூழி வாழ்வார்கள் என்றும்*

நம்புகின்றனர். அனைவருக்கும் மிட்டாய், இனிப்பு கொடுத்து மகிழ்ச்சியாக பிறந்தநாளைக் கொண்டாடுகின்றனர்.

பிறப்புச் சடங்குகள்

| இலக்கியம் (சங்க காலம்) | களம் (தற்காலம்) |
|---|---|
| கருவுற்ற காலத்தில் குழந்தை நன்முறையில் வளரவும், பிறப்பதற்கும் தெய்வத்தை வணங்குதல் | வளைகாப்பிடுதல், மருத்துவ முறைகளைக் கையாளுதல், தெய்வ வணக்கமும் உண்டு |
| தனியறையில் தாய், சேயினைத் தங்கவைத்தல், மான்தோல் இருக்கை மற்றும் பேய், பிணி நீங்க வெண்சிறுகடுகு தூவுதல் | கோரைப்பாய் பயன்படுத்தல், தனியிடத்தைச் சுற்றித் துடைப்பங்குச்சி, கருக்கரிவாள் வைத்தல், ஒரு தட்டில் மஞ்சள் சுண்ணாம்பு கலந்து வேப்பிலையை போட்டு வைத்தல், வீட்டின் முன்கூரையில் வேப்பிலைக் கொத்து சொருகுதல் |
| எண்ணெய், வாசனைத் திரவியங்கள் (மூலிகை) தேய்த்துக் குளிக்க வைத்தல் | வெந்நீரால் குளிக்க வைத்தல், எண்ணெய், சீயக்காய், ஷாம்பு முதலியன பயன்படுத்துதல் |
| குழந்தைச் செல்வத்தின் சிறப்பினைப் பாடலின் மூலம் வெளிப்படுத்தல் பிறந்த நாள் கொண்டாடுதல் | தாலாட்டின் மூலம் வெளிப்படுத்துதல் வழக்கம் உண்டு |

கருவுற்றக் காலத்தில் செய்யப்பெறும் ஐந்தாம் மாதம் இனிப்பு வழங்குதல், ஒன்பதாம் மாதம் வளைகாப்பிடுதல், தலைப்பிரசவத்திற்குத் தாய் வீடு அழைத்துச் செல்லுதல், குழந்தை பிறந்த மூன்று அல்லது ஐந்தாம் மாதங்களில் கணவன் வீட்டிற்குத் தாய் குழந்தையை அனுப்புதல் முதலிய சடங்குகள் சங்க இலக்கியங்களில் சுட்டப்பெறவில்லை.

**பூப்புச் சடங்குகள்**

பெண் பூப்பெய்தியவுடன் தாய் தந்தையர் மற்றும் உறவினர்கள் மகிழ்ச்சி அடைகின்றனர். உடனே அப்பெண்ணை வீட்டின் மூலையில்

*தனிமைப்படுத்துவர். தாய் தந்தை இத்தகவலைத் தாய்மாமனுக்குத் தெரிவிக்கின்றனர். அன்று மாலைக்குள் தாய்மாமன் தன் குடும்பத்துடன் உரிய சீர்வரிசை எடுத்து வருகின்றார். கூடுதலாக இப்போது பாத்திரமும் எடுத்து வருகின்றனர்.*

*பெண்கள் உடல் தாய்மைக்குரிய பக்குவ நிலையினை முதல் பூப்பில் அடைகின்றது. இந்நிலையில் அவர்கள் பதினாறு நாட்கள் கோயில், குளம் செல்வதில்லை. கோயிலுக்குச் சென்றாலும் திருநீறு அணிவதாலும் புனிதத் தன்மை கெட்டு விடுகிறது.*

*மரத்தின் அடியிலோ பூச்செடிகளுக்கு அருகிலோ சென்றால் அவை பாதிப்படைகின்றன. சிறு குழந்தைகளைத் தூக்கில் அக்குழந்தையின் உடல்நலம் கெடுகிறது. தவிர்க்க முடியாத சூழலில் குழந்தைகளைத் தூக்கை நேரிடுகையில், அக்குழந்தை உடுத்தியிருந்த ஆடையைக் கழற்றிவிட்டுத் தூக்கினால் புனிதம் காக்கப்படுவதாக நம்புகின்றனர்.*

*பூப்பெய்திய பெண் பூப்பெய்திய போது அணிந்திருந்த ஆடையினை வண்ணார்க்குக் கொடுத்து விடுகின்றனர். அத்துணியைத் தான் வைத்திருந்தால் தீட்டு என நம்புகின்றனர். ஆகையால் அத்துணியை வண்ணாருக்குக் கொடுத்து விடுகின்றனர்.*

**சிலம்பு கழித்தலும் பூப்புத் தீட்டுக் கழித்தலும்**

*இலக்கியம் உணர்த்தக்கூடிய சிலம்புக் கழிக்கும் சடங்கு மங்கைப்பருவம் எய்திய பெண்ணிற்குத் திருமணத்திற்கு முன்னர் நடத்தக் கூடியதாகும். இந்நிகழ்விற்குப் பிறகே சங்கத் தமிழர் மணம் செய்துள்ளனர். இந்நிலை காலமாற்றத்தின் விளைவாக மாற்றமடைந்து பூப்படைந்த பெண்ணிற்குப் பூப்பு நீராட்டு விழா என்னும் சடங்கு செய்து பூப்புத் தீட்டினைக் கழித்து மணம் முடிக்கும் முறை களப்பணியால் அறியமுடிகிறது.*

*சிலர் குடும்பச் சூழல் காரணமாக இச்சடங்கினை மேற்கொள்ளாமல் இருந்தாலும் திருமணத்திற்கு முதல் நாளிலும் கூட பின்பற்றி மணம்*

*செய்யவே சம்மதிக்கின்றனர். அன்றைய சமுதாயத்தில் சிலம்பு நீக்கி இல்லற வாழ்வை ஏற்க வைத்திருக்கும் முறை இன்றைய வழக்கில் சிலம்பு போன்ற அணிகலன் அணியும் பழக்கம் அதிகம் இல்லாத காரணத்தால் பூப்பு நீராட்டு விழாவிற்குப் பிறகு நடத்துவதோடு ஒப்பிட்டுக் கூறும் அளவில் உள்ளது எனலாம்.*

**திருமணம்**

*சங்க இலக்கியங்கள் மனித வாழ்வினை அகம், புறம் என்னும் இரு பெரும் பிரிவுகளாகப் பகுத்துக் காட்டுகின்றன. புறமானது நம் சங்கத் தமிழரின் வீரத்தையும் அகமானது அன்பாகிய காதலையும் கற்பாகிய இல்லற வாழ்வையும் விளக்குகின்றன.*

**"கற்பெனப் படுவது கரணமொடு புணர"**

*(தொல். பொருள். 140)*

*என்று தொல்காப்பியர் மணம் புரிந்து வாழும் திருமண வாழ்வின் சிறப்பினைக் குறிப்பிடுகிறார்.*

*சங்ககாலத்தைப் பொறுத்த வரையில் ஒத்தத் தன்மையுள்ள தலைவனும் தலைவியும், காதல் கொள்ளும் களவு வாழ்வே இல்லற வாழ்வின் தொடக்கமாக அமைகிறது. ஊரவரால் அலர் ஏற்பட்டு ஏசி பேசாமல் இருப்பதைத் தடுக்கும் ஒரு கருவியாகத் திருமணம் அமைந்துள்ளது எனலாம்.*

*தலைவியைத் திருமணம் செய்வதற்குத் தலைவன் வரப்போகிறான் என்றவுடன் தோழி அளவளாவிய மட்டற்ற மகிழ்ச்சி கொண்டு சாவா மருந்தாகிய அமிழ்தத்தைப் பெருவாய் என்று செவிலியை வாழ்த்துகிறாள். இதனை,*

**"அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதமாகப்**
**பெரும்பெயர் உலகம் பெறீஇயரோ அன்னை**
**தம்மில் தமது உண்டன்ன கிளைதொறும்**

**தீம்பழம் தூங்கும் பலவின்**

**ஓங்குமலை நாடனை வரும் என்றோளே''**

*(குறுந். 83)*

*எனக் குறுந்தொகை விளக்குகிறது.*

*இதனால் சங்ககால மக்கள் ஆண், பெண் இன்பமாய் இணையும் திருமண விழாவிற்கு நல்கியப் பெரும்பேற்றினை உணரமுடிகிறது.*

**உரிமையைப் பறையறிவித்தல்**

*தொழுவத்தில் நிற்கும் பல்வேறு காளைகளில் ஒவ்வொரு காளைக்கும் ஒரு பெண் வீதம் ஒதுக்கி அக்காளைகளைத் தழுவுவோர் அவ்வுரிமைப் பெண்களை மணந்து கொள்ள சம்மதம் தெரிவிக்கும் வகையில் ஊரார் முன்னிலையில் மனைவியாகும் உரிமையைப் பறைசாற்றியுள்ளனர்.*

*பரண் அமைத்து அதன்மேல் திருமணம் செய்யப்போகும் ஆயர் பெண்கள் ஆர்வமுடன் நின்றிருந்தனர் என்பதை,*

**''முல்லை முகையும் முருந்தும் நிரைத்தன்ன**

**பல்லர் பெருமழைக் கண்ணர் மடம் சேர்ந்த**

**சொல்லர் சுடரும் கனங்குழைக் காதினர்**

**நல்லவர் கொண்டார் மிடை''** *(கலித். 103)*

*எனும் பாடல் தொடர்களாலும்,*

**''அவ்வழி முள்எயிற்று ஏஎர் இவளைப் பெறும் இதுஓர்**

**வெள்ளேற்று எருத்து அடங்குவான்**

**ஒள்ளிழை வார்உறு கூந்தல் துயில்பெறும் வைமருப்பின்**

**காரி கதன் அஞ்சான் கொள்பவன் ஈரரி**

**வெரு உப்பிணை மான்நோக்கின் நல்லூட் பெறூஉம்இக்**

**குரூ உக்கண் கொலையேறு கொள்வான் வரிக்குழை**

**வேயுறழ் மென்தோள் துயில் பெறும்''**

*என்றமைந்துள்ள வரிகள் மூலம் தொழுவத்தில் நிறுத்தி வைக்கப்பட்டுள்ள பல நிற ஏறுகளை அடக்குபவர்கள் இம்மகளிரைப் பெறுவதற்குத் தகுதியானவர்கள் என்று அறிவித்தனர் என்பதை உணரமுடிகிறது.*

**கலப்பு மணம்**

*ஐவகை நிலப்பகுப்புகளில் வாழும் மக்கள் தங்கள் நிலப்பகுதியிலிருந்து மற்றவர் வாழும் இருப்பிடத்திற்குச் செல்லும் நிலையில் ஏற்படும் உறவுநிலை வாழ்வின் பந்தமாக நிலைகொண்டு இருந்துள்ளது. இதன் வெளிப்பாடே கலப்பு மணமாகும்.*

*குறிஞ்சி நிலத்தலைவன் நெய்தல் நிலத் தலைவியைக் காதல் கொண்டு உறவாடிய நிலையை,*

**"வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி**
**என்றூழ் விடர குன்றம் போகும்**
**தாழ்கோல் உமணர் காதல் மடமகள்**
**சில்கோல் எவ்வளை தெளிர்ப்ப வீசி**
**நெல்லின் நேரே வெண்கதுப்பெனச்**
**சேரி விலைமாறு கூறலின்**
. . . . . . . .
**இதை முயல் புனவன் புகைநிழல் கடுக்கும்**
**வெய்ய உயிர்க்கும் நோய் ஆகின்றே"**

*(அகம். 146)*

*என்னும் பாடல் வரிகளால் உணரலாம்.*

*உப்பு விற்க வந்தப் பெண்ணிடம் அவள் அழகைக் கண்டு காதல் கொண்ட தலைவன் நிலையை அறியமுடிகிறது. இடம்விட்டு இடம் பெயர்தல், பண்டமாற்று, வாணிப நோக்கம் போன்ற பல்வேறு காரணங்களால் ஓரிடத்திலிருப்பவர் மற்றொரு இடத்திற்குச் செல்வது இயல்பானதே. இந்நிலையில் தான் புதுமையானவர்களிடம் பழகும் நட்பு*

*ஏற்பட்டு நாளடைவில் இல்லற வாழ்வின் துணையைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் அளவிற்கு உறவுநிலை வளர்ந்ததெனக் கொள்ளலாம்.*

*கலப்புத் திருமணம் பெரும்பாலும் வழக்கத்தில் இருந்துவருகிறது. மேல்சாதியில் உள்ள பெண்ணோ, ஆணோ கீழ்ச்சாதியில் உள்ள பெண்ணையோ, ஆணையோ காதலித்து திருமணம் செய்து கொள்கின்றனர். இத்திருமணமானது பெரியோர்கள் சம்மதம் இல்லாமல் நடைபெறுவதாகும்.*

*சாதி விட்டுச் சாதி திருமணம் செய்பவர்களை இப்குதி மக்கள் ஒதுக்கி வைக்கின்றனர். அவர்களை நல்ல காரியங்களுக்கோ, கெட்ட காரியங்களுக்கோ சேர்த்துக் கொள்வது கிடையாது. இனம் விட்டு இனம் காதல் திருமணம் செய்யும் குடும்பத்தினரை ஏளனமாக இப்பகுதி மக்கள் பார்க்கின்றனர்.*

**இருதார மணம்**

*ஆணும் பெண்ணும் இணையும் மணவிழாவிற்கு அழகு சேர்ப்பது குழந்தை செல்வங்களேயாகும். அவ்வாறு செல்வம் வாய்க்காத வேளையில் ஆடவர் மறுமணம் செய்துகாண்ட நிலை சங்ககாலத்தில் வழக்கில் இருந்துள்ளது. இதனை முதல் மனைவி இன்பமாக நினைத்து வரவேற்றுள்ளாள் என்பது இலக்கியம் தரும் சான்றாகும்.*

*தன் கணவன் மணந்துகொண்ட புதிய மனைவியை மூத்தவளாகிய முதல் மனைவி இன்முகத்துடன் வரவேற்றாள் என்பதை,*

**“நின்னினும் சிறந்தனள் எமக்கே நீ நயந்து**
**நன்மனை அருங்கடி அயர**
**எம்நலம் சிறப்பயாம் இனிப்பெற்றோளே”** *(ஐங்கு. 292)*

*என்றமையும் கபிலர் பாடலடிகளால் அறியலாம். குழந்தைப் பேற்றுக்காக மறுமணம் செய்துவைத்த முதல் மனைவி தனது வாழ்வை அர்ப்பணித்த நிலையை உணரமுடிகிறது.*

**உடன்போக்கு மணம்**

*களவு வாழ்வில் மையல் கொண்ட தலைவன் தலைவியர் பெற்றோர் இதற்கு சம்மதம் தெரிவிக்க மாட்டார்கள் என்பதை உணர்ந்து தனிச்சையானதொரு முடிவால் உடன்போக்கில் ஈடுபட்டு இல்லத்தை விட்டு நீங்கி மணந்து கொள்கின்றனர். இதனையே உடன்போக்கு என்பர்.*

*காதல் கொண்டவர்கள் உடன்போய் மணக்கும் முறை மனித வாழ்வில் வழக்கில் இருந்ததைத் தொல்காப்பியம்,*

**“கொடுப்போர் இன்றியுங் கரணமுண்டே**
**புணர்ந்துடன் போகிய காலையான”**

*(தொல். பொருள். 141)*

*என்ற நூற்பாவின் மூலம் குறிப்பிடுகிறது.*

*தலைவியைத் தலைவன் உடன்கொண்டுச் சென்று தன் வீட்டில் மணம்புரிந்த நிலையை,*

**“வண்டு இமிர் சுடர்நுதல் குறுமகள்**
**கொண்டனர் செல்வர் தம் குன்றுகொழு நாட்டே”**

*(ஐங்கு. 254)*

*என்னும் பாடல் குறிப்பிடுகிறது. மேலும்,*

**“அயிர்த்தன்று மன்னே நெஞ்சம் பெயர்த்தும்**
**அறியாமையின் செறியேன் யானே**
**அருங்கடி வியல்நகர்ச் சிலம்பும் கழியாள்**
**சேனுறச் சென்று வறுஞ்சுனைக்கு நல்கி**
**. . . . . . . . . . .**
**கூர்வேல் விடலை பொய்ப்பப் போகி**
**சேக்குவள் கொல்லோ தானே”**

*(அகம். 315)*

*தலைவியைத் தலைன் பொய் கூறி உடன் அழைத்துச் சென்றதாக நற்றாய் புலம்பும் நிலையை அகநானூறு விளக்குகிறது.*

*தலைவன் தலைவியர் களவொழுக்கம் பூணாது மணம் செய்து கொள்ளல் களவில் வழிவரா மணம் எனப்பெறும் என ந. சுப்புரெட்டியார் கூறியுள்ளார். (1974: 176)*

*பெற்றோர் அறியின் காதலுக்குத் தடையேற்படும் என்றஞ்சிய காதலர் உடன்போக்கிலீடுபட்டுனர் என்று உடன்போக்குப் பற்றி அ. தெட்சிணாமூர்த்தி விளக்கம் தருகிறார். (1987: 65)*

*சங்க காலத்தில் உடன்போக்கு இருந்தது போலவே தற்போது உடன்போக்கு என்ற நிகழ்வு நடைபெறுகிறது. ஒரு ஆணும் ஒரு பெண்ணும் அதாவது இருவரின் இல்லற வாழ்வைத் தீர்மானிக்கும் உரிமை பெரியவர்களுக்கு இருந்தாலும் தங்கள் வாழ்வைத் தாங்களே தீர்மானிக்க வேண்டும் என்பதனால் ஒரு பெண் தான் விரும்பிய ஆடவனுடன் இணைந்து வாழவேண்டும் என்பதற்காக வீட்டில் உள்ளவர்களுக்கு தெரியாமல் தான் விரும்பியவனுடன் சென்றுவிடுகின்றாள் என்பதனையும், வயது வந்த ஆண், பெண் தங்களது வாழ்வை யார் துணையும் இன்றி மேற்கொள்வதையும் காணமுடிகிறது.*

*இந்த உடன்போக்கானது காதல் வெளிப்பாட்டிற்குரிய ஒரு கருவி என்பதாகவும் கூறுகின்றனர். சங்ககாலம் தொட்டே இன்றுவரை உடன்போக்கானது அனைத்து சாதி மக்களிடமும் நிகழ்ந்துகொண்டே இருக்கிறது என்பதைக் கூறமுடிகிறது. பெற்றோர்கள் இல்லாமல் தாங்களே தங்கள் வாழ்வை அமைத்துக் கொள்ள முடியும் என்று எண்ணித் தான் விரும்பிய ஆடவனுடன் சென்றுவிடுகின்றனர். இதைப்போல் இன்றும் ஒரு சில மக்களிடம் இந்நிகழ்வு நடைபெறுகிறது. மேலே கண்ட செய்திகளால் காதல் கொண்டவரின் வாழ்வு தடைபடும் என்பதற்காக உடன்போக்கு மேற்கொள்ளப்பெற்றது என்பதை அறியமுடிகிறது.*

*சங்க காலத்தில் மகப்பேறு கருதி ஆண்மகன் இரண்டாம் திருமணம் செய்து கொள்வது நியாயமே என்னும் கொள்கை இருந்திருக்கிறது என்று அக்கால மரபினை எடுத்துக்காட்டுகிறார் பிரேமா அருணாசலம் (1993: 28).*

பெற்றோர்க்குப் பெரும் பொருளாக, பெரிய செல்வமாக விளங்குபவர்கள் மக்கள். பெரும்பொருளாகிய அவர்களை உருவாக்குவதற்காக முறைப்படி செய்து கொள்ளப்படுகிற இரண்டாம் திருமணம் பின் முறையாக்கிய பெரும்பொருள் வதுவை என்று சங்க காலத்தில் கூறப்பட்டது. அவ்வாறு மணந்துகொண்டு வருகிற பெண்ணை முதல் மனைவி வரவேற்பது அக்கால மரபு ஆகும்.

இவற்றின் மூலம் குழந்தை பிறப்பு வேண்டி பலதார மணத்தினைப் பண்டைத் தமிழர் வரவேற்று நடத்தியுள்ள சிறப்பினை முழுமையாக அறிந்து கொள்ள முடிகிறது. மனித இனம் பல உறவுமுறைகளைக் கொண்ட வளருந் தன்மையுள்ள உயர்ந்த பிறவியாகும். இப்பிறவிக்கு ஊன்றுகோலாக விளங்குவது குழந்தைகளேயாகும். வயதான காலங்களில் பெற்றோர்களுக்குத் துணையாக இருப்பதில் அவர்களின் பங்கு முக்கியமானதாகக் கருதி மறுமணத்தை ஆதரித்துள்ளனர். அதனை முதல் மனைவியானவள் வரவேற்றுள்ளதும் போற்றுதலுக்குரியதாகும்.

தற்போதும் இப்பகுதி மக்களிடமும் இருதார மணம் காணப்படுகிறது. சிலர் குழந்தை இல்லையென்பதற்காக அடுத்தது ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்கின்றனர். மேலும் சிலர் குழந்தை இருந்தாலும் ஆண்பிள்ளை என்பதற்காகவும், மறுதிருமணம் செய்து கொள்கின்றனர். மேலும் திருமணமானவர்கள் தன் மனைவி மற்றும் குடும்பத்தில் உள்ளவர்களுக்குத் தெரியாமலும் மறுமணம் செய்துகொள்கிற வழக்கம் இப்பகுதி மக்களிடம் காணப்படுகிறது.

சங்கத் தமிழரிடையே நிலவிவந்த பல்வேறு மணமுறைகளையும் அதற்கு அவர்கள் அங்கீகாரம் அளித்து நடத்தியிருக்கும் வழக்கத்தையும், தற்போது மேற்கொள்கின்ற மணமுறை வழக்கங்களும் இவற்றில் சுட்டிக்காட்டியுள்ளனர்.

**வாழ்த்தும் மங்கல இசை ஒலிப்பும்**

*மணநாள் கண்ட தம்பதியர் தங்கள் வாழ்வில் அனைத்து நலன்களைப் பெறவேண்டியும் நோய் நொடியின்றி நீண்டகாலம் வாழவேண்டியும் பெரியோர்கள் ஆசீர்வதிக்க வாழ்த்துவது மரபாகும். இம்முறை அக்காலச் சமுதாயத்தில் நிலவி வந்த வழக்கமாகும்.*

*மணமேடையில் அமர்ந்து மணவிழாக் கண்ட இளந்தம்பதியர்களை தலைவன் தலைவியர் மீது நெல், மலர்கள் தூவி கற்பு நிலையில் வழுவாமல் என்றும் இளமையாய் வாழவேண்டுமாறு வாழ்த்தியுள்ளனர் என்று அகநானூறு குறிப்பிடுகின்றது. இதனை,*

**“கற்பினின் வழாஅ நால்வர் கூடி**
**பெற்றோற் பெட்கும் பிணையை ஆகஎன**
**நீரோடு சொரிந்த ஈரிதழ் அலரி**
**பல் இருங் கதுப்பின் நெல்லொடு துயங்க”**

*(அகம். 86)*

*என்றமைந்துள்ள வரிகளின் மூலம் அறிந்து கொள்ளலாம்.*

*கோவலன் கண்ணகி இருவரும் திருமணம் புரிந்து இல்லறவாழ்வில் ஒற்றுமையாய் இணைந்து அனைத்து நலன்களையும் பெறவேண்டி மக்கள் வாழ்த்தியதாக இளங்கோவடிகள் தெரிவிக்கின்றார். இதனை,*

**“காதலாற் பிரியாமல் கவவுக்கை நெகிழாமல்**
**தீது அறுக என ஏத்தி சின்மலர் கொடுதூவி”**

*(சிலப்.1: 61-62)*

*என்ற சிலப்பதிகார வரிகள் எடுத்துக்காட்டுகின்றன. மணமக்களை மணம் வீசும் மலர்கள் தூவி வாழ்த்தியுள்ள சிறப்பினை இதனால் காணமுடிகிறது.*

*நெல்லும், மலரும் தூவி வாழ்த்தியதன் சிறப்புகளை மணமக்களைத் தீயசக்திகளின் பாதிப்பிலிருந்து காப்பதற்கும் மற்றும் நிகழ்த்தும் செயலில் வளமை வேண்டியும் தூவுவதாக க. காந்தி எடுத்துக்காட்டுகிறார். மேலும் திருமணத்தில் தானியங்களையோ அல்லது பழங்களையோ மணமக்களின்*

*மீது தூவி வாழ்த்தியமை உலக நாடுகள் பலவற்றில் வழ:ககில் இருந்து வந்தமையினைச் சுட்டும் என க.காந்தி எடுத்துக் கூறுகின்றார்.*

*மணத்தம்பதியர்களை மக்கள் மனதார வாழ்த்திய அதேவேளையில் இசைக்கருவிகளைக் கொண்டும் மங்கல ஒலியை எழுப்பி மணமக்களைச் சுற்றத்தினர் இன்பமடையச் செய்துள்ளனர்.*

*தலைவன், தலைவி மணநன்னாளில் முரசு தண்ணுமை போன்ற மங்கல வாத்தியங்கள் ஊரதிர ஒலித்தன. இதனை,*

**“ஆராக் காதலொடு தார் இடைகுழைய**
**குழவுமுகம் புலரா விழவுடை வியல்நகர்**
**வதுவை மேவலன்”** *(அகம். 206)*

*என்று அகநானூறும்,*

**“தண்ணுமைப் பாணி தளராது எழூஉக”**

*எனக் கலித்தொகையும் குறிப்பிட்டுள்ளன.*

*இதன்மூலம் மணநாளில் மணமக்களை மக்கள் கூடி வாழ்த்திய முறையையும் மங்கல இசைக்கருவிகள் அதிர்ந்த சிறப்பினையும் காணமுடிகிறது.*

*திருமணம் என்பது ஆயிரங்காலத்துப் பயிர் என்பர். ஏனெனில் ஆண், பெண் உறவோடு மட்டுமல்லாது குழந்தைப்பேறும் வைத்துத்தான் மணமக்கள் மீது நெல், மலர் தூவி வாழ்த்துகின்றனர். நெல்லானது இனவிருத்திக்கும், மலராது அவர்கள் வாழ்வில் வசந்தமும், வளமையும் இணைந்த மணவாழ்க்கை அமைய வேண்டியதன் நம்பிக்கையில் செய்யப்பட்டதெனலாம்.*

*அந்நாளில் மங்கல இசை ஒலிக்கச் செய்தல் என்பது மணம் நிகழிடம் மற்றும் தம்பதியர் க ாதில் எவ்வித துயரம் தரக்கூடிய அமங்கலச் செய்திகள் ஏதும் விழக்கூடாது என்பதன் அடையாளமாகவும் இருக்கலாம் என்று தெளிவதற்கு இடமுள்ளது.*

இப்பகுதி மக்கள் திருமணத்தின்போது நாதஸ்வரம், மேளம் போன்ற பல இசைக்கருவிகளையும், மணமக்களுக்கு அதாவது மணமகன் மணமகளுக்கு தாலி கட்டும்போது அங்கு கூடியிருக்கும் உறவினர்கள், நண்பர்கள் அனைவரும் பல வண்ணங்கள் கலந்த அரிசியினைத் தூவி மணமக்களை வாழ்த்துகின்றனர். இதன்மூலம் புதிய வாழ்க்கையைத் தொடங்க இருக்கின்ற இம்மணமக்கள் பசியும் பட்டினியும் இல்லாமலும், இனவிருத்தியை உருவாக்க வேண்டும் என்ற நோக்கத்தினாலும் இவற்றை மேற்கொண்டு வருகின்றனர்.

**திருமணச் சடங்கு**

| இலக்கியம் (சங்க காலம்) | களம் (தற்காலம்) |
|---|---|
| ஏறு தழுவி மணத்தல் | வீர விளையாட்டாக மாட்டு வேடிக்கை என்ற பெயரில் நடத்தப்படுகிறது. |
| சேவை செய்து திருமணம் செய்தல் | வழக்கம் இல்லை |
| மடலேறுதல் | இல்லை |
| காதல் கொண்டவர் உடன்போக்கில் செல்லுதல் | காதல் கொண்டு வீட்டை விட்டு ஓடிப்போதல் உண்டு |
| கலப்பு மணம் உண்டு | உண்டு |
| இருதார மணம் உண்டு | வழக்கில் உண்டு. பெரும்பாலும் ஆணுக்கு மட்டும் சிறுபான்மை பெண்ணிற்கும் உண்டு |
| நல்ல நாள் பார்த்துப் பெரியோர் மகட்பேறு செல்லுதல் | வளர்பிறை நாளில் பெண் கேட்டுச் செல்லுதல் மரபுண்டு |
| இசைவு தெரிவித்தல் | சம்மதம் கூறுதல் |
| பரிசங் கொடுத்தல் (நாடு, பொன், பொருள், தேர் முதலியன) | பரிசமாகத் தங்கநகை மற்றும் பொருட்கள் பெண்ணிற்குக் கொடுத்தல் |
| நல்ல நாளிலும், வேங்கைமலர் பூக்கும் இளவேனில் காலமும், வளர்பிறை உரோகிணி நட்சத்திர நாளிலும் மணம் நடத்தப்பட்டுள்ளது | வளர்பிறை நாட்களோடு மட்டுமல்லாமல் வைகாசி, ஆனி, ஆவணி, ஐப்பசி, கார்த்திகை, தை, மாசி, பங்குனி மாதங்களில் திருமணம் செய்யப்படுகிறது. |

| | |
|---|---|
| பந்தல் அமைத்து அலங்கரித்தல் | உண்டு |
| மணப்பெண்ணிற்குச் சிலம்பு கழித்து மணம் செய்தல் | பெண்ணிற்குப் பூப்பு நீராட்டு விழா செய்தபின் மணம் செய்தல் |
| திருமணம் பெண்வீட்டில் நடத்தல் வீட்டினை அலங்காரம் செய்தல் | பெண் வீடு, திருமண மண்டபம், கோயில் முதலிய இடங்களில் நடத்துதல், திருமணம் நடக்கும் இடத்தினை அலங்கரிக்கும் மரபு உள்ளது. |
| மணமேடை அமைத்து நீர்க்குடம் முளைப்பாரிகை அகல்விளக்கு வைத்தல் | உண்டு |
| அந்தணர் மந்திரம் சொல்லி தீ வளர்த்து மணமக்களை வலம் வரச் செய்தல் | அந்தணர், குருக்கள் போன்றோர் பங்கு பெறுதல் உள்ளது. |
| மணமக்களைப் பெரியோர்கள் உறவினர்கள் நெல், மலர் தூவி வாழ்த்துதல், மங்கல இசை ஒலித்தல் உண்டு | பெரியோர்கள் மாலையெடுத்துப் போடுதல் மஞ்சள் கலந்த அரிசியால் வாழ்த்தும் மரபும், மேளம் ஒலித்தல் மரபும் உள்னது |
| மணமகன் மணமகளின் தலையில் மலர் சூடுதல் | மணமகளுக்கு மணமகன் நெற்றியில் பொட்டும், காலில் மிஞ்சியும் தாலியும் அணிவித்தல் |
| விருந்தளித்தல் | உண்டு |
| பள்ளியறைச் சேர்த்தல் | முதலிரவு, சாந்தி முகூர்த்தம் என்ற பெயரில் மணமக்களைச் சேர்த்து வைத்தல் |

மேலும் கள்ளர், பள்ளர், பறையர், இனமக்களிடத்தில் காணப்படக்கூடிய மிஞ்சி, மோதிரம் அணிவித்தல் முறையை மாமியார் பின்பற்றாமல் இரண்டையும் பெண் சகோதரர்களையே செய்கின்றனர். மேலும் பெரியோர்கள் மணமக்களுக்கு ‘மாலை எடுத்துப் போடுதல்’ பண்பானது மணமகன், மணமகள் இருவருக்கும் தாலி கட்டுவதற்கு முன்னரே செய்கின்ற நிலையையும் களப்பணியில் அறியமுடிகின்றது.

மனிதன் எவ்வாறு வாழலாம் என்பது அவனது பிறப்பின் உரிமையாகும். ஆனால் அவ்வாறு கட்டுப்பாடற்ற வாழ்க்கை முறைகளைக் கடைப்பிடித்தால் வாழ்வின் உச்சத்தை அடைந்து வெற்றி கொள்ள முடியாது என்பதை அறிந்து சங்கச் சான்றோர் வீரம், ஒழுக்கம் போன்ற உணர்வுகளுக்கு முதன்மையளித்து சில விதிமுறைகளோடும் கூடிய சீரிய வாழ்வினை நடத்தியுள்ள சிறப்பினை இத்திருமணச் சடங்கு வெளிக்காட்டும் பண்பாக அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

**இறப்புச் சடங்குகள்**

உலகில் பிறந்திருக்கும் உயிர்கள் அனைத்தும் அழிவது இயற்கை ஆகும். இறப்பென்பது தவிர்க்க முடியாததாயினும் மக்களிடத்தில் பெருந்துயரினை ஏற்படுத்துகின்றது. பூமியில் வாழும் பெருஞ்செல்வங்கள், உற்றாரின் சொந்தங்கள் என்று புகழின் உச்சியல் வாழ்ந்தாலும் இறப்பானது பேதமின்றித் தழுவிக் கொள்ளும் என்பது இயற்கையின் நியதியாகும்.

இறப்பானது மனிதனின் செயல்பாடுகளை முடிவுக்குக் கொண்டு வருவதோடு வாழ்க்கை நிலையற்றது என்னும் உயரிய கொள்கையை எடுத்துக்காட்டுவதே இதனின் சிறப்பம்சமாகும். மேலும் ஒருவன் எவ்வளவு தான் வாழ்வில் அறங்கள் மேற்கொண்டாலும் இறந்ததற்குப் பிறகு பிணம் என்றழைக்கப்பட்டு ஆறடி மண்ணே சொந்தம் என்னும் தத்துவத்தை உணர்த்தும் நிகழ்வே இறப்பாகும்.

ஓர் உடலை விட்டு உயிர் பிரிதல் என்பதை எவரும் அறுதியிட்டுக் கூற இயலாது. ஆனால் சில தீய சகுனங்கள் காட்டிக் கொடுக்கும் என்பர். இறப்பு நேர்வது குறித்த தீ நிமித்தங்களைப் புறநானூறு விளக்கிக் காட்டுகிறது.

**“காலனும் காலம் பார்க்கும்**

. . . . . . .

**திசையிரு நான்கும் உற்கம் உற்கவும்**

**பெருமரத்து இலையில் நெடுங்கோடு வற்றல் பற்றவும்**
**வெங்கதிர்க் கனலி துற்றவும் பிறவும்**
**அஞ்சுவரத் தகுந புள்ளுக்குரல் இயம்பவும்**
**எயிறு நிலத்து வீழவும்ட எண்ணெய் ஆடவும்**
**களிறுமேலே கொள்ளவும் காழகம் நீப்பவும்**
**வெள்ளில் நோன்படை கட்டிலொடு கவிழவும்"**

*(புறம். 41)*

*என்றமைந்துள்ள பாடல் வரிகள் மூலம் கோவூர் கிழார் இறப்பு நேர்வதற்கு முன்னர் அஞ்சத்தக்கப் பறவைகள் ஒலி கொடுத்தல், வானிலிருந்து எரிகொள்ளி வீழ்தல் போன்ற பல்வேறு துன்பமானச் செயல்கள் தோன்றும் என்று விளக்குகிறார்.*

**அழுது புலம்பல்**

*இறந்தவரின் பிரிவினைத் தாங்கிக் கொள்ளாத உற்றவர், உறவினர் போன்றோர் தமது மனத்துயரினை வெளிப்படுத்த அழுது புலம்புவர். இதனைச் சங்க இலக்கியம் தெளிவுற விளக்குகிறது.*

*இளவெளிமான் இறந்தபொழுது அவனது இறப்பினைத் தாங்கிக் கொள்ள இயலாத பெண்கள் தங்கள் மார்பில் வெப்பம் உண்டாகுமாறு கைகளால் அடித்துக் கொண்டு அழுதனர் என்பதை,*

**"அளிய தாமே ஆர்க என்னா**
**அறனில் கூற்றம் திறனின்று துணிய**
**ஊழின் உடுப்ப எருக்கிய மகளிர்**
**வாழைப் பூவின் வளைமுறி சிதற**
**மதுவாய் ஒக்கல் பரிசிலர் இரங்கக்**
**கள்ளி போகிய களரியம் பறந்தலை**
**வெள்வேல் விடலை சென்று மாய்ந்தனளே"** *(புறம். 237)*

*என்ற பாடல் வரிகள் எடுத்துக் காட்டுகின்றன.*

*அ. தட்சிணாமூர்த்தி அழுது வருத்தம் தெரிவிக்கும் நிலை பற்றி 'இறந்துபட்டோரின் உரிமை மகளிரும், பிற பெண்டிரும் தன் கைவளைகள் சிதறுமாறு தம் மார்பகங்களில் அறைந்து புலம்பிப் புசலிட்டழுவதும் அன்றைய மரபாக இருந்தது' என்று கூறுகிறார் (1987: 146).*

*இதனால் இறந்த ஆத்மாவின் பிரிவையும்ட அவரில்லாமல் அடையப்போகும் துன்பத்தையும் நினைத்து அழுதுள்ள நிலையை அறிந்து கொள்ளலாம். இறப்பானது இயற்கையால் உயிர்களுக்கு ஏற்படக்கூடியது என்றாலும் மனிதன் இறந்த அவனது உடல் அழிக்கப்படுதல் பெருந்துயரினை ஏற்படுத்தக் கூடியதாகும்.*

*குறிப்பாக உற்றார், உறவினர்களில் உற்றவர் படுந்துன்பத்திற்கு அளவில்லை. இறந்தவரின் அன்பு, உணர்வு குணநலன்கள் போன்ற பல காரணங்களை மனதில் கொண்டு அவரும் வாழ்வும் முடிந்துவிட்டதை எண்ணி அவர்மீது தாங்கள் கொண்ட அன்பின் உணர்வினை வெளிப்படுத்தும் முறையில் அழுது புலம்புகின்றனர் என்று கூறலாம்.*

**வெள்ளாடை உடுத்திப் பாடையில் வைத்தல்**

*இறந்தவரைப் பாடையில் வைத்து வெள்ளாடைப் போன்ற துணியால் போர்த்திச் சுடுகாட்டிற்கு எடுத்துச் சென்று அடக்கம் செய்யும் வழக்கத்தைச் சங்ககால மக்கள் மேற்கொண்டுள்ளனர்.*

*காலில்லாதக் கட்டிலாகிய பாடையில் பிணத்தை வைத்து வெண்ணிறத் தூய ஆடையினால் மூடிச் சென்றதை,*

**"கால்கழி கட்டிலிற் கிடப்பித்**
**தூவெண் அறுவை போர்ப்பித் திலதே"**

*(புறம். 286)*

*என்று ஔவையார் கூறுகின்றார்.*

*இவற்றின் மூலம் பிணத்திற்கு வெள்ளாடை உடுத்தி அடக்கம் செய்யக்கூடிய பாரம்பரிய முறையினை அறியமுடிகிறது.*

*இறந்த உயிரானது தேவலோகம் சென்றடையும் என்பது மக்களின் நம்பிக்கையாகும். அவ்வாறு செல்லும் உயிரும் புதுமையான முறையில் சென்றடைய வேண்டி பிணத்திற்குப் புத்தாடையாகிய வெள்ளிய உடையினை உடலில் சுற்றி அடக்கம் செய்திருக்கின்றனர் என்பதை அறியமுடிகின்றது.*

**சுடுகாட்டுச் சடங்குகள்**

*மயானமாகிய சுடுகாட்டிற்குப் பிணத்தினை எடுத்துச் சென்ற சில சடங்கு முறைகளைப் பின்பற்றி அடக்கம் செய்துள்ள முறை சங்ககாலச் சமுதாயத்தில் நிலவிவந்த பழக்க வழக்கமாகும். அவ்வாறு சுடுகாட்டில் மேற்கொள்ளப்பெற்று சடங்குகளாக அடக்கம் செய்தல் என்ற சடங்காகும்.*

**அடக்கம் செய்தல்**

*ஊருக்குப் புறத்தே அமைந்த இடுகாட்டிற்குப் பிணத்தினைக் கொண்டுசென்று இறுதிச் சடங்கினைச் செய்து அடக்கம் செய்துள்ளனர். அவ்வாறு எடுத்துச் செல்லப்பட்டப் பிணத்தினை இருநிலைகளில் அடக்கம் செய்கின்றனர். அவை,*

*1. புதைத்தல்*

*2. தீ மூட்டல்*

*என்பனவாகும்.*

**புதைத்தல்**

*சங்ககாலத் தமிழர்கள் வீரத்திற்குப் பெயர் பெற்றவர்கள். இறந்த பிணத்தினை மண்ணில் அடக்கம் செய்யும்பொழுது அதனை வாளால் கீறிப் பிறகே புதைத்துள்ளனர். இதனை,*

**"குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்**

**ஆள் அன்று என்று வாளில் தப்பார்"**

*(புறம்.174)*

*என்று புறநானூறு குறிப்பிடுகிறது.*

*பிணத்தினைப் புதைப்பதற்குரியத் தாழியினைச் சுடுகாட்டில் வைத்திருந்தனர் என்பதைச் சங்க இலக்கியச் சான்றால் உணரமுடிகின்றது. அந்நிலையை,*

**"முதுமரப் பொத்திற் கதுமென இயம்பும்**

**கூகைக் கோழி ஆனாத்**

**தாழிய பெருங்கா டெய்திய ஞான்றே"**

*(புறம். 364)*

*எனும் பாடல் வரியினால் உணரலாம். இதன் மூலம் பிணத்தினைக் கொண்டுசெல்லும் போது புதைப்பதற்குண்டானத் தாழியையும் எடுத்துச் செல்லும் மரபினை அறியமுடிகிறது.*

*இவற்றின் மூலம் பண்டைத் தமிழர் மனிதன் இறந்தபின் அவனது உடலைத் தாழி மற்றும் மண் குழிகளில் வைத்து அடக்கம் செய்த முறைகளை அறிந்து கொள்ள முடிகின்றது.*

**தீ மூட்டல்**

*இறந்த உடலை விறகினால் ஆகிய படுக்கையைத் தயார் செய்து அதன் மேல் பிணத்தை வைத்துத் தீயிட்டு அழிக்கும் முறை தீ மூட்டல் எனப்படும். இதனால் உடலானது உடனே அழிக்கப்படுகிறது.*

*பெருங்கோப்பெண்டு இறந்தபோது அவனது உடலை விறகுப் படுக்கையில் படுக்க வைத்து தீயிட்டுக் கொளுத்தியதாகப் புறநானூற்றுப்பாடல் குறிப்பிட்டுள்ளது.*

**"சுள்ளி போகிய களரியம் பறந்தலை**

**வெள்ளிடைப் பொத்திய விளைவிறகு ஈமத்து**

**ஒள்ளழல் பள்ளிப் பாயல் சேர்த்தி**

**ஞாங்கன் மாய்ந்தனன் மடந்தை**

**இன்றும் வாழ்வல் என்னிதன் பண்பே"**

*(புறம். 245)*

*என்பதாகும்.*

*ஆய் அண்டிரனின் இறந்தஉடலைத் தீயினால் எரித்த நிலையை,*

**"கள்ளியம் பறந்தலை ஒரு சிறை அல்கி**

**ஒள்ளெரி நைப்ப உடம்பு மாய்ந்தது"**

*(புறம். 240)*

*என்று புறநானூற்றுப் பாடல் வரிகள் சுட்டிக் காட்டுகின்றன. இவற்றின் வழி இறந்தவரின் உடலைத் தீயிட்டு அழித்த முறையினை அறிந்து கொள்ள முடிகின்றது.*

*உயிர் பிரிந்த உடலினால் எந்த விதமானப் பயன்களும் இல்லை. அதனால் அவ்வுடலைத் தூக்கி வீசிவிட்டால் அழுகி நாற்றம் கொண்டு தொற்றுநோய் போன்ற பல துன்பங்களை உயிர்களுக்குக் கொடுக்கும் என்பதை அறிந்த பண்டைத் தமிழர் பிணத்தினைச் சுடுகாட்டிற்குக் கொண்டு சென்று அழித்துள்ளனர். மேலும் இடுகாட்டினை அஆட்கள் அதிகம் செல்லாத கள்ளிகள் நிறைந்த காட்டுப்பகுதியில் தனியானதொரு இடம் அமைத்து ஈமச்சடங்குகளைச் செய்துள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.*

**ஒப்பனைகள் களைதலும் நோன்பிருத்தலும்**

*பெண்கள் தங்களுடைய கணவனை இழந்தால் அவர்களுடைய கூந்தல், வளையல், திலகம் ஆகியவைகளை நீக்கி வெள்ளாடையை உடுத்தச் செய்தனே ஒப்பனைக் களைதலாகும்.*

*தலைவனைக் காணாத தலைவி நெற்றியில் திலகமின்றி இருந்த நிலையை,*

**“நன்னுதல் நீத்த திகலத்தள்”** *(கலித்.143)*

*என்று கலித்தொகை கூறுகின்றது.*

**“பூவாள் கோவலர் பூவுடன் உதிரக்**
**கொய்து கட்டழித்த வேங்கையின்**
**மெல்லியல் மகளிரும் இழைகளைந் தனரே”** *(புறம். 224)*

*என்று வேங்கை மரம் இலைகள் உதிர்ந்து பட்ட மரம்போல் நின்றதைப் போன்று கணவனை இழந்த மகளிர் அணிகலன்கள் நீங்கி காணப்பட்டாள் என்று கூறுகின்றது.*

*அணிகலன்கள் நீங்கி அல்லி அரிசியால் ஆக்கப்பெற்ற உணவினை உண்டு நோன்பிருந்த மகளிரின் நிலையை,*

**“ஊழின் உருப்ப எருக்கிய மகளிர்**
**வாழைப் பூவின் வளை முறி சிதற”**

*(புறம். 237)*

*எனும் பாடல் வரிகளாலும் அறிந்து கொள்ளலாம்.*

*இதனால் சங்ககாலச் சமூகத்தில் கணவனை இழந்து கைம்மை நிலை அடைந்த பெண்களின் வாழ்க்கை நிலையையும் சமுதாயத்தில் எவ்வித முன்னுரிமையும் அளிக்கப்படாமல் தனிமைப்படுத்தப்பட்டிருப்பதையும் உணர முடிகின்றது.*

*ஆணும் பெண்ணும் சமமென்று கூறினாலும் கணவனை இழந்தவர்களைத் தனிமைப்படுத்தி, கணவனால் அணியப்பெற்ற மங்கல நாண் மட்டுமின்றி பெண்களுக்கே உரிய பூ, திலகம், காதணி போன்ற இன்னும் பிற அணிகலன்களை நீக்கித் தலைமழித்து வெண்ணிற ஆடை உடுத்தி சத்து இல்லாத உணவினை வழங்கியுள்ளனர் என்பதை அறியும்போது சங்க காலத்தில் ஆணாதிக்கத்ததின் நிலை மேலோங்கி இருந்ததற்கு அடையாளமாகக் கொள்ளலாம்.*

*புல்லரிசி, அல்லியரிசி போன்ற உணவினை அளித்துள்ள நிலையை ஆராயும்போது சத்து அதிகம் மிகுந்த உணவால் காமநோய் அதிகரித்து*

பிற ஆடவர் தொடர்பு ஏற்படாமல் தடுத்து ‘கணவனே பெண்களின் அணிகலன்’ என்னும் கற்பு நெறியின் சிறப்பும் அக்காலத்தில் கடைப்பிடிக்கப்பட்டிருந்தது என்பதும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

ஆணும் பெண்ணும் நிறைந்த சமுதாயத்தில் பெண்கள் இறந்தால் கணவனுக்கென்று எவ்வித சடங்கினையும் மேற்கொள்ளாத அக்காலச் சமூகம் ஆண் இறந்தால் மட்டும் பெண்களைத் தனிமைப்படுத்தி இயல்பாக அணியக்கூடிய அணிகலன்களையும் கவர்ந்து ஒப்பனை இன்றி வாழவைத்துள்ளதன் மூலம் அக்காலச் சமூகத்தில் பெண்கள் இழிவாகக் கருதப்பட்ட நிலையை உணரமுடிகின்றது.

சங்ககாலத்தில் உள்ள ஒப்பனைகள் களைதலும் நோன்பிருத்தலும் என்ற பழக்கமானது இன்றும் நடைமுறையில் இருந்து வருகிறது. கணவன் இறந்த பெண்ணை அமரச் செய்து அவர்கள் அணிந்துள்ள தாலி, பூ கொய்து, வளையல் போன்ற அணிகலன்களை நீக்கி விடுகின்றனர். ஆனால் கணவனை இழந்த பெண்ணுக்கு உணவு கொடுக்கின்றனர். பதினாறு நாட்களக்கு அசைவ உணவைக் கொடுப்பது கிடையாது. சங்க காலத்தில் கணவனை இழந்த பெண்ணுக்குச் செய்கின்ற சடங்கு முறைகள் அனைத்தும் இன்றும் வழக்கில் உள்ளது. ஆனால் உணவுமுறையில் மட்டும் மாற்றம் அடைந்துள்ளன எனலாம்.

**இறப்புச் சடங்கு**

| இலக்கியம் (சங்ககாலம்) | களம் (தற்காலம்) |
|---|---|
| இறந்தவரை நினைத்து மனவேதனையை அழுகு வெளிப்படுத்தல் (கையறு நிலை) | ஒப்பாரியின் வாயிலாக வெளிக்காட்டுதல் |
| இறந்தவர் வீட்டில் இரங்கல், பறை அடிக்கப்படுதல் | வழக்கம் உள்ளது |
| வெள்ளாடை உடுத்திப் பிணத்தினைப் பாடையில் வைத்துத் தூக்கிச் செல்லுதல் | கோடி உடுத்திப் பல்லக்கிலும், ஆம்புன்ஸ் சவ வண்டிகளில் எடுத்துச் செல்லுதல் |

| | |
|---|---|
| பிணத்தினைத் தீயிட்டும், தாழியில் வைத்து குழிக்குள் புதைக்கும் மரபு உள்ளது | தீயிட்டு சவப்பெட்டிகளில் வைத்தும் அடக்கம் செய்தல் |
| இறந்தவருக்கு வேண்டிய கடமைகளைச் செய்தல் (தென்புலத்தார் கடன்) | ஒரு வருடத்திற்கு பண்டிகை நாட்களில் படையலும், இறந்த நாளில் திவசமும் கடைப்பிடித்தல் |
| கணவனை இழந்த பெண்ணின் தலைமழித்து அணிகலன் நீக்கப்பட்டு, வெள்ளாடை உடுத்தி, அசையற்றஉணவு அளித்துள்ள நிலை | தாலி முதலிய அணிகலன்கள் மட்டும் நீக்கப்படுதல் |

*இறக்கும் நிலையில் இருப்பவருக்குப் பால் ஊற்றுதல், இறந்தபின் நாடிகட்டி, நிறைநாழி வைத்தல், வழியனுப்புதல், ஆள்விட்டுச் செய்தி கூறல் வரிசை வாங்குதல் தண்ணீர் கொண்டு வந்து நீராட்டுதல், நெய்ப்பந்தம் பிடித்தல், வாய்க்கரிசிப் போடுதல், அடி எடுத்தல், எள் பொரி தெளித்தல், சுற்றி உடைத்தல், கருமாதி வைத்தல் எனும் சடங்குகள் களப்பணியில் கூடுதலாக அறியமுடிகிறது.*

**வழிபாடுகள்**

*வழிபாடு என்ற சொல் இன்று தொழுதல் என்ற பொருளிலேயே பெரும்பாலும் வழங்கப்படுகிறது. காட்டிய வழியில் பின்பற்றி நடத்தலே வழிபடுதல் எனப்படுவது என்கிறார் சொக்கலிங்கம். பழந்தமிழ் இலக்கிய இலக்கணங்களில் வழிபாடு என்ற சொல் பயின்று வந்துள்ளன.*

**“வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப**
**அழி இல முயலும் ஆர்வ மாக்கள்**
**வழிபடு தெய்வம் கண்கண் டாங்கு**
**வழிபட்ட தெய்வம்தான் வலி எனச் சார்ந்தார்கண்**
**கழியும் நோய் கைம்மிக அணங்காகியது போல”**

*என்ற சான்றுகளினால் வழிபாடு என்ற சொல் எடுத்தாளப்பட்டுள்ளது.*

**இயற்கை வழிபாடு**

*இயற்கையின் கூறுகளான நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் போன்ற இயற்கைப் பொருட்களை வழிபடும் தன்மையினையே இயற்கை வழிபாடாகக் கருதுகின்றனர். பழந்தமிழர் இயற்கைக் கூறுகளை வழிபட்டமையினை மலை, கடல், ஞாயிறு, திங்கள் ஆகியவற்றை வழிபட்டமையைத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.*

**"கொடிநிலை கந்தழிவள்ளி என்ற**
**வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"**

*(தொல். பொருள். 85)*

*எனச் சுட்டியுள்ளார்.*

*ஞாயிற்றினை வழிபடும் வழக்கம் உலகெங்கும் பரவியிருந்த தொன்மையான வழிபாட்டு நிலையாகும். பழந்தமிழர் ஞாயிற்றினை ஆண் தெய்வமாகவே கருதி வழிபட்டுள்ளனர்.*

*இதனைச் சங்க இலக்கியத்தில் ஞாயிற்றினைப் பகல்கெழு செய்வன், பருதியஞ் செல்வன் எனக் குறிப்பிடுகின்றன. இதனை,*

**"குணகடல் இவர்ந்து குரூஉக்கதிர் பரப்பிப்**
**பகல்கெழு செல்வன் குடமலை மறையப்**
**புலம்புவந் நிறுத்த புன்கண் மாலை"**

*(நற்றி. 215: 1-3)*

*என்றும்,*

**"பகல்செய் பல்கதிர்ப் பருதியஞ் செல்வன்**
**அகல்வாய் வானத் தாழி போழ்ந்தென**
**நீரற வறந்த நிரம்பா நீளிடை"**

*(அகம். 229: 1-3)*

*எனும் இப்பாடல் கூறுகின்றது.*

*சூரிய வழிபாடு அதன் நம்பிக்கைகள் பழந்தமிழர் காலையில் தொழுது வந்தனர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன.*

**"தயங்குதிரைப் பெருங்கடலுலகு தொழுத்தோன்றி**
**வயங்கெதிர் விரிந்த வுருகெழு மண்டிலம்"**

*(அகம். 263: 1-2)*

*என அகநானூறு குறித்துள்ளது. இதற்கு நற்றிணை குறிப்பும் உள்ளது.*

**"முந்நீர் மீமிசைப் பலர்தொழத் தோன்றி**
**ஏமுற விளங்கிய சுடரினும்**
**வாய்மை சான்றநின் சொல்நயந் தோர்க்கே"**

*(நற்றி. 283: 6-8)*

*திங்கள் வழிபாடும் பழந்தமிழரிடையே சிறப்புற்றிருந்தனைப் பிறைதொழும் பெண்டிரின் நிலை உணர்த்தும். வாழ்விற்கு ஆக்கமளிக்கும் தன்மையால் பரதவப் பெண்டிர் கடலை வணங்கி வழிபட்டனர் என்பதற்கு அகநானூறு சான்றளிக்கின்றது. அதைப்போல் கலித்தொகையும் சான்றளிக்கின்றது.*

*இதனை*

**"புகழ்மலி சிறப்பிற் கொற்கை முன்றுறை**
**அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து**
**தழையணிப் பொலிந்த கோடேந்து அல்குல்**
**பழையர் மகளிர் பனித்துறைப் பரவ"**

*(அகம். 201: 1-4)*

*மேலும்,*

**"கொடிச்சியர் கூப்பி வரைதொழு கைபோல்"**

*(கலி. 40:11)*

*மேற்காட்டிய சான்றுகள் கொண்டு பழந்தமிழர் இயற்கையின் கூறுகளை நன்மை என்று கருதி அவற்றை வழிபட்டனர் என்பது புலனாகின்றது.*

**பலியிடுதல்**

*பலியிடுதல் பழஞ்சமுதாயத்தில் தெய்வத்தை அமைதிப்படுத்த கையாண்ட வழிபாட்டு முறையாகும். பலியிடுதல் தெய்வத்தின் சீற்றத்தினைத் தணிப்பதற்கு மேற்கொள்ளப்பட்டுள்ளது. இதனை,*

**"அணங்கறி கழங்கிற் கோட்டல் காட்டி**
**வெறியென வுணர்ந்த வுள்ளமொடு மறியறுத்து**
**அன்னை யயரு முருகுறின்**
**பொன்னேர் பசலைக் குதவா மாறே"**

*(நற்றி. 47: 8-11)*

*வெறியாட்டில் தினையினை நீரோடும், குருதியோடும் விரவி வழிபட்டமையினை நெல்லும் நீரும் எறிந்து விரிச்சியோர்க்கும் நிலையோடு ஒத்து தெய்வத்திற்குப் படைத்தனர் என்பதனை,*

**"முருகென வுணர்ந்து முகமன் கூறி**
**உருவச் செந்தினை நீரொடு தூஉய்**
**நெடுவேட் பரவும் அன்னை"** *(அகம். 272: 13-15)*

**"களம்நன் கிழைத்துக் கண்ணி சூட்டி**
**வளநகர் சிலம்பப் பாடி பலிகொடுத்து**
**உருவச் செந்தினை குருதியொடு தூஉய்**
**முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்"**

*(அகம். 22: 8-11)*

*மேலும் இதனை,*

**"நன்னுதற் பசந்த படர்மலி யருநோய்**
**அணங்கென வுணரக் கூறி வேலன்**
**இன்னியங் கறங்கப் பாடிப்**
**பன்மலர் சிதறிய பரவுறு பலிக்கே"**

*(நற். 322: 9-12)*

*என்று நற்றிணைப் பாடல் குறிப்பிடுகின்றது.*

**அணங்கு**

*இயற்கையின் கூறுகள் மற்றும் செயல்களின் அச்சமூட்டும் பண்புகளுக்கும் புதிரான செயல்களுக்கும் காரணம் கண்டுபிடிக்க இயலாத மனித மனத்தின் கற்பனைப் படைப்பே அணங்கு ஆகும். பழந்தமிழ் இலக்கியங்களில் அணங்கு பற்றிய செய்திகள் மிகுந்து காணப்படுகின்றன. தொல்காப்பியத்திலும் காணப்படுகின்றன.*

**“அணங்கே விலங்கே கள்வர் தம் இறையெனப்**
**பிணங்கல் சாலா அச்சம் நான்கே”**

*(தொல். பொருள். 252)*

*எனச் சுட்டியுள்ளனர்.*

*அணங்கு பேயும் வேண்டிய உருவங்களை எடுக்க வல்லன என்பதையும், பேயும் அணங்கும் பழந்தமிழ்ப் புலவர்களால் பலிவிடங்களில் ஒருங்கிணைந்து காணப்படுகின்றன. இதனை,*

**“பானாட் கொண்ட கங்கு லிடையது**
**பேயும் அணங்கும் உருவுகொண் டாய்கோற்**
**கூற்றக் கொல்தேகர் கழுதொடு கொட்ப”**

*(மதுரை. 631-633)*

*மேலும் மலையில் ணஅங்கு உறைவதாகக் கருதுகின்றனர். இதனை,*

**“அருவி யார்க்கு யணங்குடை நெடுங்கோட்டு**
**ஞானங்க ரிளவெயி லுணீஇய வோங்குசினைப்**
**பீலி மஞ்ஞை பெடையோ டாடும்**
**குன்ற நாடன்”**

*(நற்றி. 288: 1-4)*

**“அணங்குடை நெடுவரை யுச்சியின் இழிதரும்**
**கணங்கொள் அருவிக் கான்கெழு நாடன்”**

*(அகம். 22: 1-2)*

*போன்ற சான்றுகளால் அறியமுடிகின்றது.*

**பேய்**

*பழந்தமிழ் இலக்கியங்களில் அச்சந்தரக்கூடிய கூறுகளாகப் பேய், பூதம் போன்ற சக்திக்ள மனித வாழ்வியலோடு இணைத்து காணப்படுகின்றன. பேய் அச்சந்தரக்கூடிய உருவையும் அச்சத்திற்கு அடிப்படையான இடங்களையுமே தங்களுடைய உறைவிடமாகக் கொண்டிருக்கின்றன மேலும் மனித மனத்தின் அச்ச உணர்வால் ஏற்பட்டவையாகும்.*

*பழந்தமிழ் இலக்கியங்களில் இதனை அலகை, கடி, கழுது, கூளி, பாசம் எனப் பல பெயர்களால் குறித்துள்ளனர். மேலும் அச்சம் தரும் அமைப்புடையதாக அமையும் பேயின் உருவத்தினை,*

**“களிற்றுக்கோட் டன்ன வாலெயி றழுத்தி**
**விழுக்கொடு விரைஇய வெண்ணினச் சுவையினள்**
**குடர்த்தலை மாலை சூடி யுணத்தின**
**ஆனாப் பெருவளஞ் செய்தோன் வானத்து**
**வயங்குபவன் மீனினும் வாழியர் பல்லென**
**உருகெழு பேய்மக ளயரக்**
**குருதித்துக ளாடிய களங்கிழ வோயே”** *(புறம். 371: 21-27)*

*என விவரித்துள்ளார்.*

*வேம்பு என இலக்கியம் சுட்டும் வேப்பமரம் பேயை விரட்டும் சக்தி பெற்றதாக அன்றுதொட்டு இன்றுவரை தமிழ் மக்களால் நம்பப்பட்டு வருகிறது. இதனை அரவாய் வேம்பு, அவராய்க் கடிப்பகை என இலக்கியங்கள் குறித்துள்ளன. இதனை,*

**“இரும்பனம் போந்தைத் தோடுங் கடுஞ்சினை**
**அரவாய் வேம்பின் அங்குழைத் தெரியலும்**
**ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த**
**இருபெரு வேந்தரும் ஒருகளத் தவிய”**

*(பொரு. 143-146)*

மேலும் வேம்பு மருத்துவக் குணங்களைக் கொண்டதென்பது அறிவியல் ஆராய்ச்சி வாயிலாகத் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. இன்று மருந்துப் பொருளாகவும், நோய்க்கிருமிகளை அழிக்கும் சக்தி பெற்றதாகவும் கருதப்பட்டு மனிதனுக்கு நோய்ப்பகையாகப் பயன்பட்டு வருகின்றது. இவை மருந்து பொருளாகவும், பேய், பிசாசுகளை விரட்டும் சக்தி படைத்திருப்பதாலும் இதனை வீட்டின் வாயிலில் செருகி வைத்திருப்பர் எனக் குறிப்பிடுகின்றார்.

மக்கள் வீட்டின் கதவு, சன்னல் செய்வதற்கு வேப்பமரத்தைத் தேர்ந்தெடுப்பதன் காரணம் பேய் பிசாசுகள் நெருங்காதிருக்கவும், அவைகளின் தாக்குதல்களிலிருந்து பாதுகாக்கவும், இம்மரத்தைப் பயன்படுத்துகின்றனர். இன்றைய வாழ்விலும் வேப்பந் தழையினைத் தொங்க விடுகின்றனர். இது பேய் அணுகாதிருக்கும் பொருட்டு மேற்கொள்ளப்படுகின்றது.

இயற்கை வழிபாடு என்பது ஆதிமனிதனின் வாழ்வோடு இரண்டறக் கலந்த வழிபாடாக நிலவியது. தான் முதன் முதலில் கண்டதும், தனக்குப் பேருதவியாக இருந்ததும் அதே சமயத்தில் தன்னை அழிக்கும் ஆற்றல் கொண்டதாகும். தீ, காற்று, விலங்கு, பாம்பு, மரம் போன்றவைகளையும் வணக் முற்பட்டான். சூரியனைத் தெய்வ சக்தி என வழிபடத் தொடங்கினான்.

பொங்கல் விழா குறித்த வேளாண்மைக்கு உதவும் இயற்கைக்கும், கால்நடைகளுக்கும் நன்றி தெரிவிக்கும் விழா என்ற கருத்து முன்வைக்கப்படுகிறது. இவ்விழாவை ஏறுதழுவுதல் நிகழ்வுகளோடும், வாய்மொழி வழக்காறுகளோடும் இணைத்துப் பார்க்கும்போது பண்டைத் தமிழரின் வாழ்வியல் செயல்பாடுகளின் நீட்சி பெற்ற நிகழ்த்துதல் வடிவமாகப் பொங்கல் விழாவைக் குறிப்பாக மாட்டுப் பொங்கல் விழாவை அடையாளப்படுத்த முடியும்.

சூரியன் இயக்கத்தை அடிப்படையாகக் கொண்டு வானநூல் அடிப்படையிலும் நடைமுறையில் உள்ள பழக்க வழக்கங்களின்

அடிப்படையிலும் மக்களின் நனவு சார்ந்த நிலையிலும் தை முதல் நாள் அதாவது பொங்கல் வழா தமிழரின் புத்தாண்டுத் தொடக்கம் என்பதை அடையாளப்படுத்துகின்றன. காலங்காலமாக தை முதல் அன்று ஆண்டுப் பிறப்பு என்ற எண்ணம் மக்கள் மனங்களில் ஆழமாகப் பதிந்து இருக்கின்றன.

தை முதல் நாள் அதாவது பொங்கல் திருநாள் தமிழர்களின் ஆண்டுப் பிறப்பு என்பதாலேயே இந்நாளுக்கு அடுத்த நாள் பண்டைய வாழ்வியல் மரபான வெட்சிப் போர் மற்றும் ஏறு தழுவுதல் நிகழ்வுகள் நிகழ்த்திக் காட்டப்படுகின்றன. இந்த நிகழ்த்துதல்களே மாட்டுப்பொங்கல் நிகழ்வுகளாக உள்ளன. பொங்கல் விழாவின் இறுதி நாளான கரிநாள் தமிழகம் முழுக்க மகிழ்ச்சியாகக் கொண்டாடப்படுகிறது. மாட்டுப் பொங்கலுக்கு அடுத்து வரும் இந்த நாளில் பெண்கள் மஞ்சள் தண்ணீரைமாமன் மச்சான் மேல் ஊற்றி மகிழ்கின்றனர்.

நற்சொல் கேட்டல் எனும் கூறு தொல்காப்பியம் தொடங்கி சங்க இலக்கியம், புறப்பொருள் வெண்பா மாலையிலும் இன்றை மாட்டுப் பொங்கலிலும் இடம்பெற்றுள்ளது. இலக்கண இலக்கியங்களில் வீரர்கள் தாம் மேற்கொள்ளும் ஆநிரை கவரும், மீட்கும் நிகழ்வுகளில் வெற்றி கிடைக்குமா என்பதற்காக நற்சொல் கேட்ட பண்டைய மரபு இன்றைய நிலையில் நல்லநாள், நல்லநேரம் பார்த்தல் என்பதனைக் குறிக்கும்.

ஆநிரை கவரும் போரிலும், மீட்கும் போரிலும் ஆநிரை கவரச் செல்வதற்கான அறிவித்தலிலும் பறை, துடி, தண்ணுமை போன்ற இசைக்கருவிகள் பயன்பட்டதைப் போன்று மாட்டுப் பொங்கலன்று பறை, தாரை, தப்பட்டை போன்ற இசைக்கருவிகளை இசைத்து ஊர் மாடுகளை அவிழ்த்துவிட்டு ஊர் பொது இடத்திற்கு ஓட்டிவரும் வழக்கம் உள்ளது. ஆநிரை கவரச் சென்றவர்கள் மாலையில் சென்றதைப் போன்று மாட்டுப் பொங்கல் நிகழ்வுகள் மாலையில் தொடங்குகின்றன.

ஆநிரை மீட்ட கரந்தை வீரர், ஆநிரை மீட்கும் போரில் இறந்துபட்டு நடுகல்லான தம் முன்னோரை வழிபடும் பண்டைய மரபு இன்றை மாட்டுப்

*பொங்கலில் அவரவர் முன்னோரை வழிபடுதல் என்பதாக அமைந்துள்ளது.*

*ஆநிரை கவர்ந்தும், மீட்டும் வந்த வீரர்கள் ஆக்களைக் கொடுத்துக் கள்ளுண்ட செய்தியை இலக்கண இலக்கியங்கள் சுட்டுகின்றன. இதனை உண்டாட்டு எனத் தொல்காப்பியமும் புறப்பொருள் வெண்பா மாலையும் குறிப்பிடுகின்றன. சங்ககாலத் தமிழர்கள் மரக்கறி உணவாயினும் இறைச்சி வகை உணவாயினும் உண்பதில் பெரும் அக்கறை கொண்டுள்ளனர்.*

*சங்ககாலத்தில் ஆட்டுக் கடாக்களை அறுப்பதும் கள்ளைக் குடம் குடமாக அருந்துவதும் மிக இயல்பாக வழக்கங்களாக இருந்தன. இதனை,*

**“மட்டுவாய் நிறப்பவும் மைவிடை வீழ்ப்பவும்**
**அட்டான்று ஆனாக் கொழுந்துவை ஊன்சோறும்**
**பொட்டாங்கு ஈயும் பெருவளம் பழநி”**

*(புறம். 133: 1-3)*

**“புலவு நாற்றத்த பைந்தடி**
**பூநாற்றத்த புகைகொளீஇ ஊன்துவை**
**கறிசோறு உண்டு வருந்து தொழில் அல்லது**
**பிறிது தொழில் அறியா”**

*(புறம். 114: 12-15)*

*எனவரும் பகுதிகளால் உறுதி செய்து கொள்ளலாம். மேலும் இதனை,*

**“கள்குடிக்கவும் அரிசில்சோறு ஆக்கவும் இறைச்சித்**
**துண்டுகளை வெட்டவும் வறுத்து எடுத்த பிற**
**தின்பண்டங்களை உண்ணவும் வருக”**

*(பதிற். 81: 1-3)*

*இம்மரபு இன்றும் நடைமுறையில் உள்ளது. அதாவது பொங்கல் மற்றும் விழாக் காலங்களிலும், இறப்பு நேரங்களிலும் மேலும் இன்பம் மற்றும் துன்பம் வரும் நேரங்களிலும் மதுவருந்தி மகிழ்ச்சியுடனும் தன் கவலைகளை மறப்பதற்காகவும் இதனை அருந்துகின்றனர். இதனை*

இலக்கண நூல்கள் குறிப்பிடும் உண்டாட்டோடு தொடர்புடைய அல்லது அதனுடைய தொடர்ச்சியெனக் கருதப்படுகிறது.

பண்டைய இலக்கண இலக்கியங்கள் குறிப்பிடும் ஆநிரை கவர்தல், மீட்டல் மற்றும் ஏறுதழுவுதல் நிகழ்வுகளின் நிகழ்த்துதல் வடிவமே இன்றைய மாட்டுப்பொங்கல் விழா என்னும் முடிவுக்கு வரமுடிகிறது. மேலும் ஒற்றறிதல், பதுங்கியிருத்தல், காடுகளில் ஆக்களை மறைத்தல் எனும் கூறுகளைத் தவிர பிற கூறுகள் அனைத்தும் இன்றைய மாட்டுப் பொங்கல் நிகழ்வுகளோடு பொருந்திப் போகின்றன. தொல்காப்பியம் சங்க இலக்கியம் இவற்றில் மாட்டுத் திருட்டு (மாடு பிடித்தல்) மாட்டுப் பொங்கல் இவற்றிற்கிடையே முழுமையான ஒப்புமைகள் காணப்படுகின்றன.

மக்களின் கூட்டுப் படைப்புகள், மரபார்ந்த அறிவுத் திறனின் வெளிப்பாடுகள், கூட்டுப் படைப்புத்திறனின் இலக்கிய வடிவங்கள் எனப் பல்வேறு பரிமாணங்களில் வெளிப்படுபவை, இயங்குபவை அவற்றுள் பண்டைய இலக்கியப் படைப்புகள் மற்றும் வாழ்வியலின் மரபுத் தொடர்ச்சியைக் காணமுடியும்.

தெய்வ வழிபாடும் விழாக்களும்

| இலக்கியம் (சங்ககாலம்) | களம் (தற்காலம்) |
|---|---|
| சூரிய வழிபாடு | தை முதல் நாள் சூரியனுக்கு ஏற்ற நாளாகக் கடைப்பிடிக்கப்பட்ட மக்களால் பொங்கல் வைத்து வணங்கப்படுகிறது |
| மாலையில் விளக்கேற்றி வழிபடல் | இன்றும் இவ்வழக்கம் உள்ளது. செவ்வாய் வெள்ளிக்கிழமைகளில் மாலைப்பொழுதில் வீட்டிற்குச் சாம்பிராணி நறுமணப் புகை எழுப்புகின்றனர் |

| | |
|---|---|
| கொற்றவை வணங்கப்படுதல் | காளி தெய்வ வழிபாடு |
| நடுகல் வணக்கம் | சமாதி, நினைவாலயம், கல்லறைகள் அமைத்தல், கருவுற்றவர் இறக்க நேரிட்டால் சுமைதாங்கி கல் நடும் மரபுள்ளது |
| அணங்கு தீண்டி பயமுறுத்தும் நிலையில் வணங்கப்பட்டுள்ளது | பிசாசும் உருவமற்றதாக பயமுறுத்தும் தன்மையில் கருதப்படுகிறது |
| ஆலமரம், கடம்ப மரம், வேம்பு, வேங்கை, பனை, ஓமை, கள்ளி முதலிய மரங்களிலும் பொதிகை இமயமலை, கல்தூண் ஆகியவற்றிலும் தெய்வங்கள் இருப்பதாகக் கருதியுள்ளனர் | ஆலமரத்தில் அய்யனார், வேம்பில் மாரியம்மன், பனையில் கருப்பு போன்ற தெய்வங்கள் இருப்பதாக நினைத்து வழிபடுகின்றனர். |
| தெய்வத்திற்கு மலர்கள், தானியங்கள் படைத்தல், பலி கொடுத்தல் முதலியவைகளைப் படைத்துள்ளனர் | இன்றும் இம்முறைகள் காணப்படுகின்றன. காளி, கருப்பு முனியாண்டவர் ஆகியவற்றிற்கு இரத்தப்பலி கொடுக்கின்றனர் |
| கார்த்திகை, இந்திரவிழா, பங்குனி ஓணவிழா, புனலாடுதல், காமன் உள்ளி பிறந்தநாள், பூந்தொடை போன்ற விழாக்கள் கொண்டாடப்பட்டுள்ளன | கார்த்திகைத் தீபம், பங்குனி உத்தரம், ஓணம் பண்டிகை, புனலாடுதல், பிறந்தநாள் போன்ற விழாக்கள் நடைமுறையில் உள்ளன |

**வேளாண்மை**

பண்டையத் தமிழ்ச் சமுதாயத்திற்குக் காலத்தைக் கணித்துக் காட்டும் இலக்கியமும் வரலாறும் சங்ககாலத்து இலக்கியங்கள் ஆகும். முதுபெரும் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில் வேளாண்மை பற்றிய செய்தி உள்ளது. சங்ககால இலக்கியங்களைத் தொகுத்துப் பார்க்கும் பொழுது வேளாண்மை வரலாற்றுக்குச் சங்ககால இலக்கியங்கள் கொண்டும், வாய்மொழி மரபிலும் வேளாண்மைச் செய்திகளை அறியமுடிகின்றது.

*மனித வாழ்விற்கு அடிப்படையான உணவினை வழங்கக் கூடிய பயிர்த்தொழில் வேளாண்மையாகும். இத்தொழிலில் ஈடுபடுவோர் உழவர்கள் என்றழைக்கப்படுவர். வேளாண்மை பயிர்த்தொழில், விவசாயம் என்று அழைக்கப்படும். உழவர்கள் என்போர் விவசாயி, குடியானவர், வேளாளர் என்றும் அழைக்கப்படுவர்.*

*பழந்தமிழ் இலக்கியங்களில் வேளாண்மை பற்றிச் செய்திகள் மிகுந்திருக்கின்றன.*

**“வேளாண் மாந்தர்க்குழுதூண் அல்லது**

**இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி”**

*(தொல். பொருள். 32)*

*மேலும்,*

**“. . . . . . . . . அவன் கண்டு**

**வேளாண்மை செய்தன கண்”**

*(கலித். 101: 45-46)*

*என்று வேளாண்மை என்னும் சொல்லாட்சியும் வந்துள்ளதைக் கலித்தொகை குறிப்பிடுகின்றது.*

*வேளாண்மைத் தொழிலில் நிலத்தைப் பண்படுத்துதல் தொடங்கிய பல செயல்பாடுகள் செய்த இன்றுவரையிலும் கடைப்பிடித்தல் வேளாண்மை மரபாகும். வேளாண்மை மரபுகள் சங்ககாலத்திலிருந்து செய்து வரப்படும் பழந்தமிழர்களின் வேளாண்மை மரபுகளாகப் போற்றப்பட்டு வந்துள்ளன. காலங்காலமாக வேளாண்மைத் தொழில் போற்றப்பட்டு வந்தது. அவற்றுள் நின்று நிலைத்த அனுபவங்களே பிற்கால மக்களால் மரபுகள் என்று போற்றப் பெற்றன என்கிறார் இல.செ. கந்தசாமி (1974: 19)*

*பண்டைக்கால வேளாண் அறிவியல் முயற்சிகளே இன்றைய நம் ஆராய்ச்சிகளின் தொடர் ஓட்டங்களாக அமைந்துள்ளன. முன்னோர்களின் வேளாண் செயல்பாடுகள் அனைத்தும் இலக்கியங்களின்*

*ஊடே அழகாக இயைந்து புனையப்பட்டுள்ளன. அத்தகைய இலக்கியங்களே இன்றைய வேளாண்மைத் தொழில்நுட்ப வளர்ச்சிக்கு உறுதுணையாகவும், பாலமாகவும் இருந்திருக்கின்றன என்பதை எடுத்தியம்புகின்றன. வேளாண்மையில் உழவுக்காலம் தொடங்கி அறுவடை ஈறாக அனைத்து வேளாண் பணிகளுக்கும் பருவங்களே அடிப்படையாகின்றன. வேளாண்மை குறித்த பொதுவான செய்திகள் மட்டுமன்றிக் குறிப்பிட்ட சில வேளாண் அறிவியல் தொழில்நுட்பங்கள் பற்றிய இலக்கியக் குறிப்புகளையும் தெளிவாக குறிப்பிடுகின்றன.*

**வேளாண்மை செயல்முறைகள்**

**நிலம் பண்படுத்துதல்**

*நன்செய் நிலங்கள் நல்ல எருதுகள் பூட்டிய ஏர் கொண்டு நன்கு உழுது பண்படுத்தப்பட்டன. உழுது சேறுகலக்கிப் பரம்படித்தனர். இதனால் களைகளும் மட்டுப்படுத்தப்படுகின்றன. தற்போது குபேட்டா, டிராக்டர் மூலம் நிலத்தை பண்படுத்தி நிலம் தயார் செய்யப்படுகிறது.*

**எருவிடல்**

*நன்செய்ப் பயிருக்கு எரு இடுதலை முக்கியச் செயலாகக் கருதி செயல்படுத்தப்படுகிறது. கால்நடைகள் அதிகமாக வளர்ப்பதால் அதனுடைய கழிவுப் பொருளாகிய சாணம் சேமித்துப் பயன்படுத்தப்பட்டது. தெருவிற்கு ஒதுக்குப்புறத்திலும், வீட்டிற்கு அருகாமையிலும் எருவைச் சேமித்துப் பயன்படுத்தப்பட்டுள்ளது. உழவு செய்ய வேண்டிய நேரத்தில் எருவினை இட்டு உழுது நிலவளம் பேணப்பட்டுள்ளது. நிலங்களுக்கு தழை எரு எனப்படும் பசுந்தாள் உரங்களைப் போட்டு உழுது நிலவளம் காக்கப்பட்டுள்ளது.*

*விதையும் விதைப்பும்*

*நிலங்களுக்குத் தேர்வு செய்யப்பட்ட தரமான விதைகள் பயன்படுத்தப்பட்டன. அதற்காக விளைந்த முதல் கதிர்களைத் தேர்வு*

*செய்து அதனைப் பூச்சி இல்லாமல் பாதுகாத்துப் பக்குவப்படுத்தி விதைகள் தயார் செய்யப்பட்டன. நாற்றங்கால் அமைத்து நாற்றுப்பாவி நடவு செய்யப்பட்டது. புன்செய்ப் பயிர்கள் பாதுகாக்கப்பட்ட விதைகள் விதைத்துப் பராமரிக்கப்பட்டன.*

**நீர்ப்பாய்ச்சுதல்**

*நீர்ப்பாசனம் பெரும்பாலும் வாய்க்கால் அமத்துப் பாய்ச்சப்பட்டது. நீர்வளம் குறைந்த புன்செய்ப் பயிர்களுக்கு அருகிலுள்ள அருவி, சுனை, நீர்களிலிரந்து பாய்ச்சி விளைச்சல் பெருக்கப்பட்டுள்ளது. பயிர்களுக்குக் குளம், ஆறு போன்றவற்றிலிருந்து வாய்க்காலில் நீரைப் பாய்ச்சினர். மோட்டார் வசதி கொண்டும் நீர்பாய்ச்சினர்.*

**களையெடுத்தல்**

*களையெடுத்தல் நடவு நடுதல் ஆகியன பழங்காலத்திலிருந்து பெண்களே செய்து வந்துள்ளனர். பயிரின் இடையே உள்ள களைகளைக் கைகளினாலும், களைக்கொத்து கொண்டும் களையெடுக்கப்பட்டுள்ளது. களைவெட்டும் சமயம் நிலத்தில் சிறிதளவேனும் ஈரம் வேண்டும் என்பதனால் மழை பெய்த ஈரம் உள்ள நிலையில் களையெடுக்கப்பட்டுள்ளது.*

**அறுவடை**

*பயிர்களை அரிவாள் கொண்டு ஆண்களும், பெண்களும் அறுத்து கட்டுக்கட்டிக் களம் சேர்க்கப்பட்டுள்ளது. கதிரடித்துத் தூற்றி நெல் மணிகளைப் பிரித்தெடுத்ததாகவும் தலையடிப்பாக மாடுகளின் கால்களில் இட்டும் தாம்படித்து வைக்கோலையும், நெல்லையும் பிரித்தனர். ஆனால் தற்போது கிரஸர் கொண்டும் கதிர் அறுக்கும் இயந்திரம் கொண்டும் அறுவடை செய்யப்படுகின்றது. இதன்மூலம் குறைந்த செலவிலும், குறைந்த நேரத்தலும் அறுவடை முடிந்து விடுகிறது. நெல் தனியே,*

வைக்கோல் தனியே எளிதில் பிரித்தெடுக்கின்றனர். அதனால் அதிகமான மக்கள் இந்த இயந்திரத்தையே பயன்படுத்தி வருகின்றனர். பின்னர் வைக்கோலை மாட்டுக்கு உணவாகப் பயன்படுத்துகின்றனர்.

**அறுவடைக்குப் பின் செயல்கள்**

அறுவடைக்குப் பின் நெல்லறுத்த நிலத்தில் ஈரம் காயும் முன்பாக உழவு செய்து பண்படுத்தப்பட்டுள்ளது. உழுத வயல்களில் உளுந்து, பயறு வகைகளை விதைத்து நிலவளம் பேணுவதுடன் மகசூலும் பெருக்கப்பட்டுள்ளது. கரும்பு அறுவடைக்குப் பின் தட்டை பயிராக வளரவிட்டுப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இத்தானியங்களை ஈரம் உலர்த்திச் சேமிப்பதும் வைக்கோலைக் கூரை வேயவும் மாட்டிற்கு உணவாகவும் பயன்படுத்துகின்றனர்.

**விளைச்சல்**

அதிகளவில் மகசூல் பெறப்பட்டுச் சிறப்பான பயிர்த்தொழில் செய்து வரப்பட்டுள்ளது. ஒரே பருவத்தில் ஒரே நிலத்தில் இரு பயிர்ச்சாகுபடி செய்யப்பட்டுக் கலப்பு பயிர் முறையில் கூடுதல் விளைச்சல் பெறப்பட்டுள்ளது. உழவர்களின் தெளிந்த வேளாண்மைத் தொழில்நுட்ப அறிவும், அனுபவத்தின் அடிப்படையிலும் மேற்கொள்ளப்படுகின்றன.

**பயிர்கள்**

தானியப் பயிர்கள், பயறு வகைப் பயிர்கள் எண்ணெய் வித்துப் பயிர்கள், கரும்பு, தோட்டக்கலைப் பயிர்களான (காய்கறிகள், கனி வகைகள், மலர் வகைகள், கீரை வகைகள், கிழங்கு வகைகள்) கடலை மற்றும் மருத்துவத்திற்குப் பயன்படக்கூடிய செடி கொடிகள் போன்ற பல்வேறு வகையான பயிர்கள் பயிர் செய்யப்பட்டு இப்பகுதி மக்கள் தங்களின் வாழ்க்கைத் தரத்தை மேலும் மேலும் உயர்த்திக் கொள்கின்றனர் என்பதனைக் களஆய்வின் மூலம் தெளிவாக அறியமுடிந்தது.

**வேளாண் கருவிகள்**

*மரக்கலப்பை மற்றும் பரம்பு என்ற மரத்தடியால் செய்யப்பட்ட சமன் செய்யும் கருவி சங்க இலக்கியத்தில் 'தளம்பு' என வழங்கப்பட்டது. இதுபோன்ற கருவிகள் இன்றளவும் பயன்படுத்தப்பட்டு வருகிறது.*

**"பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சில்**
**உடுப்புமுக முழுக்கொழு மூழ்க வூன்றித்**
**தொடுப்பெறிந் துழுத தளர்படு துடவை"**

*(பெரும். 199-201)*

*என்று மரக்கலப்பை பற்றிப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது. தளம்பு என்பதனை,*

**"மலங்குமிளிர் செறுற றளம்புதடிந் திட்ட**
**பழன வாளைப் பரூஉக்கட் டுணியல்"**

*(புறம். 61: 3-4)*

*எனக் குறிப்பிடுகிறது.*

*களை எடுக்க உதவும் கருவி களைக்கொட்டு என்றும் துளர் என்றும் சங்க காலத்தில் பயன்படுத்தப்பட்டன என்பதனை,*

**"கொடுடைக் கையர் துளர்எறி வினைஞர்**
**அரியல் ஆர்கையர் விளைமகிழ் தூங்கச்"**

*(அகம். 184: 12-13)*

*எனக் குறிப்பிடுகிறது.*

*'குயம்வாள்' என்று வழங்கப்பட்டு வந்த அறுவடைக்கான அரிவாள் மாற்றம் பெறாமல் உள்ளது. இதனை,*

**"புனலாடு மகளிர் கதுமெனக் குடையக்**
**கூனிக் குயத்தின் வாய்நெல் லரிந்து**
**சூடுகோ டாகப் பிறக்கி நாடொறும்"**

*(பொரு. 241-243)*

*‘வட்டி’ என்ற மூங்கில் கூடை விதைப்பெட்டியாகப் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது. நெல், பயறு வகைகளை வைத்துக் கொள்வதற்கு மூங்கில் கூடைகள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை,*

**“முதைப்புனம் கொன்ற ஆர்கலி உழவர்**
**விதைக்குறு வட்டி போதொடு பொதுளப்**
**பொழுதோ தான்வந் தன்றே மெழுகு ஆன்று”**

*(குறுந்.155: 1-3)*

*இக்கூடைகள் சிறு சிறு மாறுபாடுகள் இன்றும் பயன்படுத்தப்படுகிது இதன் அளவுகள் மாறுபட்டுள்ளது.*

*கரும்பு அரவை இயந்திரம் சங்க காலந்தொட்டு இன்றுவரை சாறு பிழிந்து பாகு செய்யும் பணி மாறாமல் இன்றும் நடைபெறுகிறது.*

**“சாறயர்ந்த தன்ன காரணி யாணர்த்**
**தூம்பகமம் பழுனிய தீம்பிழி மாந்திக்**
**காந்தளங் கண்ணிச் செழுங்குடிச் செல்வர்**
**கலிமகிழ் மேவல ரிரவலர்க் கீயும்**
**கரும்பார் சோலைப் பெரும்பெயர்க் கொல்லிப்”**

*(பதிற்.19: 20-25)*

*பண்டைய பாதுகாப்புக் கருவிகள் அனைத்தும் தற்போது மறைந்துவிட்டன. அக்காலத்தில் தன்னை ஆபத்திலிருந்து காப்பாற்றிக் கொள்வதற்குப் பல விதமான ஆயுதங்களை பயன்படுத்தினர் என்பதனைச் சங்க இலக்கியப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.*

**“கழிசுற்றிய விளைகழனி**
**அரிப்பறையாற் புள்ளோப்புந்து”**

*(புறம். 396: 3-4)*

**“வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇப்**
**பழனப் பல்புள் இரியக் கழனி”**

*(நற்றி. 350: 1-2)*

**“குறிக்கொண்டு மரங்ங கொட்டி நோக்கிச்**
**செறிதொடி விறலியர் கைதொழூ உப்பழிச்ச**
**வறிதுநெறி ஒரீஇ வலஞ்செயாக் கழிமின்”**

*(மலைபடு. 200-203)*

**“சாறற் சூரல் தகைபெற வலந்த**
**தழலுந் தட்டையுங் குளிரும் பிறவும்**
**கிளிகடி மரபின ஊழூழ் வாங்கி”**

*(குறிஞ். 42-44)*

*போன்ற பாதுகாப்புக் கருவிகள் சங்க காலத்தில் காணப்பட்டன. ஆனால் இப்போது அவைகள் மறைந்துவிட்டன.*

**கலப்பை**

*உழவுக்கான மரக்கலப்பை மாறி இரும்புக் கலப்பை, இயந்திரக் கலப்பை, கரை அமைப்பதற்கு பார் கலப்பை என்று மாற்றம் பெற்றுள்ளன. எனினும் பண்டைய மரக்கலப்பை இன்றும் சிலர் பயன்படுத்தி வருவது அறியப்படுகிறது. உழு கருவிகளுடன் மேடு பள்ளங்களைச் சரிசெய்யும் கருவிகளும் வரப்பு கட்டும் கருவிகளும் புதியனவாக அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன.*

**விதைப்புக்கருவி**

*இன்றைய அறிவியலில் விதைப்புக் கருவிகள் சரியான இடைவெளியில் விதையை இட்டுச் செநல்லுமாறு வடிவமைக்கப்பட்டுள்ளது. உரமும், விதையும், ஒரே கருவியின் மூலம் இடும் கருவியும் வந்துள்ளது. சமீபத்தில் நாற்று நடும்கருவியும் நடைமுறையில் உழவர்களுக்கு உறுதுணையாக உள்ளத.*

**நீர் பாய்ச்சும்கருவி**

*நீர் இறைப்பு கருவிகளில் தற்போது மின்விசைக் குழாய்களும் எண்ணெய் கொண்டு இயங்கும் குழாய்களும் அறிவியலினால் வடிவமைக்கப்பட்டு வழக்கில் உள்ளன. இவைகள் இயங்குவிசையால் தானாக நீரை இறைத்து நிலத்திற்கு அனுப்புமாறு வடிவமைக்கப்பட்டுள்ளன.*

**பயிர்ப் பாதுகாப்புக் கருவிகள்**

*பயிர்ப் பாதுகாப்புக் கருவிகளில் தெளிப்பான்க்ள திரவ வடிவ மருந்து தெளிக்கவும், தூவுவான் தூள் மருந்து தெளிக்கவும் வடிவமைக்கப்பட்டுள்ளன. இதற்குத் தற்போது 'ஸ்பிரேயர்' என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர்.*

**உயிரினங்களிடமிருந்து பயிரைக் காத்தல்**

*பறவைகளை விரட்டத் தானே ஓசையெழுப்பும் கருவிகளும், நெல் வயலில் எலிகளைப் பிடிக்கக் கிட்டிகளும் இரவில் ஊடுருவும் நரிகள், ஆடு, மாடு ஆகியவற்றை ஒழிக்க மின்சார வேலி, முள் வேலி போன்ற புதிய முறைகள் கடைப்பிடிக்கப்படுகின்றன.*

**அறுவடைக் கருவி**

*அறுவடையில் நெல் அறுவடை இயந்திரம் வயலிலேயே அறுத்து ஒரு புறம் தானியத்தைச் சுத்தமாகப் பிரித்து உடனடியாகத் தருமாறு வடிவமைக்கப்பட்டுப் பயன்படுத்தப்படுகிறது. அறுவடை முடிந்தபின்பு கதிர்களைத் களத்து மேட்டிற்குக் கொண்டு வந்து அங்குஆள் வைத்துக் கதிரடிப்பதை விடுத்து தானியங்களைத் தனியே வைக்கோலைத் தனியே பிரித்தெடுக்கும் கருவிகளும், பதர்களைப் பிரிக்கும; கருவிகளும், மக்காச் சோளம் போன்றவற்றின் விதைகளைப் பிரித்துக் கொடுக்கும் கருவிகளும்*

வந்துவிட்டன. அனைத்துச் செயல்களுக்கும் விசையியங்கு கருவிகளாக வடிவமைக்கப்பட்டு மனித சக்தியைக் குறைப்பதற்கான கண்டுபிடிப்பாக வளர்ந்து உள்ளன.

**சேமிப்பு**

தானியங்களைச் சேகரித்து சாணம், வைக்கோல் இவற்றால் உருவாக்கப்ப்டட தானியக் குதிர்கள் அறிவியலால் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. ஈரப்பதம், பூச்சிகள் மற்றும் தீங்கிழைக்கும் நுண்ணுயிரிகளிடமிருந்து அறுவடை செய்யப்பட்ட தானியங்களைப் பாதுகாப்பது இன்றியமையாததாகும். முறையாகச் சேமிக்கப்படவில்லையெனில் தானியங்கள் கெட்டு விடும். அதைப் பயன்படுத்த முடியாது என்பதற்காக சேமிப்புக் கிடங்குகளில் தானியங்களைச் சேமிக்கின்றனர்.

ஆதிமனிதன் வேளாண்மையின் தொடக்க நிலையில் உணவுப்பொருள் ஈட்டுதலும், சேகரித்தலும் என்ற நிலையிலேயே தொடங்கியிருக்க வேண்டும். ஒவ்வொரு காலகட்டத்திலும் மனித அனுபவங்களாலும், அவ்வப்பொழுது காலச்சுழற்சியில் ஏற்பட்ட மாற்றங்களால் சேமிக்கும் தன்மையும் பெற்றிருக்கின்றன. சங்க காலத்தில் தொகுகூடு, நெடுங்கூடு, குதிர் போன்ற சேமிப்புக் கலன்கள் வளர்ந்த நாகரிகத்தின் பழமையான எச்சமாக இலக்கியங்களின் வழியே நினைவூட்டுகின்றன.

பொதுவாக வேளாண்மைப் பொருள்களைச் சேமிக்கும் வழக்கம் உழவர்களிடத்தில் மறைந்துவரும் போக்கு தென்படுகிறது. அதற்குக் காரணம அவர்கள் தானியங்களைக் களத்திலேயே விற்றுப் பணமாகப் பெற்றுவிடும் நிலையில் சேமிப்புக் கலன்களின் பயன்பாடுகள் குறைந்து காணப்படுகின்றன. மரபுகள் காலங்காலமாக வழிவழியாகக் கடைப்பிடிக்கப்பட்டு வரும் சூழ்நிலையிலும் சில மரபுகள் கால

ஓட்டத்திற்கேற்ப தன்னைப் புதுப்பித்து மாற்றம் ஏற்படுத்திக் கொள்ளும் செயலாக உள்ளது.

சங்க இலக்கியங்கள் காட்டும் வேளாண்மை சார்ந்த மரபுகள் இப்பகுதி மக்களிடம் கடைப்பிடிக்கப்பட்டு வருவதையும் சில மரபுகள் மாற்றமடைந்து உள்ளது என்பதையும்அறிந்து கொள்ள முடிகிறது.

மேலும் கலப்பை போன்ற உழுகருவிகளில் சில மாறுபாடுகள் இருப்பினும் பழைய வடிவமும் செயல்நிலையும் மாறாமல் உள்ளதென்பது கண்டறியப்பட்டுள்ளது. விதைப்புக் கருவிகள், நீர் இறைப்புக் கருவிகள், பயிர்பாதுகாப்புக் கருவிகள், அறுவடைக் கருவிகள், சேமிப்புக் கலன்கள் வடிவ மாற்றங்களைக் கொண்டு அமைந்துள்ளன.

பண்டைய மரபுகள் இன்றைய நிலைக்கு ஏற்ப மாறுபட்டு இருப்பினும் காலத்திற்கேற்பவும், அறிவியல் வளர்ச்சிக்கேற்பவும் மாற்றமடைந்துள்ளன. சின்னச் சின்ன மாற்றங்களைப் பெற்றுத் தேவையினடிப்படையில் அவை மாற்றம் பெற்றுள்ளன.

தொழிலும் உணவுப் பழக்க வழக்கங்களும்

| இலக்கியம் (சங்ககாலம்) | களம் (தற்காலம்) |
|---|---|
| தினை விதைத்தல், தேனெடுத்தல், கிழங்காழ்தல், அவரை நடுதல், மிளகு மஞ்சள் இஞ்சி பயிரிடுதல் உண்டு | இத்தொழில் முறைகள் வழக்கில் உள்ளன |
| கால்நடைகள் மேய்த்தல், பால், தயிர் வெண்ணெய் விற்றல் | உண்டு. வெண்ணெய் விற்கப்படுவதில்லை (வணிக நோக்கில் கடைகளில் மட்டும் விற்கப்படுகிறது) |
| கலப்பையில் மாடுகள் பூட்டி உழுதல் | கலப்பை, இரும்புக் கலப்பை, டிராக்டர் போன்ற இ யந்திரம் கொண்டு உழவு செய்தல், கலப்பைக் கொய்டு உழுதல் சற்று குறைவாகவே உள்ளது |
| ஆறு, குளம், கிணறுகளில் இருந்து நீர் ஆதாரம் பெற்றுள்ளனர் | ஆறு, ஆழ்துளைக் கிணற்று நீர் (மோட்டார் வைத்து இறைத்துப் பாய்ச்சுதல்) |

| | |
|---|---|
| நன்கு முற்றிய நெல்மணிகள் விதையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன | நோய் தாக்கப்படாத நெல் மணிகளும், வேளாண்மை மையத்தாரிடமும் பலவகையான விதைகள் வாங்கப்பட்டு விதைக்கும் முறை உள்ளது |
| எருவாகக் கால்நடைக் கழிவு, தழைகள் வைத்தல் | கால்நடைக் கழிவு, தழைகள், மற்றும் இரசாயன உரங்கள் பயன்படுத்துதல் எருவடித்தல் சற்றுக் குறைவாக உள்ளது |
| களைகளைக் கைகளாலும் களைக் கொட்டாலும் நீக்குதல். | உண்டு |
| கதிர்கள் அரிவாளால் அறுக்கப்பட்டுச் சிறுசிறு கட்டுகளாகக் கட்டப்பட்டுக் களத்தில் சேர்த்து நெல்மணிகள் பிரிக்கப்படல் | இவ்வழக்கம் உண்டு. ஆனால் அறுக்க அறுவடை இயந்திரங்களும் பயன்படுத்தப்படுகின்றன. |
| எருதுகளைக் கொண்டு போரடித்தல்,. நெற்களைக் குதிர், நெற்கூடு, மூட்டைகளில் பாதுகாத்தல் | போரடிக்கும் முறை மட்டும் அதிகம் இல்லை. கிரஸர் கொண்டு கதிர் அடிக்கின்றனர். மூட்டை, மர மண்குதிர்களில் சேகரித்தல் |
| இருபருவ முறை | முப்போக முறை உள்ளது |
| ஆலைக்கரும்பு மட்டும் பயிரிடப்பட்டு ஆலைக்கு அனுப்பப்பட்டுள்ளது. மறுதாம்பு முறையும் உண்டு | தைப்பொங்கலுக்குப் பயன்படும் கரும்பும், ஆலைக்கரும்பும் பயிரிடப்படுகின்றன. |
| உப்பு விற்றல், வழிப்பறி செய்தல் | உண்டு |
| பருத்தி, பட்டாடைகள் நெய்தல், கிழிந்த ஆடைகளைத் தைத்து உடுத்தல் | பட்டு நெசவு மட்டும் உள்ளது. பல மாடல்களில் பல வகையான ஆடைகள் தைக்கப்படுகின்றன |
| அணிகலன்கள் செய்தல் | உண்டு |
| பாத்திரங்கள் செய்தல் | வெள்ளி, பித்தளைப் பாத்திரங்களுக்கு முலாம்பூசுதல் மட்டும் உள்ளது |
| ஆடைகளுக்குச் சலவை செய்தல் | உண்டு |
| சுவரில் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன | சுவர், பலகை என்று பல இடங்களிலும் வரையப்படுகிறது. கிராபிக்ஸ், டிஜிட்டல் முறைகளும் காணப்படுகின்றன. |

**மரபுவழி மருத்துவம்**

*நாட்டுப்புற மக்கள் தங்களுக்கென சில மருத்துவ முறைகளைக் கொண்டுள்ளனர். அன்றாடம் தம் வாழ்வில் கையாளும் மருத்துவ முறைகளை நாட்டுப்புற மருத்துவம் அல்லது மரபுவழி மருத்துவம் என்று கூறலாம். கிராமங்களில் வீடுதோறும் உள்ள முதியவர்களும், அனுபவசாலிகளும், இயற்கையில் கிடைக்கின்ற பச்சிலை மூலிகைகளின் மருத்துவப் பண்புகளை அறிந்திருக்கின்ற வைத்தியர்களும் வாழையடி வாழையாக பரம்பரை பரம்பரையாகப் பின்பற்றி வருகின்ற மருத்துவ முறையை மரபுவழி மருத்துவம் எனலாம்.*

*தமிழகத்தின் மரபுவழிப்பட்ட நாட்டுப்புற மருத்துவத்தைக் கிராமங்களில் நாட்டு வைத்தியம், வீட்டு வைத்தியம், கை வைத்தியம், மூலிகை வைத்தியம் என்று பல பெயர்களில் குறிப்பிடுகின்றனர். தந்தை வழியோ அல்லது தாய் வழியோ தன் காது வழியாகக் கேட்டுக் கை வைத்தியமாகச் செய்யப்படுகின்ற மருத்துவ முறையே மரபுவழி மருத்துவத்தின் உயிர்நாடி எனலாம். அறிவியல் தொழில்நுட்ப முன்னேற்றமும், மருத்துவத் துறையில் மிகப் பெரிய சாதனைகளும் ஏற்பட்டுள்ள இன்றைய காலக்கட்டத்திலும் நாட்டுப்புறங்களில் தொன்றுதொட்டு நாட்டுப்புற மருத்துவ முறைகள் உயிரோட்டமுடன் உலவி வருகின்றன.*

*நாட்டுப்புற மக்களின் பண்பாட்டோடும், பழக்க வழக்கத்தோடும், சமூக அமைப்போடும், பின்னிப் பிணைந்தது நாட்டுப்புற மருத்துவமாகும். மரபுவழிப்பட்ட நாட்டுப்புற மருத்துவம் என்பது மக்களிடம் காணப்படும் நோய்தீர்க்கும் முறைகளில் அறிவியல் மருத்துவ முறைக்கு மாறுபட்டது* (Formal system of scientific medicine) *என்பர்.*

*எடுத்துக்காட்டாக் கண்ணில் பூ விழுந்து விட்டால் ஒற்றை நந்தியாவட்டைப் பூவைத் தாய்ப்பாலில் சேர்த்துப் பிழிந்து கண்ணில் விட்டால் கண் புரை நோய் நீங்கும். இதனால் எவ்வித எதிர்விளைவும் கூட*

ஏற்படுவதில்லை. கண்ணில் பூவிழுந்தற்குரிய மருத்துவ முறையை யாரோ ஒருவர் மற்றொருவருக்குச் சொல்லியிருக்க வேண்டும். இச்செய்தி அடுத்தடுத்து மற்ற அனைவருக்கும் தெரிகிறபோது மரபுவழி மருத்துவமாக மக்களால் போற்றிப் பின்பற்றப்படுகிறது. எனவே நாட்டுப்புற மக்களின் அறிவில் உதித்து அனுபவத்தில் தழைத்து, வாழையடி வாழையென வாய்மொழியாகவே வாழ்ந்தும் வளர்ந்தும் வருகின்ற அளவற்ற சக்தியினை இம்மருத்துவ முறைகள் பெற்றிருக்கின்றன.

நாட்டுப்புற மருத்துவம் பிறந்த காலத்தை அறிந்து கூற இயலாது. அப்படிக் கூறவேண்டுமானால் தமிழகத்து மண்ணில் செடி, கொடிகள் தோன்றிய காலம்தான் தமிழ் மருத்துவம் பிறந்த காலம் எனலாம். நாட்டுப்புற மருத்துவம் மிகவும் பழமையானது. இயற்கையே முதல் மருந்துக் கடையைத் திறந்தது. ஆதி மனிதனும், விலங்குகளும் நோயைத் தவிர்க்கவும், உடல் நலத்தையும், உற்சாகத்தையும் காக்க செடிகொடிகள் மூலிகைகளையே நாடினார்.

நாட்டுப்புற இயற்கை மருத்துவம் மிகப் பழமையானது. காலம் காலமாக வாய்மொழி மரபு மூலம் நாட்டுப்புற மக்களால் பின்பற்றப்பட்டு வருகின்றது. மூலிகைகள், செடிகள், வேர்கள், மரப்பட்டைகள், தாதுப் பொருட்கள், விலங்கினுடைய எச்சங்கள் இவற்றை மனிதன் நோயைக் குணப்படுத்தப் பயன்படுத்தினான். இயற்கை மருத்துவமே காலப்போக்கில் மூலிகை மருத்துவம் என வழங்கினர்.

**பண்டைத் தமிழரின் மரபுவழி மருத்துவம்**

சங்கஇலக்கியங்களில் மருத்துவம் தொடர்பான செய்திகள் பலவும் பரவியுள்ளன. தமிழர், நோய், பிணி என்னும் சொற்களைப் படைத்தமையே அவர்களின் மருத்துவ அறிவைப் புலப்படுத்துகின்றன. மனிதனுக்குத் துயர் விளைவிக்கும் அனைத்தையுமே நோயாகக் கருதினர் என்பதை அவலநோய், பாயல்நோய், அருநோய், மயங்குநோய் என்ற தொடர்களால் அறியமுடிகின்றது.

*சங்க காலத்தில் அரசோச்சிய அரசனுக்குத் துணையாக அரண்மனை மருத்துவர்கள் இருந்துள்ளனர். மருத்துவன் தாமோதனரார், மருத்துவன் நல்லச்சுதனார், சல்லிகைக் குமரனார் போன்ற மருத்துவ வல்லுநர்கள் சங்ககாலத்தில் வாழ்ந்துள்ளனர். மனிதனுக்கு ஏற்படுகின்ற பசியைப் பிணியென்றே கருதினர். எனவே மருத்துவன் நோயின் தன்மைகளைக் கண்டு நோய்க்கு ஏற்ற மருந்தினை ஆராய்ந்து கொடுக்க வேண்டும்.*

*போரில் ஏற்படும் பிளவுப்பட்ட காயத்தைத் தையலிடும்பொழுது நெடிய வெண்மையான ஊசியானது தசையில் புகுந்த குருதியில் தோய்ந்து பின் வெளிவரும் காட்சியானது மீன் கொத்திப்பறவை நீரில் வாழும் மீனைக் கொத்தி எழும்போது அதன் அலகு எவ்வாறு நீரில் சென்று மீளுமோ அவ்வாறு கூறப்படுகிறது. மேலும் மருத்துவத்தைப் பற்றிப் பல சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. இதனை,*

**“மருந்தின்று மன்னவன் சீறில் தவறுண்டோ நீ நயந்த**
**இன்னகை தீதோ இலேன்”**

*(கலித். 89: 10-11)*

*கைம்மிகு ஆயர் மகனை காதலிப்பதை காமநோய் என்றும் இனி நீயுற்ற காமநோய்க்கு மருந்து அரிதென்றாள். இதனை,*

**“ஆயர் மகனையுங் காதலை கைம்மிக**
**ஞாயையும் அஞ்சுதி யாயின் அறிநரோ**
**நீயுற்ற நோய்க்கு மருந்து**
**மருந்தின்றி யானுற்ற துயராயின் எல்லா**
**வருந்துவே னல்லனோ யான்”**

*(கலித். 107: 25-29)*

*திருவள்ளுவர் தம் திருக்குறளில் ‘மருந்து’ என்னும் அதிகாரத்தில் தமிழ் மருத்துவ முறைகளைப் பற்றி விளக்கமாகக் கூறுகின்றார்.*

**“மாறுபா டில்லாத உண்டி மறுத்துண்ணின்**
**உறையா டில்லை உயிர்க்கு”** *(குறள். 945)*

*இக்குறளில் 'உணவே மருந்து', 'மருந்தே உணவு' என்ற இயற்கை மருத்துவக் கொள்கையினை வள்ளுவர் வலியுறுத்துகின்றார். நம் உடலில் உள்ள கழிவுப் பொருள்களை வெளியேற்றுவதே நாட்டுப்புற இயற்கை மருத்துவத்தின் முக்கிய அம்சம் என்பதை அறிந்த வள்ளுவர்,*

**"மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய**
**கற்றது போற்றி உணின்"**

*(குறள். 942)*

**"நோய்நாடி நோய் முதல்நாடி அதுதணிக்கும்**
**வாய்நாடி வாய்ப்பச் செயல்"**

*(குறள். 948)*

**"உற்றவன் தீர்ப்பா; மருந்துழைச் செல்வானென்**
**தப்பால் நாள்கூற்றே மருந்து"**

*(குறள். 950)*

*நோயுற்றவன், மருத்துவன், மருந்து இம்மூன்றையும் இணைத்து வள்ளுவர் கூறுவதிலிருந்து பழங்காலத்தில் நிலவிய தமிழ் மருத்துவ முறைகளை அறியமுடிகிறது.*

*கல்வெட்டுக்கள் தமிழ் மருத்துவத்தின் வளர்ச்சிக்கும், மருத்துவர்களின் நல்வாழ்வுக்கு நிலமும் கொடையும் அளித்ததைத் தெரிவிக்கின்றன. கி.பி. 11ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த சோழமன்னன் முதலாம் இராசேந்திரன் காலத்துக் கல்வெட்டுக்களின் மூலம் அறுவை மருத்துவம் பற்றி அறியமுடிகிறது. நோயாளிகள் தங்கி மருத்துவம் செய்து கொள்வதற்காக 'ஆதுலர் சாலைகள்' அமைத்தனர் என்பது குறித்துக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.*

**விளையாட்டுக்கள்**

*உடல் ஆரோக்கியத்திற்கும், வளர்ச்சிக்கும் மிகவும் முக்கியமானது விளையாட்டு. விளையாட்டுக்களை விளையாடுவதன் மூலம் உடல்*

*வளர்ச்சி, உடல் வலிமை, நோய் எதிர்ப்புத் தன்மை, மன அமைதி இன்றைய நிலையில் பலரது நட்பு, பல நாடுகளின் நட்பு போன்ற அனைத்து சிறப்பம்சங்களையும் உள்ளடக்கிய ஒன்றாகவே விளையாட்டு திகழ்கிறது.*

*பல்லாங்குழி ஓய்வு நேரங்களில் பெண்கள் விளையாடக்கூடிய விளையாட்டு. அவ்விளையாட்டு மூலம் ஒருமுக சிந்தனையும், யோசிக்கும் தன்மையும் ஏற்படுகின்றன. இதுபோன்று தாயம், உப்புக்கோடு விளையாட்டுக்களையும் பெண்கள் விளையாடுகின்றனர்.*

*கபடி, சிலம்பு, பளிங்கி, பம்பரம், பந்து போன்ற விளையாட்டுக்கள் ஆண்கள் விளையாடுவதன் மூலம் உடல் ஆரோக்கியத்திற்கும் வலிமைக்கும் மிகவும் உகந்ததாக உள்ளன. இன்றைய நிலையில் பல விளையாட்டுக்கள் வந்தாலும் அவ்விளையாட்டுகள் சில உடல்நிலை சாராத விளையாட்டுக்களாக உள்ளன. ஆயின் மரபு விளையாட்டுக்களை இன்றும் களப்பகுதி சிறுவர்கள் விளையாடுவதைக் களப்பணிக்குச் சென்ற ஊர்களில் ஆய்வாளரால் காண முடிந்தது.*

*மகிழ்வு அளிக்கக் கூடியவற்றுள் விளையாட்டும் ஒன்று என்பதைத் தொல்காப்பியர்,*

**“செல்வம் புலனே புணர்வு விளையாட்டென**
**அல்லல் நீத்த உவகை நான்கே”** *(தொல். பொருள். 255)*

*என்ற பொருளதிகார நூற்பாவின் வழி குறிப்பிட்டுள்ளார்.*

*சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் தங்கள் மகிழ்வையும் வீரத்தையும் வெளிக்காட்டும் வகையில் பலவிதமான விளையாட்டுக்களைப் பின்பற்றியுள்ளனர் என்பதை இலக்கியங்கள் தெளிவுற வெளிப்படுத்தியுள்ளன.*

*இளம்வயதில் உள்ளவர்கள் ஒருவரை ஒருவர் சண்டையிட்டு விளையாடி மகிழும் நிலையை,*

**“இவன் இவள் ஐம்பால் பற்றவும் இவள்கண்**
**புன்தலை ஓரி வாங்குநள் பரியவும்**

**காதற் செவிலியர் தவிர்ப்பவும் தவிராது**
**ஏது இல் சிறுசெரு உறுப மன்னோ**
**நல்லை மன்றம்ம பாலே மெல்லியல்**
**துணை மலர்ப் பிணையல் அன்னஇவர்**
**மனமகிழ் இயற்கை காட்டியோயே"**

*(குறுந். 229)*

*என்னும் பாடல் வரிகள் விளக்கிக் காட்டுகின்றன.*

*சிறுவர்கள் மண், மணல் ஆகியவைகளைக் கொண்டு சிறுவீடுகள் கட்டி விளையாடுவது சிற்றிலாகும். அப்போது இல்லறம் நடத்துவது போன்று உணவுகள் சமைத்தும் விளையாடுவர். மணல் காணும் இடங்களில் எல்லாம் சிறார்கள் சிறு வீடு கட்டி விளையாடி மகிழ்ந்த நிலையை,*

**"அம்பகை நெறித்தழை அணிபெறத் தைஇ**
**வரிபுனை சிற்றில் பரிசிறந்து ஓடி"**

*(நற்றி.123)*

**அம்புலி காட்டல்**

*வானில் தோன்றக்கூடிய நிலவினை இளங்குழ:நதைகளுக்குக் காட்டி அவர்களை மகிழ்ச்சியும் விளையாடக்கூடிய எண்ணத்தையும் தோற்றுவிக்கும் விளையாட்டில் அம்புலி காட்டலும் ஒன்றாகும்.*

*பிறைச் சந்திரனைத் தனது மகனுடன் இணைந்து விளையாடுவதற்காகத் தலைவி அழைத்தாள் என்பதை,*

**"ஐய திங்கட் குழவி வருகென யான்நின்னை**
**அம்புலி காட்டல் இனிது"**

*(கலித். 80)*

*என அமையும் பாடலடிகள் தெரிவிக்கின்றன.*

*தலைவியானவள் தன் தோழியருடன் மணல் பரந்த இடத்திற்குச் சென்று பந்தாடிய நிலையை,*

**“நெடுந்தேர் வழங்கும் நிலவுமணல் முற்றத்துப்**
**பந்தொடு பெயரும் பிரிவிலாட்டி”**

*(நற்றி.140)*

*என்று பூதங்கண்ணனார் குறிப்பிட்டுள்ளார். பந்தினைத் தரையில் உருட்டிக் கொண்டு அங்கும் இங்குமாக ஓடி மகளிர் விளையாடியுள்ளனர். இதனை,*

**“செல்வத் தந்தை இடனுடை வரைப்பின்**
**ஆடு பந்து உருட்டுகள் போல ஓடி”**

*(நற்றி. 324)*

*எனும் தொடர்கள் எடுத்தியம்புகின்றன.*

*மேலும்,*

**“புள்ளர் கொள்ளியில் புகல்வரு மஞ்ஞை**
................
**பந்தாடு மகளிரில் படர்தரும்”**

*என்ற பாடல் வரிகள் மயிலானது பெண்கள் பந்தாடும்போது துள்ளிக் குதித்து ஓடுவதைப் போன்று தினைத்தாளில் சென்றதாக உவமிக்கின்றன.*

*விளையாட்டுக்கள்*

| *இலக்கியம் (சங்ககாலம்)* | *களம் (தற்காலம்)* |
|---|---|
| *சிறுவர்கள் மண்ணால் சிறுவீடு கட்டிச் சோறு சமைத்தல், பொம்மைகள் செய்தல், அதனை குழந்தையாக நினைத்துப் பாலூட்டுதல், பொய்தல், சிறுபறையடித்தல், சிறுதேர் செய்து உருட்டி விளையாடுதல், குழந்தைகளுக்கு நிலவினைக் காட்டி விளையாடச் செய்தல் போன்றவை காணப்படுகின்றன* | *பொய்தல் விளையாட்டுத் தவிர மற்றைய விளையாட்டுக்கள் சிறுவர்களால் விளையாடப்படுகின்றன.* |

| | |
|---|---|
| பெண்கள் பந்து, கழங்கு, ஊஞ்சல், புலனாடுதல், தாயம், பூப்பறித்தல், நண்டு பிடித்தல், மறைந்தாடுதல், குரவை, துணங்கை, வள்ளைப்பாடல் ஆகியவற்றை விளையாடியுள்ளனர் | குரவை, துணங்கை, வள்ளைப்பாடல் முதலியன வழக்கில் இல்லை. மற்றவைகள் உள்ளன. கல்லாங்காய் பந்தாடுதல் விளையாட்டில் பாடல்களும் பாடப்படுகின்றன. மறைந்தாடுதல் கண்ணாமூச்சி என்ற பெயரில் விளையாடப்படுகிறது. |
| காளை, யானைகளை ஒன்றோடு ஒன்று மோதவிட்டு, ஒருவரை ஒருவர் எதிர்நின்று மல்யுத்தம் செய்தும் விளையாடிப் பொழுது போக்குதல் | இவைகள் வழக்கத்தில் இல்லை. (மாட்டு வேடிக்கை மட்டும் களப்பணிப் பகுதியில் காணப்படுகின்றது). |

**நம்பிக்கைகள்**

நம்பிக்கைகள் என்று உருவாகின என்று திட்டவட்டமாகக் கூறமுடியாது. மனிதன் இயற்கையின் பாதிப்புக்கு மிகுதியாக உட்பட்டிருந்த அறிவு வளர்ச்சியின் தொடக்க காலத்தில் அவை தோன்றின எனலாம்.

நம்பிக்கைகள் நாட்டுப்புறத்தில் இன்றளவும் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன. நம்பிக்கைகளுள் சில மூடநம்பிக்கைகள் என்று கருதப்பட்டாலும் அவை மக்களால் தொடர்ந்து கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன. சில சடங்குகள் அறிவியல் பூர்வமாக அர்த்தமுள்ளவைகளாகக் காட்டப்பட்டபோதிலும் அவைகள் மரபுவழியாகத் தொன்றுதொட்டு வழிபாட்டுச் சடங்குகளாகவே மக்களால் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன.

நம்பிக்கைகள்

| இலக்கியம் (சங்ககாலம்) | களம் (தற்காலம்) |
|---|---|
| மயில் ஆடுதலால் மழை வரவு அறிதல் | உண்டு |
| குயில் கூவுவதால் தலைவன் வரவு காணுதல் | இல்லை |

| | |
|---|---|
| கூகைக் கத்தினால் இறப்பு வரும் | வழக்கம் உள்ளது |
| காக்கைக் கத்தினால் விருந்தினர் வருவர் | உண்டு |
| நாரை வீட்டருகில் பறந்தால் நன்மை | இல்லை |
| பல்லி ஒலி கொடுத்தல் நல்ல சகுனம் | மரபுண்டு |
| ஓந்தியைக் காணுதல் இடையூறு இல்லை | தலையில் விழுந்தால் மரணம் நேரிடும் |
| யானை அசைவற்றுக் கிடத்தல் தீங்கு நேரிடும் | துதிக்கையைத் தலையில் வைத்தல் அதிர்ஷ்டம் வரும். |
| பசு நன்முறையில் இருத்தல் அமைதி ஏற்படும் | வீட்டில் பசுமாடு இறத்தல் தீங்கு |
| நரி பகலில் ஊளையிடுதல் தீங்கு | மரபுண்டு |
| மூத்தோர் வாய்ச்சொல் கேட்டல் நன்மை | நல்லவர் வாய்ச்சொல் பலிக்கும் |
| பெண்ணிற்கு இடகண், ஆணிற்கு வலக்கண் துடித்தல் நன்மை, கண்கலங்குதல் தீமை | உள்ளது |
| தோள்வளை செறிதல் நன்மை | பெண்கள் கைவளையல் இன்றி இருக்கக் கூடாது |
| தலைவிரிக் கோலம் தீங்கு தரும் | உண்டு |
| கட்டு, கழங்கினால் தலைவன் தலைவி நிலை அறிதல் | மனிதர்களின் எதிர்கால வாழ்வை அறிதல் |
| வெறியாட்டினால் தலைவியின் பசப்பு நோய் காணல் | தெய்வமேறிக் கூறும் மரபுள்ளது. |
| கூடலிழைத்தல் | இல்லை |
| சனி புகைந்தால் தீங்கு | சனி பிணம் துணைதேடும் |
| ஞாயிறு வேறுபடத் தோன்றுதல் | |
| எரிகொள்ளி வீழ்தல் இறப்பு வரும் | எரிகொள்ளி வீழ்வதைக் காணுதல் ஞாபகமறதி ஏற்படும் |
| பகற்கனவு பலிக்கும் | மரபுண்டு |
| வீடு பேறடைதல் ஆத்மாவிற்கு நன்மை | நற்காரியங்கள் செய்தால் சொர்க்கம் அடையலாம். |

**தொகுப்புரை**

*குழந்தையைப் பிரசவித்த பெண்ணிற்குக் குறிப்பிட்ட நாட்கள் வரை ஓய்வளித்து பராமரித்துள்ள முறை இன்றும் மரபு மாறாமல் பின்பற்றப்படுகிறது.*

*பருவமடைந்த பெண்ணின் காலில் அணிவிக்கப்பட்ட சிலம்பினை நீக்கியபின் மணம் புரிந்து கன்னித்தன்மையைக் கழிக்கும் சடங்கினை மேற்கொண்டுள்ளது போன்று பூப்புத் தீட்டினைக் கழித்து புனிதப்படுத்தித் திருமணம் செய்விக்கும் நிலை மாற்றமடைந்துள்ளதைக் காணமுடிகின்றது.*

*அன்று முதல் இன்றுவரை மனித சமுதாயம் பெண்ணிற்குச் சில கட்டுப்பாடுகளை வகுத்து நடைமுறைப்படுத்தும் வழக்கம் என்றும் நிலை பெற்றுள்ளதென்பதை உணரமுடிகிறது.*

*நம்பிக்கைகள் மனிதனோடும் வாழ்வோடும் காலமாற்றம் ஏற்பட்டாலும் நம்பும் நிலை மாறாதென்பது குறிப்பிடத்தக்கது.*

*மனிதனுக்குப் புத்துணர்வும், புதுமை உணர்வும படைத்தளிக்கும் வல்லமை விளையாட்டில் இருப்பதை முழுமையாக அறியமுடிகிறது.*

*தொழில்கள் மனிதனைப் பொருளாதார நிலையில் மட்டுமின்றி வாழ்க்கைத் தரத்திலும் உயர்த்திக் காட்டும் ஆற்றல் பெற்றதென்பது ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒன்றாகும்.*

# துணைநூற்பட்டியல்

## தமிழ் நூல்கள்

*அறவாணன், க.ப.* *1987* **தமிழர்மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள்**
*ஐந்திணைப் பதிப்பகம்*
*சென்னை*

*இராசேந்திரன், அ.* *2006* **நாட்டுப்புறப் பண்பாட்டுப் பழக்க வழக்கங்கள்**
*வனிதா பதிப்பகம்*
*சென்னை*

*இராசேந்திரன், அ.* *2006* **நாட்டுப்புறப் பண்பாட்டுப் பழம்பெரும் மரபுகள்**
*வனிதா பதிப்பகம்*
*சென்னை*

*இராமலிங்கனார், கி.* *1991* **தமிழ்த் திருமணம்**
*தமிழ்நூற் பதிப்பகம்*
*காஞ்சிபுரம்*

*இராமநாதன், ஆறு.* *1987* **நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல்**
*மணிவாசகர் பதிப்பகம்*
*சிதம்பரம்*

*காந்தி, க.* *2003* **தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்**
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்*
*சென்னை*

கிருட்டிணன், அ. 1992 **தமிழர் பண்பாட்டியல்**
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை

கழனியூரன் 1995 **நாட்டுப்புறத்து நம்பிக்கைகள்**
அன்னம் பதிப்பகம்
சிவகங்கை

கைலாசபதி, க. 1966 **பழந்தமிழர் வாழ்வும் வழிபாடும்**
மக்கள் வெளியீடு
சென்னை

சக்திவேல், சு. 1999 **நாட்டுப்புறவியல் ஆய்வு**
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை

சண்முகசுந்தரம், சு. 1994 **நாட்டுப்புற இயல்**
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை

சசிவல்லி, வி.சி. 1985 **பண்டைய தமிழர் தொழில்கள்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை

சாந்தி, க. 1996 **நாட்டுப்புற நம்பிக்கைகள்**
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

சாந்தி, க. 2001 **நாட்டுப்புற மருத்துவம் ஓர் ஆய்வு**
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

சிவசுப்பிரமணியன், ஆ. 1987 **பூப்புச் சடங்குகளும் நம்பிக்கைகளும்**
நாட்டுப்புறவியல் காலாண்டிதழ், தொகுதி.3-4
இந்தியத் தமிழ்நாட்டுப்புறவியல் கழகம்
சிதம்பரம்

சுந்தரமூர்த்தி, இ. 1991 **இலக்கியமும் பண்பாடும்**
பாவை பிரிண்டர்ஸ்
சென்னை

சுப்பு ரெட்டியார், ந. 1970 **இல்லற நெறி**
தமிழ்ப் புத்தகாலயம்
சென்னை

செல்லப்பன், சிலம்பொலி. (உ.ஆ.) 2000 **சிலப்பதிகாரம்**
பாரதி பதிப்பகம்
சென்னை

சொக்கலிங்கம் 1952 **சமயக் கிண்டர்கார்டன் அல்லது ஆலயங்களின் உட்பொருள் விளக்கம்**
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
சென்னை

ஞானசேகரன் 1987 **மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள்**
பார்த்திபன் பதிப்பகம்
மதுரை

தட்சிணாமூர்த்தி, அ. 1987 **தமிழர் நாகரிகமும் பண்பாடும்**
ஐந்திணைப் பதிப்பகம்
சென்னை

தட்சிணாமூர்த்தி, அ. 2001 **சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்**
மங்கையர்க்கரசி பதிப்பகம்
தஞ்சாவூர்

தமிழவன் 1976 **நாட்டுப்புற நம்பிக்கைகள்**
சர்வோதயா இலக்கியப் பண்ணை
மதுரை

திருநாவுக்கரசு, க.த. 1962 **தமிழர் நாகரிக வரலாறு**
தொல்காப்பியர் நூலகம்
சென்னை

துர்க்காதாஸ் 1980 **குடும்ப வைத்தியம்**
பூம்புகார் பிரசுரம்
சென்னை

நச்சினார்க்கினியர் (உ.ஆ.) 1996 **தொல்காப்பியம் பொருளதிகாரம்**
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
சென்னை

*பக்தவத்சல பாரதி, சீ.* *1990* **பண்பாட்டு மானிடவியல்**
*மணிவாசகர் பதிப்பகம்*
*சென்னை*

*பரிமணம், அ.மா. மற்றும் பாலசுப்பிரமணியன், கு.வெ (பதி.ஆ.)* *2004* **பரிபாடல்**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்*
*சென்னை*

*பரிமணம், அ.மா. மற்றும் பாலசுப்பிரமணியன், கு.வெ (பதி.ஆ.)* *2004* **பத்துப்பாட்டு**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்*
*சென்னை*

*பரிமணம், அ.மா. மற்றும் பாலசுப்பிரமணியன், கு.வெ (பதி.ஆ.)* *2004* **அகநானூறு**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்*
*சென்னை*

*பரிமணம், அ.மா. மற்றும் பாலசுப்பிரமணியன், கு.வெ (பதி.ஆ.)* *2004* **புறநானூறு**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்*
*சென்னை*

*பரிமணம், அ.மா. மற்றும் பாலசுப்பிரமணியன், கு.வெ (பதி.ஆ.)* *2004* **பதிற்றுப்பத்து**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்*
*சென்னை*

*பரிமணம், அ.மா. மற்றும் பாலசுப்பிரமணியன், கு.வெ (பதி.ஆ.)* *2004* **ஐங்குறுநூறு**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்*
*சென்னை*

*பரிமேலழகர் (உ.ஆ.)* *1998* **திருக்குறள்**
*பூம்புகார் பதிப்பகம்*
*சென்னை*

*பிலவேந்திரன், ச.* *2001* **ஆய்வுக் களமும் தரவுகளும்**
*நாட்டுப்புறவியல் களஆய்வு*
*நெறிமுறைகள்*
*தென்னிந்திய மொழிகளின்*
*நாட்டுப்புறவியல் கழகம்*
*திருவனந்தபுரம்*

*பிள்ளை, கே.கே.* *2008* **தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்**
*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்*
*சென்னை*

*பூபதிராஜன், மயிலை.* *1986* **ருது ஜாதகப் பலன்கள்**
*யமுனா பிரசுரம்*
*சென்னை*

*யோகீஸ்வரன்* *1985* **தமிழ்க் கவிதைகளில் சமுதாயச் சிக்கல்கள்**
*நீலா பதிப்பகம்*
*சென்னை*

*லேனா தமிழ்வாணன், ப.ஆ.* *1987* **தமிழகப் பழக்க வழக்கங்களும் அவற்றின் காரணங்களும் பயன்களும்**
*மணிமேகலைப் பிரசுரம்*
*சென்னை*

வானமாமலை, நா. 1997 **தமிழர் வரலாறும் பண்பாடும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை

வானமாமலை, நா. 1978 **தமிழர் பண்பாடும் தத்துவமும்**
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்
சென்னை

வீரபத்திரன், ஆர். 1963 **மங்கலவணி**
பாரி நிலையம்
சென்னை

வரதராசன், செங்கோ. 1988 **மேற்குத் தமிழக நாட்டுப்புறவியல் ஓர் ஆய்வு**
பி.ஆர்.வி. பதிப்பகம்
ஈரோடு

வீரப்பன், ஏ. 2009 **பழந்தமிழர் வாழ்வியல்**
குகன் பதிப்பகம்
வடுவூர்

வேலுசாமி, ம. 1988 **வாழ்க்கைச் சுழற்சி சடங்குகள்**
நாட்டுப்புறவியல் காலாண்டிதழ்
இந்தியத் தமிழ் நாட்டுப்புறவியல் கழகம்
சிதம்பரம்

**ஆங்கில நூல்கள்**

Hart, G.L. 1975 ***The Poems of Ancient Tamil***
University of California Press
London

Helen Sewell Johnson 1968 ***Eve Beliefs: Customs in Irish Life's Literature***
Journal of American Folklore
University of Texas Press
USA

William Crooke 1994 ***Religion and Folklore of Northern India***
S. Chand & Co.
New Delhi

**ஆய்வேடுகள்**

*கந்தசாமி, இல.செ.* *(ஆ.இ.)* **தமிழர் வேளாண்மை மரபுகள்- சங்க காலம்**
*முனைவர் பட்ட ஆய்வேடு*

*இராசேந்திரன், அ.* *2004* **நாட்டுப்புறப் பண்பாட்டுப் பழக்க வழக்கங்கள்**
*முனைவர் பட்டஆய்வேடு*
*தமிழ்ப் பல்கலைக்கழகம்*
*தஞ்சாவூர்*

*கமலஹாசன், ந.* *2009* **சங்க இலக்கியங்களில் நாட்டுப்புறக் கூறுகள்**
*முனைவர் பட்டஆய்வேடு*
*தமிழ்ப் பல்கலைக்கழகம்*
*தஞ்சாவூர்*

குணசேகரன், கு. 1981 **தூத்துக்குடி வட்டார சமூகப் பழக்க வழக்கங்கள்**
ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை

சுந்தரராசன், ம. 2011 **பறையர் இன மக்களின் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் [ஒரத்தநாடு வட்டம்]**
முனைவர் பட்ட ஆய்வேடு
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

# வினாப்பட்டியல்

1. *தகவலாளர் பெயர்*
2. *முகவரி*
3. *வயது*
4. *பாலினம்*
5. *கல்வி*
6. *தொழில்*
7. *சாதி*
8. *சந்தித்த நாள்*

1. *பிறப்புத் தொடர்பான பழக்க வழக்கங்கள் என்ன?*
2. *கருவுற்ற பெண்ணை ஏன் தாய்வீட்டிற்கு அழைத்துச் செல்கிறீர்கள்?*
3. *ஐந்து மாதத்தில் ஏன் மருந்து கொடுக்கிறீர்கள்?*
4. *ஏழு (அ) ஒன்பது மாதத்தில் வளைகாப்பு போடுவதன் நோக்கம் என்ன?*
5. *கட்டுச்சோறு ஏன் கொண்டு வருகிறீர்கள்?*
6. *உங்கள் இனத்தில் தனியாக ஏதேனும் பழக்கம் உண்டா?*
7. *கருவுற்ற பெண்ணுக்கு என்று தனியான உணவு உள்ளதா?*
8. *பிறப்புச் சடங்கு எவ்வாறு நிகழ்த்தப்படுகிறது?*
9. *பிறப்புச் சடங்கின் நோக்கம் என்ன?*
10. *அதற்கு எவ்வகையான உணவு படைக்கின்றனர்?*
11. *குழந்தைக்குப் பெயர் வைக்கும் முறை உண்டா?*
12. *குழந்தைக்குச் சீர்செய்யும் வழக்கம் உள்ளதா?*
13. *குழந்தைக்குப் மொட்டை அடிப்பது எதற்கு?*
14. *குழந்தைக்குக் காதுகுத்துவதன் நோக்கம் என்ன?*
15. *சிறு குழந்தைக்கு மூக்கு குத்தும் வழக்கம் உள்ளதா?*
16. *காது குத்துவதில் தாய்மாமன் பங்கு இருக்கிறதா?*

17. பூப்புச் சடங்கு ஏன் நிகழ்த்தப்படுகிறது?
18. பூப்புச் சடங்கின் நன்மை என்ன?
19. திருமணத்திற்கு மாப்பிள்ளை, பெண் பார்க்கும் வழக்கம்உ ண்டா?
20. வேற்று குலத்தில் பார்க்கிறீர்களா?
21. சாதகத்தில் நன்மை, தீமை உண்டா?
22. சாதகத்தை நம்புகிறீர்களா?
23. எத்தனை பொருத்தம் இருந்தால் திருமணம் செய்வீர்கள்?
24. தோசம் இருக்கிற பெண்ணைத்திருமணம் செய்கிறீர்களா?
25. அதற்குப் பலி ஏதாவது கொடுக்கும் பழக்கம் உள்ளதா?
26. மாப்பிள்ளை வீடோ, பெண் வீடோ பார்க்கச் செல்வதன் நோக்கம் என்ன?
27. நிச்சயதார்த்தம் (பரிசம்) ஏன் செய்கின்றனர்?
28. திருமணம் தொடர்பான சடங்குகள் என்னென்ன உள்ளது?
29. திருமணத்தன்று செலவு செய்வது யார்?
30. திருமணத்திற்குச் சீர்வரிசை உண்டா?
31. திருமணத்தன்று எவ்வித உணவு கொடுக்கப்படுகிறது?
32. தருமணத்திற்குப் பிறகு அழைப்பு உண்டா?
33. திருமணத்திற்குப் பிறகு என்ன வழக்கத்தினை மேற்கொள்கிறீர்கள்?
34. இறப்புச் சடங்கு குறித்த பழக்க வழக்கம் என்ன?
35. இறப்புச் சடங்கு எவ்வாறு நிகழ்த்தப்படுகிறது?
36. இடுகாட்டில் என்னென்ன சடங்குகள் மேற்கொள்ளப்படுகிறது?
37. இறப்புச் சடங்கு செய்வதன் நோக்கம்என்ன?
38. கருமாதிச்சடங்கு எவ்வாறு நிகழ்த்தப்படுகிறது?
39. கருமாதி செய்வதன் பயன் என்ன?
40. உணவு குறித்த பழக்க வழக்கங்கள் என்ன?
41. உணவுகளை எவ்வாறு பாதுகாக்கிறீர்கள்?
42. தொழில்சார்ந்த பழக்க வழக்கங்கள் என்ன?
43. என்னென்ன தொழில்களை மேற்கொள்கிறீர்கள்?

*44. நாட்டுப்புற விளையாட்டுக்கள் எவை?*

*45. விளையாட்டின் பயன் என்ன?*

*46. விளையாட்டின் தீமை என்ன?*

*47. வழிபாடு எவ்வாறு நிகழ்த்தப்படுகிறது?*

*48. வழிபாடு செய்வதன் நோக்கம் என்ன?*

*49. வழிபாடு செய்வதால் பயன் உள்ளதா?*

*50. இறந்தவர்களை வழிபடும் பழக்கம் உள்ளதா?*

*51. அதன் காரணம் என்ன?*

*52. நாட்டுப்புற மக்கள் கொண்டாடும் விழாக்கள் என்ன?*

*53. விழாக்கள் கொண்டாடுவதன் நோக்கம் என்ன?*

*54. நாட்டுப்புற மருத்துவம் என்பது எது?*

*55. ஆண்கள் மருத்துவம் என்ன?*

*56. பெண்கள் மருத்துவம் என்ன?*

*57. குழந்தை மருத்துவம் என்ன?*

*58. பொதுவான மருத்துவம் ஏதாவது இருக்கிறதா?*

*59. நாட்டுப்புற மருத்துவத்தின் பயன் என்ன?*

*60. நாட்டுப்புற மருத்துவம் இப்போது அழியாமல் இருக்கிறதா?*

*61. நாட்டுப்புற மருத்துவத்தின் தீமை ஏதாவது உள்ளதா?*

*62. பிள்ளைப்பேறு குறித்த நம்பிக்கைகள் என்ன?*

*63. பிள்ளை வேண்டி சடங்கு நிகழ்த்தவது உண்டா?*

*64. பிள்ளை வேண்டி என்ன சடங்கு செய்கிறீர்கள்?*

*65. பிள்ளை இல்லாதவர்களைச் சமூகம் என்ன சொல்கிறது?*

*66. பிள்ளை வேண்டி நாட்டு மருத்துவத்தை உட்கொள்கிறீர்களா?*

*67. நாட்டு மருத்துவத்தினால் பயன் உள்ளதா?*

*68. முதல் குழந்தை எது பிறந்தால் நல்லது?*

*69. குழந்தை தொடர்பான என்னென்ன நம்பிக்கைகள் உள்ளன?*

*70. கண்ணேறு குறித்த நம்பிக்கைகள் என்ன?*

*71. கண்ணேறு நம்பிக்கைகளை ஏன் பின்பற்றுகின்றனர்?*

*72. குழந்தைக்குத் திருஷ்டி கழிப்பது உண்டா?*

*73. குழந்தைக்கு திருஷ்டி கழிப்பதன் நோக்கம் என்ன?*

*74. கண்திருஷ்டி கழிப்பதற்கு எப்பொருள்களைப் பயன்படுத்துகிறீர்கள்?*

*75. மரம் பற்றிய நம்பிக்கைகள் உண்டா?*

*76. மரத்தில் தெய்வம் உறைகிறதா?*

*77. எந்த மரத்தில் தெய்வம் உறைகிறது?*

*78. மரவழிபாடு இருக்கிறதா?*

*79. மரவழிபாட்டிற்கு எவ்விதமான சடங்குகள் மேற்கொள்கிறீர்கள்?*

*80. மரவழிபாட்டினால் பயன் உள்ளதா?*

*81. மரத்தின் நன்மை தீமைகள் என்ன?*

*82. மழை குறித்த நம்பிக்கைகள் எவை?*

*83. மழை இல்லாவிட்டால் மேற்கொள்ளும் சடங்கு முறைகள் எவை?*

*84. மழையின் முக்கியத்துவம் என்ன?*

*85. உணவு குறித்த நம்பிக்கைகள் எவை?*

*86. எவ்விதமான உணவுகளை உண்ணுகிறீர்கள்?*

*87. செடி கொடிகள் குறித்த நம்பிக்கைகள் என்ன?*

*88. எச்செடிகளை வளர்ப்பது நல்லது? ஏன்?*

*89. விலங்குகள் குறித்த நம்பிக்கைகள் உண்டா?*

*90. எந்த விலங்குகள் நன்மை தரும்? எந்த விலங்குகள் தீமை தரும்?*

*91. பறவைகள் குறித்த நம்பிக்கைகள் என்ன?*

*92. வேளாண்மை குறித்த நம்பிக்கைகள் என்ன?*

*93. பேய் பிசாசு குறித்த நம்பிக்கைகள் என்ன?*

*94. பேய் பிசாசுகளை நேரில் பார்த்து உண்டா? எப்படி இருக்கும்?*

*95. வான்பொருள்கள் பற்றிய நம்பிக்கைகள் என்ன?*

*96. ஜாதகம் நட்சத்திரம் பற்றிய நம்பிக்கைகள் உண்டா?*

*97. ஜாதகத்தின் நன்மை தீமைகள் என்ன?*

*98. ஏன் ஜாதகம் பார்க்கப்படுகிறது?*

*99. சகுனம் குறித்த நம்பிக்கைகள் எவை?*

*100. நல்ல சகுனம், கெட்ட சகுனம் எது?*

*101. பல்லி சகுனம் பார்ப்பது உண்டா?*

*102. பல்லி எத்திசையில் ஒலிப்பது நல்லது?*

*103. திசைகள் குறித்த நம்பிக்கைகள் யாவை?*

*104. உடல் உறுப்புகள், மச்சம் தொடர்பான நம்பிக்கைகள் எவை?*

*105. கனவு பற்றிய நம்பிக்கைகள்*

*106. எந்த நேரத்தில் கனவு காண்பது நல்லது?*

*107. வழிபாட்டு நம்பிக்கைகள் என்ன?*

*108. மருத்துவ நம்பிக்கைகள் எவை?*

*109. எவ்விதமான மருத்துவ நம்பிக்கைகளை மேற்கொள்கிறீர்கள்?*

*110. உங்களுக்கென்று தனியாக மருத்துவ நம்பிக்கைகள் உண்டா?*

# முடிவுரை

'சங்க இலக்கியத்திலும் வாய்மொழி மரபிலும் பழக்க வழக்கங்கள்- மரபுத் தொடர்ச்சி' என்ற ஆய்வின் வாயிலாக மக்களின் பண்பாட்டுப் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் தெளிவுறுத்தப்பட்டுள்ளன.

இலக்கியத்தில் இடம்பெறும் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் சுட்டிக் காட்டப்பட்டு அதன் தொடர்ச்சியாக இன்றைய நிலையில் நாட்டுப்புற மக்கள் பலவிதமான நம்பிக்கைகளையும், பழக்க வழக்கங்களையும் பின்பற்றியுள்ளனர். பழந்தமிழர் பின்பற்றிய நம்பிக்கைகள், பழக்க வழக்கங்களில் சில மாறுபட்டாலும் பெரும்பான்மையான பழக்க வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் இன்றைய அறிவியல் முன்னேற்றக் காலத்திலும் பின்பற்றி வருகின்றமை போற்றுதலுக்குரியது எனலாம்.

பெண்ணினம் குழந்தையைச் சுமந்து பிரசவித்தல் என்பது அரிதான ஆபத்தான செயல் என்பதை உணர்ந்து மகப்பேறு காலத்தில் தகுந்த பாதுகாப்பு அளித்திருப்பது குழந்தைச் செல்வத்திற்கு மக்கள் அளித்துள்ள முக்கியத்துவத்தை உணரமுடிகின்றது.

பூப்பு நிகழ்வுகளில் பெண்ணைத் தனியிடத்தில் வைக்கும் நிலையானது சங்ககாலம் தொட்டு இன்றைய நிலையிலும் பின்பற்றப்பட்டு வருவதை இப்பகுதி மக்களிடத்தில் காணமுடிகிறது.

இலக்கியத்தில் திருமணம் தொடர்பான பழக்க வழக்கங்களில் சாதகம் தொடர்பான நம்பிக்கைகளும் மணமகள் வீட்டில் பெண் கேட்கும் நிலையும், திருமண வினைகள், பெண்கள் வீட்டில் நடந்துள்ள வழக்கத்தை இன்றும் இப்பகுதி மக்களின் மரபுத் தொடர்ச்சியாகப் பின்பற்றி வருவதைக் காணமுடிகிறது. திருமணத்தின்போது தெய்வத்திற்கு வழிபாடு செய்வதும், புதுமணல் பரப்பி, வீட்டைத் தூய்மை செய்த செய்தியும்

சங்ககாலம் தொட்டு இன்றைய நிலையிலும் பின்பற்றப்பட்டு மனித நாகரிகத்தின் சிறப்பை உணர்த்தி நிற்கிறது.

வேங்கைப் பூ பூக்கும் இளவேனில் காலம், வளர்பிறை நாட்களைத் திருமணக் காலமாகத் தேர்ந்தெடுத்திருப்பது சங்கத் தமிழரின் பகுத்தறியும் சிந்தனைக்குத் தக்க சான்றாகும்.

மணமேடைக்கருகில் அகல்விளக்கு முளைப்பாரிகை வைத்தல், மணமக்களை மலர், நெல் தூவி வாழ்த்துதல் போன்றவை வளமை வேண்டி செய்யப்பட்டதெனலாம். சமுதாயத்தில் ஒருவருக்குப் பெற்றோர், உறவினர், நண்பர்கள் என்று பலர் இருந்தாலும் காதல் கொண்டவர்கள் உடன்போக்குச் சென்று திருமணம் செய்திருப்பதன் மூலம் காதல் உணர்வின் ஆழத்தைப் புரிந்து கொள்ள முடிகிறது.

இறந்த பிணத்திற்கு வெள்ளாடை உடுத்தி அடக்கம் செய்திருப்பது உடலானது தெய்வலோகம் செல்லும்போது புதுமையாகச் செல்ல வேண்டும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் மேற்கொண்டுள்ள முறையை உணர முடிந்தது. பெற்றோர்களுக்கு வேண்டிய நலன்களைச் செய்தல் பிள்ளைகளின் தலையாயக் கடமையாகும் என்பதை நீர்மக்கடன்களை ஆற்றியிருப்பதன் வழி அறிந்து கொள்ள முடிகின்றது. கணவனை இழந்த பெண்ணிற்கு அணிகலன்களை நீக்கி சத்து அதிகமில்லாத உணவினைக் கொடுத்துத் தனிமைப்படுத்தியிருப்பதால் அக்காலச் சமுதாயத்தின் சமஉரிமையற்ற நிலை புலனாகிறது.

நாட்டுப்புற மக்களின் வாழ்வில் நேரும் துன்பங்களுக்கும் நோய்களுக்கும் நாட்டுப்புறத் தெய்வங்களை வழிபடுகின்றனர். படையலும் பலியும் இட்டுத் தங்கள் வேண்டுதல்களை நிறைவேற்றிக் கொள்கின்றனர். தெய்வங்களுக்கு வழிபாடு செய்வதன் வாயிலாக உள்ளத்திற்கு மகிழ்வையும் திடமான தெய்வ நம்பிக்கையினையும் உருவாக்கி அதன்மேல் தன் பாரத்தையும் துயரத்தையும் இறக்கி வைத்து மனதிற்கு நிம்மதியையும், வெற்றியையும் தேடிக் கொள்கின்றனர். இப்பகுதி மக்கள் வணங்கும்

நாட்டுப்புறத் தெய்வங்கள் அனைத்திற்கும் இவர்களே பூசாரியாகவும் பொங்கலிட்டுப் படையல் போடும் நிலைகளும் தெளிவாகின்றன.

பிறப்பு, பூப்பு, காதுகுத்து, திருமணம், இறப்புபோன்ற அனைத்து நிலைகளிலும் இடம்பெறும் பழக்க வழக்கங்களில் தாய்மாமனின் பங்கீடு மேலோங்கி இருப்பதை இப்பகுதி மக்களிடத்தில் காணமுடிகிறது. இதனால் தாய்மாமனிடம் பகை இல்லாமல் அனைத்து நிலைகளிலும் தாய்மாமன் உறவு முக்கியமானதாகவும், அவர்களிடத்தில் சீர்வரிசையாகப் பொன்னும் பொருளும் பெற்றுக் கொள்ளும் மறைமுக நிலையில் இருப்பவராகக் களப்பகுதியில் ஆய்வு நிகழ்த்தியதன் வழி அறியமுடிகிறது.

மக்கள் தங்களைப் பேணிக்காக்கும் ஆற்றல் பெற்றது கடவுள் என்ற எண்ண வெளிப்பாட்டின் வெளிப்பாடாகத் தெய்வ வழிபாடு அமைந்துள்ளது. இயற்கையின் சக்திகளாக விளங்கக்கூடிய சூரியன், சந்திரனின் ஒளியில் அபூர்வ சக்திகள் இருப்பதாக நினைந்து வணங்கப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

கொற்றவையாகிய காளி, கொல்லிப்பாவை, நடுகல், அணங்கு போன்றவைகளைப் பயங்கருதியும் கள் முதலான மதுபானம் முதலியன படைத்தும் வணங்கப்பட்டிருப்பதன் மூலம் பழந்தமிழகத்தில சிறுதெய்வ வழிபாடும் தழைத்தோங்கி இருந்ததற்குச் சான்று பகர்கின்றன. தெய்வத்திற்கு உயிர்ப்பலி, தானியங்கள், மலர்கள் ஆகியன படைத்திருப்பது அதனைச் சாந்தப்படுத்தும் நோக்கில் நிறைவேற்றப்பட்டுள்ளதை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

விழாக்களைச் சங்ககால மக்கள் ஒற்றுமையுடன் இணைந்து நடத்தியிருக்கும் சிறப்பு அக்காலத்தில் மனிதநேய உணர்வு நிறைந்திருந்த நிலை குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இளம் வயதில் ஒருவரையொருவர் ஒன்றிணைந்து விளையாடுவதன் மூலம் சாதி, மத பாகுபாடுகள் நீங்கி சமத்துவ சகோதரத்துவத் தன்மை வளர்வதற்கு விளையாட்டுக்கள் ஊன்றுகோலாக அமைகின்றன என்பது நினைவு கூறத்தக்கதாகும்.

சங்கத் தமிழர்கள் தாங்கள் வாழ்ந்துள்ள இட அமைப்பிற்கும், காலநிலைக்கும் ஏற்ப வேட்டையாடுதல், ஆடு மாடுகள் மேய்த்தல், வேளாண்மை, வழிப்பறி செய்தல் போன்ற பலவிதமான தொழில்களைப் பின்பற்றியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். நன்கு முற்றிய தானியங்களை விதையாகப் பயன்படுத்தினர். பயிர் வகைகளைப் பயிர் செய்திருப்பது சங்கத் தமிழரின் தொழில் திறனைக் காட்டுகின்றது.

நாட்டுப்புற மரபுவழி மருத்துவக்கலை படிப்பறிவற்ற பாமர மக்களாலும், கிராமியச் சூழலில் வாழும் படிப்பறிவு மிக்கவர்களாலும் இன்றும் பேணிப் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. ஊரில் உள்ள வயது முதிர்ந்த பெரியவர்களும், பாட்டிகளும், மரபுவழி மருத்துவத்தில் கைதேர்ந்த மருத்துவர்களாகத் திகழ்கின்றனர். வளரும் மூலிகைச் செடிகளைக் கொண்டு கிராம மக்கள் தங்களுக்கு ஏற்படுகின்ற நோய்களைப் போக்கிக் கொள்கின்றனர். இதன் மூலம் நாட்டுப்புற மக்கள் அனைத்து வழக்கத்திலிருந்து சிறிதும் விலகாமல் பாரம்பரியத்தையும் பண்பாட்டையும் கட்டிக்காத்து வருகின்றனர் என்பதை தெளிவுபடுத்துகிறது.

மனிதன் உயிர் வாழ்வதற்கு உணவு அவசியமானதென்றாலும் அதனைச் சுவைபட சமைத்து உண்டுள்ளதனை அறியும்போது விருந்தினருக்கு வயிறார உணவுகளை அளித்திருப்பதும் அவர்கள் பண்பாட்டுடன் கூடிய கலாச்சார மரபிலும் தேர்ச்சி பெற்றுள்ளனர். அறிவியல் வளர்ச்சியும் இயந்திரப் பழக்கமும் இல்லாத அக்காலத்தில் தங்களது கைத்திறனின் துணைகொண்டு மட்பாண்டம் செய்தல், தச்சு, நெசவு, கொல்லுத்தொழில், அணிகலன்கள் உருவாக்குதல், ஆடை வெளுத்தல் முதலிய தொழில்களைக் கண்டவர் வியக்கும் நிலையில் செய்திருப்பதன் மூலம் சீரிய அறிவாற்றலினை உணரமுடிகின்றது.

நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டுக் காலங்காலமாக ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குப் பரவி வருவதால் மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான அனைத்து

நிலைகளிலும் பலவிதமான நம்பிக்கைகளை உயிர்நாடியாகக் கொண்டு பின்பற்றி வருகின்றனர் என்பதை இவ்வாய்வு மூலம் அறியமுடிகிறது. படித்தவர் படிக்காதவர் என அனைத்து தரப்பு மக்களிடமும் ஏதாவது ஒரு நிலையில் நம்பிக்கைகள் ஆழமாக வேரூன்றியுள்ளன. நம்பிக்கைகள் மனித வாழ்வோடு வாழ்வாகப் பின்னிப் பிணைந்துள்ளதால் மனிதனின் வாழ்வு வேறு நம்பிக்கைகள் வேறு என்று பிரிக்க இயலாத நிலை இவ்வட்டார மக்களிடம் காணப்படுகிறது.

நாகரிக வளர்ச்சி அறிவியல் முன்னேற்றம் இவைகளால் மனித சமுதாயம் மாற்றம் பெற்றிருக்கின்ற போதிலும் பழமையான நம்பிக்கைகளிலிருந்து விடுபட்டதாகத் தெரியவில்லை. எனவே மனித சமுதாயம் உள்ள வரையில் நம்பிக்கைகளும் வாழ்ந்துகொண்டுதான் இருக்கும். மனிதனுக்கு இறப்பு உண்டென்றாலும் மனிதனால் உருவாக்கப்பட்ட தொன்மையான நம்பிக்கைகள் இறவாத ஆற்றல் பெற்றவை.

காகம் கரைதல், ஆந்தை கத்துதல், மயில் ஆடுதல் போன்ற நம்பிக்கைகள் மாறாத நிலையில் மக்களிடத்தில் வாழ்ந்து வரும் மரபினைக் காணமுடிகிறது.

அறிவியல் வளர்ச்சியில் ஏற்பட்டுள்ள மாற்றத்திற்கு ஏற்பத் தொழில் முறைகள் பின்பற்றப்படும் முறையைக் களப்பணி மூலம் அறிய முடிகின்றது.

சங்க இலக்கியத்தில் காணப்படுகின்ற பழக்க வழக்கங்களையும் நாட்டுப்புறங்களில் காணப்படுகின்ற பழக்க வழக்கங்களையும் ஒப்பீட்டு நிலையில் நோக்கும் போது அக்கால சமூக அமைப்பு, புலவர்கள் பாடல்களைப் படைத்துள்ள விதம், அவற்றில் நாட்டுப்புற வழக்காற்றுக் கூறுகளைப் பதிய வைத்துள்ள சிறப்பு போற்றுவதற்குரியதாகும்.

இன்றைய நிலையில் காலமாற்றம், அறிவியல் விஞ்ஞான வளர்ச்சி, பொருளாதார ஏற்றத்தாழ்வுகள், சாதிய முறைகளுக்கேற்ப மாற்றமும் வளர்ச்சியும் அடைந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும். இருப்பினும்

மாற்றங்கள் அடைந்தாலும் அவற்றினையும் மனித சமுதாயம் ஏற்றுக்கொண்டு பின்பற்றுவதும் நோக்கத்தக்க ஒன்றாகும்.

சங்கப் புலவர்களின் நோக்கம் காதல், வீரம், இயற்கை வளங்களைத் தமது பாடல்களில் படைத்திருந்தாலும் அவற்றின் ஊடே வாய்மொழி வழக்காற்றுக் கூறுகளையும் இணைத்துப் பாடியிருப்பதன் மூலம் எழுத்தாக்கம் பெறுவதற்கு முன்னர் வாய்மொழி வழக்காறுகளே அதிகம் பேசப்பட்டுள்ளன. அவைகளே எழுத்திலக்கியம் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்தன என்பது ஆய்வால் பெறப்பட்ட உண்மையாகும். ஆய்விற்கு உட்பட்ட பகுதிகளில் சேகரிக்கப்பட்டத் தரவுகள் ஆய்விற்கு அல்லாத பிற பகுதிகளின் சமுதாய அமைப்பிற்கேற்ப மாறுபட்டும் சில கூறுகள் ஒன்றுபட்டும் காணப்பட வாய்ப்பு உள்ளது என்பது ஆய்வால் உணரமுடிந்த கருத்தாகும்.